# Khatau VOILES



தீபாவளி மகிழ்ச்சி
கொழிக்கும் நன்னாள்

இந்தப் புனித மங்கல
நாளில் கடான் வாயில்களை
அணிந்து மகிழுங்கள்

---

சந்தர்ப்பம் எதுவாயினும்
கடான் உடையில் நீங்கள்
எப்பொழுதும் கவர்ச்சியுடன்
விளங்குவீர்கள்

---

கடான் துணிகளின் ஒவ்வொரு
மீட்டரின் ஓரத்திலும் "கடான் மில்ஸ்"
என அச்சிட்டிருப்பதைக் கவனிக்கவும்

---

**THE KHATAU MAKANJI SPG. & WVG. CO. LTD.,**

Head Office : Laxmi Building, Ballard Estate, Bombay-1.

Mills : Haines Road, Byculla, Bombay-27.

Whole Sale Clothshop: Govind Chowk, Mulji Jetha Market, Bombay-2.



SISTA'S KMS-331

சில்லறை விற்பனை நிலையம் : 216, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை -1

எமது ஆதரவாளர்கள், விநியோகஸ்தர்கள் வாடிக்கையாளர்கள் மற்றும் எல்லோருக்கும்

**எமது மனமார்ந்த தீபாவளி வாழ்த்துக்கள்!**









1840-ம் ஆண்டு முதலாகவே ஸிம்ஸன் & கம்பெனி லிமிடெட் நாட்டின் [illegible] நிலைமைக்கேற்ப அனுசரித்துப்பிரயாணிகளுக்குப் போதுமான சுக சௌகரியங்கள் கிடைக்கும்படி பிரயாண வண்டிகளுக்கான கூண்டுகளை (BODY) மிகச் சிறப்பாக உருவாக்கி வந்திருக்கின்றனர். கூண்டு (BODY) அமைப்பில் அவ்வப்போதும் புதுப்புது போக்குகளைப் புகுத்துவதே லட்சியமாகக் கொண்ட ஸிம்ஸன்ஸ் இன்றும் இத்துறையில் முதல்வர்களாகவே விளங்குகின்றனர். வண்டியின் கூண்டமைப்பு (BODY) சிறப்பாகவும், புது வழியிலும் இருந்தால் அது முதல் முதலாக ஸிம்ஸன் கம்பெனியால்தான் தயாரிக்கப்பட்டிருக்கும். எந்த வகை சாஸியின் பேரில் எந்த வகை கூண்டு (BODY) தேவையானாலும் தயாரித்துக் கொடுக்கப்படும்.

Simpson & Co. Ltd

ESTABLISHED 1840

தலைமைக் காரியாலயம்: 202, மவுண்ட் ரோடு, சென்னை - 2

தொழிற்சாலை: செம்பியம், சென்னை -11

கிளைகள்: பெங்களூர், உதகமண்டலம், திருச்சிராப்பள்ளி & செகந்திராபாத் (ஆந்திரப் பிரதேசம்)









# இருமலை நிறுத்த

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

## சிவப்பு லேபில்

## சாப்பிடுங்கள்





விடாது தொடர்ந்து தொல்லை கொடுக்கும் இருமலைப் பற்றி அசிரத்தையாக இருக்கக் கூடாது. அது உடலைப் பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பீடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் இருமலை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ரீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வராமல் தடுக்கும் சக்தியையூட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.






வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால், சுவாசக் குழாய்களில் கிருமிகளால் அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கபத்தை 'இளக்கி வெளியேற்றி சுவாசப்பைகளை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக்குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் மீண்டும் வராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

**இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது**

வார்னர் - இந்துஸ்தான் லிமிடெட், பம்பாய்

# நீகோ
## ஜெர்மிஸைடல் சோப்
## ஒரு பார்க்-டேவிஸ் தயாரிப்பு

உங்கள் சருமத்தைச் சுத்தமாகவும் ஆரோக்யத்துடனும் வைத்துக் கொள்ளவும், பருக்கள், கருநிறப் படைகள், வேர்க்குரு மற்றும் இதர சாதாரண சரும நோய்களின்றி இருக்கவும் உதவுகிறது. தவறாமல் தலைமயிரைச் சுத்தம் செய்ய உபயோகித்து வரின், நீகோவின் கிருமிநாசக நுரை வழுக்கை ஏற்படாமலிருக்க ஒரு நல்ல பாதுகாப்பாக இருக்கும். நிரூபணமான மதிப்பையுடைய கிருமிநாசக சோப்பான நீகோ உங்களுக்கு மும்மடங்கு நன்மையளிக்கிறது— சுத்தமாக்க, நோய்கிருமி பரவாமல் தடுக்க, பாதுகாக்க, உதவுகிறது. தினமும், உங்கள் சருமத்திற்குத் தேவையான கவனத்தை செலுத்துங்கள்.




NATIONAL PD 1041

தினசரி உபயோகத்திற்கான ஆதி கிருமிநாசக சோப்

தீபாவளி
வாழ்த்துக்கள்!

## கோ-ஆப்டெக்ஸ்

### கைத்தறி துணிகள்

நமது தேசிய பொருளாதாரத்தில் இந்தியக் கைத்தறித் தொழில் அது வகிக்க வேண்டிய ஸ்தானத்திற்கு மெள்ள மெள்ள மீண்டும் வந்துகொண்டிருக்கிறது.

ஜவஹர்லால் நேரு.

**தமிழ் நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட்**

பாலசுந்தரம் பில்டிங்ஸ், எழும்பூர், சென்னை-8



ELEGANT

உன்னத
உழைப்பில்
முன்னணியில்
நிற்பது












பாலசுப்ரமணியா
பம்புகள்
மோட்டார்கள்
மானேபிளாக்குகள்

## பால சுப்ரமணியா பவுண்டரி

பட்டேல் ரோடு, கோயமுத்தூர்

தந்தி: 'RUNWELL' டெலிபோன்: 4313



## கூப்பிடு தூரத்திலே....!

கொஞ்சும் இன்ப வார்த்தைகளை காதருகிலே ரகசியமாகச் சொல்லலாம்....ஆனால்....பரவலாக இருக்கும் ஒரு கூட்டம், நீங்கள் கூறுவதைக் கேட்க வேண்டும்....அதுவும் மிகத் தெளிவாக....! அவர்களால் கேட்க முடியும், நீங்கள் ஒரு பெல்ஹேலரை உபயோகித்தால்.



## "பெல்ஹேலர்"

டிரான்ஸிஸ்டரைஸ்டு மெகபோன்

**(BELHALER - TRANSISTORISED MEGAPHONE)**

இந்த பெல்ஹேலர், அதனுள்ளேயே பொருத்தப்பட்டிருக்கும் பாட்டரி செல்களின் உதவியால் இயங்குகிறது.

உள்ளே அமைந்திருக்கும் மைக்ரோபோனைத் தவிர, வெளியேயும் ஒரு மைக்ரோபோன் பொருத்தப்பட்டிருக்கிறது.

விளையாட்டு மைதானங்களிலும், பொதுக் கூட்டங்களிலும் ஊர்வலங்களிலும், விமானக் கூடங்களிலும், மற்றும் கப்பல் தளங்களிலும் உபயோகிக்க இந்த பெல்ஹேலர் மிக உதவியானது.

இந்த பெல்ஹேலரை மிக எளிதாக உபயோகிக்கலாம்.

தோளில் சுமந்தும் செல்லலாம், ஜீப் வாகனங்களிலும் இணைக்கலாம்.

## (BEL) பாரத் எலக்ட்ரானிக்ஸ் லிமிடெட்

பதிவு அலுவலகம்: ஜலஹள்ளி, பெங்களூர் - 13

---






தரத்தில் மேன்மையும் ஆகும் அதே அளவுடனும் தற்போது நவீன பொலிவில் இலேசான அழகிய பிளாஸ்டிக் பெட்டிகளில் வருகிறது.

## லபோனி

வானிஷிங் மற்றும் கோல்ட் கிரீம்

லபோனி வானிஷிங் கிரீம், சருமத்தில் ஏற்படும் வரட்சி உணர்ச்சி, எரிச்சல் இவைகளிலிருந்து பாதுகாப்பதோடு கடும் கோடைகாலத்திலும் சருமம் மிருதுவாக இருக்க உதவுகிறது. இதை உபயோகிப்பதால் பவுடர் ஒரே சீராகப் படியும். லபோனி கோல்ட் கிரீம் ஒரு சிறந்த அழகு சாதனம். தினசரி இரவில் உறங்கு முன் இதை உபயோகித்தால், அது சருமத்தின் ஊடே சென்று உங்கள் முகப்பொலிவை வியக்கத் தக்க முறையில் புத்துணர்ச்சியுடன் பிரகாசிக்கச் செய்கிறது.

**தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெட்**

உங்கள் இல்லங்களில்
வருடம் முழுவதும்
மங்காத ஒளி தருக!

எமது

# தீபாவளி

வாழ்த்துக்கள்!

# கிருஷ்ண

மிட்டாய்கள்

தயாரிப்பவர்கள்

தி கே. ஸி. பி. லிட்.

38. மவுண்ட் ரோடு. சென்னை-6



**“பத்து வருடங்களுக்கு முன்பு... நினைவிருக்கிறதா? உங்கள் திருமணத்தன்று என்னையும் உங்கள் வாழ்க்கைத் துணையாகத் தேர்ந்தெடுத்ததை?”**



# ஹெர்குலிஸ்

வெறும் சைக்கிள் மட்டுமன்று; வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் உறுதுணை



திருமண நாளின் இந்த பத்தாவது நினைவு நாள்... ஹெர்குலிஸுக்கும் சரி, அதன் சொந்தக்காரருக்கும் சரி... பெருமிதமூட்டும் நன்னாள்.

நீங்கள் ஒரு ஹெர்குலிஸ் சைக்கிள் வாங்கும்போது உங்கள் வாழ்க்கையுடன் அது ஒன்றிவிடுகிறது. ஆண்டுகள் செல்லச்செல்ல உங்கள் வாழ்க்கை மாறும் ... உத்தியோக உயர்வுகள் கிடைக்கும் ... உங்கள் குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாவார்கள்... மணம் புரிந்து வேறிடங்களில் புது வாழ்க்கை தொடங்குவார்கள். ஆனால் உங்கள் ஹெர்குலிஸ் எப்போதும் உங்களுடனேயே இருக்கும்—எப்போதும் நன்கு பணி புரிந்தபடியே இருக்கும்.

டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ் 53

# He would have given half his inheritance...

... for the drugs you take for granted.

Life was short 150 years ago – averaging hardly 30 precarious years.

It was an age of luxury for the fortunate few; of squalor and privation for most; but for all, an age of killing diseases.

Then, even the most avaricious person would have given half his inheritance for the life-saving drugs of today.

The name Pfizer is inseparably linked with the discovery and development of new drugs throughout the world.

Today, if you are treated for typhoid, bronchitis, tonsillitis or any other commonly occurring infection, you might well be treated with a Pfizer penicillin or broad-spectrum antibiotic.

Steroids for the healing of burns and skin disorders; drugs for mental health; drugs for the management of tuberculosis, heart disease, anemia—Pfizer make all of these and spend millions on research to ensure the flow of new and better drugs.

In India, as in other countries, drugs that were once the privilege of a few are today within the reach of all. And how can we say that the cost of drugs is high when the only alternative is to forfeit the most precious inheritance of all—a longer, healthier life-span than ever before in human history.



**Pfizer** *Science for the world's well-being*




# டால்ப்

விநியோகஸ்தர்கள்: ஜாப்ரே மேனர்ஸ் அண்ட் கோ. லிட்.




மகிழ்ச்சியான தீபாவளியையும், சுபிட்சமான
புத்தாண்டையும் விரும்புகின்றனர்

பிரபல கிளப்புகளில்...




விளையாட்டுக் கிளப்புகள் நல்ல
தரமான சீட்டுக் கட்டுகளையே
வற்புறுத்துகின்றன.—தரமேன்மைக்
கும், சரசமான விலைக்கும் பாபுலர்
சீட்டுக் கட்டுகளை, உங்கள்
கிளப்பும் நிச்சயமாக நம்பலாம்.

## பாபுலர்

சீட்டுக் கட்டுகள்

பாபுலர் பைன் ஆர்ட்
லித்தோ ஒர்க்ஸ்
பிரைவேட் லிமிடெட்
133-C, வகோலா, சாந்தா குரூஸ்
(கிழக்கு) பம்பாய் - 55




தென் இந்தியாவுக்கு சோல் ஏஜண்டுகள்: V. C. ராமலிங்கம் & சன்ஸ்

2/422, தங்கசாலை தெரு, சௌகார்பேட்டை, சென்னை-1 போன்: 33372 & 20324 தந்தி: NONFERROUS




கோயமுத்தூர் ஜில்லாவிற்கு அதிகாரம் பெற்ற விற்பனையாளர்கள் :

## கவுண்டர் & கம்பெனி

9/69, ஜெயில் ரோடு, கோயமுத்தூர்

தந்தி : "COUNDERCO" போன் : 3377 (3 Lines) தபால் பை. 512

தலைமை ஆபீஸ் : 4-A, கூட்ஷெட் ரோடு, பொள்ளாச்சி

நீலகிரி ஜில்லா உப-விற்பனையாளர்கள் :

## என். மகாலிங்கம் & கம்பெனி

குன்னூர் ரோடு, உதகமண்டலம்

TMB சர்வீஸ் சென்டர் : குன்னூர் ரோடு, உதகமண்டலம்

தந்தி : "ENEMCO" போன் : 461 (2 Lines) தபால் பெட்டி 21

கிளைகள் : கோயமுத்தூர், பொள்ளாச்சி, உடுமலைப்பேட்டை.

மற்றும் ராயல் 'என்பீல்டு மோட்டார் சைக்கிள்கள், மூன்று சக்கர வண்டிகள் பென்டாபுலஸ் ஸ்கூட்டர்கள் விற்பனையாளர்கள்

கண்ணனூர், கோழிக்கோடு, பாலக்காடு, ஜில்லாக்களுக்கு
அதிகாரம்பெற்ற விற்பனையாளர்கள் :

## சக்தி ஆட்டோமோபைல்ஸ்

ஜெயில் ரோடு, கோழிக்கோடு - 2

சர்வீஸ் சென்டர் & ஒர்க்ஷாப்: மீன்சந்தா, கோழிக்கோடு-3 (போன்: 4493)

தந்தி: "SAKTHIAUTO" போன்: 3612 தபால் பெட்டி 9

உங்கள்

# சேமிப்பு

விரைவில் பெருக சிறந்த திட்டம்

எங்கள்

# ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

பிரதி மாதம் தொடர்ந்து செய்யும்
டிபாசிட் தொகையான

ரூ. 10 ரூ. 100 ரூ. 500

இழ்க்கண்டபடி பெருகும்

| | | | | |
|---|---|---|---|---|
| 46 மாதங்களில் | ரூ. | 500 | 5,000 | 25,000 |
| 86 மாதங்களில் | ரூ. | 1,000 | 10,000 | 50,000 |

இப்பொழுதே உங்கள்
ரெக்கரிங் டிபாசிட்
அக்கௌண்டை
எங்கள் பாங்கியில்
ஆரம்பியுங்கள்




தலைமைக் காரியாலயம்
கல்கத்தா

I. P. GOENKA
சேர்மன்

R. B. SHAH
ஜெனரல் மானேஜர்

*a sign of the times...*

Empty vessels
in a straggling line waiting to
be filled...empty vessels with an air
of hopelessness about them...
empty vessels waiting in vain for
the water that never comes...

*Why not get an unfailing water supply with*

Myers or Wasp

# PUMPS

*Deep well pumping our speciality*

WATER SUPPLY SPECIALISTS PVT. LTD.
330, THAMBUCHETTY ST., MADRAS-1

WS-75A

*Diwali Greetings*



Make this Diwali joyous and delicious with J. B. Mangharam's famous Biscuits and Sweets.




**J.B.MANGHARAM&CO.**

GWALIOR & HYDERABAD — INDIA

Madras Office :

Post Box No. 1397

35-37, THAMBU CHETTY STREET

MADRAS-1

Phone : 24696



## தீபாவளி வாழ்த்துக்கள்









இந்தத் தீபாவளி புத்தாண்டு நமது வாடிக்கையாளர்கள் ஆதரவாளர்கள் யாவருக்கும் நலன்களும் இன்பங்களும் பயப்பதாக!

**கிர்லோஸ்கர்**

கிர்லோஸ்கர் ஆயில் என்ஜின்ஸ் லிமிடெட்

எல்பின்ஸ்டன் ரோடு, பூனா-3 (இந்தியா)



# தமயந்தி
## உண்மை நளனை உணர்ந்தாள்.

நளனைப்போல் வேடம் தாங்கி வந்த..
தேவர்களின் மாயத்தில் அவள் ஏமாறவில்லை

தரத்தை நாடும் ரஸிகர்களும்

# ஸ்ரீ அம்பாள் ஆபீஸர்ஸ் பொடி

ஒன்றையே எப்போதும் தேர்ந்தெடுக்கிறார்கள்



10, 25, கிராம் டின்களில்
எங்கும் கிடைக்கும்.

chari

**ஸ்ரீ அம்பாள் அண் கோ.**
201, தங்கசாலைத் தெரு, சென்னை.

## எங்கள் அன்பார்ந்த தீபாவளி வாழ்த்துக்கள்

20ஃ நெ. முதல் 100ஃ நெ. வரை உயர்ந்த ரக பருத்தி நூல் தயாரிப்பாளர்கள்
எங்கள் 60-ம் நெம்பர் நூல் தனிச் சிறப்பு வாய்ந்தது

○●○

# ஸ்ரீஹரி மில்ஸ் பிரைவேட் லிட்.

தபால் பெட்டி எண் 27 - ஒண்டிபுதூர் போஸ்ட் - கோயமுத்தூர்
போன் நெ. 4466

○●○

மானேஜிங் டைரக்டர்: **K. கோவிந்தராஜுலு**

---

## பூச்சிகளின் தொல்லையைத் தவிர்க்க பேயரின் பூச்சி நாசினிகள்

| | | | |
|---|---|---|---|
| நெற் பயிர்களுக்கு | .... | .... | பாலிடால் E 605 |
| பருத்திச் செடிகளுக்கு | .... | .... | பாலிடால் தூள் |
| மிளகாய்ச் செடிகளுக்கு | .... | .... | டிப்டெரெக்ஸ் |
| தேயிலை, காப்பிப் பயிர்களுக்கு | .... | .... | மெடாஸிஸ்டக்ஸ் |
| கரும்புப் பயிர்களுக்கு | .... | .... | லெஸிஸான் |
| உருளைக்கிழங்குச் செடிகளுக்கு<br>மற்றும் பல பயிர்களுக்கு | .... | .... | அகலால்<br>மற்றும் பல வகைகள் |
| மூட்டைப் பூச்சியை ஒழிக்க | .... | ... | டால்ப் |

REGISTERED  TRADE MARK


பேயர் இந்தியா லிமிடெட்
த. பெ. நெ. 1436, பம்பாய் -1
போன்: 38096

நமாஜி பில்டிங், 52-54, ரட்டன் பஜார்
சென்னை - 3 போன்: 34954

சென்னை & கேரள ராஜ்யங்களுக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்
A. V. தாமஸ் & கோ., லிமிடெட்
த. பெ. நெ. 47, ஆலப்புழை (கேரள ராஜ்யம்)

முதல் லைன் பீச்
சென்னை - 1

*Think of an ink*

*and the answer is...*

**RAINBOW INK & VARNISH MFG. CO. PRIVATE LTD.**

133-C, VAKOLA, SANTACRUZ EAST, BOMBAY-55 AS

Telephone: 89734-5 Telegrams: RAINBOINK

---

அனைவருக்கும் எமது
**தீபாவளி வாழ்த்துக்கள்!**

★

கதிர்கள்: 25,000

*தயாரிப்புகள்:*

சேர்த்தியான பருத்திநூல்
34 Nf, 50 Nf, 52 Nf



*மில்ஸ்:*

A. கலையம்புத்தூர் P.O.
(Via) பழனி
தந்தி: "RAJIND"
போன்: 333

*ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:*

திருச்சி ரோடு, சிங்காநல்லூர் P.O.
கோயமுத்தூர் - 5
தந்தி: "RAJIND"
போன் ஆபீஸ்: 3885
வீடு: 6685

முழு விவரங்களுக்கும்
கோவை ஆபீஸுடன்
தொடர்பு கொள்ளவும்.

# பழனி ஸ்ரீ முருகன் டெக்ஸ்டைல்ஸ் லிட்.

மானேஜிங் ஏஜெண்டுகள்: K. ராஜகோபால் நாயுடு சன்ஸ் & கம்பெனி

# சுடரே...

# அருட் பெருஞ் சுடரே

இச் சுடரொளியே உங்கள் வருங்கால இன்ப
வாழ்வுக்குக் குறிசொல்லும் நல்லொளியாய்த்
திகழுவதாக; ஆவல்கள் நிறைவேறி உங்கள்
அகம் மகிழக் காணும்
அருளொளியாய்த் திகழுவதாக!




GT. (Sp.) 24 TM

Greens' Advtg.

# பொருளடக்கம்

கல்கி தீபாவளி மலர் 1964





# PREMA

MADE IN INDIA

அனைவருக்கும் எமது

## தீபாவளி குதூகல வாழ்த்துக்கள்!

STEEL FURNITURE



அழகை விரும்பாதவர்கள் யார்?
அதிலும் பண்டிகை தினங்களில்
வீடுகளையும் ஆபீசுகளையும் அழகு
படுத்த தரம் மிகுந்த "பிரேமா"
ஸ்டீல் பர்னிச்சர்களையே ஒருமனதாக
எல்லோரும் தேர்ந்தெடுக்கின்றனர்.

கப்-போர்டு ★ லாக்கர் கப்-போர்டு
கண்ணாடி அல்மேரா ★ கட்டில்கள்
சோபா செட் ★ சோபா-கம்-பெட்
முதலியன

தயாரிப்பவர்கள்:

**பிரேமா இன்ஜினியரிங் ஒர்க்ஸ்**

பீளமேடு - கோயமுத்தூர்-4

போன்: 6014



## தீபாவளி வாழ்த்துக்கள்!

**உன்னதத் துணிகள்**
**தரத்திலும், உழைப்பிலும் இணையற்றவை**

தரமிக்க சேவையுடன் கூடிய எமது உயர்ந்த
ரக லாங்கிளாத்-மல் மற்றும் இதர தயாரிப்
புகள் எப்பொழுதுமே நீங்கள் விரும்பி
வாங்க உகந்தவை

லாங்கிளாத்-மல்-காடாக்கள், வேஷ்டி
கள்-துண்டுகள்-ஷர்ட்டிங்-டவல்கள்
கெ. 20 முதல் 80 வரை பருத்தி
நூல்கள்



## தி சோமசுந்தரம் மில்ஸ் (பிரைவேட்) லிமிடெட்

தபால் பெட்டி 134 கோயமுத்தூர்-1



# ஜகத்குரு ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள்

காஞ்சி காம கோடி பீடம்

## ஆசியுரை

ஸ்ரீ காசியில் தீபாவளி அன்று அன்னபூரணி அம்பிகைக்கு. அவளது சன்னிதியில் அன்ன கோபுரங்களும் அறுசுவை உண்டிக் கோபுரங்களும் விசேஷ வைபவத்துடன் சமர்ப்பிக்கப்பட்டு அடியார்களுக்கெல்லாம் விநியோகம் செய்யப்படுகின்றன. காஞ்சி க்ஷேத்திரத்தில் காமகோட்டத் தெய்வமான காமாக்ஷி அம்மன் காயத்திரி மண்டபத்தில் பிரவேசிக்கும் இடத்தில் அன்னபூர்ணி உருவத்துடன் கோயில் கொண்டு விளங்குகிறாள்.

பண்டைக் காலத்தில் சைவ சமயாசாரியரான சுந்தரமூர்த்தி நாயனார் சிவக்ஷேத்திரங்கள் தோறும் ஈச்வரனைத் துதித்துப் பண்கள் பாடிக்கொண்டு காஞ்சீபுரத்துக்கு வந்தார். காஞ்சியில் சர்வதீர்த்தக் கரையில் "ஓணகாந்தன் தளி" என்னும் இரட்டைச் சிவாலயத்தில் சிவபெருமானை வழிபடச் சென்றார். ஈசன் அவருக்கெதிரே பிக்ஷாடன மூர்த்தியாகத் தோன்றிப் பிச்சைக்குப் புறப்பட்டார். "கச்சி மூதூர் எனப்படும் காஞ்சீபுரத்தில் காம கோட்டத்தில் வீற்றிருக்கும் காமாக்ஷி உலக முழுவதற்கும் அன்னமளித்து வருகிறாளே; அப்படியிருக்க நீர் போய்ப் பிச்சை எடுக்கவேண்டிய அவசியம் என்ன?" என்று கேட்கும் மாதிரியில் சிவபிரானின் பிக்ஷாடன கோலத்தைப்பற்றி சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏசல்மாரி பொழிகிறார்.

வாரிருங் குழன்மை வாள்நெடுங்கண்
    மலைமகள் மதுவிம்மு கொன்றைத்
தாரிருந் தடமார்பு நீங்காத்
    தையலாள் உலகுய்ய வைத்த
காரிரும் பொழிற் கச்சிமூதூர்க்
    காமக்கோட்ட முண்டாக நீர்போய்
ஊரிடும் பிச்சை கொள்வதென்னே
    ஓணகாந்தன் தளியுளீரே.

இது சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் ஈசனை நிந்தாஸ்துதியாக ஏசும் பாடல்.

இந்தத் தீபாவளி புண்ணிய தினத்தில் காமகோட்டத்தில் அமர்ந்த அன்னபூர்ணாம்பிகையை உள்ளத்தில் வீற்றிருக்கத் தியானித்து, உலகுய்ய வைக்க வேண்டிக் கொள்வோமாக.

# ஆதி சங்கரர்

## ராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன்

நம்முடைய சமய மரபு குறைந்தபட்சம் மூவாயிரம் அல்லது நாலாயிரம் ஆண்டுச் சரிதம் கொண்டது. இந்தச் சரித்திர காலத்தில் எவ்வெப்போது நெருக்கடிகள் தோன்றினாலும், அவ்வப்போது நம் மரபை விளக்கிவைக்க மகான்கள் தோன்றி, மதத்துக்குப் புது வாழ்வளித்திருக்கிறார்கள்.

இந்த மகான்களில் ஒருவர் ஸ்ரீமத் ஆதி சங்கராசாரியரவர்கள். இந்தியாவின் பண்பாட்டு வரலாறு பெற்றெடுத்த அமரப் புதல்வர்களில் ஒருவர் அவர். பிரத்தியட்சமான அநுபவத்தை ஆதாரமாகக் கொண்ட அவரது உபதேசம் உலகம் முழுவதையும் தழுவுவதாகும். ஆனால் இந்நாட்டின் மற்ற பல சமயாசாரியர் போலவே அவரும் தமது உபதேசங்களுக் கெல்லாம் தாமே மூலகர்த்தா என்று கூறிக் கொள்ளவில்லை. முன்னமே உள்ள நம் நாட்டின் மகத்தான ஆத்மிக சம்பிரதாயத்தைக் காலத்தின் நிலைக்கேற்ப மீண்டும் விளக்கி வைத்தவர் என்ற முறையில், வியாக்யானகர்த்தராகவே அவர் தனிச் சிறப்புப் பெறுகிறார். உபநிஷதங்களும், பகவத் கீதையும், மற்ற பல புராதன சமய நூல்களும் உபதேசித்த போதனையை அவர் தம் காலத்திலிருந்த பண்பட்ட மனத்தினருக்கு ஏற்கும் விதத்தில் புதிதாக விளக்கி வைத்தார். அவருடைய புது வியாக்யானங்களே புதிய மூல சிருஷ்டிகள் போல் வடிவெடுத்துப் பொலிந்தன. இன்றும் அவை நம்மை ஆகர்ஷிக்கின்றன.

சங்கரருடைய கிரந்தங்களில் மகோன்னதமான அறிவுத் திறனையும், அப்பழுக்கற்ற வாத சாதுரியத்தையும், பொங்கும் உணர்ச்சியையும் காண்கிறோம். மனித வாழ்வின் சகல அம்சங்களும் தம்மிடம் திகழ்ந்த ஒரு பூரண மனிதர் ஆதி சங்கரர். அவரிடம் திகழ்ந்த மரபோ அவருக்கும் எத்துணையோ காலம் முந்தியது.

ஃ ஃ ஃ

மதம் என்பது அநுபவித்துப் பார்த்து நிரூபணமாக வேண்டிய விஷயம்.

सदा पश्यन्ति सूरयः तद्विष्णोः
परमं पदं दिवीव
चक्षुराततम् ।

என்று ரிக்வேதம் மொழிகிறது. பச்யந்தி; 'பார்க்கிறார்கள்' என்ற பதம் பிரயோகிக்கப்பட்டுள்ளது. பௌதிகக் கண் எவ்வாறு வானத்தில் தோன்றும் வண்ணக் கலவைகளைக் காண்கிறதோ அப்படியே ஆத்மாவின் கண் தெய்வத்தின் இருப்பிடத்தைக் காண்கிறது. பகவத் கீதையிலும் இது



கட்டப்படுகிறது. 'பிரம்ம ஸம்ஸ்பர்சம்' – பிரம்மத்தைத் தீண்டுவது பற்றி கீதை கூறுகிறது. சத்தியப் பொருளை நாம் வைக்க வேண்டும்.

अनुभव अवसानमेव विद्या फलम्

– 'கல்வியின் நிறைவான பலன் அநுபவம் பெறுவதே' என்கிறார் ஸ்ரீ சங்கரர்.

கோட்பாடுகளை விடாப் பிடியாகப் பிடித்துக் கொள்வது மதமாகாது. சடங்குகளில் அநுஷ்டிக்கும் ஆசாரங்கள் மதமாகாது. நமக்காக விதிக்கப்பட்டுள்ள சடங்குகளைச் செய்வது மட்டும் மதமாகாது. நம்முடைய உள் தன்மையையே புதிதாகச் சிருஷ்டித்துக் கொள்வதுதான் மதம். நம் இயல்பையே உன்னதமாக உருமாற்றிக் கொள்வதுதான் மதம். அவ்விதமான அநுபவம் ஏற்படும்வரையில், ஒருவரைப் பூரணமான மத உணர்வு உள்ளவர் என்று சொல்வதற்கில்லை. உண்மையான மத உணர்வால் ஆத்மாநுபவம் பெற்ற மனிதர் பயத்திலிருந்து விடுபட்டிருப்பார். பகையிலிருந்து விடுபட்டிருப்பார்.

அபயம் ; அஹிம்ஸா

அச்சமின்மை, வெறுப்பின்மை இவையே ஓர் உண்மையான சமயவாதியின் ஆன்ம லட்சணங்கள். நம்மில் பலர் மதாபிமானமுள்ளவர்களாக நம்மைச் சொல்லிக் கொள்ளுகிறோம். மதத்தின் வெளி அங்கங்களான சிலவற்றைப் பின்பற்றுகிறோம். எனினும் மற்றவர்களிடமிருந்து உண்மையான மதாசாரமுள்ள உள்ளங்களைப் பிரித்துக் காட்டும் முறையில் உள்ளூற நடைபெறும் பரிணாமத்தை நம்மில் பலரிடையே காண முடியவில்லை.

ஆத்மாவைக் குறித்த அந்த வேறு உலகில் மதத்தின் மூலம் பிரவேசிப்பதற்கே நாம் முயல வேண்டும். இப்போது மக்கள் அறிவின் மூலம் ஆத்மிகத்தை அறிய முயலும் நிலைக்கு வந்திருக்கிறார்கள். இது விஞ்ஞான நிலை எனலாம். இதனினும் உயர்ந்த ஒரு நிலையை அவர்கள் அடைந்தாக வேண்டும். விஞ்ஞானத்தைக் கடந்து 'ஆனந்தம்' என்ற உயர் நிலையை எய்த வேண்டும். இதுவே ஆத்மிகத்தின் நிறைவு. விஞ்ஞானத்திலிருந்து ஆனந்தத்துக்குக் கடத்துவிக்கும் சாதனமே சமய ஒழுக்கம். குறைபாடு கொண்டதும், பூரணச் செம்மை பெறாததும், புதுப் பிறவி மலர்ச்சி பெறாததுமான இயல்பிலிருந்து எழும்பி ஓங்கி வளர்ந்து முழுமையைப்



பெறவே சமய உணர்வுள்ள எவரும் முயல வேண்டும். நன்னெறி ஒழுக்கங்களை வாழ்வில் கடைப்பிடித்து, ஆத்மிக சாதனங்களை அநுஷ்டித்து 'நான் கடவுளைக் கண்டிருக்கிறேன்' என்று சொல்லக் கூடியவர்களால் தான் இந்த முழுமையை அநுபவிக்க முடியும்.

वेदाहमेतं पुरुषं महान्तं आदित्यवर्णं तमसः परस्तात्

'இருளுக்கு அப்பால் சூரியப் பிரகாசத்துடன் திகழும் மகாபுருஷனை நான் அறிவேன்' என்று ரிஷி கோஷித்தது போல் சொல்லக் கூடியவனே சமயத்தை உணர்பவன். அவன் 'கடவுள் இருக்கிறார்' என்று சொல்வதோடு மட்டுமில்லை; கடவுளைத் தன்னுடைய ஒவ்வொரு நாடியிலும் நுகர்பவன் அவன். தன்னுடைய சொந்த அநுபவத்தின் மீதே, 'நான் கடவுளைக் கண்டிருக்கிறேன்' என்று அவனும் சொல்ல முடியும். இந்த அநுபவத்தைத்தான் மதாபிமானிகள் யாவரும் இலக்காகக் கொள்ள வேண்டும். இத்தகைய அநுபவபூர்வமான ஆத்ம ஜீவனத்தை விளக்கி வைத்தவரே ஆதிசங்கரர்.

அநுபவத்தின் மூலம் பரம்பொருளை நுகர்ந்த பின் அந்த அநுபவத்தை வார்த்தைகளில், அறிவுக்கு ஏற்ற கோட்பாடுகளில் விளக்க வேண்டுமென முயற்சி தோன்றும். ஆனால் நமது ரிஷிகளோ இந்த அநுபவத்தை வார்த்தைகள் என்ற சங்கேதங்களாலோ, தர்க்கரீதியான வியாக்யானத்தாலோ வருணிக்க முடியாது என்கின்றனர்.

यतो वाचो निवर्तन्ते । अप्राप्य मनसा सह ।

வெற்று வார்த்தைகளால் மட்டும் அதை எட்டிப் பிடிக்க முடியாது. அப்படிப் பிடிக்க முயன்றால் பரம்பொருளின் அனந்த கல்யாண குணச் செல்வங்களையும், அளவற்ற மகிமைகளையும் விவரிக்க முடியாமல் குழம்ப வேண்டியதுதான். புத்தரும் இதைச் சொன்னார்:

अनक्षरस्य धर्मस्य श्रुतिः का देशना च का ?

'எழுத்தால் விளக்கவொண்ணாத விஷயத்தைச் சொல்லும் வேதம் ஏது? உபதேசம் ஏது?' என்றார். வார்த்தையில் வடிக்கவொண்ணாத சத்தியத்துக்குப் பிரமாண நூலுமில்லை; உபதேசமுமில்லை. ஒவ்வொரு மனிதனும் தானாகவே அதைக் கண்டுபிடித்துக் கொள்ள வேண்டியதுதான். தன்னந் தனியாகத் தேடும் அவன்தான் பரம்பொருளை அடையும்போது புத்தம் புதிய திருமுகத்துடன் தேஜோ மயமாய்த் திகழ்கிறான். அவன் ஆண்டவனைத் தன்னில் ஆவிர்ப்பாவம் செய்து கொண்டவனாகிறான்.

ஈசுவர லக்ஷணம் என்ற இந்த விந்தைப் பெரும் பொருளை விளக்குவது கடினம்.

अदृष्टमव्यवहार्यमग्राह्यमलक्षणमचिन्त्यमव्यपदेश्य-
मेकात्मप्रत्ययसारं प्रपञ्चोपमं शान्तं शिवमद्वैतम्

பார்க்கவொண்ணாதவன், விளக்கவொண்ணாதவன், கிரகிக்கவொண்ணாதவன், இலட்சணம் கூற வொண்ணாதவன், சிந்திக்கவொண்ணாதவன், குறிப்பிட வொண்ணாதவன், ஆத்மா ஒன்றே என்ற ஞானத்தால் மட்டுமே அநுசரிக்கத்தக்க செழுஞ்சாறனையவன், பிரபஞ்சங்களுக்கப்பாற்பட்டவன், சாந்தன், சிவன், தன்னையன்றி இரண்டாவது பொருளற்ற அத்வைதன்.

மாண்டூக்ய உபநிஷதம் உரைக்கும் இவ்விதத்தில்தான் நாம் அதனைப் பற்றிப் பேச முடியும். சாந்தம், சிவம், அத்வைதம்.

ஃ ஃ ஃ

ब्रह्मेति परमात्मेति भगवानिति शब्द्यते ।

என்கிறது பாகவதம்(1-2-11). காலத்துக்கும் தேசத்துக்கும் அப்பாற்பட்ட உத்தம சத்தியமாய், தர்க்கத்தினால் வெளியிடவொண்ணாத வஸ்துவாய், தெய்வத்துக்கெல்லாம் மேலான தெய்வமாய் விளங்குவதே பிரம்மம் என்கிறது. இவ்வாறு எல்லாம் கடந்துள்ள அதனை யாரும் கிரகிக்க முடியாது என எண்ணிவிடலாகாது. அதுவே நமது உள்ளுக்குள் உள்ளே அடி ஆழத்தில் இருக்கிறது. நாம் ஆத்மா எனில் அது பரமாத்மாவாக நமக்கு அடி ஆழத்தில், நம்மின் அடி ஆழமாக இருக்கிறது. நம் அகவாழ்வின் இயல்பையும் உணர்வையும் ஆய்ந்துகொண்டே போகும்போது அதன் இறுதியில் பரம்பொருளின் சத்தியமான இருப்பை உணர்வோம். அதனாலேயே அவனைப் பரமாத்மா என்கிறோம். வெளிப் பிரபஞ்சத்தை நோக்கி, அந்த விசுவ வெளியில் நாம் ஒரு பாகம் என்ற பாவனையைக் கொள்ளும்போது, அதே பரம்பொருளை பகவான் – லோக நாயகன் என்கிறோம். அவனிடம் உறவு கொள்ள விழைகிறோம். கிருஷ்ணனை அர்ச்சுனன் கண்டாற்போல் ஈசுவரனை நேருக்குநேர் கண்டு சம்பாஷித்து உறவு கொள்வது இந்நிலையின் இலட்சியம். யாவும் கடந்த பிரம்மம், நமக்குள்ளேயே உறையும் பரமாத்மா, உலக நாதனாகிய பகவான் என்ற மூன்றும் வர்ணிக்கவொண்ணாத ஒரே அற்புதமும் விந்தையுமான அந்தரங்க சுகாநுபூதிப் பொருளின் வேறு வேறு பெயர்கள்தாம். ஒரே வஸ்துவின் பல நிலைகள்தாம் அவை. நம் அகத்தை வைத்துப் பேசும்போது பரமாத்மன்; பிரபஞ்சத்தை வைத்து அதன் பிரபுவாகப் பார்க்கும்போது பகவான்; பரம தத்துவமாகப் பார்க்கும்போது பிரம்மம்.

கீதா பாஷ்யத்தில் ஆசாரியர் கூறுவதுபோல் பரம்பொருள் என்னும் பெரும் ஒளியின் தூதர்களாக உலகுக்குப் பல மகான்கள் வந்து ஞான ஒளி தந்திருக்கிறார்கள். எல்லா மதாசாரியர்களும், முனிவர்களும், அடியார்களும், பரஞ்ஜோதியின் தூதுவர்தாம். அவர்கள் இவ்வுலகில் பிறந்து தங்களுக்கென ஒரு காத்திரத்தைத் தரித்துக் கொள்வது நமக்கு ஞான ஒளி தருவதற்காகத்தான்; நாம் பரமனை நாடிச் செல்லுமாறு ஊக்கத்தான். நம் கண்ணால் தாங்கவொண்ணாத பரஞ்ஜோதியின் சின்னமாகவே ஆசாரிய புருஷர்களும், அடியார்களும் நாம் கண்ணால் காணக் கூடியவர்களாக வருகிறார்கள் எனலாம். அவர்கள் பற்பல வழிகளைக் காட்டிக் கொண்டு நம்மை ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்கு இட்டுச் செல்வதற்காக வருகிறார்கள். பிரம்மம், பகவான், பரமாத்மா என்றெல்லாம் பல படித்தாகத் தோன்றும் மெய்ப்பொருளே, பரஞ்ஜோதியைக் கொண்டு வந்து பரப்பும் ஆசாரியர்களாகவும் அவதாரங்களாகவும் தோன்றுகிறது.

ஃ ஃ ஃ

ஸ்ரீ சங்கரர் போதித்த தத்துவத்தை எண்ணும்போது, நாம் காண்கிற உலகைப் பற்றிய அவரது கருத்தையே முக்கியமாக நினைக்கத் தோன்றுகிறது.





உலகத்தை அவர் இறுதி சத்தியமாக எண்ணவில்லை; இரண்டாம் பட்சமான ஒன்ருகவே—வேறு ஏதோ ஒன்றுக்கு உட்பட்டதாகவே — கருதினர். அப்படி யெனில் முதல் பட்சமாக அவர் கருதியது எதனை? பரம்பொருளை உத்தம சத்தியம் என அவர் கூறுகிருர். அதற்கு உட்பட்ட இரண்டாம் பட்ச உண்மை நிலையே உலகத்துடையது என்கிருர். உலகும் ஒரு நிலையில் உண்மையா யிருக்கிறது. ஆனல் இது உயர் நிலை அல்ல; தாழ் நிலையில் மட்டுமே உலகம் உண்மை. 'வியாவஹாரிக சத்தியமே உலகம்; பார்மார்த்திக சத்தியமல்ல' என்று இதனைச் சங்கரர் சொல்லுகிருர். ஆனல் உலகம் என்பது எந்த ஒரு தனி மனிதனுடைய கனவும் அல்ல.

அவரது பிரம்ம ஸூத்திர பாஷ்யம் இந்த மகத்தான வாசகங்களுடன் தொடங்குகிறது:

**एवमेवमयमनादिरनन्तो नैसर्गिकोऽध्यासो मिथ्याप्रत्यय-रूपः कर्तृत्व-भोक्तृत्व-प्रवर्तकः सर्वलोकप्रत्यक्षः ॥**

உலகம் என்பது சகலருக்கும் கண்ணுக்கு மெய் யாய் இருப்பது; **ஸர்வலோக ப்ரத்யக்ஷ:** என்கிருர். எல்லோரும் அதை ஒரேபோல் பார்ப்பதால் அது நமது மனம் புனைந்த கனவல்ல. இதோ அது விரிந்து பரந்து காண்கிறது. அது இப்போது தோன்றி உடனே அழி கிற தோற்றங்களின் தொகுப்பல்ல. ஒரே ஒருவர் மட்டுமின்றிப் பலர் தொடர்ந்து கண்டு வருகிற ஒன் றல்லவா உலகம்? எனவேதான் சூத்திரங்களில் பல இடங்களில், உலகம் என்பதை உண்மையில் இல்லாத ஒன்ருகக் கருதலாகாது என்று கூறப்படுகிறது. எப் போது உலகம் என்று ஒன்றைப் பலர் ஒரேபோல் கிர கிக்க முடிகிறதோ அப்போது அது உண்மையாகவே உள்ள வஸ்து என்பது நிச்சயமாகிறது. விழிப்பு நிலைக்கும், கனவு காணும் நிலைக்குமுள்ள அடிப்படை யான மாறுபாடுகள் நமக்குத் தெரியுமாதலால் உலகைக் கனவோடு ஒப்பிட முடியாது. இந்த உலகம் எப்போது தோன்றிற்று என்றும் தெரியவில்லை. எனவேதான் இதை அநாதி என்கிறோம். உலகில் பிறக்கும் ஒவ்வொரு ஜீவனும் பிரபஞ்ச வியாபாரத்தில் பங்கு கொள்பவன். ஆனலும் இந்த உலகை ஆதார சத்தியமாகவோ, இறுதி சத்தியமாகவோ எண்ண முடியவில்லை. (உலக வாழ்வைவிட உயர்ந்த ஒன்று தான் ஆதார காரணம், அதுதான் முடிவான சத்திய மும் என்று அறிகிறோம்.) அதே சமயத்தில் உலகை முழுப் பொய் என்றும் கூற முடியவில்லை. இதனல்தான் விவகார நிலையில் உள்ளவரையில் உலகம் சத்தியம் என்று கூறும் சங்கரர், இந்த உலகத்தின் மூலம் ஆதாரமும் இறுதியுமான 'நிரந்தர சத்திய' நிலையை அடையலாம் என்கிருர்; மோட்சம் பெறுவதற்குச் சாதனமாகவே சம்சார வாழ்வு உள்ளது—

**मोक्षायते संसारः ।**

என்கிருர்.

உலகம் தரும் வாய்ப்புக்களைப் பற்றிக்கொண்டு உலகத்துக்கு மேலாக எழும்பி ஞான நிலையை எய்து வதற்காகத்தான் நாம் உலகில் பிறக்கிறோம்.

ஃ ஃ ஃ

'சங்கரர் ஜாதி முறையை ஆதரித்து வாதம் செய் தவரா? பிரிவினைகளை அவர் ஆதரித்தாரா?' என்றெல் லாம் பலர் கேட்கிருர்கள். விவகார உலக வாழ்க்கை யைப் பொறுத்தவரையில் அவர் எவ்வகை அமைப்புக் களை ஆதரித்தார் என்பது ஒருபுறம் இருக்கட்டும். மோக்ஷ நிலையைப் பற்றி அவர் கூறுவதைப் பார்ப் போம். தமது பாஷ்யத்தில் அவர் மோக்ஷத்துக்குத் தகுதி பெற்றவர்கள் யார் என்று வினவி, விளக்குகிருர்.

**पुरुषमात्रसंबन्धिभिः ।**

என்று விடை கூறுகிருர். அதாவது மானிட இயல்பு உள்ள எவனுமே ஞானத்துக்கும், முக்தி நிலைக்கும் உரிமை பெற்றவன் என்கிருர். அவனது ஜாதியைப் பற்றிக் கவலை இல்லை. இந்தச் சமூகப் பகுப்புக்கள் ஞானனுபவத்தில் எந்த உண்மையான மாறுபாடுகளை யும் குறிக்கவில்லை. உண்மையான மனிதத் தன்மை யாரிடம் இருந்தாலும், அவன் ஞானமும் வீடும் பெறத் தகுதி பொருந்தியவனுகிருன். உயர் குலத்தில் பிறக்கா மல் முக்தி அடைந்த பலர் பூர்வத்திலேயே உண்டு.

ஃ ஃ ஃ

ஞானம் பெற்ற ஒருவன் என்னவாகிருன்? அவன் மறைந்துவிடுகிருனு? அல்ல. பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமாகவே ஆகிருன். எவ்வாறு? இவ்வுலகை விட்டுப் பிரிந்தா? அல்ல என்பதை பிரம்ம சூத்திரம் (3-3-32) சொல்கிறது. அபாந்தரதமஸ், வஸிஷ்டர், பிருகு, நாரதர், ஸநத்குமாரர் முதலிய பரமஞானிகள் உலகத்தில் வாழ்ந்தே பணி புரிந்தவர்கள். பிரபஞ்சமே ஒரு முடிவுக்கு வரும்போது தீமையெல்லாம் அகன்று, பேதங்கள் யாவும் விலகி, மனித குலம் முழுவதும் மாறுதலற்ற நிலை எய்தி, சூரியனும் ஒளி குன்றிக் குளிர்ந்து போகிருன். அப்போதுதான் பரமஞானி களும் பரம்பொருளில் நிரந்தரமாக லயிக்கின்றனர். அதுவரை உலகை நிர்வகிக்கும் சர்வேசுவரனுடன் தங் களை அபேதமாகக் கருதி அவர்கள் லோக உத்தா ரணம் செய்வார்களேயன்றி, உலகம் கடந்த பரப் பிரம்ம நிலையில் ஒன்றியிருக்க மாட்டார்கள். பரப் பிரம்மத்துடன் அத்வைதமாக ஒன்றி அநுபவிக்கும் நிலை ஒருவருடைய உள்ளத்தில் எப்போதும் உள்ளது. எனினும் உலகைப் பொறுத்தமட்டில் பிரபஞ்ச நாயக னன பகவானுடன் தொடர்பு கொண்டவர்களாகவே ஞானிகளும் காணப்படுவார்கள்.

அப்பய தீக்ஷிதர் கூறுவார்:

**भाष्यकारोऽपि अतिस्पष्टं मुक्तस्य सगुणेश्वरभावापत्तिं आह ।**

ஜீவன் முக்தன் அல்லது முக்தனுடைய நிலைபற்றி ஆதிசங்கரர் என்ன கூறுகிருர் என்பதை அப்பய தீக்ஷிதர் விளக்குகிருர். பிரபஞ்சத்தை ஸர்வேசுவரன் இயக்குவதாகக் கண்டுதான் ஜீவன்முக்தர்களும், முக் தர்களும் செயல்படுகிருர்கள்; பிரபஞ்சம் பிரளய முறும்போதுதான் அவர்கள் பிரம்மமாகிய பாரமார்த் திக சத்தியத்துடன் ஒன்றிவிடுகிருர்கள் என்கிருர்.

ஃ ஃ ஃ

கருங்கச் சொன்னல் சமயம் என்பது அநுபவத் திலேயே உள்ளது என்பதுதான் சங்கரரின் போதனை. அதனைத் தர்க்க ரீதியில் நிலைநாட்ட முடியாது. ஆகவே மெய்ப் பொருளை நெருங்கும் முறையில் உருவான

எல்லாக் கருத்துக்களையும் நேசமாகவே வரவேற்போம். மெய்ப்பொருளை அறிய உதவும் எந்த விளக்கத்தையும், வர்ணனையையும் வரவேற்போம். 'நான் கடவுளைக் கண்டுவிட்டேன். நான் கண்ட அந்த ஒரே விதத்தில்தான் மற்றவர்களும் கடவுளைக் காண வேண்டும்' என்று அகம்பாவமாக எண்ணுதிருப்போமாக! மனித இதயத்தில் எத்தனை விதமான இயல்புகள் உண்டோ அத்தனை விதத்திலும் ஆண்டவனை அடைய முடியும். ஒவ்வொருவனிடமும் ஒரு தெய்வீகப் பொறி உள்ளது. ஒவ்வொருவனுக்கும் அவனது இதயத்தின் இரத்தத்திலேயே தோய்ந்ததாக அவனுக்கென்று ஒரு மார்க்கமும் உண்டு. அதனைப் பின்பற்றி முக்தி நிலை பெறுமளவும் மனிதன் உலகில் கர்மம் புரிய வேண்டும். ஞான மயமான கண்ணனும், ஜனகரும் கூட உலகத்தின் வழியை அநுசரித்து, மக்களையெல்லாம் உயர்த்தப் பாடுபட்டார்கள். இவ்வுலகிலேயே விடுதலை பெற்ற ஜீவன் முக்தர்களும் உலகுக்குப் புரிய வேண்டிய கடமை உண்டு.

சங்கரின் மதம் எதையும் புறச் சான்றுகள்மீதும் பிற பிரமாணங்களின்மீதும் ஒப்புக் கொள்ளத் தேவையில்லை என்கிறது. 'ஆண்டவன் இப்படித்தான் விதித்திருக்கிறான்' என்று அம் மதம் பேசவில்லை. ஒவ்வொருவனும் தானே முயன்று, தான் யார், தான் இங்கு வந்திருப்பது எதற்காக என்று கண்டறிய வேண்டும் என்கிறது அது. பிரபஞ்ச வாழ்நிலை ஐந்தடுக்குக் கொண்ட ஒரு படிவரிசை: அன்னம், பிராணன், மனம், விஞ்ஞானம், ஆனந்தம்—என்பதாக. இப்போது நாம் விஞ்ஞான நிலையில் இருக்கிறோம். மனிதன் இன்னும் அறிவாராய்ச்சி வாத நிலையில்தான் இருக்கிறான். வார்த்தைகள் மூலமும், குணப் பகுப்புகளின் மூலமும் தன்னை வெளியிட்டுக் கொள்ளத்தான் அவன் விரும்புகிறான்.

இனி ஆனந்த நிலைக்கு உயர வேண்டும். அக மறுமலர்ச்சி இன்றி, பூரணத்துவமின்றி வாழும் நாம் நம்மை நிறைவித்துக் கொண்டு, பேதங்களையும், துவேஷங்களையும் கடந்து, பரம ஞானத்தை அடைய வேண்டும். இந்தத் துடிப்பு நம் ஒவ்வொருவருடைய இதயத்திலும் அந்தரங்கத்தில் உள்ளது. அந்த ஆர்வத் துடிப்பே நமது ஆத்மிக முயற்சி சத்தியமானது என்பதற்கு நற்சான்றேயன்றி, முக்தி நிலைக்கான முயற்சியை யாரும் சோதித்துப் பார்த்து நிரூபிக்க முடியாது. பசித்த எந்த இதயமும், ஆர்வமுற்ற எந்த மனமும் விவகார உலக நிலையில் திருப்தி கொள்ள முடியாது. எனவே மேலே எழும்பும் முயற்சி தோன்றியே தீரும். இம்முயற்சியில் ஈடுபடுபவர்கள் மற்ற கருத்துள்ளவர்களிடம் அன்புடன் இருத்தல் வேண்டும். இவ்வுலகம் நிரந்தர சத்தியமல்ல என்பதை உணர்ந்து, இது ஆண்டவனால் படைக்கப்பட்டு ஆண்டவனைச் சார்ந்திருக்கும் ஒன்று என்று உணர்ந்து, இதில் உள்ள மன மாறுபாடுகளையும் அவற்றுக்கேற்ற பல மார்க்கங்களையும் மதிக்க வேண்டும். உலகம் சர்வ சுதந்திரமானது என்று ஒருபோதும் மயங்காமல் நன்னடத்தையுடன் ஒழுகி, ஆத்ம சாதனைகளைப் புரிவோமாக! உயர்நிலை உற்று, அதன் பின்னும் உலகம் உய்யப் பணி புரிவோமாக!

மக்கள் யாவருக்கும் இதமானதைச் செய்வோம்;
மக்கள் யாவருக்கும் இன்பமானதைச் செய்வோம்.

बहुजनहिताय
बहुजनसुखाय

அட்டைச் சித்திரம்

# உமையும் ரமையும்

சிவம் என்றாலே சுபம், மங்கலம், கலியாணம் என்று பொருள். உலகுக்கெல்லாம் அமுதமானது சிவம். அந்தசிவத்துக்கும் அமுதமான ஒரு சுந்தர உருவம் உண்டு; அதன் பெயர் "சிவா" என வேதம் கூறுகிறது. சிவா என்ற அம்பிகை கலியாணங்களின்உறைவிடம். இகம் பரம் இரண்டிலும் சகல கலியாணங்களையும் அளிக்கும் தேவியைக் 'கலியாணம்' என்றே தமிழகத்தில் வழங்கப்படும் திருமணத்துக்காகக் கன்னியர் பிரார்த்திப்பது பாரத நாட்டின் நீண்ட கால மரபு. கண்ணனை அடைய விரும்பிய கோபிகைகள் தேவியை வழிபட்டதையும், ருக்மிணி பராசக்தியைப் பூஜிக்க ஆலயத்துக்கு வந்தபோது பெருமான் அவளைக் கவர்ந்து சென்றதையும் நாம் அறிவோம். சீதாதேவியும் தனக்கு ராமனை அளிக்குமாறு உமையிடம் பிரார்த்தித்ததாகத் துளஸியின் 'ராமசரிதமானஸம்' கூறுகிறது. சீதையாகவும் ருக்மிணியாகவும் பிறந்த மகாலட்சுமி நம் தெய்வத் தமிழ் நாட்டில் ஸ்ரீவில்லிபுத்தூரில் பட்டர்பிரானின் பெரியாழ்வாரின் திருமகளாக வாழ்ந்து திருமாலிடம் மால் கொண்டு மருகினாள். முன்பு ஆய்ச்சியர் செய்தது போலவே ஆண்டாளும் தன் தோழிகளுடன் பாவை என்ற தேவிப் பிரதிமை அமைத்து, திருப்பாவை என்ற தெய்வத் தமிழ்மலரால் அர்ச்சித்தாள். ரமைக்கு உமையின் உதவி கிட்டிற்று. திரு அரங்கத்தில் பெருமான் இப்பெண்மானை ஆட்கொள்ளு முன்பே அவளது துயிலில் தோன்றினான். மணம் மிகுந்த மாலையைச் சூடிக் கொடுத்த சுடர்க் கொடியை மணந்துகொண்டான்.

மணப் பெண்ணுக்கு அலங்காரம் செய்து, கோடிச் சேலை உடுத்துவது தமிழகத்தில் நாத்திமாரைச் சேர்ந்த பொறுப்பாகும். ருக்மிணியும், சீதையும் தெய்வமாக வழிபட்ட உமையைக் கோதை வழிபட்டதோடன்றி, தனது மகாலட்சுமி இயல்பை அறிந்து, மணாளனின் சகோதரியாகவும் அன்பு உறவுடன் பாவித்தாள். திருமணத்தின்போது, அந்தரியாகிய திரிபுரசுந்தரி, நாத்தி என்ற முறையில் தனக்குச் சேலை உடுத்தி, மாலை சூட்டிய அழகைப் பாடுகிறாள்:

மந்திரக் கோடி உடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக் கனாக் கண்டேன் தோழீ நான்

காவிய ரஸமும், சமய சமரஸமும் கலந்த இந்தக் காட்சியை ஓவியர் வினு இம்மலரின் வண்ணப் புறவிதழாகச் சித்திரித்திருக்கிறார்.



# ராமகிருஷ்ணர் வரவேண்டும்

## சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

தற்போது நமக்குத் தேவைப்படுபவர் யார்? இயக்கங்களை நடத்தி வைக்கும் தலைவர்களா? மக்களுக்கு வழிகாட்டும் ஆசாரியர்களா?

இயக்கங்களை நடத்தும் தலைவர்களைக் காட்டிலும் ஆசாரியர்களே அவசியம் என்பது என் கருத்து.

பள்ளிக்கூடத்தில் பாடம் சொல்லித் தரும் ஆசிரியர்கள் போலின்றி, தர்மத்தை வாழ்ந்து காட்டும் ஆசாரியர்களே நமக்குத் தேவை.

மக்கள் ஒவ்வொருவரும் நன்னடத்தையுடன் இருக்க வேண்டும்; ஆண் பெண் அடங்கலும் இன்றிருப்பதை விடச் சுயநல எண்ணம் குறைந்து வாழவேண்டும்; ஒவ்வொருவரும் பிறர் நலனையும் கஷ்டங்களையும் அதிகம் கவனித்து அநுதாபம் கொள்ள வேண்டும்; எல்லோரும் நேர்மையாக வாழ வேண்டும்; பணத்தை விட சத்தியத்தையும், நல்ல குணத்தையும் பெரிதாக மதிக்க வேண்டும். இவ்வளவு மாறுதல்கள் நிகழவேண்டுமென்றால், தலைவர்களைவிட ஆசாரியர்களே தேவை.

இவ்வாறு மக்களை நல்வழிப்படுத்துவது ஓர் இயக்கத்தினால் முடியாது.

திட்டம் வகுத்துக் கொண்டு ஓராண்டிலோ, இரண்டாண்டிலோ அல்லது நமது ஆயுட்காலத்துக்குள்ளே திட்ட நோக்கத்தை அடைய வேண்டுமென்று ஆசைப்பட்டால் அதற்கு ஓர் இயக்கமும் தலைவனும் அவசியமே. ஆனால் மக்கள் அனைவரையும் சீர்திருத்தும் பணி, காலக் கெடுவுக்குள் முடிக்கக் கூடிய காரியமாகாது. எல்லோருடைய உள்ளத்திலும் தருமங்கள் நன்றாக ஊறி அவர்கள் நன்னடத்தையைக் கைக்கொள்ள வேண்டுமானால் இந்தப் பெரிய மாற்றம் நிகழ்வதற்கு அவசரம் காட்டக் கூடாது. சோர்வு அடையாமல், சத்தியங்களைச் சிறுகச் சிறுக, மெல்ல மெல்லப் புகட்டிக் கொண்டேயிருந்தால்தான் மக்களின் மனோபாவமும் நடத்தையும் மாறும். இதற்குக் கால வரம்பு நிர்ணயிக்க முடியாது. மிகவும் நிதானமாகவே நடைபெற வேண்டிய பணி. தலைவனாலும் இயக்கத்தாலும் செய்யக்கூடிய பணி அல்ல இது. இயக்கத் தலைவனிலிருந்து மாறுபட்ட முறையில் பணிசெய்யும் ஆசாரியனே இந்தப் பணியைச் செய்ய முடியும்.

ஆசாரிய புருஷர்களின் பணியில் பகட்டுக்கும், டாம்பீகத்துக்கும் இடமில்லை. தன் ஆயுட்காலத்திலேயே காரியத்தை நிறைவேற்ற வேண்டும் என்ற அகங்கார வேகங்கள் ஆசாரியனுக்கு இல்லை. இயக்கத்துக்குத் தலைமை தாங்குபவன் தன் பெயர் பிரபலமடைவதற்குப் பாடுபட வேண்டியது அவசியம். மக்கள் கவனத்தைக் கவருவதற்காக முரட்டுத்தனமாகவோ, சாதுரியமாகவோ முயலவும் வேண்டும். இல்லாவிடில் இயக்கம் வளராது.

ஆசாரியனுடைய பணி இம்முறையில் சேராது. அவனுக்கு இந்த வழி தேவையுமில்லை. தான் உலகின் கவனத்துக்கு ஆளாகாமலிருக்க வேண்டும் என்றே அவன் விரும்புவான். மௌனமாக அவன் பணி புரிய வேண்டும். சீடர்களின் ஆன்மாக்களைத் தனது உள்ளார்ந்த காந்த சக்தியால் கவரவேண்டிய அவனுக்கு வெளிப்புறக் கவர்ச்சியால் ஆவதொன்றுமில்லை. அவன் புகழைத் தேடத் தொடங்கினால் பணிகெட்டுப் போகும். உலகம் தன்னை அறிந்து கொள்வதில் அவன் மறைமுகமாகவோ வெளிப்படையாகவோ மகிழ்ச்சி அடைந்து, சுய விளம்பரத்தை ஒரு கலையாகப் பயின்றானேயாகில் அப்போதே அவனுடைய ஆசாரியத் தகுதி அழிந்து போகும். புகழ் பெறும் முயற்சியில் அவன் பெரும்பாலும் தோல்வியே அடைவான். வெற்றி அடைந்தாலும் சரி, தோல்வி அடைந்தாலும் சரி இந்த வெற்றியும் தோல்வியும் ஆசாரியனுக்கு உரியவை அல்ல.

ஆசாரியன், பெருமைகளைத் தேடிப் பாடுபடுவதில்லை. தருமத்தை நோக்கி, தருமத்துக்காகவே அவன் பாடுபடுகிறான்; தர்மத்தை உண்மையாகப் பின்பற்றுபவன், யாரும் அறியாதவனாகத்தான் இருக்க முடியும். ''ஒவ்வொரு தலைமுறையிலும் யாரும் அறியாத முப்பத்தாறு உத்தமர்களால்தான் உலகத்தின் விதி நிர்ணயிக்கப்படுகிறது'' என்று யூதர்களின் சாஸ்திர நூலாகிய தால்முத் (Talmud) கூறுகிறது.

இப்படிப்பட்ட ஆசாரியர்களை நாம் கண்டதுண்டா? கண்டிருக்கிறோம். ஆண்டவன் தன் கருணையினால் அவ்வப்போது அனுப்பி வைத்திருக்கிறான். ஸோக்ரதர் இவ்வாறுதான் அனுப்பப்பட்டார். இயேசுநாதரும், கௌதம புத்தரும் இவ்வாறு வந்தவர்களே. ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சீடர்கள் தொகுத்துள்ள உபதேசக் குறிப்புக்களிலிருந்து ராமகிருஷ்ணரும் ஆண்டவன் அனுப்பி வைத்த உத்தம ஆசாரிய புருஷனே என இப்போது நாமெல்லோரும் உணர்ந்திருக்கிறோம்.

மகாகவி மில்டனை எண்ணி உவர்ட்ஸ்வொர்த் பாடியது போல் ராமகிருஷ்ணர் நம்மிடையில் மீண்டும் வரவேண்டும் வரவேண்டும் என அடியில் வருமாறு வேண்டுவோமாக :

‘ராமகிருஷ்ணா! நீ இந்த நிமிஷத்தில் இங்கு எங்களுடன் வாழ்ந்திருக்க வேண்டும். தற்போதைய இந்தியாவுக்கு நீ மிகவும் தேவைப்படுகிறாய். ஆத்ம சாந்தி என்ற பரம்பரைச் செல்வத்தை இழந்து நிற்கிறோம். சுயநலக்காரர்களாகி விட்டோம். அப்பனே, நீ மீண்டும் இங்கு வந்து எங்களை உயர்த்து; எங்களுக்கு நன்னடத்தையைக் கொடு; சீலத்தைக் கொடு; சுதந்திரத்தைக் கொடு; சக்தியைக் கொடு.’ – இவ்வாறு நாம் கதறிப் பிரார்த்தித்தால் நம் வேண்டுகோளை ஆண்டவன் கேட்டருள்வான்.

(ராஜாஜி சில ஆண்டுகளுக்குமுன் ‘ஸ்வராஜ்யா’வில் எழுதியது)

# ஸ்ரீ சாமுண்டேசுவரி

## மைசூர் மகாராஜா ஸ்ரீ ஜயசாமராஜ உடையார்

एतत् कृतं यत् कदनं त्वयाद्य धर्मद्विषां देवि महासुराणाम् ।
रूपैरनेकैर्बहुधाऽऽत्ममूर्तिं कृत्वांबिके तत्प्रकरोति कान्या ॥
(श्रीदुर्गासप्तशती)

தேவி! உன் உருவையே பலவாக்கிப் பல வடிவங் கொண்டு, தர்ம மார்க்கத்தைப் பகைக்கும் கொடிய அசுரர்களை வதம் செய்துள்ளாய். உன்னையன்றி, அம்பிகே, வேறு யாரால் இவ்விதம் செய்தருள இயலும்? — ஸ்ரீ துர்கா ஸப்தசதீ



தெய்வ அன்னை ஸ்ரீ சாமுண்டேசுவரியின் மகத்தான சரிதம் மார்க்கண்டேய புராணத்தில் அற்புதமாக வர்ணிக்கப்படுகிறது.

இந்தப் புனித கிரந்தம் கூறும் சரிதமாவது: முந்தைய கல்பம் ஒன்றில் சும்பன் நிசும்பன் என்று இரண்டு அசுர சகோதரர்கள் வாழ்ந்தனர். அவர்கள் மகத்தான சக்தியும், மகத்தான கொடுமையும் ஒருசேர வாய்த்திருந்தவர்கள். தேவராஜனுகிய இந்திரனை அவர்கள் தோல்வியுறச் செய்தனர். மற்ற தேவர்களுக்கு அளிக்கப்படும் 'அவிர்பாகங்களை அவர்கள் பெருதவாறு தடை செய்தனர்.

கொடுமைக்கு ஆளான தேவர்கள் ஹிமாலயத்துக்குச் சென்று, அகிலாண்ட ஜனனியாகிய மகாதேவியைத் துதித்தார்கள். அப்போது பார்வதி தேவியின் திருவுருவிலிருந்து ஓர் எழில் வடிவம் வெளிவருவதை அவர்கள் கண்டனர். பரம்பொருளின் இணையற்ற சௌந்தரியம் பொருந்திய பெண் உருவே அவ்வடிவம்; அவளே பரம்பொருளின் திவ்விய சக்தி; சுந்தரியாகிய அம்பிகை; அசுரர்களிடமிருந்து அமரர்களைக் காக்கவே வந்தவள் அவள்.

சும்ப—நிசும்பாசுரர்களின் பணியாட்களான சண்டனும் முண்டனும் தேவியின் சுந்தரத் தோற்றத்தைக் கண்டனர். அன்னைத் தெய்வத்தின் அருள் வடிவமே அம்பிகை என்ற அறிவு அவர்களுக்கு இல்லை. தங்களின் இரு அதிபதிகளில் ஒருவருக்கு அவளை மனைவியாக்கினுல் சிறப்பாக இருக்கும் என்றே அவர்கள் எண்ணமிட்டனர்.

அசுர மன்னர்களிடம் சண்டனும் முண்டனும் சென்றனர். தேவியின் சௌந்தரிய வசீகரத்தை வருணித்து, அவ்விருவரில் ஒருவர் அவளை மணக்க வேண்டும் என யோசனை கூறினர். தேவியின் இணையற்ற எழிலைக் கேள்வியுற்றவுடன் சும்பனுக்கு மோக வேகம் மிகுந்தது. விகவாசமுள்ள தன் பணியாட்களின் யோசனையை ஒப்புக் கொண்டான். தேவியின் கைத்தலம் பற்றுவதற்கு அவளது இணக்கத்தைக் கேட்டு வருவதற்காக ஒரு தூதனை அனுப்பினுன்.

தூதனின் செய்தியைக் கேட்டதும் அம்பிகைக்குச் சினம் பொங்கவில்லை; இப்படியும் உண்டா என்று விநோத வேடிக்கையாகவே இருந்தது. அவளும் விளையாடினுள். 'இவ்விரு சகோதரர்களில் ஒருவரை மணக்க எனக்கு ஆட்சேபமில்லை. ஆனுல் நான் பூர்வத்தில் ஒரு பிரதிக்ஞை செய்து விட்டேனே! என்னுடன் போரிட்டு வெல்பவரைத்தான் மணப்பது என்பது பிரதிக்ஞை. எனவே அசுர சகோதரர்களில்

யார் என்னுடன் போரிட்டு வென்றாலும் அவரை மணக்கிறேன்' என்றாள்.

இவ்விஷயத்தைக் கேள்விப்பட்ட சும்ப—நிசும்பர்கள், கேவலம் ஒரு பெண்பிள்ளை போருக்கு அழைப்பதாவது என்றே எண்ணினர். அவளை நயமாக முடியாவிட்டால், பலவந்தமாகப் பற்றி இழுத்து வருவதற்காக தூம்ரலோசனன் என்ற வீரனை அனுப்பி வைத்தனர். அவன் தேவியைப் பலாத்காரமாகப் பற்றி இழுத்து வர முயன்றான். அம்பிகை தனது ஹுங்காரத்தினால் அவனை பஸ்மமாக்கினாள். அசுர மன்னன், சண்டன் முண்டன் இருவரையும் தருவித்து, தேவியைக் கைது செய்து கொண்டு வருவதற்காக அவர்களை அனுப்பினான்.

இமய பர்வதத்தின் பொன் போன்ற சிகரத்தில் ஜகன்மாதா முறுவல் பூத்த முகத்துடன் சிம்மத்தின் மீது ஆரோகணித்திருந்த போது சண்ட முண்டர்கள் அவளைச் சென்றடைந்தனர். அவள் மீது யுத்தம் தொடங்கினர். சரமாரி பொழிந்தனர். அன்னைக்கும் கோபமுண்டது. தேவி கோபம் கொண்ட நிலையில் அவளின் திரு நெற்றித் தலத்திலிருந்து காளியன்னை வெளிப்பட்டாள். சண்டமுண்டர்களுக்கும் காளிக்கும் பயங்கரமான போர் நடந்தது. சண்டனின் சிரத்தைக் கத்தியால் கண்டனம் செய்த காளி முண்டனையும் சம்ஹாரம் செய்தாள். அசுரகணங்கள் களத்தை விட்டு வெருண்டோடின. சண்டனின் சிரத்தையும் முண்டனின் முண்டத்தையும் தன் வெற்றிக்கு அடையாளமாகத் தேவியிடம் காளியன்னை சமர்ப்பித்தாள். தேவி மகிழ்ந்தாள். 'சண்டனையும் முண்டனையும் நீ சம்ஹாரம் செய்ததால் உலகில் சாமுண்டா எனப் பிரசித்தி பெறப் போகிறாய்' என இனிமையாகக் கூறினாள்.

यस्माच्चण्डं च मुण्डं च गृहीत्वा त्वमुपागता ।
चामुण्डेति ततो लोके ख्याता देवि भविष्यसि ॥

மகிமை பொருந்திய சாமுண்டேசுவரியின் அவதார வரலாறு இதுவே.

**சு**ம்பனும் நிசும்பனும் தமது நம்பிக்கைக்குகந்த மகா வீரர்களான சண்ட முண்டர்களின் வதத்தைப் பற்றிக் கேள்வியுற்றனர். தாங்களே நேரில் சென்று அவளுடன் போரிட்டு வெல்ல வேண்டுமென முடிவு செய்தனர். அசுரப்படைகளுக்கும் தேவியின் மாத்ருகா கணங்களுக்குமிடையே அதிகோரமான யுத்தம் நிகழ்ந்தது. ரக்தபீஜன் என்ற அசாதாரண சக்தி பெற்ற அசுரன் தெய்வ சேனை மீது புயல் வீசுவது போல் போர் செய்து யுத்த பயங்கரத்தை உச்சமாக்கினான். அவனது உதிரத்தில் ஒரு சொட்டு நிலத்தில் விழுந்தாலும் உடனே அதனின்று அவனை நிகர்த்த ஒரு வீரன் தோன்றி தேவியின் படைகளைத் தாக்கினான். அசுரர்களின் கையோங்கி, யுத்தம் சளைக்காமல் நீடித்தது. அன்னையின் சேனை பலம் குன்றி நின்றது. நிலைமையின் தீவிரத்தைத் தேவி எண்ணிப் பார்த்தாள். சாமுண்டேசுவரியை அழைத்தாள். 'துஷ்டனாகிய ரக்தபீஜனை நான் அஸ்திரங்களால் தாக்கி உதிரம் பெருகச் செய்கிறேன். உதிரத் துளிகள் நிலத்தில் விழுமுன் நீ அவற்றைப் பருகிவிட வேண்டும்' என்று உத்தரவிட்டாள். சாமுண்டா அவ்விதமே செய்தாள். விரைவிலேயே ரக்தபீஜனும் அவன் தோற்றுவித்த அசுர கணங்களும் மடிந்தனர்.

அசுர அதிபர்களாகிய சும்ப, நிசும்பர்களை இதன் பின் போரில் சந்திக்க நேர்ந்தது. தேவி முதலில் நிசும்பனை வதம் செய்து விட்டுப் பின்னர் சும்பனைச் சூலாயுதத்தால் துளைத்து யமாலயம் அனுப்பினாள். தேவியின் வெற்றியில் தேவர்கள் பரமானந்தமடைந்தனர். தேவ ராஜ்யம் மீண்டும் இந்திரனுக்கு வசமாக்கப்பட்டது.

**கா**ளியன்னை சாமுண்டா எனப் பெயர் பெற்றதையும், சண்டமுண்டர்களை வதைத்தது மட்டுமின்றி, ரக்தபீஜ வதத்துக்கும் அவள் உதவியாக இருந்தாள் என்பதையும் காண்கிறோம். சாமுண்டா வேறு, அவள் யாரிடமிருந்து தோன்றினாளோ அந்தத் தேவி வேறு என எண்ணலாகாது. தேவர்கள் அன்னையைத் துதித்துப் பாடிய தோத்திரத்திலிருந்து சாமுண்டேசுவரியும், பரதேவதையும் ஒருவரே என அறிகிறோம். தர்ம மார்க்கத்துக்குத் தடையாய்க் கிளம்பும் கொடிய சக்திகளை அழிப்பதற்காகத் தேவி ஒருத்தியே பல உருவங்களை எடுத்துக் கொள்கிறாள் என தேவர்கள் துதிக்கிறார்கள். விஷ்ணுவின் தெய்வீக சக்தியான யோக நித்திரை அல்லது மகா மாயையாக இருந்து பூர்வத்தில் தேவியானவள் மது—கைடபர்களின் அழிவுக்கு உதவியதை தேவர்கள் போற்றுகிறார்கள்.

மதுவும் கைடபனும் அளவற்ற போர் ஆற்றல் படைத்த இரு ராக்ஷஸர்கள். தங்களது சக்தியில் இறுமாப்புக் கொண்டதன் காரணமாக அவர்கள் தங்களின் எதிரியான விஷ்ணு பகவானுக்கே வரம் கொடுக்க முன்வந்தனர். பகவான் இந்தத் தருணத்தை நன்கு பயன்படுத்திக் கொண்டார். 'நீங்கள் என்







கையில் மரணமடைய வேண்டும்; இதுவே நான் கோரும் வரம்' என்றார். அப்படியே வரம் தருவது தவிர மது—கைடபர்களுக்கு வேறு வழியில்லை. பகவானின் நித்திரை கலைந்து, அவர் மது—கைடபர்களால் விளைந்த தீங்கை உணர்ந்து, அவர்களை வதைக்க வரம் கோரியதற்கு தேவியே காரணம்.

வேறொரு கல்பத்தில் மகிஷாசுரன் என்று ஓர் அசுரன் தோன்றினான். தேவர்களை யெல்லாம் வென்றான். தர்மவழியில் யாரும் செல்ல முடியாமல் துன்புறுத்தினான். 'நன்றியுடன் என்னை நினைந்தக்கால் உதவ வருவேன்' என்று யோக நித்திரா தேவி முன்பு வாக்களித்திருந்ததை தேவர்கள் நினைவுகூர்ந்தனர். அவ்வாறே அன்னையைத் தியானித்தனர். என்ன ஆச்சரியம்! தேவர்களின் தேஜஸ் அவ்வளவும் ஒன்று சேர்ந்து ஓர் ஒளிக்குவியல் உண்டாயிற்று; அது தேவியின் திரு உருவமாகப் பொலிந்தது. இவளே பின்னர் மகிஷனை வதைத்த மகிஷாசுரமர்த்தினி. மதுகைடபர்கள் வதத்துக்குக் காரணமான மகாமாயை, மகிஷனை சம்ஹாரித்த மகிஷாசுரமர்த்தினி, கும்ப நிகும்பர்களை வதைத்த அம்பிகை யாவரும் ஒன்றேதான். ஒன்றேயான பூரணப் பொருளுடைய நிரந்தர சக்தியின் பல தோற்றங்களே அவர்கள். தேவி எனப்படும் இந்தச் சக்தியில்லாவிடில் பரப் பிரம்மத்தினாலும் ஏதும் செய்ய இயலாது என ஆதிசங்கரர் 'ஸௌந்தர்யலஹரி'யில் கூறுகிறார்.

> शिवः शक्त्या युक्तो यदि भवति शक्तः प्रभवितुम् ।
> न चेदेवं देवो न खलु कुशलः स्पन्दितुमपि ॥

பராத்பரியான தேவிக்கும், காளி, சாமுண்டா ஆகியோருக்கும், மாத்ருகைகளான பிரம்மாணி (பிரம்மனின் சக்தி), மாகேசுவரி (ஈசனின் சக்தி), கௌமாரி (முருகனின் சக்தி), வைஷ்ணவி (விஷ்ணுவின் சக்தி), வாராஹி (வராகரின் சக்தி), நாரசிம்மி (நரசிம்மரின் சக்தி), ஐந்திரி (இந்திரனின் சக்தி) ஆகியோருக்கும் பேதம் கற்பிக்கக் கூடாது. அவர்கள் யாவரும் அபேதமான ஒன்றே என்பதை நிலைநாட்டும் சரிதமே 'துர்கா ஸப்தசதீ'.

'நீ தனித்துப் போராடவில்லை; மற்ற சக்திகளின் உதவியுடனேயே சமர் புரிகிறாய்' என்று கும்பன் தேவியிடம் குற்றம் கூறியதாகவும், உடனே தேவி வெளியில் உலாவிய எல்லா சக்திகளையும் தனக்குள்ளேயே வாங்கிக் கொண்டதாகவும் ஸப்தசதீ கூறுகிறது.

தேவியிடம் காணப்படும் மற்றோர் அற்புத மகிமை அவளிடம் சௌந்தரியம் பயங்கரம் இரண்டுமே

மைசூர் மன்னர் பரம்பரையினரும், மக்களும் உள்ளன்போடு சாமுண்டேசுவரியை வணங்கித் தசரா விழாக் கொண்டாடும் காட்சிகளை இப்பக்கங்களில் புகைப் படங்களாகக் காண்கிறோம். சாமுண்டேசுவரியின் ஸ்ரீ ஆலயத்தையும், தேர் விழாவையும், தேவி பவனி வரும் காட்சியையும் மைசூர் மன்னர் அவ்விழாவில் பங்குகொள்வதையும் காண்கிறோம்.

போட்டோக்கள்: பி. எஸ். ஆச்சார், மைசூர்.



ஒன்றிக் காணப்படுவதாகும். மகிஷாசுரமர்த்தினியின் சரிதத்தைப் பாராயணம் செய்யும் போது தேவியின் சௌந்தரியப் பிரகாசமே நம் நெஞ்சில் ஆழப் பதிகிறது. எல்லா தேவர்களின் தேஜஸும் ஒன்று சேர்ந்தவளல்லவா அவள்? விசுவகர்மா அளித்த சூடாமணியையும் குண்டலங்களையும் கடகங்களையும் அணிந்து கொண்டு, சமுத்திர ராஜன் சமர்ப்பித்த வாடாத புதுத் தாமரை மாலையும் தரித்து நிற்கும் தேவி அழகோவியமாகத் திகழ்கிறாள். இவளேதான் காலன் அளித்த சக்தியோடும், சிவபெருமான் அளித்த திரிசூலத்தோடும், நாராயணன் அளித்த சக்கரத்தோடும் ரௌத்திரகாரமாகவும் விளங்குகிறாள்.

இதே போல் சும்ப நிசும்பர்களால் பீடிக்கப்பட்ட தேவர்கள் இமய வரம்பை அடைந்து பார்வதி தேவியைப் பிரார்த்தித்த போது அம்பிகையின் திவ்விய தேஜோமயம் வெளிப்பட, அந்த அசாதாரணமான அழகில் தேவர்கள் திகைத்தனர். அசுரர்களும் அவ்வழகிலேயே திகைத்தனர். அசுரர்கள் மூலம் இந்த லாவண்யத்தைக் கேள்வியுற்றுத்தான் சும்பனும் நிசும்பனும் போர் தொடங்கினர். சுந்தர நாயகியான இவளேதான் மகாபலம் பொருந்திய அசுரர்களை வதம் செய்யும் போது ஆயுதங்களைத் தரிக்கும் காளியாகி, அழகால் கவர்ந்திழுக்காமல் அஞ்சி நடுங்கச் செய்கிறாள். அடியார்களை ஆகர்ஷிக்கும் அன்பான அழகும் அவளே; கொடியாரை அச்சுறுத்தும் கோபத்தின் கோரமும் அவளே என்பது புராணத்தின் தாத்பரியம்.

'துர்கா ஸப்தசதீ'யின் உத்தரபாகத்தில் பரதேவதை மூன்று முக்கியமான ரூபங்களில் மகாலக்ஷ்மியாகவும், மகா காளியாகவும், மகா சரஸ்வதியாகவும் தோன்றுகிறாள் எனக் கூறப்படுகிறது. தூய்மைத் தத்துவமான சத்துவம், வீரியத் தத்துவமான ராஜஸம், அஞ்ஞானத் தத்துவமான தாமஸம் மூன்றையும் ஆதி சக்தியான மகாலக்ஷ்மியிடம் காண்கிறோம். தமோகுணத்துக்கு மகா காளியும், சத்துவகுணத்துக்கு மகா சரஸ்வதியும் பூரணமாக உரு வகிக்கிறார்கள். பராசக்தியின் வேறுபல அவதாரங்களும் நிகழப்போகின்றன; அவள் சாகம்பரியாகவும், துர்கையாகவும், பீமா தேவியாகவும், பிராமரியாகவும் தோன்றிப் பிரசித்தி பெறப் போகிறாள் என்று ஸப்த சதியின் உத்தர பாகத்திலுள்ள 'மூர்த்திரகஸ்யம்' என்ற பகுதி கூறுகிறது.

திவ்விய மாதாவான சக்தியைப் போற்றும் தேவர்களின் துதியிலிருந்து அன்னையின் அற்புதப்பிரபாவங்களை அறிகிறோம். ஒளியின் இயல்பு பொருந்திய தேவி சித்கலை என்ற ஞான வடிவானவள். உலகின் தோற்றத்துக்கும், பரிபாலனத்துக்கும், அழிவுக்கும் அவளே காரணம். ஓயாமல் மாறி மறையும் பிரபஞ்சத்தைச் சுழல விடுபவள் அவளே. ஜீவராசிகளை அவித்யை என்னும் அஞ்ஞானத்தின் பாற்படுத்துபவளும் அவளே. வாழ்க்கையை நடத்துவதற்கான சக்தியும், ஞானமும் அவளிடமிருந்தே பெற்றாக வேண்டும். கருணைமயமானவள் அவள். அவளது கருணையைப் பெற்றவன் சம்சாரத் தளையிலிருந்து விடுபட்டு மோக்ஷ சுகம் பெறுகிறான்.

स्वर्गापवर्गदे देवि नारायणि नमोऽस्तु ते ।

இவ்வாறெல்லாம் தேவர்களின் ஸ்துதி கூறுகிறது. இவை யெல்லாவற்றுக்கும் மேலாக அகில புவனங்களாகவும் விசுவேசுவரியே விளங்குவதை தேவர்கள் போற்றுகிறார்கள். நம்மை உன்னதமான நிலைக்கு இட்டுச் செல்லும் வாக்குகளில் தேவியைப் பாடுகிறார்கள்:

सर्वतः पाणिपादास्ते सर्वतोऽक्षिशिरोमुखे ।
सर्वत. श्रवणघ्राणे नारायणि नमोऽस्तु ते ॥

தேவி, உனது கரங்களும் பாதங்களும் விசுவமெங்கணும் விரிந்துள்ளன; உனது கண்களும், சிரங்களும், முகங்களும் எல்லாத் திசைகளிலும் பரந்துள்ளன; பிரபஞ்சவெளி யெங்குமுள்ள எல்லாவற்றையும் உன் உணர்வுகள் பற்றிக் கொள்கின்றன. எங்குமுள்ள தேவி நாராயணி, உனக்கு நமஸ்காரம்.

இத்தகைய திவ்வியமான பெருமை பொருந்திய அன்னையின் ஓர் உருவம்தான் மைசூர் மன்னர்குடியின் பேரன்புக்கும், பக்திக்கும் உரிய தேவியாகிய சாமுண்டேசுவரி. தேவி பாகவதத்தில் கூறப்பட்டுள்ள விதிக்கிணங்க இந்தத் துர்கையன்னைக்குத் தசராவின் போது விசேஷமான பூஜைகள் நடத்தப்படுகின்றன. ராஜ குடும்பத்தினரும், மைசூர் மக்கள் யாவரும் ஆச்வின மாதத்தில் நிகழும் இவ்விழாவின் போது அம்பிகையை விசேஷமாகப் பணிந்து வழிபடுகிறார்கள். தேசத்தின் எல்லாப் பகுதிகளிலுமுள்ள துர்கா பக்தர்கள் மைசூருக்கு வந்து அண்மையிலுள்ள மலை மீது ராஜ கம்பீரமாக இலங்கும் சாமுண்டேசுவரியைத் தரிசிக்கிறார்கள். பூர்வத்தில் தேவர்கள் பிரார்த்தித்தது போலவே, இன்றைய மக்களும் உலகத்தின் தீமைகள் யாவும் விலகி வளங்கள் பெறுக வேண்டுமென அம்பிகையைப் பிரார்த்திக்கிறார்கள். ஸ்ரீ சாமுண்டேசுவரியைப் பணிகிற பக்தனொருவன் பெறும் நற்செல்வங்களை யெல்லாம் இங்கு நினைவு கொள்வோம்:

स्तुता संपूजिता पुष्पैः धूपगन्धादिभिस्तथा ।
ददाति वित्तं पुत्रांश्च मतिं धर्मे गतिं शुभाम् ॥

தேவியை உளமாரத் துதித்து, புஷ்பம், தூபம், கந்தம் முதலியவற்றினால் பூஜிப்பவர்களுக்கு அவள் செல்வத்தையும், சந்ததியையும் அளித்து, அவர்களின் மதியை தர்மகதியில் செலுத்தி இம்மையிலும் மறுமையிலும் மங்களங்களை அருள்கிறாள்.



# காமகோடி பெரியவாள்

நமது துன்பங்கள் அத்தனைக்கும் காரணம் வினை தான். வித்தின்றி விளையாது; வினையின்றி இன்ப துன்பங்கள் விளைய மாட்டா; வினையால் உடம்பு வருகின்றது. உடம்பு துன்பங்களை அநுபவிக்கின்றது.

விதி காணும் உடம்பை விடா வினையேன்
கதி காண மலர்க்கழல் என்றருள்வாய்?

என்று அருணகிரி சுவாமிகள் கந்தர் அநுபூதியில் கேட்கின்றார்.

வினை வேரு விரைவாக விலகுவதற்குச் சுலபமான ஒரு வழியுண்டு. அது என்னவென்று பார்ப்போம்.

சுடும் வெயில்: ஆதித்த பகவான் வெப்பத்தை அள்ளி வீசுகின்றார். அந்த வெயிலில் நமது ஆடையை வைத்தால் சுடும்; வெந்து போகாது. எத்துணை கொடிய வெயிலாக இருப்பினும் வேட்டி வெதும்புமேயன்றி வெந்து கரியாகப் போகாது.

சூரிய காந்தக் கண்ணாடியை வெயிலில் வைத்து அதன் மூலம் பாய்கின்ற மற்றொரு வெயிலில் வேட்டியைக் காட்டினால் அந்த விநாடியே வேட்டி வெந்து கரிந்து போகும். நேர்வெயிலுக்கு அந்த ஆற்றல் இல்லை. சூரியகாந்தக் கண்ணாடிக்கு ஆற்றல் அதிகம். காரணம் யாது? பரந்து விரிந்து உள்ள வெப்பத்தைச் சூரிய காந்தக் கல் ஒன்றுபடுத்தித் தன் மீது அனுப்புகின்றது. அதனால் சூரிய காந்தக் கண்ணாடியின் மீது வருகின்ற வெயில் துணியைக் கரியாக்கி விடுகின்றது. திருவருள் வெயில் போன்றது. குருவருள் சூரிய காந்தக் கண்ணாடியின் மீது வருகின்ற வெயில் போன்றது.

திருவருளை நாடினால் வினை வெதும்பும்; குருவருளோ வினையை வெந்து கரியாகச் செய்து விடும். அத்துணைப் பேராற்றல் குருவருளுக்கு உண்டு.

எங்கும் பரந்து விரிந்துள்ள திருவருளைப் பல காலும் செய்த தவ வலிமையால் இழுத்து ஒன்று கூட்டித் தம் சீடர்கள் மீது செலுத்துகின்றார் பரம குருநாதர்.

வினைகளை ஒழிப்பதற்கு எளிய வழி குருவருளைப் பெறுவதேயாகும்.

இப்படி ஓர் அற்புத குருவாக, நடமாடும் கோயிலாக நமக்கு உதவுகின்றவர்கள் காமகோடி பரமாச்சாரியர். பரம தபோதனர்களாய், நிஷ்டாநுபூதியுடைய

திருமுருக கிருபானந்தவாரியார்

வர்களாய் விளங்கும் அருட் கடல் அவர்கள். அவர்களைக் குறித்து அடியேன் அறிந்த சில பெருமைகளை இங்கு அளிக்கிறேன்.

ஒரு முறை அடியேன் காமகோடி மகா முனீந்திரரைக் காண விரும்பினேன். அப்போது அவர்கள் மயிலை மாநகரில் சம்ஸ்கிருதக் கல்லூரியில் எழுந்தருளியிருந்தார்கள்.

முன்னமே மூன்று மணிக்கு வருவதாகச் சொல்லியனுப்பியிருந்தேன்.

3–5 ஆனதும் தவநிதிகள் இருமுறை அடியேன் வந்தாயிற்றா என்று காரியஸ்தர்களைக் கேட்டருளினார்களாம். பிற்பகல் 3–5 மணிக்குச் சென்றேன். மடத்து மானேஜர் என்னைப் பார்த்து, "பெரியவாள் இரு முறை கேட்டு விட்டார்கள். சீக்கிரம் போங்கள். விழுந்து வணங்க வேண்டாம் என்று உத்தரவு ஆகியுள்ளது" என்றார்.

எனது மார்பில் சிவலிங்கதாரணம் செய்துகொண்டுள்ள காரணத்தால் அப்படிச் சொன்னார்களோ, என்னவோ? அடியேன் உள்ளே நுழைந்தேன். அங்கு மணற்கேணியின் அருகில் மாதவத்தின் மணிவிளக்காகப் பெரியவாள் அமர்ந்திருந்தார்கள். காந்தத்தைக் கண்ட இரும்பு ஊசியைப் போல் சர்க்கப்பட்டு விழ்ந்து வணங்கினேன். "விழுந்து வணங்கக் கூடாது என்று சொல்லியிருந்தேனே?" என்று கூறினார்கள்.

அடியேன் மௌனமாக நின்றேன்.

"திருமாமணி கைமா?" என்று கேட்டருளினார்கள். அவர்கள் அப்படி வினவியது எனக்குப் பெரு வியப்பாயிருந்தது.

தம்பி திருமாமணியை இருபத்து ஐந்து ஆண்டுகட்கு முன்னர் மின்னல் என்ற ஊரில் ஒரே ஒரு முறைதான் பெரியவாள் சந்தித்திருந்தார்கள். அங்கு பெரியவாள் விஜயம் செய்தபோது பூஜாமுகத்தில் தம்பி திருப்புகழ் பாடினார். யார் என்று கேட்க, 'திருபானந்தவாரியின் தம்பி' என்று அருகில் உள்ளவர்கள் கூறினார்கள். அதோடு தம்பியுடன் தொடர்பு முடிந்து போயிற்று. தம்பியின் பேர் அடிக்கடி செய்தித்தாளில் வரக் கூடியதுமன்று.

அவ்வாறிருக்க, இருபத்து ஐந்து ஆண்டுகட்கு முன்னர் ஒரே முறை சந்தித்தபோது கேட்ட பேரை அப்படியே நினைவில் வைத்து, அடியேன் சந்தித்தபோது முதல் கேள்வியாக, "திருமாமணி கைமா?" என்று கேட்டது அவர்களது நினைவாற்றலைக் காட்டுகிறது. அன்பர்களிடம் அவருக்குள்ள அக்கறையை நினைத்து நெகிழ்ந்து நெகிழ்ந்து உள்ளம் உருகியது.

எந்த வேளையும் நான் எண்ணி மகிழும் என் அன்பர் திரு கி. வா. ஜ. அவர்கள் அந்த வேளை அங்கு வந்தார். பெரியவாளை வணங்கி, அடியேனை அறிமுகம் செய்வாரைப் போல், "இவர் வடலூர் திருப்பணி, காங்கேயநல்லூர் திருப்பணி, குடிப்பேட்டை திருப்பணி இப்படிப் பல திருப்பணிகள் செய்திருக்கிறார்கள்" என்றார் கி. வா. ஜ. அவர்கள்.

'ஞானத்தின் திருவுருவாய், நான்மறையின் தனித் துணையாய், வானத்தின் மிசையன்றி மண்ணில் வரு மதிக் கொழுந்தாய்' விளங்கும் சுவாமிகள் புன்முறுவல் பூத்து, திரு கி. வா. ஜ. அவர்களைப் பார்த்து, "நீ எல்லாம் சொன்னாய். உன் ஊரிலே செய்த திருப்பணியைச் சொல்லவில்லையே?" என்றார்கள்.

கி. வா. ஜ. அவர்களது ஊர் மோகனூர். அங்கு அடியேன் 1948ல் ஒரு லட்ச ரூபாய் செலவில் பொது ஜனங்களின் ஆதரவைக் கொண்டு அருணகிரிநாதர் அறச்சாலை ஒன்று புதுக்கினேன். அதைத்தான் அவர்கள் ஞாபகமாகக் குறிப்பிட்டார்கள்.

'உன்னைவிட எனக்கு அதிகம் தெரியும்' என்று தானே அதற்குப் பொருள்? என் அன்பர் ஜகந்நாதய்யர் ஜகத் குருவைப் பார்த்து வாய் மூடி மௌன நிலையில் நின்றார்.

காஞ்சீபுரத்தில் 1960ம் ஆண்டு மார்கழி மாதம் 1008 பஜனைக் கோஷ்டிகள் ஒன்று கூடுகின்ற விழா நடைபெற்றது. அப்போது நமது தபோநிதிகள் சென்னைக்கு அருகில் தங்கி யிருந்தார்கள். விழாவுக்குத் தலைமை தாங்கும் பொருட்டுக் காஞ்சிமா நகருக்கு எழுந்தருளினார்கள். விடியற்காலை வரதராஜப் பெருமான் சந்நிதியில் பஜனைகள் தொடங்கப்



பெற்றன. அப்போது சுவாமிகள் ஆசி கூறியருளினார்கள். பகல் மூன்று மணிக்கு மகாநாடு கூடியது. முப்பதினாயிரம் ஜனங்கள் குழுமியிருந்தார்கள். அந்த மகாநாட்டில் பலர் பேச வந்திருந்தார்கள். அவரவர்கட்கு இறைவன் திருவருள் கனவிலோ நனவிலோ புரிந்த அரும் செயலைக் கூற வேண்டும் என்பதுதான் பேச்சாளர்களின் குறிக்கோள்.

கருணைக்கடலாய் அங்கு தலைமை பூண்டிருந்த காமகோடி மகா முனீந்திரர் இனிய கனியமுதம் அன்ன மலர் வாக்கினால் திருக்களர் வீரப்ப சுவாமிகளின் அருட் செயலைக் கூறி, ''தவத்திற்கு நேர் விரோதம் கோபம். கோபமே பாபத்தைக் கொடுக்கும். ஒரு மனிதன் பொன்னைக் காக்காவிட்டாலும் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும். தன்னைக் காக்க வேணுமானால் சினத்தைக் காக்க வேணும். இல்லையேல் தன்னைச் சினம் கொன்றுவிடும்.

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க—காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்''

என்று அருளுரை பகர்ந்தருளினார்கள்.

அடுத்து என்னுடைய விரிவுரை. அடியேன், ''ஞானத்தின் திருவுருவாய், தெய்வானுபூதிகள் நிரம்பப் பெற்று வீற்றிருக்கும் பெரியவாளுடைய திருமுன், சிறியேனுக்கு இறைவன் செய்த கருணைத் திறத்தை எவ்வாறு கூறுவேன்?'' என்று அந்தரங்க உணர்ச்சியுடன் சொன்னேன்.

அப்போது சுவாமிகள் என்னைப் பார்த்து உரத்த குரலில், ''உனக்கு வரும் பொருள்கள் அத்தனையும் உனக்காக ஒரு அணுக்கூட வைத்துக்கொள்ளாமல் தருமஞ் செய்கின்றாயே? அது அவன் கொடுத்த புத்திதானே? அந்த அருட் செயலைக் கூறு, போதும்'' என்றார்கள்.

அதைக் கேட்டு என் நாடி நரம்புகள் எல்லாம் ஆடின. உரோமஞ் சிலிர்த்தது. ஏன்? அது என் மனைவிக்கும் தெரியாத உண்மை. கணவனுக்கு வரும் பொருள் அத்தனையும் அறம் புரிகின்றார் என்று தெரிந்தால் சில பெண்களுக்கு 'ப்ளட் பிரெஷர்' வந்துவிடும்.

அருகில் உள்ள மனைவிக்கும் தெரியாத உண்மையை நெடுந் தொலைவில் உள்ள முனிவர் பெருமான் தம் யோக சக்தியால் உணர்ந்து கூறியதை உன்னி உன்னி உளம் உருகினேன்.

பெரியவாள் ஒரு சமயம் சந்திர மௌளீசுவர பூஜை செய்து கொண்டிருந்தார்கள். தரிசனத்துக்குப் போயிருந்த அடியார் குழாத்தில் ஒருவருடைய பெண் குழந்தை பூஜையில் அம்பிகைக்குக் கட்டியிருந்த பட்டுப் பாவாடையை எடுத்துத் தனக்குக் கொடுக்க வேண்டும் என்று பிடிவாதம் செய்தது. தாய் தந்தையர் மகளின் வாயைப் பொத்திச் சமாதானம் கூறினார்கள்.

பூஜை முடிந்ததும் தவஞான யதீந்திரர் அந்தக் குழந்தையின் தந்தையை அழைத்து, ''ஏன் குழந்தை அழுதது?'' என்று கேட்டருளினார். 'தொலைவில் நிகழ்ந்த நிகழ்ச்சி. பெரியவாளுக்குத் தெரிய முடியாது' என்று எண்ணிய அவர் ''ஒன்றுமில்லை'' என்றார்.

''நீ மறைக்கிறாய். அம்பிகையின் இந்தப் பாவாடைக்காகத்தானே அழுதது? இந்தா, குழந்தையிடம் கொடு'' என்று அந்தப் பாவாடையைக் கொடுத்தருளினார்கள்.

அவருக்கு ஆச்சரியம். தூரத்தில் நடந்த நிகழ்ச்சி இவர்களுக்கு எப்படித் தெரிந்தது என்று எண்ணினார். ஞான விழியால் எல்லாம் அறிகின்ற ஆற்றல் பெரியவாளுக்கு உண்டு என்பதை அவர் உணரவில்லை போலும்!

இன்று தீபாவளி. 'கங்கா ஸ்நானம் ஆயிற்றா?' என்று கேட்பார்கள். மகாப் பிரவாகமாக இடையறாது ஓடிக் கொண்டிருக்கின்ற இமய கங்கையின் வெள்ளத்தில் சிறு அளவைச் சிறிய செம்பில் கொணர்ந்து தருவது போல், நடமாடும் கோயிலாய், சகல ஜனங்களும் உய்ய வந்த காமகோடி பெரியவர்களுடைய அருட் பிரவாகமாகிய பெருவெள்ளத்தில் இரண்டொரு அருட் செயல்களை உங்களுக்கு அளித்தேன்.

எங்கும் உண்மையும் ஒழுக்கமும் பக்தியும் பரவுக!



# *what happened to the rest of the milk?*



IT JUST isn't there! About 5 oz. of milk is what *you* get per day—if all the milk India produces is equally shared by her people! That includes milk products, too! Not enough? Precisely. More milk has to be produced. Distribution has to be widened. That means more dairies and equipment: milk cans, can-washers, pasteurising plants, special storage tanks, bottle-washers and fillers...even foil caps for bottles! And that is the range of our products for the dairy industry alone—from a foil cap costing a few naye Paise to complete dairies worth several lakhs of rupees! When you next open a milk bottle, consider—

**Who puts the wheels on milk cans?**



We do—but not exactly on cans! Large dairies need large quantities of milk. And it has to be collected in time. A special job for road tankers—virtually tanks on wheels like the ones we make.

**Here, food preservation is not a problem!**

...but in the tropics foodstuffs deteriorate fast. Take milk, for instance. *Tons* of it! That is what a large dairy handles *every* day! Milk is collected from distant centres, weighed, tested, clarified, pasteurised and chilled. It's then stored in insulated tanks or cold stores. Next comes filling and capping of lakhs of bottles. A complicated process? Certainly. Something that cannot be done well enough—fast enough—without special plant and the know-how—exactly what we provide.



**How many hours to churn 11,500 litres of cream?**

If by hand—well, it is impossible! But with automatic butter-making plants, in just a day!—and fully packed, too! Special equipment of this type that we supply to milk-products factories, include those for making cheese, milk powder, condensed milk, ice-cream—even ghee!





**Larsen & Toubro Limited**

*Divisions: Dairy & Refrigeration · Earthmoving & Agricultural Equipment · Drilling & Mining · Heavy Plant · Industrial Appliances · Electrical Equipment & Switchgear · Instruments · Civil Engineering · Erection · Manufacture · Servicing*

DYE 94



அதிதேவதைமுன்
விசுவாசப்பிரமாணம்!

இந்திய
ஒலிம்பிக்ஸ்
மூன்றுகால்
ஓட்டம்

நாசவேலை
ஒலிம்பிக்→
டார்ச்!


உதவி!
உதவி!!
டில்லி-
மாஸ்கோ
பாய்ச்சல்!


PK
22,000 கோடி
தொழில் அதிபர்
சரக்குப் பந்தயம்
உணவுப் பிரச்னை
மல் யுத்தம்
பொதுஜனம்
கால்பந்தாட்டம்!

# ஆஞ்சநேயன்

ஆண்டவன் எங்கும் தான் இருப்பதைக் காட்டு வதற்காகவே பல ஜீவராசிகளாக அவதரித்தார். மத்ஸ்யம், கூர்மம், வராஹம், நரசிம்மம் முதலிய பல அவதாரங்களைச் செய்தார். இவைகளை யெல்லாம் புராணங்கள், இதிகாசங்கள் முதலியவை விரிவாகக் கூறுகின்றன. அவதாரத்துக்கு லக்ஷணம் ஸத்யம், தர்மம் முதலியவற்றைச் சிறிதுகூட விடாமல் அமானுஷ்யமான சக்தியைக் காண்பிப்பதேயாகும். இவ்வாறு நடத்திக் காட்டிய மூர்த்திகளுக்குள் ஸ்ரீ ஹநுமாரும் ஒருவர். ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸ்ரீ ஹநுமார் நடுநாயகமணியாக விளங்குகிறார். இவருடைய பெருமையைப் பல காண்டங்களில் காணலாம். ஸுந்தர காண்டத்தில் ஹநுமார் ராஜ்ய காரியமாய் வெளி நாடு சென்று ஸீதையைக் கண்டு பேசிய முறைகளை யெல்லாம் யாவரும் படிக்க வேண்டும். வெளிநாடு செல்லும் தூதர்கள், ராவணனைக் கண்டு சபையில் ஹநுமார் பேசியதை அவசியம் படித்து உணர வேண்டும். ஸீதையுடன் பேசும்போது ஸ்ரீ தேவியானவள் ஸ்ரீ ஆஞ்சநேயரை ராவணனோ எனச் சந்தேகித்து, அவரைப் பார்த்துக் கவலை கொண்டாள். அதைக் கண்ட மகா பலிஷ்டரான ஹநுமார் இவள் ஏதோ பயத்தால் துயரமடைந்திருக்கிறாள் என உணர்ந்து ஜனகனுடைய பெண்ணான அந்தத் தேவியை நமஸ்கரித்தார்.

हनुमानपि दुःखार्त्तां तां दृष्ट्वा भयमोहिताम् ।
अवन्दत महाबाहुः ततस्तां जनकात्मजाम् ॥

என வால்மீகி கூறுகிறார். நமஸ்கரித்த பிறகு பல வாறுக தேவி ஹநுமாரைச் சந்தேகித்தபோதிலும் பின்பு, 'நீ ராவணனில்லை. உன்னைக் கண்டதும் என் மனத்துக்குப் பிரீதி உண்டாகிறது. நீ ராமதூதனாக இருந்தால் உனக்கு மங்களமுண்டாகுக' என ஆசீர்வதிக்கிறாள். 'நீ மறுபடியும் ராமகதையைக் கூறவேண்டும். எனக்கு ஸ்ரீ ராமகதையில் மிகுந்த பிரியம்' என்றும் கூறினாள். இவ்வாறு அவள் மனத்துக்குத் தெளிவு ஏற்பட்டதற்கு முக்கிய காரணம் ஸ்ரீ ஆஞ்சநேயரின் வணக்கமேயாகும். அவர் நமஸ்கரித்துத் தன் வணக்கத்தைக் காண்பித்ததும் அவள் மனத்தில் இருந்த கலக்கங்கள் யாவும் நீங்கிவிட்டன. பெரிய காரியங்களைச் சாதிப்பவர்கள் எதிராளியின் மனத்திலுள்ள சந்தேகங்களைப் போக்கப் பல வழிகளுண்டு. அவைகளில் பெரியவர்களின் மனத்திலுள்ள சந்தேகத்தைப் போக்கச் சிறந்த ஸாதனம் வணக்கமே.

ராவணன் முதலில் ஸீதையைக் கண்டதும், "தாங்கள் தங்க நிறம் கொண்டவராகவும் தங்கப் பட்டாடை அணிந்தவராகவும் இருக்கிறீர்களே" எனக் கூறினான். அவன் மனத்திலுள்ள காமம் அதனால் வெளியாகியது. ஸ்ரீ ஆஞ்சநேயரோ, தேவியைக் கண்டதும் நமஸ்கரித்து, தலையில் கை கூப்பி, "தாங்கள் யார்? தங்கள் கண்களிலிருந்து சோக ஜலம் எதற்காகச் சிந்த வேண்டும்? தாங்கள் தேவ கன்னிகையா? அஸுர கன்னிகையா? பார்வதியா? அல்லது சந்திரனை விட்டுப் பிரிந்த ரோஹிணியா? வசிஷ்டருக்குக் கோபம் வரும்படி செய்து, அவரை விட்டுப் பிரிந்து வந்த அருந்ததியா?" என்றெல்லாம் வணக்கத்துடன் கேட்டார். இப்படிக் கேட்டதால் அவர் மனத்தில் உள்ள பக்தி வெளியாகிறது.

ராவணனுடன் ஹநுமார் பேசியது வேறு விதத்தில் சிறப்பாக உள்ளது. 'நமக்குத் தவம் இருக்கிறது. நம்மை யார் என்ன செய்ய முடியும்?' என்ற எண்ணம் கொண்ட ராவணனிடம் ஆஞ்சநேயர் "எனக்கும் பிரம்மதேவரிடமிருந்து வரம் இருக்கிறது."

पितामहादेव वरः ममाप्येषोऽभ्युपागतः ।

என்று கூறியதும் ராவணன் மனத்திலிருந்த தைரியம் எப்படித் தளராமல் இருக்க முடியும்? கடைசியில் "ஓ ராக்ஷஸ ராஜ சிரேஷ்டா! நான் ஸத்யமாகச் சொல்கிறேன் கேள். நான் ராக்ஷஸ ஜாதியிலோ மனுஷ்ய ஜாதியிலோ சேர்ந்தவனல்ல. நான் வானர ஜாதி. எனக்கு ஒருவரிடத்திலும் பக்ஷபாதமில்லை" என்பதைக் கூறிவிட்டு, ஸ்ரீ ராமன் எல்லா உலகங்களையும் அழித்து விட்டு மறுபடியும் படைக்க வல்லவன் என்று கூறினார்.

सत्यं राक्षसराजेन्द्र शृणुष्व वचनं मम ।
रामदासस्य दूतस्य वानरस्य विशेषतः ॥

தேவர்கள், அஸுரர்கள், மனிதர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸ கணங்கள், வித்யாதரர்கள், கந்தர்வர்கள், உரகர்கள், ஸித்தர்கள், கின்னர சிரேஷ்டர்கள், பக்ஷிகள், ஸர்வ பூதங்கள், இவர்களுள் ஒருவராலும் ஒருபொழுதிலும், ஓரிடத்திலும் விஷ்ணுவுக்கு ஒப்பான பராக்கிரமமுள்ள ஸ்ரீ ராமனை எதிர்க்க முடியாது என்ற கம்பீரமான ஹநுமனுடைய சொல்லைக் கேட்ட ராவணனுடைய உள்ளம் எப்படி இருந்திருக்கும் என்பதைக் கூறவும் வேண்டுமோ? ராஜ காரியமாக வெளிநாடு செல்லும் தூதன் ஸ்ரீ ஆஞ்சநேயனைப் போல் சொல்வன்மையுடனும் புத்திசாலித்தனத்துடனும் இருக்க வேண்டும் என்று உணர வேண்டும்.

யுத்த காண்டத்தில் இந்திரஜித் ஸ்ரீ ராம லக்ஷ்மணர்களையும், கோடானு கோடி வானரர்களையும் பிரம்மாஸ்திரத்தினால் கட்டியடித்துக் கீழே தள்ளி விட்டான். சூரியன் அஸ்தமித்து விட்டான். ஸ்ரீ ஹநுமாரும், விபீஷணனும் பந்தத்தைக் கையில் எடுத்துக்கொண்டு வரும்போது அடிபட்டுக் கண்களைத் திறக்க முடியாமலிருந்த ஜாம்பவானைப் பார்த்தார்கள். விபீஷணன் ஜாம்பவானைப் பார்த்து, "ஜீவித்திருக்கிறீர்களா?" என்று கேட்டதும், "அஞ்சனை பெற்ற பாக்கியமான ஸ்ரீ ஆஞ்சநேயன் உயிருடன் இருக்கிறானா?" என்று ஜாம்பவான் கேட்டார். விபீஷணன், "ஏன், ஸ்ரீ ராமனையோ, லக்ஷ்மணனையோ, ராஜாவான சுக்ரீவனையோ, அங்கதனையோ கேட்காமல் ஹநுமானைப் பற்றி மட்டும் விசாரிக்கிறீர்கள்; அவரிடத்தில் இவ்வளவு என்ன விசேஷ அன்பு?" எனக் கேட்டார். அதற்கு ஜாம்பவான், "ஹநுமான் ஒருவன் ஜீவித்திருந்தால் மற்றவர்கள் மரித்திருந்தாலும் அவர்களைப் பிழைக்கச் செய்து விடுவான். ஆஞ்ச

சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்

நேயன் உயிர் துறந்திருந்தால் மற்றவர்கள் பிழைத்திருந்தும் பயனில்லை'' எனக் கூறினார். ஹநுமார் ஜாம்பவானை நமஸ்கரிக்க அவரும் ஔஷதி பர்வதத்தைக் கொண்டு வரும்படி கட்டளையிட, அதேபோல் ஔஷதி மலையைக் கொண்டு வந்ததும் யாவரும் தூங்கி எழுவது போல் பிழைத்து எழுந்தார்கள். இவைகளெல்லாம் ஹநுமானின் அமானுஷ்ய சக்தியைக் காட்டுகின்றன.

ஸ்ரீ மஹாபாரதத்தில் ஹநுமானைப் பற்றிய வரலாறு உள்ளது. பீமஸேனன் ஸௌகந்திக புஷ்பத்தைக் கொண்டு வர ஹிமாசலத்தில் ஏறும்போது வழியை மறைத்துக் கொண்டு ஹநுமான் பெரிய மலை போன்ற சரீரத்துடன் படுத்திருந்தார். அவரை ஏதோ குரங்கென நினைத்த பீமன், ''ஏ குரங்கே! எழுந்து வழியை விடு'' என அதட்டினான். ஹநுமான் ''நான் வயதானவன். தூங்குகிறேன். வியாதியுள்ளவன். என்னால் எழுந்திருக்க முடியவில்லை. அவசியமிருந்தால் என்னைத் தாண்டிப் போ'' எனச் சொன்னார். பீமன், ''நான் வேதங்களைக் கற்றதின் மூலம் பரமாத்மா எல்லா ஜீவராசிகளிலும் இருக்கிறார் என்பதை அறிந்துள்ளேன். அப்படிக் கற்றறிந்திராவிடில் உன்னையும் இந்த மலையையும் ஹநுமார் சமுத்திரத்தைத் தாண்டியது போல் தாண்டிவிடுவேன்'' என்றான்.

உடனே ஆஞ்சநேயர் அந்த ஹநுமார் யார் எனக் கேட்டார். ''ஓ குரங்கே! நீ ராமாயண கதை கேட்டதில்லையா? அதில் வானர ச்ரேஷ்டரான என் ப்ராதா மிகப் பிரசித்தமானவர். அவர் இலங்கையில் இருக்கும் ஸ்ரீ ராம பத்னியான ஸ்ரீ ஸீதா தேவியைத் தரிசனம் செய்வதற்காக ஒரே தாண்டாகச் சமுத்திரத்தைத் தாண்டினார். நான் அவருக்குச் சமமான பலமுள்ளவன். உன்னை நிக்ரஹம் பண்ணச் சக்தி உள்ளவன். நான் கூறியபடி வழி விடாவிடில் உன்னை யமலோகத்துக்கு அனுப்பி விடுவேன்'' என்றான் பீமன்.

உடனே ஹநுமார், ''தாங்கள் அருள் புரிய வேண்டும். நான் மிக அசக்தன். எனக்கு எழுந்திருக்கச் சக்தி இல்லை. தயை கூர்ந்து என் வாலை அப்புறம் எடுத்துப் போட்டுவிட்டு என்னைத் தாண்டிச் செல்லுங்கள்'' என்று சொன்னார். இக் குரங்கு மிகவும் பலஹீனமானது என எண்ணி, இதை யமலோகத்துக்கு அனுப்பி விடுவோமென அவமதிப்புடன் பீமன் தனது இடது கையால் ஸ்ரீ ஹநுமாருடைய வாலைப் பிடித்துத் தூக்கினான். ஆனால் வாலைச் சிறிது கூட அசைக்க முடியவில்லை. உடல் வியர்த்து, வெட்கத்துடன் அஞ்சலி செய்து நமஸ்கரித்து ஹநுமாரைப் பார்த்துக் கூறினான். ''நான் சொன்ன கெட்ட வார்த்தைகளைப் பொறுத்து அருள் புரிய வேண்டும். வானர உருவத்துடன் கூடிய தாங்கள் ஸித்தரா? தேவரா? கந்தர்வரா? யக்ஷரா? நான் சிஷ்யன் போல் வணக்கத்துடன் தங்களைக் கேட்கிறேன்'' என்றான். இதைக் கேட்ட ஹநுமார், ''ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் மனிதராக அவதரித்துப் பூமியில் சஞ்சரித்தார்'' என ஸ்ரீமத் ராமாயணத்தை ஆரம்பித்து விஸ்தாரமாகக் கூறி, ''ஸீதா தேவியைத் தேடுவதற்காகச் சென்று சமுத்திரத்தைத் தாண்டிய ஹநுமான் நான்தான்'' என விளக்கினார்.

ஸீதா தேவி அசோகவனத்தில் கருக்கிட்டுக் கொண்டு ஜீவனை விட எத்தனிக்கையில் ஸ்ரீ ராம கதையைச் சொல்லி அவளைப் பிழைக்கச் செய்தார் ஹநுமார். அதனால் ஸீதை சகல க்ஷேமங்களையும் அடைந்தாள். அதிலிருந்து உலகிலுள்ள யாவரும் ஸ்ரீமத் ராமாயணத்தைக் கேட்டு ஸகல ஸௌபாக்கியங்களையும் அடைந்து வருகிறோம். ஸ்ரீ ராமாயணத்தில் மஹிமையைக் காட்டியவர் ஸ்ரீ ஹநுமார் என்றே கூறலாம். அதனால்தான் ஸ்ரீ ஹநுமாரை நினைத்தால் சிறந்த புத்தி, உடல் பலம், புகழ், தைர்யம், பயமின்மை, ஆரோக்கியம், புத்தியிலுள்ள ஜாட்யம் விலகுதல், நன்கு பேசும் திறமை என்ற இந்த எட்டும் உண்டாகுமென்று முனிவர்கள் கூறியுள்ளனர்.

बुद्धिर्बलं यशो धैर्यं निर्भयत्वमरोगता ।
अजाड्यं वाक्पटुत्वं च हनूमत्स्मरणाद्भवेत् ॥

இதை அனுபவத்திலும் நமது பெரியோர்கள் கண்டு வருகின்றனர். நினைத்தாலே அருள் புரியும் தெய்வம் ஹநுமார். நமது தேசத்தின் பெரும் தலைவரும் மகாபுருஷர்களுமாகிய ஸ்ரீ ராஜாஜி அவர்கள் ''எனக்கு மனத்தில் சந்தேகமோ கவலையோ ஏற்பட்டால் ஸ்ரீ ஹநுமாரை நினைப்பேன். உடன் அவை நீங்கிவிடும்'' என ஒரு சமயம் கூறினார். இப்படிப் பெரியவர்களெல்லாம் உபாஸிக்கும் ஹநுமாரைப் பற்றி யாவரும் தீபாவளி புண்ணிய காலத்தில் படித்து நினைப்பது நமது பாக்கியமாகும்.

ஸ்ரீ ஆதி சங்கரர் அருளிய ஸ்ரீ ஹநுமத் பஞ்சரத்னத்தில் 'ஸ்ரீ ஸீதா தேவியின் மனக் கவலையை வெகு தூரத்துக்கு அப்பால் விரட்டியவரும் ஸ்ரீ ராமருடைய மஹிமையை யாவரும் அறியும்படி செய்தவரும், ராவணனது புகழை அழித்தவருமான ஸ்ரீ ஹநுமாருடைய மூர்த்தியானது என் முன்பு இருந்து கொண்டு அருள் புரிய வேண்டும்'' எனப் பிரார்த்திக்கிறார்.

दूरीकृतसीतार्तिः प्रकटीकृतरामवैभवस्फूर्तिः ।
दारितदशमुखकीर्तिः पुरतो मम भातु हनुमतो मूर्तिः ॥



# மணிப் புதல்வர்

அக்னிஹோத்ரம் ராமாநுஜ தாதாசாரியார்

அநந்தஸூரி என்ற வைஷ்ணவப் பெரியாரும் அவரது தர்மபத்தினி தோதாரம்மாவும் திருப்பதிக்கு வருகிறார்கள். குழந்தையில்லாக் குறையை நீக்கியருளுமாறு ஸ்ரீநிவாஸனாகிய ஸ்ரீ வேங்கடநாதனை இருவரும் வேண்டிக் கொள்கிறார்கள். வேங்கடநாதனுக்கும் அப்போது ஒரு முக்கியமான காரியம் நடக்க வேண்டியிருக்கிறது. தோதாரம்மாவின் கனவில் வேங்கடாசலபதி தோன்றுகிறார். பாலாஜி என்ற பெயருக்கேற்பக் குழந்தை உருவத்தில் தோன்றுகிறார். தன் பூஜைக்கு உபயோகப்படும் மணியைத் தோதாரம்மாவிடம் தந்து விழுங்கச் சொல்லுகிறார். ஏன், என்ன, எப்படி என்று கேட்கிற இடமா அது? தோதாரம்மா மணியை விழுங்கிவிடுகிறாள். துயில் கலைகிறாள். வயிற்றில் பிரணவநாதத்தைக் கொண்ட மணி கருவாகி யிருப்பதை உணர்கிறாள். பத்து மாதங்களுக்குப் பின்பு பிறந்த குழந்தைதான் வேதாந்த தேசிகர்.*

பாரத தேசப் பண்பாட்டின் மூலாதாரமான தெய்விக உணர்ச்சியைப் பாதுகாக்க அவ்வப்போது மகான்கள் அவதரிக்கிறார்கள். இவர்கள் பகவானுடைய அவதாரம் என்று மக்கள் கருதி வழிபடுகிறார்கள். சில சந்தர்ப்பங்களில் இவர்கள் மாறுபட்ட கருத்துக்களை வெளியிட்டாலும், இவர்களுடைய பெருமை இதனால் குறைவது கிடையாது. மத வாதங்களில் ஈடுபட்டு, வேறுபட்டுப் பேசுவதும் பிறருடைய கொள்கைகளைக் கண்டிப்பதும் பழங்காலப் பண்பாட்டின் அடையாளம். குறிப்பிட்ட மனப் போக்குள்ளவருக்குக் குறிப்பிட்ட மார்க்கமொன்றுதான் பொருந்தும்; பிற மார்க்கங்களைக் காட்டி அவர்களைக் குழப்பக் கூடாது என்பதற்காகவே, பற்பல மாறுபட்ட மார்க்கங்களில் சத்திய தரிசனத்துக்கு அழைத்துச் செல்ல அவதரித்த மகான்கள் தத்தம் வழியை மிகவும் வலியுறுத்தி மற்றவற்றை விலக்கி வாதிடுவார்கள். ராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய காலத்துக்குப் பிறகுதான் மதக் கொள்கைகளில் சகிப்புத் தன்மையும், பிற மதங்களுடைய கொள்கைகளைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற அவாவும் அதிகமாகியுள்ளன எனலாம். மதாசாரியர்கள் ஒரு குறிப்பிட்ட கொள்கையை வற்புறுத்தினாலும் அவர்களுடைய சரித்திரத்திலிருந்து வெளியாகும் பொதுவான தெய்விகத்தைப் பருக வேண்டுமென்ற ஆவலும் இப்போது உண்டாகியுள்ளது. அவ்வாறு யாவரும் அநுபவிக்கக் கூடிய அற்புத சரித்தை வாழ்ந்த ஒரு மகான் ஸ்ரீ வேதாந்த தேசிகர்.

ஸ்ரீ வேதாந்த தேசிகர் ஸ்ரீ வைஷ்ணவ சமயாசாரியர்களுள் மிக முக்கியமான ஒருவர். ஸ்ரீ பகவத் ராமாநுஜருக்குப் பிறகு நூல்கள் மூலமும், சஞ்சாரம் செய்தும் விசிஷ்டாத்வைத வேதாந்தத்தையும் ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தையும் பாதுகாத்த பெருமை ஸ்ரீ வேதாந்த தேசிகருக்கு உண்டு. ஸ்ரீ ராமாநுஜரிடமும், ஆழ்வார்களிடமும் அபாரமான ஈடுபாடு உள்ளவர். ஆழ்வார்களுடைய பாக்களை வேதத்துக்குச் சமமாகப் பல இடங்களில் போற்றி யிருப்பவர்.



தூப்புல் பிள்ளை என்று பிரசித்தரான வேதாந்த தேசிகர் காஞ்சி மண்டலத்தைச் சேர்ந்த தூப்புல் என்ற இடத்தில் கி. பி. 1268 வாக்கில் விபவ வருஷத்தில் ஸ்ரீமந்நாராயணனுக்கு உகந்த புரட்டாசித் திருவோணத்தில் திரு அவதரித்தார். நித்திய அக்கினி ஹோத்திரிகளின் பரம்பரை. வேத மணத்தில் குழந்தை வளரக் கேட்பானேன்?

ஐந்து வயதுக் குழந்தையாக இருக்கும் காலத்தில் மாமனா ஆத்ரேய ராமாநுஜருடன் நடாதூரம்மாள் என்ற வரத தேசிகரின் காலக்ஷேபத்துக்குப் போகிறார் நம் தேசிகர். பல பெரியோர்கள் நிறைந்த கோஷ்டியில் குழந்தை நுழைந்த உடனேயே ஒரு பரபரப்பு. குழந்தையின் தெய்விக ஒளியைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டு எழுந்து விடுகிறார்கள். நடாதூர் அம்மாள் காலக்ஷேபம் சொல்வதையும் மறந்து குழந்தையின் தேஜஸில் ஈடுபட்டுப் பிரம்மாநந்தத்தில் மூழ்கி நிற்கிறார். சிறிது நாழிகை கழித்துக் காலக்ஷேபம் ஆரம்பிக்க எண்ணுகிறார். காலக்ஷேபம் எங்கு நிறுத்தப்

* மணியை ஆண்டவன் அப்போது வெளியே கொண்டு போய் விட்டதால் திருப்பதியில் இன்றும் மணி இல்லாமலே பூஜை நடக்கிறது.



பட்டது என்று தெரியாமல் எல்லோரும் திகைக்கிறார்கள். ஐந்து வயதுக் குழந்தை வாயைத் திறக்கிறது. விட்ட பாடத்தை ஞாபகப்படுத்துகிறது. வாத்ஸல்ய வரதாசாரியர் குழந்தையை அநுக்கிரகிக்கிறார். 'ராமாநுஜ சித்தாந்தம் இவனால் தழைத்தோங்கும்' என்று மனம் நிரம்பிக் கூறுகிறார்.

உசிதமான காலத்தில் உபநயன ஸம்ஸ்காரத்தைப் பெற்றுப் பிதாவிடம் வேதம், சாஸ்திரம் இவைகளை ஸ்ரீ தேசிகர் கற்றார். பாட்டனாரான புண்டரீகாக்ஷருடைய அருளையும் பெறுகிறார். தாயாரின் சகோதரரான ஆத்ரேய ராமாநுஜரிடமிருந்து சகல கலைகளையும் இருபது வயதுக்குள் கற்றார். வித்தியாப்பியாசம் முடிந்ததும் விவாகமாகிறது. வெற்றியுடன் கிருஹஸ்தாச்ரமத்தை நடத்திய ஆசாரியர் இவர். ஆத்ரேய ராமாநுஜரிடம் கருட மந்திரத்தை உபதேசம் பெற்று அதில் ஸித்தி பெறத் தென்னார்க்காடு ஜில்லாவில் உள்ள திருவஹீந்திரபுரம் வந்து சேருகிறார். திருவேத்திபுரம் எனப்படும் திருவஹீந்திரபுரம் அழகான க்ஷேத்திரம். ஔஷதி பர்வதம் என்ற சிறிய குன்றும் கடில நதியும் தேவநாயகனின் ஸந்நிதானமும் எவரையும் பகவத் தியானம் செய்ய அழைக்கும். கருட பகவான் ஸ்ரீ தேசிகருக்குப் பிரத்தியக்ஷமாகி ஹயக்ரீவ மந்திரத்தை உபதேசிக்கிறார். அந்த மந்திரத்தை ஜபித்து ஸித்தி அடைகிறார் ஸ்ரீ தேசிகர். ஹயக்ரீவர் பிரத்தியக்ஷமாகிறார். தேசிகரின் ஹயக்ரீவ ஸ்தோத்திரத்தில் பிரத்தியட்ச தெய்வ தரிசனம் பெற்ற உண்மையைப் பார்க்கிறோம். திருவஹீந்திரபுரத்தில் பதினைந்து வருஷங்கள் இருந்து தபஸ் செய்து தெய்விக சக்தியை அடைகிறார் ஸ்ரீ தேசிகர். பல நூல்களும் தோத்திரங்களும் இங்கு இவரால் எழுதப்பட்டன.

காஞ்சீபுரம் வருகிறார். பல வருஷங்கள் ராமாநுஜருடைய நூல்களைப் பிரசாரம் பண்ணிக் கொண்டு வசித்து வருகிறார். பல வேதாந்த நூல்களையும் ஸ்தோத்திரங்களையும் எழுதி அடியாருலகுக்கு அளிக்கிறார். திருப்பதிக்குச் சென்று ஸ்ரீநிவாஸனின் தயையைப் போற்றி தயாசதகம் என்ற உள்ளம் உருக்கும் துதியை இயற்றினார். பிறகு வடநாட்டில் க்ஷேத்திராடனம் செய்தார். இவருடைய காலத்தில் வட இந்தியாவின் புண்ணிய க்ஷேத்திரங்கள் முஸ்லிம்களின் ஆக்கிரமிப்பால் பாழாகி விட்டதைக் கண்டு நொந்து பல இடங்களில் பேசுகிறார். காசி, அயோத்தியை, பிரயாகை, காச்மீரம், துவாரகை முதலிய இடங்களுக்கு விஜயம் செய்து விட்டு மீளவும் காஞ்சி நகரம் வந்து சேருகிறார். சிறிது காலத்துக்குப் பிறகு தெற்கு தேச யாத்திரை செய்ய நினைந்து ஸ்ரீரங்கம் செல்கிறார்.

அப்போது ஸ்ரீரங்கத்தில் சமயப் போரும், வேதாந்தச் சண்டையும் தலைதூக்கி நிற்கின்றன. ராமாநுஜருடைய நூல்களுக்கும் கருத்துக்களுக்கும் வியாக்கியானம் செய்வதில் பலமான சர்ச்சைகள் நடைபெறுகின்றன. ராமாநுஜருடைய கருத்துக்களுக்கு, தாம் பெரியவர்களிடம் கேட்ட முறைப்படி விளக்கங்கள் கூறிப் பல நுட்பங்களைத் தெளிவாக்கும் நூல்களை ஸ்ரீ தேசிகர் எழுதுகிறார். பல வாதப் போர்களில் கலந்து வெற்றி பெறுகிறார். அறிவின் பெருமையை இந்தச் சாதனை உணர்த்துகிறதென்றால், ஆண்டவனிடமுள்ள அன்பின் பெருமையில் வேறொரு சாதனை புரிகிறார். ஸ்ரீரங்கநாதனுடைய பாதுகையின் பெருமையை விளக்கி ஆயிரம் சுலோகங்களைக் கொண்ட பாதுகா ஸஹஸ்ரம் என்ற நூலை ஒரே இரவில் எழுதி முடிக்கிறார். ஸங்கல்ப ஸூர்யோதயம் என்ற பெயரில் வேதாந்தக் கருத்துக்களை நாடக ரூபமாகவே விளக்கி ஒரு நூலை ஸ்ரீரங்கத்தில் எழுதுகிறார். அதை ஜகமெல்லாம் பாராட்ட ஜகந்நாதனும் பாராட்டுகிறான். ஸ்ரீ ரங்கநாதனே, ''வேதாந்தாசாரியன்'' என்ற பட்டத்தை ஸ்ரீ தேசிகருக்கு அளிக்கிறார். எம்பிராட்டி மட்டும் பேசாதிருப்பாளா? ஸ்ரீ ரங்கநாயகி, ''ஸர்வ தந்திர ஸ்வதந்திர'' என்ற பட்டத்தை அளிக்கிறாள்.

தேசிகருடைய பெருமையைக் கண்டு பொறுக்காதவர்கள் இவருக்குப் பல தொந்தரவுகளைக் கொடுக்கிறார்கள். இவர் செய்யும் சிராத்தத்துக்குப் பிராமணர்கள் யாரும் வராமல் செய்து விடுகிறார்கள். சமையல் ஆகி விட்டது. நாழிகையும் ஏறிக் கொண்டிருக்கிறது. இந்நிலையில், திடீரென்று பிற்பகலில் மூன்று விப்ரர்கள் வீட்டுக்குள் நுழைகிறார்கள். தேசிகர் அவர்களுக்குத் தண்டமிட்டு சிராத்தத்தை நடத்தித் தருமாறு வேண்டுகிறார். அவர்களும் உடன்படுகிறார்கள். சிராத்தம் முடிந்து விட்டது. அந்தணர்களை வழியனுப்பத் தேசிகர் வாயில் வரை வருகிறார். வந்த அந்தணர்கள் திடீரென்று உருமாறி விடுகிறார்கள். அவர்கள் வேறு யாருமில்லை. ஸ்ரீரங்கநாதனும், காஞ்சி வரதராஜனும், திருப்பதி வேங்கடாசலபதியுமாகத் தரிசனம் கொடுக்கிறார்கள். திருவருளை நினைந்து நினைந்து புகழ்ந்து போற்றுகிறார் வேதாந்த தேசிகர்.

ஸ்ரீரங்கத்தை விட்டுப் புறப்படுகிறார் ஸ்ரீ தேசிகர். சத்தியமங்கலம் என்ற ஊரில் பல காலம் எழுந்தருளி இருந்தார். தேசிகருடைய புத்திரரான குமார வரதாசாரியரும் பிரம்மதந்திரபரகால முனிவரும் இங்கு இவரிடம் வேதாந்த பாடம் கேட்டு வந்தார்கள்.

முஸ்லிம்களின் படையெடுப்பால் ஸ்ரீரங்கம் தத்தளிக்கிறது. பல ஸ்ரீ வைஷ்ணவாசாரியர்கள் கோரமான முறையில் கொலை செய்யப்பட்டார்கள். இதைத் தெரிந்து கொண்ட வேதாந்த தேசிகர்,

யாவரும் ஸ்ரீரங்கத்தை விட்டு வெளியேறும் தருணத்தில் தாம் தைரியமாக ஸ்ரீரங்கம் வந்து ச்ருதப்ரகாசிகை முதலிய வேதாந்த ரத்தங்களைப் பாதுகாக்கிறார். பயமற்ற நிலையை மக்கள் பெற வேண்டுமென்பதற்காக அபீதிஸ்தவம் என்ற நூல் மூலம் கடவுளைப் பிரார்த்திக்கிறார். ஸ்ரீரங்கநாதனை மறுபடியும் ஆலயத்தில் பிரதிஷ்டை செய்யவும் உதவுகிறார். மேல் கோட்டை திருநாராயணபுரத்தில் சில காலம் இருந்து மறுபடியும் ஸ்ரீரங்கம் வந்து கடைசிக் காலம் வரை அங்கேயே வசிக்கிறார். வேதம் வேண்டியவாறு நூறு வருஷம் பூரண ஆயுசோடிருந்து பூரணப் பொருளை அடைகிறார்.

அநந்தஸூரிக்கும், தோதாரம்மாவுக்கும் மணிப் புதல்வனாக திருப்பதிமணி பிறந்து, வைணவ மரமரபுக்கே ஒரு மணிப் புதல்வனாகத் திகழ்ந்து, பக்தி ஞான தர்ம மார்க்கங்களை நாடெங்கும் முழங்கி விட்டு மோனப் பரம்பொருளில் நிறைவு பெற்று விட்டது.

தேசிகருடைய பெருமையை விளக்கும் பல அற்புத நிகழ்ச்சிகள் அவருடைய வாழ்நாளில் நடந்திருக்கின்றன. ஒரு மந்திரவாதி குளத்தில் இறங்கி நீரைக் குடித்து மந்திர பலத்தால் அந்த நீரவ்வளவும் வேதாந்த தேசிகர் வயிற்றில் நிறைந்து பருக்கச் செய்தான். தேசிகர் அநாயாசமாகப் பக்கத்தில் உள்ள தூணை நகத்தால் கீறித் தம் வயிற்றில் உள்ள நீரை அதன் வழியாக வடியச் செய்தார். இவர் சகல கலா வல்லபர் தானா எனப் பரிசோதிப்பதற்காகக் கொத்து வேலையாள் ஒருவன் இவரை வாதுக்கு அழைக்கிறான். இவர் தம் கையாலேயே ஒரு கிணறு கட்டிக் காண்பித்து அவனை வெல்கிறார். வேதாந்த தேசிகர் கட்டிய கிணறு இன்றும் திருவஹீந்திரபுரத்தில் காணப்படுகிறது.

இந்த அதிசயங்களை விடப் பெரும் அதிசயமாகப் பல நூல்களை அளித்திருக்கிறார் ஸ்ரீ தேசிகர்.

ஆலய வழிபாட்டுக்கு மூலமாக உள்ள பாஞ்சராத்ர ஆகமத்தை ஆதரித்துப் பல நூல்கள் எழுதியுள்ளார். சிறிதும் பெரிதுமாக நூற்றுக்கணக்கான நூல்களை வடமொழியிலும், தென் மொழியிலும், இரண்டு பாஷைகளும் கலந்த மணிப் பிரவாள நடையிலும் எழுதியுள்ளார். ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தின் ரகசிய அர்த்தங்களை விளக்கி மணிப் பிரவாள நடையில் நூல்களை எழுதியுள்ளார். வேதம், சாஸ்திரம், ஆகமம், சிற்பம், காவியம், நாடகம் ஆகிய எல்லாத் துறைகளிலும் இவருடைய நூல்கள் அமைந்திருக்கின்றன. பாரத தேசப் பண்பாட்டுக்கு வேதாந்த தேசிகர் செய்துள்ள உதவியை அளவிட்டுச் சொல்ல முடியாது. 'தத்துவ முக்தா கலாபம்' என்ற நூல் பாரத தேச வேதாந்தக் கருத்துக்களின் பொக்கிஷம். இவருடைய நூல்களின் நயத்தில் ஈடுபட்ட ஸ்ரீ அப்பய தீட்சிதர் அவர்களே இவற்றில் சிலவற்றுக்கு உரை எழுதியுள்ளார் எனில் இவரது ஆற்றல் சமயவரம்பைக் கடந்தது எனலாம்தானே? அத்வைதத்தின் மகா குருக்களில் ஒருவரான ஸ்ரீ வித்தியாரண்யருமே வேதாந்த தேசிகரைப் போற்றியிருக்கிறார்.

ஸ்ரீ தேசிகருடைய நூல்களில் பலவித அழகுகளை நாம் காணுகிறோம். ஆழ்ந்த தெய்வ பக்தியும் கவிதா சக்தியும் எங்கும் ததும்பி நிற்கிறது. மக்களின் ஆத்மிக உணர்ச்சியைத் தட்டி எழுப்புகிறது. தார்மிக வாழ்வுக்கு வழிகோலுகிறது. ''கவிதார்க்கிக ஸிம்மம்'' என்ற புகழை ஸ்ரீ தேசிகர் அடைந்துள்ளார்.

ஆண்டவனிடம் பரிபூரணமாக சரணாகதி அடைந்து, தனக்கெனச் செயலில்லை என இருக்கும் பிரபத்தி மார்க்கத்தை வகுத்து வெளியிட்டு அதைப் பாதுகாக்க நூல்கள் எழுதியதுதான் இவருடைய அசாதாரணமான பணி. சரணாகதி தத்துவம் இவருடைய காலத்தில்தான் நிலைபெற்றது என்றால் மிகையாகாது. உபநிஷதத்தின் உபாசனா மார்க்கத்தில் உள்ள சிரமங்களை நினைத்து மக்கள் பிரமித்து நிற்கும் காலத்தில், சர்வஜன சாதாரணமான சரணாகதி மார்க்கத்தை உலகத்துக்கு அளித்த பெருமை வேதாந்த தேசிகரைச் சாரும். ஆன்ம வர்க்கம் ஆண்டவனின் அடிமை; அவனை நம்பியே நிற்கிறது; தெய்வமில்லாது மனித வாழ்க்கை இல்லை என்பதை எங்கும் வற்புறுத்துகிறார். கடவுள் இட்ட பணியைச் செய்யவே ஆன்மா இருந்து வருகிறான் என்றும் கூறுகிறார்.

தேசிகர் அற்புதங்கள் பல நிகழ்த்தினார். அவற்றிலும் அற்புதமான நூல்களை இயற்றினார். இவை யாவற்றையும்விட அற்புதம், இவ்வளவு ஆற்றல் பெற்ற மகான் எளிமையே உருவாக வாழ்ந்ததுதான். அரசனையோ, தனிகனையோ அண்டிப் புலவர்கள் ஜீவிக்கலாகாது என்ற நெறியைப் பின்பற்றியவர் அவர். சுற்றுப் பிரயாணத்தின் போது விஜயநகரம் வந்து சேருகிறார். மகா வித்துவானாகிய இவரை அரசன் அழைக்கிறான். இவர் வர மறுத்து வைராக்கிய பஞ்சகம் என்றுள்ள ஐந்து செய்யுள்களைப் பாடி அனுப்புகிறார். தமக்குக் கடவுள்தான் சொத்து என்று கூறி விடுகிறார். ''நான் ஒன்றையும் சம்பாதிக்கவில்லை. என் பிதாவும் ஒன்றையும் சம்பாதிக்கவில்லை. காஞ்சி ஹஸ்தி கிரியிலுள்ள வரதராஜனே என் பாட்டன் (பிரம்ம தேவன்) சம்பாதித்த சொத்து'' என்று கூறி விடுகிறார். (பாட்டன் எனப் பொருள் படும் 'பிதா மகன்' என்ற பதம் பிரம்ம தேவனையும் குறிக்குமல்லவா?)

மகா ஞானியான இவர் வாழ்நாள் முழுவதும் உஞ்ச விருத்தி—பிடி அரிசிப் பிச்சை வாங்குவது—மூலமே ஜீவித்து வந்தார். இவருடைய தெய்விகத் தன்மையில் அசூயை உள்ளவர்கள் ஒரு பிரம்மசாரியை வேதாந்த தேசிகரிடம் விவாகத்துக்குப் பணம் கேட்கச் சொன்னார்கள். நல்ல வெயிலில் பகவானுடைய ஸ்தோத்திரங்களைச் சொல்லிக் கொண்டு தேசிகர் உஞ்சவிருத்தி செய்து கொண்டிருக்கையில், பிரம்மசாரி நெருங்குகிறான். கல்யாணத்துக்கு நிதி உதவி வேண்டுகிறான். தமக்குத் தனம் தேவைப்படாத தேசிகர், தயை காரணமாக அந்த வாலிபனுக்கு உதவ ஆசைப்படுகிறார். ஸ்ரீஸ்துதியைப் பாடுகிறார். சொர்ண வர்ஷம் பொழிகிறது. பொற்குவியலைப் பிரம்மசாரிக்கு அளிக்கிறார்.

உஞ்சவிருத்திக்காகத் தெருவில் போய்க் கொண்டிருக்கிறார். விரோதிகள் செருப்புக்களால் தோரணம் கட்டி விடுகிறார்கள். வேதாந்த தேசிகர் அவ்வழியாக வருகிறார். செருப்புக்கள் தலையில் படுகின்றன. வெட்கப்படவில்லை; கோபப்படவில்லை; அருவருக்கவுமில்லை. 'யாராக இருந்தாலும் ஆண்டவனின் அடியார்கள் பெரியார்களே. அவர்களுடைய பாதரக்ஷைகளைத் தாங்கும் பேறு பெற்றேனே' என்று மகிழ்கிறார்.

ராமாநுஜரின் உபதேசங்கள் தேசிகருடைய நூல்களில் புத்துயிர் பெறுகின்றன. வைணவ சம்பிரதாயம் நிலைபெறுகிறது. அவருடைய காவியங்களில் காளிதாஸன், பவபூதி, ஸ்ரீ ஹர்ஷன் முதலிய கவிகளின் கருத்துக்கள் மெருகு பெறுகின்றன. கடவுளை ஒப்பாத சாங்கிய, மீமாம்ஸா சாஸ்திரங்கள் கடவுளை ஒப்புமாறு அவர் செய்கிறார். மகரிஷிகளின் வாக்குகளுக்குப் புதிய மதிப்பை உண்டாக்குகிறார். ஆழ்வார்களின் பாசுரங்கள் தேசிகரால் புது வாசனையைப் பெறுகின்றன. ஸ்ரீரங்கம், திருப்பதி, காஞ்சிபுரம், திருவேந்திபுரம், திருக்கோவிலூர் முதலிய இடங்களில் கோயில் கொண்டுள்ள எம்பெருமான்களும், ஸ்ரீதேவி, பூதேவி, ஆண்டாள், உடையவர் முதலியவர்களும் உள்ளம் உருகப் பாடப் பெறுகிறார்கள். தேசிகரவர்கள் கடவுளுடைய அருளை எல்லாருக்கும் கிட்டச் செய்கிறார். இவ்வளவும் செய்த நிகமாந்த மகாதேசிகனை நித்தமும் நினைந்து பணிவோமாக!

# சூறைக்காற்று

கி.வா.ஜகந்நாதன்



முத்துசாமி வீட்டுக்குள் நுழைந்தார். கையில் வைத்திருந்த சாமான்களைக் கூடத்தில் வைத்து விட்டுச் சமையலறையை எட்டிப் பார்த்தார். "அடி பாவி! என்ன காரியம் செய்தாய்?" என்று இடி இடித்தாற்போல் முழங்கினார். சாதத்தை அடுப்பிலிருந்து இறக்கிக் கொண்டிருந்த மீனாட்சி அதைக் காலில் கொட்டிக் கொண்டிருப்பாள். நல்ல வேளை! ஒரு கணம் தப்பியது. சமாளித்துக் கொண்டாள். அவர் கர்ஜித்தது அப்படி அவளை உலுக்கி விட்டது. "ஏன் இப்படி வீட்டுக்குள் நுழைவதற்கு முன்பே கத்துகிறீர்கள்? என்னவோ ஏதோ என்று பயந்து போய் விட்டேன்" என்று தன் கணவரைத் திரும்பிப் பார்த்த அவள் சொன்னாள்.

"இவனை இந்தக் காரியம் செய்யும்படி யார் சொன்னது? இப்படி இவனைச் செய்யச் சொல்லலாமா? என் கனவெல்லாம் பாழாக்குவதற்கு நீ வந்து முளைத்திருக்கிறாயே!" என்று மறுபடியும் இரைந்தார்.

சமையலறையில் அவருடைய பையன் மாணிக்கம் துருவு பலகை மேல் உட்கார்ந்து தேங்காய் துருவிக் கொண்டிருந்தான். அதைக் கண்டுதான் அவருக்கு ரௌத்திராகாரமான கோபம் வந்தது.

ஏன்?

முத்துசாமி ரோஜா வேலை செய்கிற சமையற்காரர். நாணயமாக நடந்து கொண்டு தொழிலில் நல்ல பேர் வாங்கிக் கொண்டவர். அவருடைய கைக்கே மணம் உண்டு என்று அவரைத் தெரிந்தவர்கள் சொல்லுவார்கள். ஐம்பது பேரானாலும் சரி, ஐயாயிரம் பேரானாலும் சரி சளைக்காமல் விருந்து வழங்கும் திறமை அவருக்கு இருந்தது. அவருடைய சொற்படி வேலை செய்ய ஒரு சிறிய பட்டாளம் இருந்தது.

பெரிய மனிதர்கள் வீட்டுக் கலியாணங்களிலெல்லாம் முத்துசாமி வந்து பிள்ளையார் பூஜை பண்ணி அடுப்பை மூட்டினால்தான் அவர்களுக்குத் திருப்தி. "என்ன இருந்தாலும் முத்து சமையல் என்றால் அலாதிதான். பண்டத்தை வீணாக்க மாட்டான். சுத்தமாக இருக்க வேண்டும் என்று உதவி ஆட்களிடம் வற்புறுத்துவான். சமையலில், நளபாகம், வீம பாகமெல்லாம் இவன் சமையலுக்கு உறை போடக் காணாது" என்று அவர்கள் மதிக்கும்படி பேர் வாங்கியிருக்கிறார்.

பெரிய மனிதர் வீட்டுக் கலியாணத்தில் அநேகமாக மாப்பிள்ளைகள் எம். ஏ., ஐ. ஏ. எஸ்., பி. ஈ., எம். பி. பி. எஸ். என்று இப்படிப் பட்டம் வாங்கினவர்களாகவே இருப்பார்கள். குறைந்த பட்சம் முதல் வகுப்பு பி. எஸ்ஸி.யாகவாவது இருக்கும். முத்துசாமி மிகவும் ஆவலுடன் மாப்பிள்ளை என்ன படித்திருக்கிறார் என்பதை விசாரித்துத் தெரிந்து கொள்வார். அவருக்கு என்ன அவ்வளவு அக்கறை என்று கேட்கிறீர்கள்?

* * *

முத்துசாமி இளம் பிராயத்தில் தாய் தந்தையரை இழந்தவர். முரட்டு மாமா வீட்டில் ஏழு வயசு வரையில் வளர்ந்தார். அவர் மாமா அவரை மாடு குளிப்பாட்டவும் களத்தில் காவல் காக்கவும் பயன்படுத்தினாரே ஒழியப் படிக்க வகை செய்யவில்லை. ஏதோ ஒரு சின்னப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தார். ஆனால் பாதி நாள் பள்ளிக்கூடமே போக முடியவில்லை. சில நாட்கள் மாமா அது செய், இது செய் என்று வீட்டிலே நிறுத்திக் கொள்வார்; இன்னும் சில நாட்கள் மாமி தன் உதவிக்காக நிறுத்திக் கொள்வாள். இப்படி இருந்தால் உருப்படுவது எப்படி? அவருக்கு என்னவோ படிக்க வேண்டும் என்ற ஆசைதான்.

வேலை வாங்குவதோடு நிற்பதில்லை அவருடைய மாமா. எடுத்ததற்கெல்லாம் கோபிப்பார். கையாலும் கழியாலும் பரிசு கொடுப்பார். மாமி என்ற உறவில் இருக்கும் அந்தப் பேய், "தண்டச் சோறு தின்கிறாயே! இதைச் செய்யக் கூடாதா?" என்று கண்டிப்பாள். அவள் திருவாய் மலர்ந்தருளுவதைக் கேட்டு மாமா கொடுக்கும் பூசைகள் வேறு. இந்த நரகாவஸ்தையில் எவ்வளவு நாட்கள் இருக்க முடியும்? எட்டாவது வயசில் அவர் மாமா வீட்டை விட்டு ஓடிப் போனதில் ஆச்சரியமே இல்லை.

எப்படியோ ஹோட்டலிலே வேலை செய்தும், சமையற்காரர்களுடன்இருந்து கைவேலை செய்தும் அவர் முன்னுக்கு வந்தார். இன்று சமையல் உலகத்தில் அவர் ஒரு நிபுணர். இப்போது அவருக்குப் போதுமான வருமானம் இருக்கிறது. சேலத்தில் ஒரு சிறிய வீடு கட்டிக் கொண்டு வாழ்கிறார்.

அவருக்கு ஒரு பெரிய குறை: தாம் கல்வி கற்று நல்ல படிப்பாளியாகி உத்தியோகத்துக்கு வர முடியவில்லையே என்று. படிப்பு என்றால் அவருக்கு அபார மதிப்பு. பி. ஏ., எம். ஏ. என்று பட்டம் பெற்றவர்களிடம் அவருக்குத் தேவதா விசுவாசம். தம்முடைய வாழ்க்கையில் எதையோ இழந்து விட்டவர் போலவே அவர் தோன்றினார்.

கல்யாணமாகி ஐந்து வருஷங்களுக்குப் பிறகு அவருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்து வளர்ந்தது: அதன் சுறுசுறுப்பைக் கண்டு அவர் மகிழ்ந்தார். கடவுள் அளித்த பெரு வரம் என்று எண்ணி அந்தக் குழந்தையைப் போற்றி வந்தார். அவனுக்கு மாணிக்கம் என்று பெயர் வைத்தார். அவருக்கு உள்ளூற ஓர் ஆசை. தாம் எதை இழந்தாரோ அதை அந்தப் பையன் இழக்காமல் அதைக் கூடிய வரையில் நிறையப் பெறும்படி செய்ய வேண்டும் என்பதுதான். பி. ஏ., எம். ஏ. இன்னும் என்ன என்ன பட்டம் உண்டோ அவற்றையெல்லாம் அவன் பெற்று நாலு பேர் மதிக்க நடக்க வேண்டும். படிப்பு விஷயத்தில் அவனுக்கு ஒன்றும் குறை வைக்கக் கூடாது. ஆயிரம் அல்ல, இரண்டாயிரம் அல்ல, எத்தனை செலவானாலும் உடம்பை ஓடாய் உழைத்துப் பணம் கொடுக்க அவர் தயார். அவனுக்குப் படிப்பைத் தவிர வேறு நினைவே இருக்கக் கூடாது. அப்படி வளர்க்க வேண்டும். பட்டமெல்லாம் பெற்றுப் பெரிய உத்தியோகஸ்தனாக அவன் வாழ வேண்டும். "அதோ போகிறார் பார்; அவர் படிக்காத படிப்பு இல்லை; வாங்காத பட்டம் இல்லை" என்று எல்லோரும் அவனைப் போற்ற வேண்டும். அவனை அவர் கண்டு கண்டு மகிழ்ந்து போவார். ஒருகால் அவன் அவரைத் தன்னுடன் வைத்துக் கொள்ள விரும்பா விட்டால், எங்காவது தனியே வாழவும் தயார். 'ஐ. ஏ. எஸ். பட்டம் பெற்ற பிள்ளைக்குத் தகப்பனார் நாம்' என்று மனசார நினைத்துச் செத்துப் போகலாம். அவனும் அவர் உபகாரம் பெற வேண்டும் என்பது இல்லை.

இப்படியெல்லாம் அவர் கற்பனை பண்ணிக் கொண்டிருந்தார். மாணிக்கம் படிப்பைத் தவிர வேறு எதிலும் கவனம் செலுத்தக் கூடாது என்பது அவர் இட்டம். அவன் தேங்காய் துருவுகிறதைக் கண்டால் அவர் சகிப்பாரா? அவனுக்கும் சமையல் தொழிலுக்கும் சம்பந்தமே இருக்கக் கூடாது. சமையல் அறையில் சாப்பிடத்தான் போக வேண்டும். இன்னும் கொஞ்ச நாட்கள் கழித்து அவன் படிக்கிற இடத்திலேயே சாப்பாட்டைக் கொண்டு வந்து கொடுக்கும்படி

ஏற்பாடு செய்ய வேண்டும். அவன்தான் மேஜை மேலே சாப்பிடுகிற துரையாகப் போகிறானே!

தம்முடைய கற்பனை மாளிகையைத் தகர்ப்பதற்குத் தம் வீட்டிலேயே ஒருத்தி இருக்கிறாள் என்பதை நினைக்க நினைக்க அவருக்கு ஆத்திரமாக வந்தது. அவருடைய கர்ஜனையைக் கேட்டுத் திடுக்கிட்ட அவர் மனைவி திரும்பிப் பார்த்து, "நன்றாக இடி இடித்தது போலக் கத்தினீர்கள்!" என்றாள்.

அவருக்குப் பின்னும் கோபம் மூண்டது: "அடி சண்டாளி! அவனைச் சமையல் வேலை செய்யவா நான் பெற்றேன் ? அவன் பி. ஏ., எம். ஏ. படிக்கப் போகிற பிள்ளையடி! சமையற்காரனுக்குப் பிறந்தாலும் அவன் ஐ. ஏ. எஸ். பாஸ் பண்ணப் போகிறான். அவனைப் போய்......"

"பாஸ் பண்ணட்டுமே! யார் வேண்டாம் என்கிறீர்கள்?"

"இப்படியெல்லாம் இவனை அடுப்பங்கரையில் பழக்கி விட்டால் இவன் எப்படிப் படிப்பான்?"

"இதற்குத்தான் எல்லோரும் சொல்கிறார்கள், தலைச்சன் பெண்ணாகப் பிறந்தால், அம்மாவுக்கு அநுகூலம் என்று. 'அம்மா, நான் ஏதாவது செய்யட்டுமா?' என்றான். 'கொஞ்சம் இதைத் துருவித் தா' என்றேன். இதில் இவன் படிக்கிற பி. ஏ. படிப்புக் கெட்டுப் போய் விட்டதோ? இப்போதுதான் பள்ளிக்கூடத்தில் அடியெடுத்து வைத்திருக்கிறான். அதற்குள் பி. ஏ.யாம், எம். ஏ.யாம்!"

"அடி முண்டம்! களி மண் மூளை! இப்போதிருந்தே இவனைப் படிக்கும்படி சொல்லிப் பழக்கப்படுத்தினால்தானே, மேலே மேலே படித்து முன்னுக்கு வர முடியும்? இன்றைக்குத் தேங்காய் துருவச் சொல்லுவாய். நாளைக்கு உப்புமா கிளறச் சொல்வாய். பிறகு சமையல். நான்தான் சமையல்காரனாக இருக்கிறேனே! போதாதா?"

அதற்கு மேல் பேச்சை வளர்த்த இஷ்டம் இல்லை, அந்த அம்மாளுக்கு; "சரி, இனிமேல் ஒன்றும் சொல்லவில்லை" என்று தணிந்து பதில் சொல்லி விவாதத்துக்கு ஒரு முடிவு கட்டினாள்.

**மா**ணிக்கம் ஆரம்பப் பாடசாலையில் படித்துக் கொண்டிருந்தான். இப்போது அவனுக்கு ஏழு வயசு. இரண்டாம் வகுப்பில் படிக்கிறான். அவனுக்கு ஒரு சிலேட்டுக்கு இரண்டு சிலேட்டாக வாங்கிக் கொடுத்தார் முத்துசாமி. அவன் மாதத்துக்கு ஒரு புத்தகத்தைக் கிழித்துக் கொண்டு வந்து நிற்பான். உடனே புதுப் புத்தகம் வாங்கிக் கொடுத்து விடுவார். "பையன் எப்படிப் படிக்கிறான்?" என்று பள்ளிக்கூட வாத்தியாரைக் கேட்பார். அவர், "பரவாயில்லை" என்பார். அதைக் கேட்டு உச்சி குளிர்ந்து விடும் முத்துசாமிக்கு. "பகவானே! இவன் தேகம் திடமாக இருந்து மேலே படித்துக் கரையேற வேண்டும்" என்று வேண்டிக்கொள்வார்.

ஹிக்கின்பாதம்ஸ் புத்தகசாலை ஜங்ஷனில் இருக்கிறது. அங்கே போனால் வரிசையாக அடுக்கி வைத்திருக்கும் புத்தகங்களைப் பார்ப்பார். "சின்னப் பையன்கள் படிக்கிற புத்தகம் இருக்கிறதா?" என்று கேட்பார். கடைக்காரன் சில இங்கிலீஷ் புத்தகங்களை எடுத்துக் காட்டுவான். எல்லாம் படமயம். குழந்தைகளுக்காகக் கதை, கவிதை இப்படி இருக்கும். அவற்றில் ஒற்றை எழுத்துத் தெரியாது, முத்துசாமிக்கு. ஆனாலும் மூன்று ரூபாய், நாலு ரூபாய் கொடுத்து இரண்டு புத்தகங்களை வாங்கிக் கொண்டு போவார். "இந்தா, இதையெல்லாம் படி" என்று மாணிக்கத்திடம் கொடுப்பார். அவன் அதைப் பிரித்துப் பொம்மை பார்ப்பான்; "இங்கிலீஷ் அல்லவா? எனக்குத் தெரியாதே!" என்பான். "அடுத்த வருஷம் உனக்கு இங்கிலீஷ் சொல்லித் தருவார்கள். அப்போது நன்றாகப் படிக்கலாம்" என்று அவர் சொல்வார். அடுத்த வருஷம் வரைக்கும் அந்தப் புத்தகத்தை அவன் கிழிக்காமல் வைத்திருக்க வேண்டுமே! அதைப் பற்றி அவர் சிந்திக்க மாட்டார்.

எங்கேயாவது வெளியூருக்கு வேலைக்குப் போனால் குழந்தைக்குப் பொம்மை, பிஸ்கோத்து என்று வாங்கிக் கொண்டு வரலாம். அவர் அவற்றையெல்லாம் வாங்கி வரமாட்டார். ஏதாவது இரண்டு குழந்தைப் புத்தகங்களை வாங்கி வருவார். பையன் வெளியிலே விளையாடப் போயிருந்தால், "மாணிக்கம், எப்போதும் என்னடா விளையாட்டு? படிக்க வேண்டாமா? நன்றாகப் படித்தால்தான் முன்னுக்கு வரலாம்" என்று நயமாகச் சொல்வார். அவனுக்குத் தன் படிப்பைப் பற்றிய நினைவு அவ்வளவாக இல்லை. அத்தனைக்கு அத்தனை அவருக்கு அதே நினைவு; அபார சிரத்தை. பையன் சுமாராக வாசித்து வந்தான். நான்காவது வகுப்பை அடைந்தான். அவனுக்கு டியூஷன் வைத்தால் நல்லது என்று ஒரு நண்பர் சொன்னார். உடனே ஒரு வாத்தியாரை டியூஷன் சொல்லித் தர ஏற்பாடு செய்தார். மாதம் பதினைந்து ரூபாய் சம்பளம். எம். ஏ. படிக்க வேண்டுமானால் அஸ்திவாரம் பலமாக இருக்க வேண்டாமோ?



அந்த வருஷம் பையன் வகுப்பில் முதல் மார்க்கு வாங்கினான். முத்துசாமிக்கு உடம்பே தெரியவில்லை. ஒரே ஆனந்தம். ஆஞ்சநேயருக்கு வடைமாலை சாத்தினார். பையனுக்குத் திருஷ்டி கழிக்கச் சொன்னார். தாம் கட்டிய மாளிகை உருவாகி விட்டதாக எண்ணிப் பூரித்தார்.

ஆனால் அடுத்த வருஷம் பையன் படிப்பு முன் மாதிரி இருக்கவில்லை. டியூஷன் வாத்தியார் பணம் வாங்கினாரே ஒழியப் படிப்புச் சொல்லிக் கொடுக்கவில்லை. பையன் சிநேகிதர்களைப் பிடித்துக் கொண்டான். விளையாடினான். தகப்பனார் இருக்கிறபோது புத்தகமும் கையுமாக இருந்து காட்டக் கற்றுக் கொண்டான். மற்ற நேரங்களில் சுதந்தர புருஷனாக இருக்க எண்ணினான்.

ஐந்தாம் வகுப்பில் தேர்ச்சி பெற்றான். அவன் படிப்பு அபரபட்சத்துச் சந்திரனைப் போலத் தேய்ந்து வந்தது. ஆறாம் வகுப்பில் அவன் படிக்கிற போது பதினொரு வயது. அந்த வருஷம் அவன் பரீட்சையில் தேறவில்லை. முத்துசாமி ஐயருக்கு உண்டான ஏமாற்றத்துக்கு அளவில்லை. என்ன செய்வது? எப்படியாவது அவனைக் காலேஜுக்குள் தள்ளிவிட வேண்டுமே, ஆறாவது வகுப்பிலேயே இடறினால்? உடனே டியூஷன் வாத்தியாரை மாற்றி இருபத்தைந்து ரூபாய் கொடுத்துப் புதிய வாத்தியாரை வைத்தார். பையன் இப்பொழுது சிரத்தையாகப் படிப்பதாகவே எண்ணினார்.

அவனுக்கு வயசு ஏற ஏற அப்பாவுக்குப் போக்குக் காட்டும் வித்தையில் வல்லவனானான். தகப்பனார் வரும் நேரம் அவனுக்கு எப்படியோ தெரிந்து விடும். அப்போது அவன் நோட்டை எடுத்துக் கொண்டு கணக்குப் போடுவான். எதையாவது எழுதுவான்; அல்லது அவர் காதில் விழும்படி படித்துக் கொண்டிருப்பான். அதைக் கண்டு அவர் மகிழ்ந்து போவார். 'ஏதோ போதாத காலம், போன வருஷம் தோல்வியுற்றான். இனிமேல் முன்னுக்கு வந்துவிடுவான்' என்று அவருக்கு நம்பிக்கை உண்டாயிற்று. அந்த நம்பிக்கை பாழாகாமல் அந்த முறை டியூஷன் வாத்தியார் உழைப்பின் பயனாக அவன் பரீட்சையில் தேர்ந்தான். "மாணிக்கம்; இனிமேல்தான் நீ கவனமாகப் படிக்க வேண்டும். உனக்கு எது வேண்டுமானாலும் கேள்; வாங்கித் தருகிறேன். எப்படியாவது நீ படித்துப் பாளைக் காலேஜில் சேர வேண்டும்" என்றார் முத்துசாமி.

"ஆகட்டும் அப்பா" என்று பவ்யமாக அவன் சொல்லும்போது அவருக்குத் தம் தலையில் பூமாரி சொரிவது போல இருக்கும். அமுத மழையில் நனைவது போலக் குளுகுளுப்பு உண்டாகும்.

பையனுக்கு அப்பாவை மயக்கும் தந்திரம் தெரிந்து விட்டது. அவரிடம் பேசும்போதெல்லாம் பள்ளிக்கூடத்தைப் பற்றியும், படிப்பைப் பற்றியுமே பேசுவான். ஐ. ஏ. எஸ். இப்போது பிஞ்சு விட்டிருப்பதாக அவர் மனப்பால் குடித்து மகிழ்வார். "அப்பா, அப்பா, எனக்கு ஒரு சைக்கிள் வேண்டும்; பள்ளிக்கூடத்துக்குப் போய் வரச் சௌகரியமாக இருக்கும்" என்று மாணிக்கம் கெஞ்சிக் கேட்டான். படிக்கிற பிள்ளைக்கு ஒரு குறையும் வைக்கக் கூடாது என்பது அவர் சித்தாந்தம் அல்லவா? எப்படியோ முயன்று ஒரு சைக்கிளை வாங்கிக் கொடுத்துவிட்டார்.

அப்பா இல்லாத போதெல்லாம் ஊரைச் சுற்ற அந்த வாகனம் அவனுக்கு உதவியது. நண்பர்களையும் சேர்த்துக் கொண்டு அவன் திருவுலாப் புறப்படு

வான். 'என்ன படிப்பு வேண்டியிருக்கிறது!' என்ற எண்ணம் அவனுக்கு அப்போது உதயமாயிற்று. பையன் சைக்கிளில் ஏறி வேகமாகப் பள்ளிக்கூடம் போகிற மாதிரி படிப்பிலும் வேகமாக இருப்பான் என்று எண்ணி இன்புற்றார் முத்துசாமி. அவன் ஐ.ஏ.எஸ்.ஸைப் படிக்க அல்லவா வேகமாக விரைகிறான்? அதைப் பிடிக்க முடியுமென்றால் கார் கூட வாங்கித் தந்து விடுவாரே!

அரைப் பரீட்சை லீவு வந்தது. சில பையன்கள் சென்னைக்குப் போய் வருவதாக ஏற்பாடு செய்தார்கள். அந்தக் கோஷ்டியில் சேர்ந்து கொள்ள வேண்டும் என்று மாணிக்கத்துக்கு ஆசை. அவனுக்குத்தான் அப்பாவை வசப்படுத்தத் தெரியுமே? ''அப்பா! அங்கே பெரிய பெரிய காலேஜுகள் இருக்கின்றனவாம். போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டும் என்று ஆசையாக இருக்கிறது. என் சிநேகிதர்கள் போகிறார்கள். நானும் போய்விட்டு வருகிறேன்'' என்றான் மாணிக்கம். [illegible] சொல்லவில்லை; ''ஜாக்கிரதையாகப் போய் வா'' என்று ஐம்பது ரூபாயை எடுத்துக் கொடுத்தார்.

சென்னைக்குப் போன மாணிக்கம் காலேஜைப் பார்த்தான்; கடற்கரையைப் பார்த்தான்; ஹோட்டல்களில் நுழைந்து உணவு வகைகளை ருசி பார்த்தான்; சினிமாப் படங்களைப் பார்த்தான்; ஊருக்கு வந்து சேர்ந்தான். ''அந்தக் காலேஜ்களில் படிக்க வேண்டுமென்று ரொம்ப ஆசையாயிருக்கிறது அப்பா'' என்று கொஞ்சிக் கொஞ்சி முத்துசாமியிடம் சொன்னான். ''என் தங்கமே, அப்படியே செய்யலாம்'' என்று அவனைக் கட்டித் தழுவினார்.

அரைப் பரீட்சையில் மூன்று பாடத்தில் சுழி; இரண்டு பாடத்தில் பத்து மார்க்குக்குக் கீழே வாங்கினான். டியூஷன் வாத்தியார், ''இவனுக்கு நான் சொல்லிக் கொடுக்க மாட்டேன்'' என்று நின்றுவிட்டார். முத்துசாமி ஐயர் ஒரு வாத்தியாருக்கு இரண்டு பேராக வைத்தார். ஒருவர் கணக்குக்கும் இங்கிலீஷுக்கும்; மற்றொருவர் மற்றப் பாடங்களுக்கு.

இப்போது பையனுக்கு விளையாட நேரமே இல்லை. காலையிலே ஒரு டியூஷன் வாத்தியார்; மாலையிலே ஒருவர். [illegible] கைதியைப் போல இருந்தான். சென்னைக்கு அவன் போயிருந்தபோது எவ்வளவு 'ஜாலி'யாக இருந்தான்! அந்தக் காட்சிகளையெல்லாம் எண்ணிப் பார்த்தான். அவனுக்கு இங்கு ஒன்றுமே பிடிக்கவில்லை.






"ஏதோ ஒரு பெரிய போலீஸ் ஆபீஸர் மகனாம்...!"

திருச்சிராப்பள்ளிக்குத் தம் தொழில் நிமித்தம் போயிருந்தார் முத்துசாமி. பத்து நாள் வேலை. நூறு ரூபாய் கிடைக்கும். அங்கே இருக்கும்போது ஆறாவது நாள் அவருக்கு ஒரு தந்தி வந்தது. "மாணிக்கத்தை இரண்டு நாட்களாகக் காணவில்லை. உடனே வருக!" அதைக் கண்டவுடனேயே அவருக்குத் திக்பிரமை உண்டாகி விட்டது. வானமே இடிந்து தலைமேல் விழுந்தது போல இருந்தது. உடனே புறப்பட்டுச் சேலம் வந்தார்.

"முந்தாநாள் பள்ளிக்கூடத்துக்குப் போனான். சாயங்காலம் வந்து ஏதையோ சாப்பிட்டுவிட்டுச் சைக்கிளை எடுத்துக்கொண்டு வெளியே போனான். பிறகு ராத்திரி வரவில்லை" என்று அவர் மனைவி சொல்லி அழுதாள்.

அவருக்கு இப்போது வேறு பயம் உண்டாயிற்று: 'சைக்கிள் விடும்போது ஏதாவது விபத்து நேர்ந்து...?' மேலே அவருக்கு எண்ணம் ஓடவில்லை. தலையிலே கைவைத்து உட்கார்ந்துவிட்டார்.

எங்கெங்கோ தேடினார். ஆள் விட்டும் தேடினார். துப்பு ஒன்றும் கிடைக்கவில்லை. கடைசியில் செவ்வாய்ப் பேட்டையில் சைக்கிளை ஒரு கடைக்காரருக்கு நூறு ரூபாய்க்கு விற்ற செய்தி தெரிய வந்தது. அப்போது ஒரு சிறிய ஆறுதல் உண்டாயிற்று. 'பையன் விபத்துக்கு ஆளாகவில்லை; திட்டமிட்டுத்தான் வெளியேறியிருக்கிறான்.'

முத்துசாமி ஐயருக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. அவனை அவன் தாயார் ஏதாவது கோபித்துக் கொண்டாளோ என்று விசாரித்தார். அப்படி ஏதும் இல்லை. அவன்தான் தாயை மிரட்டுவானே ஒழிய, அவள் ஒன்றும் சொல்வதில்லை. எப்படியாவது அவனைத் தேடிப் பிடித்து அழைத்து வந்து நல்ல வார்த்தை சொல்லிப் படிப்பைத் தொடரச் செய்ய வேண்டும் என்று பறவாய்ப் பறந்தார். வேண்டாத சாமியையெல்லாம் வேண்டிக்கொண்டார். ஜாதகம் பார்த்தார். ஒரு வாரத்தில் வந்துவிடுவான் என்று ஜோசியர் சொன்னார். ஆருடம் பார்த்தார்; இந்த வருஷம் அவனுக்கு வித்தையால் வெற்றி இல்லாவிட்டாலும் எதிர்காலத்தில் அவன் பெரிய படிப்பாளியாவான் என்றார்கள். அவருடைய மனதில் கப்பிக் கொண்டிருந்த இருள் சிறிதே விலகியது. 'சென்னைக்குத்தான் போயிருப்பான். லீவில் போய்ப் பழகிய இடம்' என்று எண்ணி அங்கே தெரிந்தவர்களுக்கெல்லாம் கடிதம் எழுதிப் போட்டார். செய்தி ஒன்றும் கிடைக்கவில்லை. அவரே செலவைப் பாராமல் சென்னைக்குப் போய் ஒரு வாரம் இருந்து பார்த்தார். எங்கும் கிடைக்கவில்லை. ஏக்கம் பிடித்தவராய் ஊர் வந்து சேர்ந்தார். உயிரோடு பிள்ளையைப் பறிகொடுத்துவிட்டதாக அவர் உள்ளம் நைந்தது. புலம்பினார். தம் தொழிலில் ஊக்கம் இல்லை. இதே கவலையாய்ப் படுக்கையில் விழுந்தார். பலர் தேறுதல் கூறினார்கள். ஒருவாறு எழுந்து தம் தொழிலைப் பார்க்கலானார். கூலி குறைவானாலும் சென்னைக்குப் போகும் சந்தர்ப்பம் நேர்ந்தால் போய் வேலை செய்வார். பல இடங்களுக்கும் சென்று தேடிப் பார்ப்பார். ஏமாற்றத்தோடு திரும்பி வருவார்.

இப்படி ஒரு வருஷம் ஆயிற்று. அவரிடம் அன்பு வைத்தவர்களெல்லாம் அவருக்காக இரங்கினார்கள். தங்கள் தங்களால் ஆன ஆறுதல் கூறினார்கள். "பையன் கெட்டிக்காரன். எங்கேயாவது சௌக்கியமாக இருப்பான். கவலைப்படாதீர்கள்" என்பார்கள். சௌக்கியமாக இருந்தால் போதுமா? அவர் கண்ட கனவு என்னாவது? அவருக்கு வேண்டிய பெரிய மனிதர்கள் சென்னை, பம்பாய், கல்கத்தாவில் உள்ள தம் உறவினர்களுக்குக் கடிதம் எழுதும்போது பையனைப் பற்றிய விவரத்தை எழுதுவார்கள், எங்கேயாவது இருந்தால் கண்டுபிடித்துத் தெரிவிக்கட்டும் என்று. இப்படிச் செய்த முயற்சி பலித்தது.

பம்பாயில் இருந்த ஒரு தமிழ் நண்பர் சேலத்திலுள்ள உறவினருக்கு "மாணிக்கம் என்ற பையன் இங்கே சௌக்கியமாக இருக்கிறான். ஒரு காலேஜ் புரொபஸருடன் இருக்கிறான். அவர் அவனுக்கு வேண்டியதைத் தருவதாகக் கேள்வி" என்று எழுதியிருந்தார். கடிதத்தை அவர் முத்துசாமியிடம் காட்டினார்.

முத்துசாமிக்கு உயிர் வந்தது. புரொபஸரோடு இருக்கிறான் என்றதில் ஓர் ஆறுதல்; ஒரு நப்பாசைகூட: 'இங்கே இருக்கும்போது படிப்பிலே கவனமாக இருந்தான். இப்போதும் அங்கே புரொபஸரிடம் படிப்புச் சொல்லிக்கொண்டாலும் கொள்ளலாம்' என்று எண்ணினார். அவன் படித்த படிப்புக்கும் புரொபஸரிடமா படிக்க வேண்டும்?

பம்பாய்க்குப் போய் அவனை அழைத்துக்கொண்டு வந்துவிட வேண்டுமென்று துடியாய்த் துடித்தார் முத்துசாமி. அங்கே படித்துக் கொண்டிருந்தால் அப்படியே இருக்கட்டும் என்றும் தோன்றியது. அதற்குள் மற்றொரு கடிதம் பம்பாயிலிருந்து வந்தது. தமிழர்கள் நடத்தும் ஒரு பள்ளிக்கூடத்தில் அவன் சேர்ந்திருக்கிறான் என்ற செய்தியை அந்தக் கடிதம் சொல்லியது.

மாணிக்கம் கடவுளை வாழ்த்தினார். பையன் அங்கே படிக்கிறான் என்ற எண்ணம் உள்ளத்தில் ஊறவே, அவருக்கு ஆனந்தம் நிலைகொள்ளவில்லை. உடனே ஓடிப் போய் அவனைக் கட்டித் தழுவ வேண்டும் என்று தோன்றியது. அது அவ்வளவு சுலபமா? மூன்று நாளும் நாற்பது ரூபாயுமல்லவா வேண்டியிருக்கும்?

எப்படியும் பம்பாய் சென்று பார்த்து விட்டு வருவது என்று நிச்சயித்தார். கடிதம் எழுதின அன்பருடைய விலாசத்தைத் தெரிந்துகொண்டு அவருக்கு ஒரு கடிதம் வாங்கிக் கொண்டு புறப்பட்டார். பம்பாயை அடைந்தார். கடிதம் எழுதினவருடைய விலாசத்தைத் தேடிப் போகும்போது அவர் இல்லை. முத்துசாமிக்கு உடனே தம் பிள்ளையைப் பார்க்க வேண்டும் என்ற பரபரப்பு வளர்ந்து கொண்டே வந்தது. தென்னிந்தியர் ஹைஸ்கூல் என்ற ஞாபகம் வரவே விசாரித்தார். அந்த வீட்டுப் பையனை அழைத்துக் கொண்டு நேரே பள்ளிக்கூடத்துக்குப் போனார். மாணிக்கம் ஹாஸ்டலில் இருப்பதாகச் சொன்னார்கள்.

அவர் கால் பூமியில் பாவவில்லை. கண்டுபிடித்துவிட்ட மகிழ்ச்சியில் அவர் தாவித் தாவி நடந்தார். ஹாஸ்டலை அடைந்து உள்ளே நுழைந்தார். யார் யாரோ பிள்ளைகள் அங்கே இருந்தார்கள். 'மாணிக்கம் எங்கே? மாணிக்கம் எங்கே?' என்று அவர் கண்கள் துழாவின. வாயும் கேட்டது.

"உள்ளே கேளுங்கள்."

போனார். எதிரே ஆட்டுக்கல். அங்கே மாணிக்கம் உட்கார்ந்திருந்தான். அவன் கையில் புத்தகம் இல்லை. ஆட்டுக்கல்லின் அடியில் உட்கார்ந்து சட்னிக்கு அரைத்துக் கொண்டிருந்தான்.

அந்தத் திருக்கோலத்தைக் கண்டார்; "டேய் மாணிக்கம்!" என்று அவர் கதறின கதறல், இறந்துபோன மகனுடைய பிணத்தைப் பார்த்துத் தகப்பனார் கதறுவது போல் இருந்தது.

அவரினவர் அப்படியே கீழே உட்கார்ந்துவிட்டார். அவர் காலின் கீழ் பூமி நழுவியது. வானம் இடிந்து தலை மேலே விழுந்தது. திசைகளெல்லாம் சுழன்று தடுமாறிச் சிதறின. பிரளய காலக் காற்று வீசியது. அந்தக் காற்றில் ஆயிரம் ஆயிரம் புத்தகங்கள் ஏடு ஏடாகப் பிய்ந்து பறந்தன. பிறகு ஒவ்வொரு தாளும் சுக்கு நூறாகக் கிழிந்து சூறைக் காற்றில் இலவம் பஞ்சு போல் சிதறின. பள்ளிக்கூடங்கள் இடிந்தன; காலேஜுகள் தரை மட்டமாயின. பள்ளிக்கூடப் பையன்கள் லட்சம் பேர்கள் சேர்ந்து 'ஹோ! ஹோ!' என்று ஊளையிட்டனர்.

அவற்றின் இடையே தனியாக அடுப்பிலே ஒரு தவலையை ஏற்றிக் கொண்டிருந்தான் மாணிக்கம்!

# ராசி மங்கையின் தீபாவளி வாழ்த்து!

தீபாவளி வளமும், வனப்பும்,
ஆனந்தமும் மிகுந்ததாகத் திகழட்டும்.
ராசி அதிர்ஷ்டத்தைக் குறிப்பது.
ராதா சில்க்ஸ் பட்டுப் புடவைகள்
அணிவது மங்களகரமானது.




ராசி

ஏர் கண்டிஷன் வசதியுடன் கூடிய
எங்கள் விற்பனை நிலையங்கள்:

**ராதா சில்க் எம்போரியம்**
14, சன்னதித் தெரு, மைலாப்பூர், மதராஸ்-4

**ராதா சில்க் எம்போரியம்**
லஸ், மைலாப்பூர், மதராஸ்-4
(ஞாயிற்றுக்கிழமைகளிலும் கடை திறந்திருக்கும்)

**ராதா சில்க்ஸ்**
'தன பில்டிங்ஸ்' மவுண்ட் ரோடு, மதராஸ்-2



EP-RASI-9




புனித ஸ்நானம் செய்து
புத்தாடை உடுத்தி இருக்கும்
இந் நந்நாளில் எமது

## தீபாவளி
## வாழ்த்துக்கள் !



மேட்டூர் கெமிகல் &
இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R. S.    சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்டுகள் :
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

CRITERION-MC434

# தென்னாப்பிரிக்காவை ஆண்ட தென்னிந்தியர்

## பி. கோதண்டராவ்

கும்பகோணம் சர்க்கார் கல்லூரியில் ஸ்ரீநிவாஸன் படித்துக் கொண்டிருந்தபோது மிஸ்டர் பில்டேர் பெக் என்பவர் பிரின்ஸிபலாக இருந்தார். அப்போதைய கல்லூரி விதிகளின்படி ஒவ்வொரு மாணவனும் கட்டாயமாகச் சட்டை அணிந்திருக்க வேண்டும். கோட்டும் அணிந்திருப்பது விசேஷம்; கோட்டு இல்லாவிடினும் நிச்சயமாகச் சட்டை போட்டிருக்க வேண்டும் என்பது விதி.

இளைஞன் ஸ்ரீநிவாஸன் பரம ஏழை; சட்டை போட அவனுக்குக் கட்டாது. உடம்பை ஒரு துண்டால் போர்த்திக் கொண்டு கல்லூரிக்கு வருவது அவன் வழக்கம். ஒருநாள் அவன் அந்தத் துண்டும் இல்லாமல் வகுப்புக்கு வந்தான். காரணம் கேட்டபோது, ''எனக்கு உள்ளது ஒரு துண்டுதான். அதுவும் மழையில் நனைந்து விட்டது. ஆகவே திறந்த மார்போடு வர நேரிட்டது'' என்று கூறினான். பிரின்ஸிபல் பில்டேர் பெக் மிகவும் கண்டிப்புக்காரர். இதற்காக ஸ்ரீநிவாஸனுக்கு எட்டணா அபராதம் விதித்து விட்டார்.

சிறிது நேரத்துக்குப் பின் பில்டேர்பெக்கின் படிப்பறைக்குத் தேநீரோடு நுழைந்த ஸ்ரீமதி பில்டேர்பெக் அம்மை ஓர் ஆச்சரியமான காட்சியைக் கண்டாள். அவள் கணவர் மண்டியிட்டவாறு ஆண்டவனைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார் — தாம் மாணாக்கன் ஒருவனுக்கு யோசனையின்றி அபராதம் விதித்ததை மன்னித்தருளுமாறுதான்!

ஸ்ரீமதி பில்டேர்பெக்கின் யோசனையின்மேல் பில்டேர்பெக்கே அபராதத் தொகையைச் செலுத்தினார்.

பற்பல ஆண்டுகள் ஓடி மறைந்து, 1921ம் ஆண்டு நடந்து கொண்டிருந்தது. சாஸ்திரி என்று பெயர் பெற்ற ஓர் இந்தியப் பெரியார் லண்டனுக்கு வந்திருந்தார். பிரிட்டிஷ் சாம்ராஜ்ய மகாநாடு ஒன்றுக்கு அங்கத்தினராக வந்திருந்த சாஸ்திரியாருக்கு லண்டன் மாநகரின் சுதந்திரப் பிரஜை என்ற கௌரவம் வழங்கப்பட்டது. கில்ட்ஹாலில் தமது புகழ் பெற்ற பிரசங்கத்தை அவர் நிகழ்த்தினார். அவரது சிந்தனையின் செம்மையாலும், உச்சரிப்பின் தூய்மையாலும் அங்கு கூடியிருந்த ஆங்கிலப் பெருமக்கள் யாவரும் புளகமுற்றனர். மறுநாள் டெலிபோனில் அவரை உற்சாகம் மேலிட்டுப் பாராட்டியது ஒரு குரல்.

என்ன ஆச்சரியம், என்ன ஆனந்தம்!

அது பில்டேர்பெக்கின் குரலாகும்!

அந்தக் குரலை இந்த முனையிலிருந்து கேட்டு ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்தவர் வேறு யாருமல்ல. மகாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் எனப் பிற்காலத்தில் புகழ்பெற்ற அந்நாள் கும்பகோணம் சர்க்கார் கல்லூரி மாணவன் ஸ்ரீநிவாஸன்தான்.

சாஸ்திரியாரை நேரில் கண்டு பாராட்டிப் போவதற்காக பில்டேர்பெக் அவர் தங்கியிருந்த ஹோட்டலுக்கே வந்து காத்திருந்தார்! தமது மதிப்புக்குரிய பிரின்ஸிபலைச் சந்தித்தவுடன் சாஸ்திரியார் ஆழ்ந்த உணர்ச்சிகளுக்கு ஆளாகி விட்டார். சாஸ்திரியாரைத் தமது வீட்டுக்கு வந்து ஒரு வரவேற்பு விருந்து உபசாரம் ஏற்குமாறு பில்டேர்பெக் கேட்டுக்கொண்டார். வேறு சில தேர்ந்தெடுத்த நண்பர்களும் விருந்தில் கலந்து கொண்டனர். பில்டேர்பெக் தம்பதியின் அன்பான உபசரணையில் சாஸ்திரியார் உருகி விட்டார். அச்சமயத்தில்தான் பில்டேர்பெக் கும்பகோணம் கல்லூரிச் சம்பவத்தை நினைவுகூர்ந்து பேசினார். சட்டையில்லாத ஸ்ரீநிவாஸன் ரைட் ஆனரபிள் வி. எஸ். ஸ்ரீனிவாஸ சாஸ்திரியாகி, ப்ரிவி கவுன்ஸில் அங்கத்தினராகவும் லண்டன் மாநகரின் சுதந்திரப் பிரஜையாகவும் பரிணமித்திருப்பதில் தமது மனம் நிறைந்த திருப்தி பெற்றிருப்பதைத் தெரிவித்தார். உயர்ந்தோங்கிய கருத்துக்களாலும், உன்னதமான ஆங்கில மொழியாற்றலாலும் அவர் கில்ட்ஹால் கூட்டத்தினரைப் பரவசப்படுத்தியதற்காக பில்டேர்பெக் பெருமைப்பட்டுக் கொண்டார்.

இது சாஸ்திரியாரின் வாழ்க்கையில் அவர் வெகுவாக மகிழ்ந்த ஒரு சம்பவம். தமது நெருங்கிய நண்பர்களுடன் இந்த நினைவை அவர் அடிக்கடி பகிர்ந்து கொண்டிருக்கிறார்.

இந்தியாவிலும், இங்கிலாந்திலும், ஆப்பிரிக்காவிலுமாக சாஸ்திரியாரின் அரசியல் வாழ்வு அரை நூற்றாண்டுகளுக்குப் பரவி விரிந்திருந்தது. அந்த வாழ்க்கையில் முன்னெப்போதும் கண்டிராத பல புதுமைகள். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் அரசியல் சரித்திரத்தில், ஏன், உலக சரித்திரத்திலேயே என்றுகூடச் சொல்லலாம் — முன்னோடியில்லாத பல நூதனங்கள் சாஸ்திரியாரின் வாழ்க்கையில் நிகழ்ந்தன.

பிரிட்டிஷ் காமன்வெல்த்தில் சட்டப்படி பிரஜைகளாகக் குடியேறியும் வாக்குரிமை இல்லாதிருந்த இந்தியர்களையெல்லாம் வெள்ளையருக்குச் சமமாக நடத்தி வாக்குரிமை அளிக்க வேண்டும் என்பதாக சாம்ராஜ்ய மகாநாட்டில் சாஸ்திரியார் ஒரு தீர்மானம் பிரேரேபித்தார். இது விஷயமாக அவர் நடத்திய பேச்சு வார்த்தைகள் எத்தனையோ! அவர் மிகுந்த ஈடுபாட்டுடன் ஆங்கிலேயர்களின் உயர்ந்த இலட்சிய மனப்பான்மைக்கு விடுத்த வேண்டுகோள்கள் எத்தனையோ! இவ்வளவு சிரமங்களுக்குப் பிறகு, தென் ஆப்பிரிக்காவைச் சேர்ந்த ஜெனரல் ஸ்மட்ஸ் நீங்கலாகப் பிரிட்டிஷ் காமன்வெல்த்தின் மற்ற எல்லாப் பிரதமர்களும் தமது தீர்மானத்தை ஆதரிக்குமாறு செய்தார். ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து, கனடா, ஆகிய நாடுகளின் பிரதமர்கள் சாஸ்திரியாரைத் தங்கள் தேசத்துக்கு வருமாறு அழைத்தார்கள். அங்குள்ள இந்தியர்கள் வாக்குரிமை பெறுவதற்குச் சாதகமான சூழ்நிலை ஏற்பட வேண்டுமென்றால் வெள்ளையர்களின் மனம் மாற வேண்டுமல்லவா? அவ்வாறு வெள்ளையர் மனத்தை மாற்றுவதற்காக சாஸ்திரியாரே வெள்ளை வாக்காளர்களிடையே உரை நிகழ்த்த வேண்டும் என்று அந்தப் பிரதமர்கள் கேட்டுக் கொண்டார்கள்.

சாதாரணமாக எந்த ஒரு பிரதமரும் தாம் ஒப்புக்கொண்ட கொள்கையைக் குறித்துத் தாமே வாக்காளர்களின் ஆதரவைப் பெறுவதுதான் வழக்கம்; ஆனால் இப்போதோ சுயாட்சி உரிமையுள்ள டொமினியன்களின் பிரதமர்கள் தாங்கள் ஒப்புக் கொண்ட ஒரு கொள்கையைத் தம்மவர்களான ஆங்கிலேயரிடையே பிரசாரம் செய்வதற்கு, அடிமைப்பட்டிருந்த ஒரு நாட்டின் பிரஜையை, அதுவும் ஆங்கிலேயரல்லாத பிரஜையை அழைத்தார்கள். இது வழக்கமான அரசியல் மரபுக்கு முற்றிலும் மாறுபட்ட ஒரு அசாதாரணமான நிகழ்ச்சியாகும்.

இந்த 'நூதன ஏற்பாடு' எவ்வளவு சரியானது என்பதை சாஸ்திரியார் நிரூபித்துக் காட்டினார். ஆஸ்திரேலியாவிலும், நியூஜிலந்திலும், கனடாவிலும்

## வேஷம் எதற்கோ...?

"மஹி"

கோணிக்கண் வெட்டுமின்னும் மின்னலே.— இந்தக்
கொள்கையினைக் கன்னியரோ சொன்னவர்?
நாணிக்கண் பொத்துகிறார் பெண்களே— அவர்
நாணமுறவே வீசிடும் மின்னொளி

கூனிக்குறுகுவதேன் வான்நிலா— பிறைக்
நேர்ம்நுதல் கண்டுதான் கொலோ!
வானில்ஒளி மிறைப்ப தேன்நிலா?— கன்னி
வட்டமுகம் கண்டதுவோ தான்சொலாய்!

சொட்டும்மழைத் துளிகள் ஏதுசொல்?—மங்கை
சோகக்கண் ணீர்த்துளியின் தூதுகள்
பட்டுத்துகில் மூடிடும் சாலவே— நங்கை
பட்டுடலில் போர்த்ததுகில் போலவோ?

மின்னும்ஒளி உடுக்கள் எத்தனை?— அவை
மீனுப்க்கண் இமிட்டுவதேன் இத்தனை?
சின்னக்கண் கன்னியரின் மெய்யிலே— நகை
சிந்தும் வயிரம் ஒளிசெய்தலோ?

அவர் ராஜ குடும்பத்தவர்போல் வரவேற்கப்பட்டார். உரைகள் நிகழ்த்த அவருக்கு எல்லா சௌகரியங்களும் அளிக்கப்பட்டன. எதிர்பார்த்தபடியே அவரும் தமது அற்புதமான வாக்கு வன்மையால் வெள்ளை வாக்காளர்களின் உள்ளங்களில் இந்தியரைக் குறித்து அன்பையும் அநுதாபத்தையும் ஏற்படுத்தி, தேர்தல் சீர்திருத்தத்துக்கு உகந்த சூழ்நிலையை உண்டாக்கினர். இதன் விளைவாக அவரது லண்டன் மகாநாட்டுத் தீர்மானம் காரிய ரீதியில் அமுலாயிற்று.

தென் ஆப்பிரிக்க இந்தியர்களின் அந்தஸ்து பற்றி விவாதிப்பதற்காக இந்தியாவுக்கும் தென் ஆப்பிரிக்காவுக்கும் இடையே 1926ல் நடைபெற்ற வட்டமேஜை மகாநாட்டில் சாஸ்திரியார் கலந்து கொண்டார். கேப்டவுன் உடன்படிக்கையில் Uplift Clause என்ற முன்னேற்ற ஷரத்து இணைக்கப்பட்டதற்கு சாஸ்திரியாரே காரணம். இந்தியரைத் தாய்நாட்டுக்குத் திருப்பி அனுப்புவது, மற்ற இனத்தவரிலிருந்து பிரித்து வைப்பது ஆகிய தென் ஆப்பிரிக்க சர்க்கார் கொள்கைகளை இந்த ஷரத்து மாற்றி யமைத்தது. இந்திய அரசாங்கத்துக்கும் தென் ஆப்பிரிக்க அரசாங்கத்துக்குமிடையே இடையறாத, வலுவான ஒத்துழைப்பு உண்டாகும் பொருட்டு, தென் ஆப்பிரிக்காவுக்கு இந்தியா ஓர் ஏஜண்ட் ஜெனரலை அனுப்பி வைக்கவேண்டுமென்று கேப்டவுன் உடன்படிக்கை கோரியது. இதற்குப் பிரதியாக தென் ஆப்பிரிக்கா இந்தியாவுக்கு ஓர் ஏஜண்ட் ஜெனரல் அனுப்ப வேண்டுமென இந்தியா கோராதது வழக்கத்துக்கு மாறுபட்டதாகும். அதாவது இந்தியர் விஷயத்தில் தென் ஆப்பிரிக்கா நடந்து கொள்ளும் விதம் சீர்திருந்த வேண்டும் என்றும், முன்னேற்ற ஷரத்தை மதித்து நல்ல முறையில் அமலாக்க வேண்டும் என்றும் தென் ஆப்பிரிக்காவே ஒப்புக் கொண்டதற்கு இது அடையாளமாகும். தென் ஆப்பிரிக்காவின் முதல் இந்திய ஏஜண்ட் ஜெனரலாகப் போகுமாறு சாஸ்திரியார் கேட்டுக் கொள்ளப்பட்டார். அவரும் இணங்கினர். தென் ஆப்பிரிக்காவின் உள்நாட்டு மந்திரியைச் சந்தித்தார். மிகவும் அதிகமாக இந்திய ஜனத்தொகை கொண்டதும், முன்னேற்ற ஷரத்து அமுலாக வேண்டிய மிக முக்கியமான பகுதியுமான நேட்டால் அந்த ஷரத்தை மதிக்கவில்லை என மந்திரி கூறினர். எனவே நேட்டால் வெள்ளையர்களிடம் பேசி ஷரத்துக்குச் சாதகமாக அங்கே அம்மக்களின் கருத்தை உருவாக்க வேண்டும் என்றும் இது சாஸ்திரியாரின் பொறுப்புத்தான் என்றும் மந்திரி கூறிவிட்டார். அதாவது, தென்னாப்பிரிக்க அரசாங்கம் ஒப்புக்கொண்ட ஒரு கொள்கைக்கு, ஆள்கிற வர்க்கமாகிய ஆங்கிலேயரின் ஆதரவைப் பெறுவதற்காக எதிராளிகளான இந்தியர் இனத்தைச் சேர்ந்த ஒருவருக்கு அதிகாரபூர்வமான பொறுப்புத் தரப்பட்டது! நேட்டாலில் ஆங்கிலேய ஆட்சித் தலைவர்களுடன் சாஸ்திரியார் பேச்சு வார்த்தை நடத்தினர். முன்னேற்ற ஷரத்தை ஒருவாறு பொறுத்துக்கொள்ளுமாறு அவர்களைத் தூண்டினர். அதன் விளைவாகப் பிறகு மறுப்பு, சகிப்புத் தன்மையாயிற்று; சகிப்புத் தன்மை, சம்மதமே ஆயிற்று. இருந்த போதிலும் கேப்டவுன் உடன்படிக்கை பூரணமாகவோ நிரந்தரமாகவோ நேட்டாலில் அமுலாகவில்லை. எனினும், அப்போது சாஸ்திரியார் செய்த சாதனைக்காக அவருக்கு வானளாவப் பாராட்டுக்கள் அளிக்கப்பட்டன. சாஸ்திரியாரின் ஆப்பிரிக்க வாழ்க்கையைப் பற்றி எழுதிய நேட்டால் அட்வர்டைஸர், அந்தக் காலத்தை 'தென் ஆப்பிரிக்காவில் சாஸ்திரியார் **அரசு புரிந்த** காலம்' என்றே கூறியது.

இந்தியாவிலும், பிரிட்டனிலும், ஆப்பிரிக்காவிலுமாக சாஸ்திரியாருடன் சுமார் பத்தாண்டுகள் நெருங்கிப் பழகும் பேறு பெற்றவன் நான்.

எனக்கு அவர் ஒரு நல்லுரை வழங்கினர். அது என்றைக்கும் எவ்விடத்துக்கும் பொருந்தும். இன்றைக்கு, நம் இந்தியாவுக்கு மிகமிகப் பொருந்தும். அந்தப் பொன்மொழி இதுதான்: ''பொதுமக்களுக்குப் பிரமாதமாக அறிவு புகட்ட முயலாதே - உன்னுடைய மகத்தான **அறியாமையிலிருந்து**.''

# 'ஸீ பீ'

மிகச் சிறந்த
## லிக்விட்
ஸாக்கரின்

## இரு துளிகள் மட்டுமே!

## அருந்திய பின்பும் கசப்பு கிடையாது

உங்கள் பானத்துக்கு இனிப்பூட்ட இரு துளிகள் 'ஸீ பீ' போதும்-ஆம், இனிப்புக் குவியலான ஸாக்கரினாயிற்றே! மாத்திரை, பவுடர் போலின்றி 'ஸீ பீ' திரவரூபத்திலிருப்பதால் விரைவில், எளிதாகக் கரைகிறது. 'கரையட்டும்' எனக் காத்திருக்கத் தேவையில்லை.

உங்கள் அபிமான ஸாக்கரின் ஒழுகவே முடியாத புதுமாதிரி சீசாவில் தற்போது வருகிறது. கையோடு எடுத்துச் செல்லவும் உபயோகிக்கவும் வாகானது.






கார்ன் பிராடக்ட்ஸ் கோ., (இந்தியா) பிரை. லிட்.,















# அப்பாவாம்...!

1. ''பொம்மை வச்சு விளையாடினது போதும்.''
   ''அப்பா அம்மா விளையாட்டு விளையாடலாமா?''
2. ''நான்தான் அப்பாவாம்!''
   ''அப்போ நான் அம்மா!''
3. ''அம்மா மாதிரியே இருக்கேனா?''
   ''நான் அப்பா மாதிரியே இருக்கேன் இல்லே?''
4. ''அடியே! நான் ஆபீசுக்குப் போயிட்டு வரேன். டாடா...!''
5. ''ஆபீஸிலேருந்து வந்தாச்சு...!''
   ''கொஞ்சம் இருங்கோ, அரிசி விலை குறையுதாம்.''
6. ''தலையை வலிக்கிறது. வீட்டு வேலையைக் கொஞ்சம் கவனிக்கிறீர்களா?''
7. ''வாழைக்காயை இப்படித்தானே நறுக்கணும்?''
   ''இன்னும் கொஞ்சம் சிறிசா அரியுங்க.''













# அம்மாவாம்..!

8. ''படிச்சது போதும், நான் அறைச்சது போதுமான்னு பாரு!''
''சரியா மசியல்லே. இன்னும் அறைக்கணும்.''

9. ''என்ன சமையல் ஆயிடுத்தா? சாம்பாரிலே துளி பெருங்காயம் கிள்ளிப் போடுங்கோ.''

10. ''வீட்டைச் சுத்தமாகக் கூட்டிடறீங்களா? ஒரே குப்பையும் கூளமுமாக் கெடக்கு.''

11. ''ஏண்டி, என்னையா கூட்டச் சொல்றே? நாலு குடுத்தாத்தான் நீ சரிப்படுவே.''

12. ''போதும் உங்களோட வாழ்ந்தது. நான் என் பொறந்த வீட்டுக்குப் போறேன்!''

13. ''அப்பா அம்மா விளையாட்டுன்னாலே அடிதடிதான். குழந்தைகளா இருக்கிறதே நல்லது!''

14. ''வாடி, மறுபடியும் பொம்மை வைத்தே விளையாடுவோம்!''



புகைப் படங்கள்: எம்பிஎஸ்



# நாகரீக வளர்ச்சியிலே ஸ்திரீகளுக்குரிய ஸ்தானம்

நாகரிகம் பெற்று வரும் ஜாதியாருக்கு முதலடையாளம் அவர்கள் ஸ்திரீ ஜனங்களை மதிப்புடன் நடத்துவதேயாகும். நாகரிகம் என்ற பதத்தை நாம் சாதாரண அர்த்தத்தில் உபயோகப்படுத்தவில்லை. வெறுமே சில யந்திரங்கள் அதிகப்பட்டு, மோட்டார் வண்டிகள் ஓடுவதனால் மட்டுமே ஒரு காலம் நாகரிக காலமாய்விட மாட்டாது. ஜனங்களுக்குள்ளே பெரும்பான்மையாக இகபர ஞானமும், சற்குணங்களும், பரஸ்பர ஸகாய சிந்தையும், அதனால் ஏற்படும் சௌகரியங்களும் மிகுதியுறுமானால் அதையே நாகரிக நிலைமையென்று சொல்லுவோம். இப்போது நமது பாரத நாடு உண்மையான நாகரிகத்திலே முதிர்ச்சி பெறவேண்டுமானால் அதற்கு எத்தனையோ சாதனங்களிருக்கின்றன. அவற்றை யெல்லாம் பற்றி இங்கே விவரிக்கத் தொடங்கவில்லை. இங்கே முக்கியமாகப் பேச வந்த விஷயமெல்லாம் நமது நாகரிக முதிர்ச்சியிலே ஸ்திரீகளுக்கு எந்த ஸ்தானம் கொடுக்க வேண்டுமென்பதேயாம். ஸ்திரீகளுக்குக் கல்வியும் அறிவும் ஊட்டித் தீரவேண்டுமென்ற ஸர்வ ஜன சம்மதமான பழங்கருத்தை நாம் இங்கே வலியுறுத்தவில்லை. ஆனால் நம்மவர்களிலே மேற்படி கருத்து சர்வ சாதாரணமாகப் போய்விட்டதென்ற போதிலும், அதை நாம் நடத்தைக்குக் கொண்டு வராதிருக்கும் பெருங் குற்றத்தையே இங்கே கண்டிக்க விரும்புகிறோம். கவர்மெண்ட் பள்ளிக்கூடங்களிலும், வெள்ளைப் பாதிரிகளின் பள்ளிக்கூடங்களிலும் நமது கன்னியர்களிலே ஒரு பகுதியாருக்குக் கொடுக்கப்படும் பயனற்ற கல்வியானது அறியாமையைக் காட்டிலும் நூறு மடங்கு கொடிதாகும். நல்லவர்கள் தாமாகவே இவ் விஷயத்தில் பிரயத்தனங்கள் செய்து ஊருக்கூர் பெண் பாடசாலைகள் ஏற்படுத்தி அதிலே முற்றிலும் சுதேச முறைமையைத் தழுவிய கல்வி கற்பிக்கப்படுதல் வேண்டும். ஆண்கள் குணமிழந்து போய்விட்டாலும், பிறகு ஜாதி கடைத்தேறுவதற்கு ஒரு விதமான நம்பிக்கை மிஞ்சக்கூடும். பெண்கள் குணமிழந்து போய்விட்டால், பிறகு தேசம் அதோகதியாய் போய்விடும். ஆகையால் பெண்களுக்குக் கற்பிக்கப்படும் கல்வியானது மிகுந்த தீர்க்காலோசனையின் பேரில் ஏற்பட வேண்டும். இவ்விஷயத்தில் தேசம் முழுமைக்கும் இப்போதே பொது விதிகள் அமைப்பதைக் காட்டிலும், தாய் தந்தையர்கள் அவரவர்களுக்குத் தெரிந்த மட்டிலும் நன்கு ஆலோசித்து அதற்கிசைந்த வண்ணம் அந்தந்த ஊரில் ஒருவிதமான கல்வி முறைமையை அனுசரித்து அது எவ்வாறு நடந்து வருகிறதென்பதைக் கவனித்துப் பிறகு பொது விதிகளைப் பற்றி நினைக்கத் தொடங்குதல் பொருந்தும்.

மாதர்களுக்குக் கல்வி வேண்டுமென்று ஒவ்வொருவரும் மனத்தில் நினைத்துக் கொண்டு வாயினால் சொல்லிக் கொண்டும் இருந்துவிட்டு அது நன்கு நடப்பதற்குரிய காரியங்கள் தொடங்காமலிருப்பதே பெரும் பேதைமையாகும். ''அறிவிலே உணர்ந்ததின் பிறகு, அவ்வாறு உணரப்பட்ட விஷயத்தைச் செய்கையிலே நடத்தாமலிருப்பவன் வெறுங் குழந்தைக்கு நிகராவான்'' என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் சொல்லுகிறார். மாதர்கள் உதவியின்றி ஒரு தேசமும் எவ்விதமான அபிவிருத்தியும் அடைய முடியாது. ஈசுவரனுக்கே தேவிதான் சக்தி என்று மதவாதிகள் சொல்லும் உண்மைப் பொருளை மறந்துவிடக் கூடாது. சக்தியாகிய தேவியில்லாத விஷயத்தில் புருஷன் ஒன்றும் செய்ய முடியாதென்பது மத விவகாரங்களில் மாத்திரமன்றி, எல்லா விவகாரங்களிலும் உண்மையேயாகும். பாரத நாடு இப்போது அடைந்திருக்கும் இழிவு நிலைமையிலிருந்து உன்னதம் பெற வேண்டுமானால் ஆண்கள் மட்டுமேயல்லாமல் பெண்களும் தேசபக்தியிலே சிறந்தவர்களாக விளங்க வேண்டும். பாரதத்திலே குந்தி தேவி, ஸத்யபாமை முதலிய ஸ்திரீ ரத்தினங்களின் சரித்திரங்களை நமது பெண்கள் அறியுமாறு செய்ய வேண்டும். புராதன ரஜபுத்திர ஸ்திரீகளின் எண்ணில்லாத வீர சரித்திரங்கள் கற்பிக்கப்படாத பாடசாலைகளுக்குப் பெண்கள் போகலாகாது. அர்ஜுனனைப் போன்ற வீரர்களையும் பாஸ்கராசாரியன், சங்கரன், ராமானுஜன், காளிதாஸன் முதலியவர்களைப் போன்ற பலவிதமான ஞானவான்களையும் பெற்று வளர்க்க வேண்டுமென்ற ஆசை நமது பெண்களின் நெஞ்சிலே குடியேற வேண்டும். இது நிற்க. தேசத்தின் எந்த விதமான பெருங் காரியமும் கைகூடி வரவேண்டுமானால், அதற்கு ஸ்திரீகளின் மனோபலம் இல்லாமல் தீராது. இதனை எழுதுபவரிடம் ஸ்ரீ சகோதரி நிவேதிதா சில நற்போதனைகள் கூறிவருமிடையே அந்த அம்மையார் சொன்னார்: ''ஐயா, மாதர்களை இருட்டிலே தள்ளிவிட்டு அவர்களறியாமல் நீங்கள் மேலான நிலைமைக்கு வந்துவிட முயல்வது வீண் முயற்சி. அது ஒருபோதும் நடக்க மாட்டாது'' என்றார். இந்த வசனத்தை ஒவ்வொரு தேசாபிமானியும் மனத்திலே பதித்துக்கொள்ளும்படி விரும்புகிறோம். ('இந்தியா' 9-2-1907)

சி. சுப்பிரமணிய பாரதி

இதுவரை வெளிவந்துள்ள பாரதியாரின் நூல் தொகுப்பு எதிலும் வெளிவராத இக் கட்டுரையை உதவியவர்: மு. ஸ்ரீனிவாசன், பாரதி தமிழ்ச் சங்கம், கல்கத்தா.



# அப்பா

எச். வி. ஆர். ஐயங்கார்

புளியந் தெருவிலிருந்து பிரிந்த ஒரு சிறிய சந்தில், ஒரு பழைய வீட்டில் நாங்கள் வசித்து வந்தோம். புளியந் தெரு, அரிசித் தெரு, பருப்புத் தெரு என்றும் — இன்றும் தினப்படி உபயோகமாகும் மற்றப் பண்டங்களின் பெயரிலும் — எங்களூரில் தெருக்கள் உண்டு. நான் நினைக்கிறேன்: ஆதியில் புளியந் தெருவில் புளிக் கடைகள் மட்டுமே இருந்திருக்க வேண்டும், அல்லது புளிக் கடைகள் அதிகமாக இருந்திருக்கவேண்டும்; இதேபோல் பருப்புத் தெருவில் பருப்பு... இத்யாதி. நான் சிறுவனாயிருக்கும்போதே புளியந் தெருவில் எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. பலசரக்கு மளிகை, காயலான் கடை, பழக்கடை, கறிகாய்க் கடை முதலிய எல்லா வகையராக்களும் புளியந் தெருவில் இடம் பெற்று விட்டன. முட்டை விற்கும் கடை கூட வந்துவிட்டது என்று என் நண்பனொருவன் சொல்லியிருக்கிறான். 'முட்டையை விட மட்டமான வஸ்துக்கள்' கூட எங்கள் தெருவில் விற்கப்படுவதாக அவன் நடுங்கும் குரலில் சொன்னான். முட்டையே ரொம்ப மட்டமான பொருள்தான் என்பது என் அபிப்பிராயம். ஆனாலும் அவன் சொன்ன **அந்தக்** கடையை நாங்கள் ஒரு நாளும் கண்ணால் பார்க்கவில்லை. எங்களுடைய பயப் பிராந்தியில் மட்டுமே அந்தக் கடை இருந்து வந்தது.

நாங்கள் எட்டுப் பேர் — ஆணும் பெண்ணுமாக. எங்கள் எல்லோர் வாழ்க்கையும் அப்பாவையும் அம்மாவையும் சுற்றித்தான். அப்பாவுக்கு ஒரு பிரம்மாண்டமான ஆபீஸில் உத்தியோகம். அம்மாவுக்கு எங்களைக் கவனித்துக் கொள்வதே உத்தியோகம். பிரம்மாண்டமான ஆபீஸில் உத்தியோகம் பார்க்கிற அப்பாவுக்கு மாதச் சம்பளம் அறுபது ரூபாய்தான் என்று நான் குழந்தையாயிருந்தபோது அறிந்திருக்கவில்லை. இவ்வளவு பெரிய குடும்பத்தை நடத்துவது அம்மாவுக்கு எவ்வளவு பிரம்மப் பிரயத்தனமாயிருக்க வேண்டும் என்பதும் அப்போது எனக்குத் தெரியாது. எல்லாம் நன்றாய் நடக்கிறது என்று குழந்தைகள் நினைத்து நம்புகின்றன. அதுவே அவற்றின் பாக்கியம். பிற்காலத்தில் தான் துன்பப்படுவதற்கு வேண்டிய வாய்ப்பு இருக்கிறதே! தாய்மார்கள் அளிப்பதையே வேறு சிந்தனையில்லாமல் முழு மனதுடன் ஏற்கும் மனோபாவத்தை இயற்கையானது குழந்தைகளுக்குக் கருணையுடன் அளித்திருக்கிறது. எங்கள் எல்லோருக்குமாகச் சமைப்பதும், துணி துவைப்பதும், தைப்பதும், வளருகிற குழந்தைகளை — வளர்க்கக் கடினமான குழந்தைகளை — பராமரிப்பதும், உலகத்தின் பார்வையில் திரமாக முகம் கொடுத்துச் சிறிதே ஆடம்பரத்துடன் பண்டிகைகளைக் கொண்டாடுவதும் அம்மாவுக்கு எவ்வளவு சிரமமாயிருந்திருக்கும் என்பதை இப்போதுதான் உணருகிறேன்.

ஏதோ ஒரு சாலையில் எங்கள் அப்பா உங்கள் கண்ணில் பட்டாரேனில் அவரை நீங்கள் குறிப்பாகக் கூடக் கவனிக்க மாட்டீர்கள். இரண்டாம் முறை அவர்மீது பார்வை செலுத்த மாட்டீர்கள். அவர் உயரமுமில்லை; மிகவும் குட்டையுமில்லை; நடுத்தர ஆகிருதி பெற்றவர். சாதாரணமாகச் சிவப்பு என்றே சொல்லிவிடலாம் — ஆனால் அவருடைய ஜாதி ஜனங்களில் ரொம்பப் பேரைவிடச் சிவந்தவர் என்று சொல்வதற்கில்லை. திட்டமான அங்க அமைப்புக் கொண்டவர். நல்ல அழகான தோற்றமுடையவர் என்றே கூட எண்ணத் தோன்றும் — ஆனாலும் விசேஷமாக அப்படிச் சொல்லவும் முடியாது. வேஷ்டி உடுத்தி, நீளக் கோட்டுப் போட்டிருப்பார். கோட்டுக் கழுத்துவரை பித்தான்கள் இருக்கும். விலை மலிவான சாம்பல் நிறப் பருத்தித் துணியில்தான் கோட்டுப் போடுவார். பாதரட்சையில்லாமலேதான் போவார். நெற்றியில் ஒரே ஒரு சிவந்த கோடு — ஸ்ரீ சூர்ணம் — இழுத்திருப்பார். யார் கவனத்தையும் கவரக் கூடாது என்ற தயக்கத்துடன் இழுத்துக் கொண்டாற் போலவே அக் கோடு தோன்றும். கூச்சமும், அடக்கமும் நிறைந்த தோற்றம் அவருடையது. எங்கேயோ வெகு தொலைவில் நோக்குவது போன்ற ஒரு பார்வை அவர் முகத்தில் நிலவும். தெருவில் நடக்கும்போது அவர் எதையும் கவனிப்பதாகத் தோன்றாது. அதிருஷ்டவசமாக அந்தக் காலத்தில் காரும், பஸ்ஸும், லாரியும் தெருவில் கிடையாது. ஜட்காக்கள்தான் உண்டு. அவை போடும் சப்தத்தில், மனத்தை வேறெங்கோ தீவிரமாகப் பதித்திருந்த அப்பாவுங்கூட ஜாக்கிரதையாக இருந்து, வண்டியில் மாட்டிக் கொள்ளாமல் பரம சௌக்கியமாகவே தெருவில் செல்ல முடிந்தது.

எங்கள் வாழ்க்கையில் ராமநவமிப் பண்டிகை ஒரு மகத்தான சம்பவமாகும். எங்கள் அகத்துக்குச் சமீபத்திலேயே ஒரு கோவில் இருந்தது. உற்சவத்தின்போது பிரதி இரவும் ஸ்வாமியை ஊர்வலமாக 'ஏள'ப்பண்ணுவார்கள். எங்கள் சந்து முழுவதும் கடந்து, இடப் பக்கம் திரும்பி, புளியந் தெருவில் ஐம்பது கஜம் நடந்தால் ஒரு சதுக்கம் வரும். இந்தச் சதுக்கத்துக்கு ஸ்வாமி ஊர்வலம் வரும். எங்களை ரொம்பவும் கவர்ந்தவை பெட்ரோமாக்ஸ் விளக்குகள் தான். அவை எப்படி இயங்குகின்றன என்பது எங்களுக்குத் தெரியாது. ஆனாலும் கீழ்க் குரலில் அவை இடைவிடாமல் எழுப்பும் 'இஸ்' சத்தத்தைக் கேட்டுக்கொண்டிருப்போம். எங்களுக்குள் 'முதிர்ந்த' பிராயம் அடைந்த எட்டு வயசு சிநேகிதன் ஒருவன் ஓர் இரவு பெட்ரோமாக்ஸ் விளக்கின் கதையைச் சொன்னான். பல யுகங்களுக்கு முன் கோரமான குற்றங்களைச் செய்த ஒரு ராஜகுமாரனை அந்த விளக்குக்குள் சிறைப் பிடித்து வைத்திருக்கிறதாம். அவன்தான் உப்பிய கன்னங்களோடு இடைவிடாமல் இப்படிச் சத்தம் போட்டு வருகிறானாம். இரவு முழுவதும் இப்படி உப்பிய கன்னங்களோடு இடை விடாமல் கெகெக்க வேண்டும் என்பதே அவனுக்குத் தண்டனையாம்! ஸ்வாமி ஊர்வலத்தில் நாயனம் ஊதிய வித்வான்களோடு இந்தப் புராண ராஜகுமாரனின் விதியை ஒப்பிட்டுக் காட்டினான் என் நண்பன். மேளக்காரர்கள் தஞ்சாவூரிலிருந்து வந்ததாகச் சொல்லப்பட்டது. அது உண்மையாகவே இருக்கும் என்று நினைக்கிறேன். அவர்கள் நன்றாக உடுத்தியிருந்தார்கள். தங்கச் சரிகை போட்ட அங்கவஸ்திரம் போட்டிருந்தார்கள். அவர்களில் இருவர் நாயனம் ஊதும்போது கன்னத்தை உப்ப வைத்துக் கொண்டிருந்தார்கள். வாயில் ஆப்பிள் பரிமாணம் அடக்கி வைத்திருக்குமளவுக்கு உப்ப வைத்துக் கொண்டார்கள். அவர்கள் முகமெல்லாம் சிவந்து போயிற்று. ஆனாலும் இவர்களுக்குச் சீக்கிரமே கஷ்ட நிவாரணம் கிடைத்தது. கன்னங்கள் சகஜமான நிலைக்கு வந்தன. முகத்தின் சிவப்பு மறைந்தது. அவர்கள் புகழ் பெற்ற கலைஞர்கள் என்பதில் சந்தேகமில்லை. ஏனென்றால், ராமநவமிக்குச் சிறிது காலம் முன்பிருந்தே 'தஞ்சாவூரிலிருந்து பெரிய மேளக்காரர்கள் வரப் போகிறார்கள்' என்று ஊரெல்லாம் பேச்சாக இருந்தது.

ஸ்வாமியைப் பல்லக்கில் 'ஏள'ப்பண்ணுவார்கள். மெருகேற்றிய தங்கத் தகடும், வைரமும், கெம்பும், ஏராளமான புஷ்பமுமாகப் பல்லக்கு விளங்கும் என்றாலும் நாயன உப்பலும், புதிர்மயமான பெட்ரோமாக்ஸ் சத்தமும்தான் எங்கள் மனத்தில் மிகவும் பதிந்தன. அடுத்தபடியாக வேதப் பிராமணர்களைச் சொல்லவேண்டும். சிறிதே ஆடி அசைந்துகொண்டு

அவர்கள் கோஷ்டியாகப் பாராயணம் செய்வார்கள். அவர்கள் இரண்டு கோஷ்டியாகப் பிரிந்திருந்தார்கள். ஒரு கோஷ்டி நிறுத்தியவுடன் விட்ட இடத்திலிருந்து மறு கோஷ்டி தொடங்கும்.

சில தெருக்களுக்கு ஒரு முறை ஊர்வலம் நிற்கும். பக்தர்கள் புஷ்பமும், தேங்காயும் நிவேதனம் செய்வார்கள். இளம் பட்டர் ஒருவருக்குத்தான் தேங்காய்களை வாகனத்திலேயே அடித்து உடைக்கும் பொறுப்பு இருந்தது. அவர் நல்ல புஷ்டியாக இருப்பார். தேங்காய் உடைப்பதிலே அவருக்கு ஒரு தனி மகிழ்ச்சி எனத் தோன்றும். ஒரே அடிதான், சத்தம் கேட்கும், தேங்காய் நறுவிசாக இரண்டு துண்டுகளாக உடைந்திருக்கும்!

ஸ்வாமிக்கு முன்னால் ஒரு முக்கியஸ்துவம் வாய்ந்த கனவான் நடந்து செல்வார். கோவில் அவருடைய சொத்துதான்; இந்த வைரங்களும், செம்புகளும் அவருடையவைதான் என்று குழந்தைகள் கேள்விப்பட்டிருந்தோம். வாஸ்தவத்தில் அவர் சொத்துக்காரர் அல்ல; அவர் கோவிலின் பிரதான தர்மகர்த்தா மட்டுமே என்பதை நான் வயசு வந்த பின்தான் அறிந்தேன். அவர் பெரும் செல்வந்தர். புளியந்தெருவுக்குச் சற்றுத் தொலைவில் அவருக்குப் பெரிய பங்களா இருந்தது. அவ்வீட்டின் பெரிய இரும்புக் கேட்டைத் தாண்டி நாங்கள் செல்லும்போது, உள்ளே பெரிய ஹாலும், பல அறைகளும் இருப்பதைக் கவனித்திருக்கிறோம். மாடியில் இரும்புக் கிராதி போட்டிருக்கும். தோட்டம், லாயம், இரட்டைக் குதிரை ஸாரட்டு எல்லாம் வெளியிலிருந்தே தெரியும். இந்த முக்கியம் வாய்ந்த கனவான்தான் ஸ்வாமியையும், ஊர்வலத்தையும் நிர்வகிக்கிறார் என்பது எங்களுக்கு நிச்சயம். ஊர்வலத்தின்போது அவரிடத்தில் அடிக்கடி மக்கள் சென்று யோசனை கேட்பார்கள்.

ஒரு நாள் இராச் சாப்பாடான பின் அம்மா அப்பாவிடம் தன்னை ஸ்வாமி ஊர்வலத்துக்கு அழைத்துப் போகுமாறு கேட்டாள். குழந்தைகளான நாங்கள் எத்தனையோ முறை திருவீதி உலாப் பார்த்திருக்கிறோம். ஆனால் அம்மா பார்த்ததில்லை. எனவே அம்மா கேட்டவுடன் அப்பா துள்ளிக் குதித்துக் கொண்டு ஒப்புக்கொள்வார் என்று நினைத்தோம். அவரோ மறுக்கிற பாவனையில் தலையை ஆட்டினார்.

''ஊர்வலம் பார்க்க நான் போவேன் என்று தோன்றவில்லை. எனக்கு நினைவு தெரிந்த நாளாக நான் போனதில்லை. இப்போது புது வழக்கத்தைத் தொடங்க ஆசையில்லை. அதில் எனக்கு ஒன்றும் விசேஷ முக்கியமில்லை. உன்னைப் பொறுத்தமட்டில்....''

அம்மாவை நேராக நோக்கியபடி அப்பா தொடர்ந்தார்: ''உன்னைப் பொறுத்தமட்டில் நீ இஷ்டப்பட்டால் உன் மூன்று பிள்ளைகளில் யார் வேண்டுமானாலும் உன்னோடு வருவார்கள். நான் வருவதற்கில்லை.''

இது எனக்கு விசித்திரமாகப்பட்டது. நல்ல பிராமணர் ஒருவர் இப்படிப் பேசப்படுமா என்று நினைத்தேன்.

ஆனால் அம்மாவை ஊர்வலம் அழைத்துச் செல்வதில்லை என்பதில் அப்பா பிடிவாதமாக இருந்தார். அவர் ஒரு முறைகூடக் குடும்பத்தைக் கோவிலுக்கு அழைத்துப் போனதாக எனக்கு ஞாபகமில்லை.

இது எங்களுக்கு விந்தையாகவே பட்டது. ஏனென்றால் அவர் நல்ல பக்திமான்; நியமம் உள்ளவர். காலையில் ஸ்நானம் செய்துவிட்டு, சுவரில் மாட்டிய ஸ்ரீநிவாஸப் பெருமாளின் படத்துக்கு முன்னால் அமர்ந்து சுமார் ஒரு மணி நேரம் ஸ்தோத்திரங்கள் சொல்லிவிட்டுத்தான் ஒரு மடக்குத் தீர்த்தம் கூடப் பருகுவார். உடம்பு சரியா இருந்தாலும், சரியில்லாவிட்டாலும் இதுதான் அவரது தினசரி ஆசாரம். அவருக்கு அவ்வப்போது 'ரூமேடிஸ'ப் பிடிப்பு உண்டாவது உண்டு. அப்போதும்கூட வெந்நீர் ஸ்நானம் செய்து, எப்படியேனும் பிரார்த்தனை செலுத்துவதற்குச் சமாளித்துக் கொள்வார். பிரார்த்தனையின்போது அம்மாவும், குழந்தைகளாகிய நாங்களும் தவிர யாரும் இருக்க மாட்டோம். தனிமை அறையின் ஒரு மூலையில்தான் பிரார்த்தனை நடக்கும். தம்முடைய அசாதாரணமான ஹாஸ்யங்களில் ஒன்றை அப்போது அப்பா உதிர்ப்பார். ''இவன் ரொம்பப் பசிக்காரக் கடவுள் போலிருக்கு. எப்போது பார்த்தாலும் சமையல் அடுப்பையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.'' என்பார்.

ஸம்ஸ்கிருதம், தமிழ், கன்னடம் மூன்றிலும் அப்பா பண்டிதர். ஆங்கிலமும் நன்றாகத் தெரியும். அவர் ஷேக்ஸ்பியர் நாடகங்கள் கூடப் படித்திருக்கிறார். பக்கங்களின் ஓரங்களில் அவர் பென்ஸிலால் குறிப்புக்கள் எழுதிய இரண்டு ஷேக்ஸ்பியர் நாடகப் புத்தகங்கள் உண்டு. 'கிங் லியர்', 'மிட்ஸம்மர் நைட்ஸ் ட்ரீம்' நாடகங்களே அவை. குறிப்புக்களுக்கு நடுநடுவே கொட்டையான கறுப்பு எழுத்துக்களில் 'ஆண்டவனை நம்பித் தர்மத்தைச் செய்' என்று ஆங்கிலத்தில் எழுதியிருப்பார்.

ஆபீஸிலிருந்து அப்பா வீட்டுக்கு தஸ்தாவேஜுகள் எடுத்து வருவார். அவற்றோடு வெற்றுக் காகிதங்களும், ஒரு பாதி சிவப்பும் மறுபாதி நீலமுமான ஒரு பென்ஸிலும், இரண்டு கறுப்புக் காகிதப் பென்ஸில்களும், அழகான புதிய ரப்பரும் இருக்கும். ஒரு நாள் ஒரு தாளை எடுத்து, சிவப்பு – நீலப் பென்ஸிலால் அதில் கணக்குப் போடத் தொடங்கினேன்.

அப்பா தூரத்திலிருந்து என்னைப் பார்த்தார். முகத்தைக் கடுத்துக் கொண்டார். உறுதியான, ஆனால் அன்பான, குரலில் சொன்னார்: ''அந்தக் காகிதம் நமக்குச் சொந்தமில்லை. அதே போல் பென்ஸிலும் ரப்பரும் நம்முடையதல்ல. உனக்குச் சொந்தமில்லாத பண்டங்களை எடுத்து உபயோகிக்காதே. இதோ பார்...'' அப்பா ஜேபியைத் துழாவியபடியே கூறினார். ''வீரப்பாவின் கடைக்குப்போய் இந்தக் காசுக்குக் காகிதமும், பென்ஸிலும், ரப்பரும் வாங்கிக்கொள்.''



அப்பா துழாவிக் கொண்டே இருந்தார்; அந்தக் காசுதான் அகப்பட்ட பாடாக இல்லை.

அம்மாவைக் கூப்பிட்டார். இருவரும் ஏதோ சம்பாஷித்தார்கள். சம்பாஷணையிலிருந்து ஏதோ மனக் கிளர்ச்சி ஏற்பட்டிருப்பதாகத் தெரிந்தது. காகிதத்துக்காகவும், பென்ஸிலுக்காகவும் ஓரணா செலவிடுவதென்பது எங்கள் அகத்தில் ஓர் ஆடம்பரச் செலவு என்பது எனக்கு அப்போது தெரிந்திருக்கவில்லை. எனக்கு 'ஸ்லேட்'டும் 'ஸ்லேட்' குச்சியும் இல்லையா, என்ன? அப்படியிருக்க 'இந்த இளம் பிள்ளையின் யோசனையற்ற பேராசைக்கு இடம் கொடுத்து அதைப் பூர்த்தி செய்வது எப்படிச் சரியாகும்?' இது அம்மாவின் கட்சி.

கடைசியில் அப்பாவின் மன உறுதிதான் நிலைத்தது. என் ஜேபியில் ஓரணாக்

காசோடு நான் பெருமையாக வெளியேறினேன். ஓரணா என்பது எங்கள் அத்தனை பேருக்கும் ஓரிரு நாளுக்குத் தேவையான காய்கறி வாங்கக் கூடிய தொகை என்பதை நான் உணர்ந்திருக்கவில்லை.

நான் ஒரு நாள் அப்பாவிடம் கேட்டேன்: அவர் ஏன் கோவில் தர்மகர்த்தாவைப் போல் பெரிய பங்களாவும், இரட்டைக் குதிரை வாரட்டும் வாங்கவில்லை என்று. ''பகவத் சங்கல்பத்தைப் பற்றிக் கேள்வி கேட்கக் கூடாது'' என்றார் அப்பா. அவர் சொன்னது எனக்கு அர்த்தமாகவில்லை. அவருக்குத் தர்மகர்த்தாவிடம் துளிக்கூடப் பொறாமை இல்லை. ''ஆண்டவனை நம்பித் தர்மத்தைச் செய்'' என்றார் அவர்.

நான் பேப்பரும், பென்சிலும் வாங்கின கடைக்குச் சொந்தக்காரரான வீரப்பாதான் எங்கள் வீட்டுக்கும் சொந்தக்காரர். நாங்கள் நிறைய வாடகை பாக்கி வைத்திருந்தோம் போலிருக்கிறது. மளிகைக் கடையிலும் நீண்ட நாட்களாகப் பணம் கொடுக்காமல் கடன் ஏறியிருந்திருக்க வேண்டும். ஆனாலும் வீரப்பா எப்போதேனும்தான் முதல் தேதி வாக்கில் அகத்துக்கு வருவார். கோப வார்த்தை ஏதும் பேசமாட்டார்; அதிகார தோரணையில் நிர்ப்பந்தமும் செய்ய மாட்டார். பாக்கிப் பணத்தைப் பற்றி அப்பாவிடம் நாசூக்காக மரியாதையுடன் நினைவூட்டுவார். அப்பா ரகசியக் குரலில் ஏதோ சமாதானம் கூறுவார். வீரப்பா மெதுவாக வெளியே நடந்து விடுவார். அவரைப் பார்த்தால் சிறிதே



சோகமாயிருக்கிறாரெனத் தோன்றும். ''வீரப்பாவைப் போன்ற ஒரு நல்ல மனிதரை நமக்கு வீட்டுக்காரராகத் தந்திருப்பது பெருமாளின் கருணை. குலத்தில் அவர் நம்மளவு பெரியவரில்லை. ஆனால் நம்மவர்களைவிடப் பெருமாளுக்குச் சமீபத்தில் இருக்கிறார்'' என்பார் அப்பா. அதைவிடக் கடுமையாக சுவ ஜாதிக்காரர்களைக் கண்டிக்க அப்பாவால் முடியாது.

மகா பெரியவரான தர்மகர்த்தா ஒரு நாள் எங்கள் வீட்டுக்கு வந்தார்.

அவர் கோபமாக இருந்தாரென்பது வெளிப்படையாகத் தெரிந்தது. வாசலில் நின்றுகொண்டு அப்பாவின் பெயரைச் சொல்லிக் கூப்பாடு போட்டார். அப்பா பிரார்த்தனையில் இருக்கிறார் என்றுசொல்ல நான் அனுப்பப்பட்டேன். என்னை அவர் முறைத்துப் பார்த்தார். ''உன் அப்பா அனுஷ்டானங்களை முடிக்கும் மட்டும் நான் காத்துக்கொண்டிருக்க முடியாது. நான் அவருக்குக் கடனாகத் தந்திருந்த இருபத்தைந்து ரூபாயை அவர் எப்போது திருப்பப் போகிறாராம் என்று கேள். மூன்று மாசமாகத் தவணை மீறிவிட்டது. அடுத்த ஒன்றாந் தேதிக்குப் பணம் வந்து சேராவிட்டால் கோர்ட்டில் 'ஸூட்' பண்ணுவேன்'' என்று இரைச்சல் போட்டார்.

'ஸூட்' பண்ணுவது என்றால் தைப்பது என்றே நான் அறிவேன். அந்த 'ஸூட்' வேறு, இந்த 'ஸூட்' வேறு என்று எனக்குத் தெரியாது. ஆனபடியால், மனிதர்களை எப்படி 'ஸூட்' பண்ணுவது என்று புரிந்து கொள்ளவில்லை.

தர்மகர்த்தா கத்திய கத்தல் பூஜையிலிருந்த அப்பா காதிலேயே விழுந்து விட்டது. அண்டை வீட்டுக்காரர்களும் அவரவர் வீட்டு வாசலுக்கு வந்து என்ன விவகாரம் என்று கவனிக்கலானார்கள்.

எங்கள் அகத்துக்கு நேர் எதிரே பால்காரர் ஒருவர் வசித்து வந்தார். அன்று மாலை அவர் மனைவி நாங்கள் வாங்கும் கொஞ்சம் பாலைக் கொடுக்க வந்தாள். ''அந்தப் பணக்காரத் தர்மகர்த்தா ஜவா காலமே சொன்னதெல்லாம் கேட்டேன். தான் சொன்ன வார்த்தைக்கு அவரே வெட்கப்படணும். அவரு எப்படிப் பணம் பண்ணினாரு, என்ன மாதிரி வாழுறாருன்னு யாருக்குத் தெரியாது? அடுத்த சந்துலே அவருக்கு வைப்பாட்டி இருக்கான்னு நமக்குத் தெரியாதா என்ன? பாவம், நீ எட்டுப் புள்ளைங்களோட — அதுங்க அப்பாவா, அத்தனை சாது ஜந்து!'' என்று அம்மாவிடம் ஆறுதல் கூறினாள்.

இதெல்லாம் என்னவென்று எனக்கு முழுவதும் புரியவில்லை. ஆனால் அப்புறம் பல நாட்களுக்கு அகத்தில் ஒரே கொந்தளிப்பாயிருந்தது. அம்மா ஓயாமல் கண்ணீர் விட்டபடி இருந்தாள். பல வருஷங்களுக்குப் பின் நான் இதையெல்லாம் பற்றி அவளிடம் கேட்டேன். தர்மகர்த்தாவின் கடனை அடைப்பதற்காக அப்பா அவளுடைய ஒரு ஜதைப் பொன் வளையல்களைக் கேட்டிருக்கிறார். மாங்கலியமும் மெல்லிய ஒட்டியாணமும் தவிர இதொன்றுதான் அவளிடமிருந்த தங்க நகை. இந்த நிலையில் ஒட்டியாணம் இருந்தது ஆச்சரியமாயிருக்கக்கூடும். ஆனால் அது ஒரு பரம்பரைச் சொத்தானபடியால், உணர்ச்சி அடிப்படையில் மிகவும் முக்கியத்துவம் பெற்றிருந்தது. எனவே கஷ்ட காலத்தில் கூட அதைப் பணமாக்காமல் காத்து வந்திருக்கிறாள். பொன் வளையல்களை விற்கும் யோசனையை அம்மா ஆட்சேபித்திருக்கிறாள் என்று தோன்றியது. கடைசியில் ஒட்டியாணம் மறைந்தது. அதை அடகு வைத்து அப்பா பணம் வாங்கினார். ஆனால் அதை மீட்கும் அளவுக்கு அப்பாவிடம் என்றுமே பணம் சேரவில்லை.

தர்மகர்த்தா கார் வாங்கினார். எங்களூரில் கார் வாங்கியவர்களில் அவரே முதன்மையானவர்.

ஒருநாள் அப்பா ஆபீஸிலிருந்து திரும்பி வந்தபோது பயந்து நடுங்கிக் காணப்பட்டார். ''மயிரிழை தப்பியிருந்தால் கார் என்மீதே ஏறியிருக்கும். நான் கீழே விழுந்து விட்டேன். அதிருஷ்டவசமாக மறுபக்கம் சாய்ந்தேன். ஒரு சின்னக் காயம்தான் பட்டது. 'எங்கே போகிறோம் என்று கவனித்து நடப்பதற்கென்ன?' என்று 'டிரைவர்' இரைந்தார். மயிரிழையில் தப்பினேன்'' என்றார்.

தர்மகர்த்தாவின் மேல் எங்களுக்கெல்லாம் கோபம் கோபமாக வந்தது. அம்மாவின் படபடப்பு பார்த்தாலே தெரிந்தது. ''வசைமாரியில் இறங்கக் கூடாது'' என்று எங்களுக்குக் கூறினார் அப்பா. ''அது முறையில்லை. என்னைக் காப்பாற்றியதன் மூலம் இன்று பெருமாள் நமக்கெல்லாம் கருணை புரிந்திருக்கிறான் என்று உங்களுக்குத் தோன்றவில்லையா? அவனுடைய கருணைச் செயலுக்கு நன்றி சொல்வோம்'' என்றார்.
















அப்பா கோட்டைக் கழற்றினார். கோட்டுக்குள் சட்டையோ பனியனோ இல்லை என்பதைக் கண்டேன். கழுத்து வரை பித்தான் போட்ட கோட்டு மட்டுமே அவருடைய வெற்றுடம்பை மூடியிருந்திருக்கிறது. சட்டை போட அப்பாவுக்குக் கட்டுப்படியாகாது என்று நான் அறியவில்லை. சட்டை போடாமல் அவர் கோட்டுப் போட்டது அவ்வளவு விசித்திரமாகவும் எனக்குத் தோன்றவில்லை.

நகரத்தில் பிளேக் வியாதி வந்து சேர்ந்தது. எங்களுடைய சிறிய சந்திலேயே எட்டுப் பேர்கள் கொள்ளை நோயினால் மரணமடைந்தார்கள்.

எங்கள் அகத்தில் யாருக்கும் எதுவும் நேரவில்லை. நாங்கள் தற்காப்பு நடவடிக்கை எதுவும் எடுத்துக் கொள்ளவுமில்லை. வெறும் காலோடே தெருவில் நடந்தோம். சடலங்கள் எடுக்கப்படுவதைப் பார்த்தோம். ஆனால் எங்களுக்கு எதுவும் நேரவில்லை.

"பகவத் சங்கல்பம்" என்றார் அப்பா.

கொள்ளை நோய் நீங்கியது. சிறிது காலத்துக்கெல்லாம் அப்பாவுக்குப் பிரமோஷன் கிடைத்தது. சம்பளத்தில் கணிசமான உயர்வு பெற்றார். மொத்தத்தில் நூறு ரூபாய் ஊதியம் பெற்றார்.

புளியந் தெருவை விட்டுப் புறப்படச் சமயம் வந்து விட்டது என்று ஒரு நாள் அப்பா சொன்னார். "இங்கே நாம் எவ்வளவோ சந்தோஷமாக இருந்து விட்டோம்! வீரப்பாதான் எவ்வளவு நல்ல, பதவிசான வீட்டுக்காரராக இருந்திருக்கிறான்! எதிர் வீட்டுப் பால்காரன்கூடத்தான் — உதவாக்கரை என்று எல்லாரும் சொன்னாலும் — நம்மிடம் எவ்வளவு அன்பாக இருந்திருக்கிறான்? எவ்வளவு பரிவாக இருந்திருக்கிறான்? அண்டை அயலகத்துக்காரர்களும் வெகு நல்லவர்களாக இருந்திருக்கிறார்கள். இருந்தாலும் குழந்தைகளை இனியும் அபாயத்துக்கு ஆஸ்பதமான இந்த இடத்தில் வைத்துக் கொண்டிருக்க நான் விரும்பவில்லை. ஒரு 'ஃப்ளு'வுக்கும் காலராவுக்கும் ஈடு கொடுத்தோம். இப்போது பிளேக் வேறு வந்து போயிற்று. இனி நகரத்துக்கு வெளிப்புறத்தில் வீடு பார்த்துக் கொண்டு போய்ச் சேருவோம். பின்னத் தோட்டமும், கிணறும் உள்ள ஒரு வீடு பார்த்திருக்கிறேன். பேஷான வீடாகத் தெரிகிறது. வாடகைதான் அதிகம் — மாசம் இருபத்திரண்டு ரூபாய். குழந்தைகளின் க்ஷேமத்தைப் பார்த்தால் அது பெரிதில்லை என்றே நினைக்கிறேன்" என்றார்.

ஊருக்கு வெளிப்புறத்தி லமைந்த அந்த வீட்டுக்குக் குடியேறினோம். எங்களுக்கு அது பெரிய மாளிகையாகத் தோன்றிற்று. ஆகா, தோட்டம் முழுவதும் ஓடி விளையாடலாமே!

புது வீட்டுக்கு வந்த ஒரு வாரத்துக்குப் பின் அப்பா அம்மாவிடம், "நல்லது, நீ என்ன நினைக்கிறாய்? நாம் சீக்கிரமே நிம்மதியாக ஓய்வு கொள்ளலாம் என்று எண்ணுகிறேன். உன் பெரிய பிள்ளை பி. ஏ.க்கு வந்து விட்டான். இரண்டாமவன் ஸீனியர் இண்டர் படிக்கிறான். கடைக்குட்டியும் ஜோராக முன்னுக்கு வந்து கொண்டிருக்கிறான். அன்றைக்கு மார்க்கெட் அருகே அவனுடைய ஹெட்மாஸ்டரைப் பார்த்தேன். 'பல காலம் கழித்து என்னிடம் சூடிகையாக வந்திருக்கும் ஒரு பையன்' என்று அவனைப் பற்றிப் பேசினார். சீக்கிரமே பையன்கள் சம்பாதித்துப் போடுவார்கள். நானும் நீயும் சிறிது விச்ராந்தியாக இருக்கலாம். ...உனக்கு நான் புடவை எடுத்து எவ்வளவு காலமாயிற்று!" என்றார்.

அம்மாளை உற்றுப் பார்த்தபடி தொடர்ந்தார்: "ஒட்டியாணத்தைத் தான் என்னால் அடகு மீட்கவே முடியவில்லை. அதனாலென்ன? பிள்ளைகளைப் படிக்க வைத்தோம். அவர்களால் ஏதோ கொஞ்சம் ஆறுதல் பெறத்தான் போகிறோம். நான் எப்போதுமே சொல்வதை மறுபடி உனக்குச் சொல்கிறேன். பகவான் கருணாமூர்த்தி. அவனை நம்பி நாம் தர்மத்தைச் செய்ய வேண்டும்."

மறுநாள் அப்பா காய்ச்சலோடு எழுந்திருந்தார். வீட்டு டாக்டர் வந்து பார்த்தார். பிளேக் என்றார். இரண்டு நாட்களாயின. அப்பா மாண்டுபோனார்.

முடிவுக்குச் சிறிது நேரம் முன்பு அவருடைய படுக்கையருகே நான் நின்று கொண்டிருந்தது இன்னும் நினைவிருக்கிறது. என்னைப் பார்த்தவர் ஏதோ சொல்ல ஆதுரமாயிருந்தார் என்பது தெளிவாகப் புலப்பட்டது. ஆனால் வாயை விட்டு வார்த்தை எதுவும் வர மறுத்தது. மனம் குலைந்து போய் அவர் பேசும் முயற்சியை விட்டு, முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

துக்கம் விசாரிப்பதற்காகக் கோயில் தர்மகர்த்தா வந்தார். அப்பா பிளேக்கில் மரணமடைந்தார் என்று தெரிந்ததும் வீட்டுக்குள் வராமல் தெருக் கோடியிலேயே நின்றுவிட்டுப் போய்விட்டார். ருத்ரபூமிக்கு உடலை எடுத்துச் செல்வதற்காக நாலு ஆட்களை அமர்த்துவதற்கு நாங்கள் பெரும்பாடு பட வேண்டியிருந்தது.

பல வருஷங்களுக்குப் பின்னும் கோயில் தர்மகர்த்தா காலகதியடைந்தார். நூற்றுக்கணக்கானவர்கள் பிரேத ஊர்வலத்தில் கலந்து கொண்டார்கள். அவருடைய அறிவுச் சிறப்பு, இதயச் சிறப்பு இரண்டையும் பாராட்டிப் பலர் சொற்பொழிவு ஆற்றியதாக உள்ளூர் செய்திப் பத்திரிகையில் பார்த்தேன்.

அப்பாவின் புத்தகம் இப்போதும் என்னிடம் இருக்கிறது. எது சரி, எது தவறு என்று சஞ்சலமடையும்போதெல்லாம் புத்தகத்தில் உள்ள அப்பாவின் எழுத்துக்களைப் பார்க்கிறேன்: "ஆண்டவனை நம்பித் தர்மத்தைச் செய்."

அந்த வார்த்தைகளின் பொருள் எனக்கு முழுதும் விளங்குகிறதா என்று நான் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. அப்பா எங்களுக்கு முறைப்படி கற்பிக்க விரும்பிய பாடத்தை நான் கற்றுணர்ந்திருக்கிறேனா என்றும் எனக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. ஆனாலும் சந்தேகமும் மனத் தளர்ச்சியும் கொள்ளும்போதெல்லாம் அவர் மறைவுமுன்பு எனக்குத் தந்த புத்தகத்தை நான் புரட்டுகிறேன். அவர் வாழ்ந்ததும், மறைந்ததும் வியர்த்தம் இல்லை என்று உணர்கிறேன்.

# மாப்பிள்ளைகள் பல ரகம்



பால் பண்ணை வைத்துள்ள மாப்பிள்ளை






மாப்பிள்ளை ஒரு டாக்டர்






ஓட்டல் வைத்துள்ள மாப்பிள்ளை






மாப்பிள்ளை ஒரு ராணுவக்காரர்






மாப்பிள்ளை ஓர் எழுத்தாளர்



# மாமனார்கள் ஒரே ரகம்!

சாமா






மாப்பிள்ளை ஒரு நட்டுவனார்









மாப்பிள்ளை ஒரு வக்கீல்








மாப்பிள்ளை ஓர் அரசியல்வாதி








பயில்வானின் மாப்பிள்ளை






மாமனார் மாமியார் பகையுடன் காதல் திருமணம் செய்து

# IN OUR HANDS



# LIES OUR DESTINY

## நமது கைகளில் இருக்கிறது நம் வருங்காலம்

சக்கரம்,...முன்னேற்றத்தின் சின்னமாக உலகமெங்கும் கருதப்படுகிறது.
இந்தியாவின் மகோன்னதமான பழங்காலத்தையும் வருங்காலத்தின்
நம்பிக்கையையும் குறிப்பது இந்தச் சக்கரம்.
இப்பொழுதும், எப்பொழுதும் இச்சக்கரம் வேகமாக உறுதியுடன்
சுழன்றுகொண்டே இருக்கச் செய்வோமாக.
வருங்காலத்தில் திடநம்பிக்கையுள்ள நமக்கு இதுவே கடமையும் பொறுப்புமாகும்.



**மஹிந்திரா & மஹிந்திரா லிமிடெட்**

பம்பாய் - கல்கத்தா - தில்லி - சென்னை

# சாய்ந்த கோபுரம்




இத்தாலி தேசத்துக்குப் போய் ஓவியக் கலையில் சிறப்புப் பயிற்சி பெற வேண்டும் என்று வாகதேவன் சொன்னபோது அவன் தகப்பனார் வியப்படையவில்லை. ஏதோ ஒரே ஒரு தேசத்தோடு நிறுத்திக் கொண்டானே என்று திருப்தியடைந்தார்.

வாகதேவனின் தகப்பனார் உயர்நீதிபதியாக இருந்து ஓய்வு பெற்றவர். மகன் தன்னைப்போல் நீதிபதியாக வராவிட்டாலும், ஒரு நடுத்தரவக்கீலாகவாவது வரவேண்டும் என்று ஆசைப்பட்டு அவனைச் சட்டக் கல்லூரியில் சேர்த்தார். சட்டம் படித்துக் கொண்டிருந்தபோதே வாக, சட்டம் போட்ட ஓவியப் பலகைகளில் மனத்தைச் செலுத்தத் தொடங்கினான். தகப்பனார் கவலைப்பட்டார். இதைக் கண்டுதானோ என்னவோ வாக பரீட்சைகளில் தோற்காமல் தேறி வந்தான்.

"அப்பா, இந்த ஆண்டு இறுதிப் பரீட்சை முடிந்ததும் என்னை இத்தாலி தேசத்துக்கு அனுப்புங்கள். அப்பா! அங்கே பீஸா நகரத்தில் பல புகழ்பெற்ற ஓவியர்கள் இருக்கிறார்கள். நான் அங்கு சென்று சித்திர நுட்பங்களைக் கற்க வேண்டும்! இதுவரை உங்கள் மனத்தின்படி சட்டம் படித்து விட்டேன். இனிமேல் என் மனப்படி ஒரு வருஷம் என்னைச் சித்திரத்தில் விடுங்கள், அப்பா!"

"நீ எங்கு போவதானாலும் சரி. ஒரே ஒரு நிபந்தனை!" என்றார் நீதிபதி.

என்ன நிபந்தனை வரப் போகிறதோ என்று அச்சத்தோடு தந்தையின் முகத்தையே பார்த்தான் வாக!

"வெளி தேசத்துக்கு உன்னைத் தனியாக அனுப்புவதற்கு வேண்டிய மன உறுதி எனக்கு இல்லை. அதிலும் சித்திரம் படிப்பதற்காக நீ போகிறாய். எனவே, கலியாணத்தைப் பண்ணிக்கொள். நீயும் உன் மனைவியும் இருவருமாகச் சேர்ந்து போங்கள். எனக்குச் சம்மதமே!" என்றார் தந்தை.

"சரி" என்று ஒரே வார்த்தையில் அப்பாவுக்கு மறுமொழி சொன்னான் வாக!

## 2

பீஸா நகரத்துக்குப் புறப்படுமுன் வாக தன் அத்தை மகள் மங்களத்தைத் திருமணம் செய்து கொண்டான். நகர்ப்புறத்து அனுபவங்கள் சற்றும் இல்லாத கிராமாந்தரப் பெண்தான் மங்களம். என்றாலும் புதிதாக எதையும் நன்கு கற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வமும், சூதில்லாத மனமும் கொண்டவள். ஆகவே பீஸா நகரத்துக்குப் போய்ச்

சேர்ந்த சில நாட்களில் மங்களம் இத்தாலி மொழியைக் கற்றுக் கொள்ளத் தொடங்கினாள்.

வீட்டில் மனைவி இத்தாலி மொழியைப் படித்துக் கொண்டிருந்த போது வாசு வெளியே பீஸா நகரத்தின் பல 'மாடல்' (ஓவிய அழகி)களோடும் தனது பயிற்சி நாட்களைக் கழித்தான்!

'மாடல்'கள் என்று அழைக்கப் பெறும் சித்திர அழகிகளைப் பற்பல அலங்காரங்களோடு சித்திரப் பலகைக்கு முன்னால் நிற்க வைத்து, அவர்களையே பார்த்து அப்படியே அந்தக் காட்சியை ஓவியம் வரைவது பீஸா நகரத்து ஓவியர்களுக்கு முக்கியமான பயிற்சி! இது காரணமாக அந்த நகரத்தின் ஒவ்வொரு வீதியிலும் இலட்சிய அழகிகள் பலர் இருந்தனர். இவர்களில் ஒருத்தி தான் லவினியா!

கிரேக்க தேசத்துப் பழைய நடன நங்கையரின் மரபிலே வந்தவள் லவினியாவின் தாய். லவினியாவின் தகப்பன் பிரான்ஸ் தேசத்துக் கதாசிரியர் ஒருவரின் வழியில் வந்தவன். இரண்டு தோடுகள் இணைந்த சிப்பியிலே அழகிய முத்து தோன்றுவது போல, இந்த இரண்டு கலைக் குடும்பங்களின் இணைப்பிலே பிறந்த ஒரு முத்து லவினியா! ஓவியம் பயில்பவர்களுக்கு இந்த அழகி லவினியாவின் இல்லம் ஒரு கந்தர்வபுரி! பீஸா நகரத்துக்கு வந்து சேர்ந்த மறு மாதமே வாசு இந்தக் கந்தர்வபுரியிலே காலெடுத்து வைத்தான்!

மங்களத்துக்குத் தெரியும், சித்திரம் வரைபவர்கள் தங்களுக்கு எதிரே பெண்களை நிறுத்தி அவர்களைப் போலப் பற்பல நிலைகளிலே சித்திரம் வரைந்து பழகுவார்கள் என்று. தன் கணவன் இத்தனை ஆயிரம்மைல்கள் தாண்டிப் பாரத தேசத்திலிருந்து இத்தாலிக்கு வந்ததே இந்தக் கலை ''மாடல்''களை நாடித்தான் என்பதையும் அவள் அறிவாள். நவ நாகரீகத்தின் விபரீதங்களிலே சிக்கிவிடாமல் வீட்டுக்குள்ளே தானும் தனது புதிய கல்வியாகிய இத்தாலி மொழியுமாகக் காலம் கழித்து வந்த மங்களம், சூது வாதற்ற தனது இயல்புக்கு ஏற்ப நிம்மதியாக வாழ்ந்து வந்தாள். எத்தனையோ பல ஓவிய மாணவர்களைப் போலத் தனது கணவனும் பீஸா நகரத்து ஓவிய அழகிகளின் வீடுகளுக்குச் சென்று தனது கலையை வளர்த்து வருகிறான் என்றே அவள் எண்ணினாள்.

## 3

பன்னிரண்டு மாதங்கள் கழிந்தன. மகன் ஊருக்குத் திரும்ப வேண்டிய காலம் வந்தது என்று தகப்பனார் பணம் அனுப்பிக் கடிதமும் எழுதினார். வாசுவோ தந்தை அனுப்பிய பணம் வந்து சேர்ந்தது என்று எழுதினானே தவிர, தானும் மனைவியும் ஊருக்கு எப்போது வரப் போகிறோம் என்பது பற்றி ஒன்றுமே பதில் எழுதவில்லை.

மேலும் ஆறு மாதங்கள் ஓடின. மாமனார் மருமகளுக்கு இரகசியச் செய்தி அனுப்பினார்.

'உன் கணவனிடமிருந்து ஊருக்குத் திரும்புவது பற்றி ஒரு தகவலும் இல்லை. எனக்கென்னவோ கவலையாக இருக்கிறது. பீஸா நகரத்து மாடல்களின் வீட்டுக்குப் போவதை நீ கொஞ்சம் கவனித்து வரவும்!' என்று இந்தியாவிலிருந்து இத்தாலிக்கு உல்லாசப் பயணம் வந்த ஒரு தென்னிந்தியக் குடும்பத்தினரிடம் இரகசியமாகச் சொல்லியனுப்பினார் தந்தை !

இந்தச் செய்தி கிடைத்த விநாடியிலிருந்து மங்களம் எச்சரிக்கையாக இருக்க ஆரம்பித்தாள்.

''இந்தப் பீஸா நகரத்தில் எத்தனையோ மாடல்கள் இருக்கிறார்களே. நீங்கள் ஏன் லவினியாவின் வீட்டுக்கு மட்டுமே அடிக்கடி போகிறீர்கள் ?'' என்று கணவனிடம் மெதுவாக ஒரு நாள் கேட்டாள் மங்களம்.

''லவினியாதானே? அவள் ஒப்பற்றவள். நிகரற்றவள். ஈடு இணையில்லாத ஓவிய வனப்பு உடையவள்!''

''இருக்கலாம். நீங்கள் பலதரப்பட்ட வனப்புகளையும் பார்த்துப் பற்பலவிதமான ஓவியங்கள் வரைய வேண்டியவர் ஆயிற்றே. ஒன்றரை வருஷமாக ஒரே மாடலையே.......''

''மங்களம், ஏன் சுற்றி வளைத்துப் பேசுகிறாய்? உனக்கு மனதில் சந்தேகம் உதித்து விட்டது. அவ்வளவுதானே. இன்றைக்கே நீ என்னுடன் புறப்படு. லவினியாவும் நானும் பழகுகிற விதத்தைப் பார்த்தால் பிறகு நீயே சொல்வாய்...!''

''சரி, வாருங்கள், புறப்படலாம்!'' என்றாள் மங்களம், அதற்கும் விட்டுக் கொடுக்காமல் !

''சரி, இன்று மாலையே என்னோடு புறப்படு!'' என்றான் வாசு, அவனும் விட்டுக் கொடுக்காமல் !

## 4

அன்று மாலை மங்களம் லவினியாவின் வீட்டுக்குப் போனதன் பயனாக ஒரு பெரிய மனத் தெளிவு அவளுக்கு ஏற்பட்டது. வாசுவும் லவினியாவும் உடன் பிறந்த அண்ணன் தங்கை போலப் பழகுவதும், அவர்கள் இருவருக்கும் சித்திரக் கலையில் அபார ஈடுபாடு இருப்பதும் மங்களத்தைக் கவர்ந்தன! தான் புதிதாகக் கற்ற இத்தாலி மொழியிலே லவினியாவுடன் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தாள் மங்களம். இந்தப் பேச்சின் விளைவாக மங்களத்துக்கு லவினியாவிடம் ஓர் அந்தரங்கமான அன்பே உண்டாகி விட்டது. வீணாக ஒரு பெண்ணிடம் அநியாயச் சந்தேகம் கொண்டோமே என்று இதயத்துக்குள் தன்னையே நொந்து கொண்டாள் மங்களம் !

''லவினியா ! நான் வருகிறேன். உங்கள் அன்புக்கு ஆயிரம் மெர்ஸிபியோ (நன்றி)!'' என்று சொல்லிக் கொண்டு புறப்பட்டாள் மங்களம். லவினியா அவளை விடவில்லை. அப்படியே உடம்போடு உடம்பு அணைத்துக் கொண்டு ஒரு கொஞ்சும் புறாவைப் போல மங்களத்தின் கன்னத்துக்கு அருகில் நெருங்கி வந்து காதோடு பேசினாள்: ''நீ என்னை மறந்து விடாதே மாங்கலம்! தினந்தோறும் நீ இங்கே வந்தால் நான் ஆனந்தம் அடைவேன். அது முடியாவிட்டால் வாரத்துக்கு இரண்டு தடவையாவது நீ கட்டாயம் வரவேண்டும்!'' என்று இத்தாலி மொழியிலே கொஞ்சினாள் லவினியா! ''மங்களம்'' என்ற தனது பெயரை அவள் ''மாங்கலம்'' என்று உச்சரிப்பதும், அதில் 'மாங்கல்யம்' என்ற ஒலியே தொனிப்பதும் சேர்ந்து, மங்களத்தை ஒரே பொங்கும் மங்களத்தில் ஆழ்த்தின!

''கட்டாயம் வருகிறேன் லவினியா!'' என்றாள் மங்களம்.

## 5

இதன் பிறகு மங்களம் லவினியாவின் வீட்டுக்கு அடிக்கடி போக ஆரம்பித்தாள்! அந்த வீட்டில் உள்ள கலைப் பொருள்கள், அவற்றை லவினியா அடுக்கி வைத்திருக்கும் நேர்த்தி; அங்குள்ள சித்திரங்கள், அவற்றை லவினியா வரிசைப்படுத்தி வைத்திருக்கும் அலங்காரம்; அவளுடைய ஆடை அணிகலன்கள், அவற்றை லவினியா அணிந்து கொள்கிற எழில் — எல்லாம் கள்ளங்கபடமில்லாத மங்களத்தை லவினியாவின் வசம் ஈர்த்து இணைத்தன.

''நீங்கள் இந்துக்கள். முன் ஜன்மம், மறு பிறப்பு ஆகியவற்றில் நம்பிக்கை உள்ளவர்கள் இல்லையா மாங்கலம் ?'' என்று ஒரு நாள் மங்களத்தைக் கேட்டாள் லவினியா.

''ஆமாம். எதற்குக் கேட்கிறாய், லவினியா?'' என்று பச்சைக் குழந்தையைப் போல் மங்களம் மிகுந்த ஆவலோடு கேட்டாள் !

''நாம் இருவரும் முன் ஜன்மத்தில் அக்கா தங்கைகளாக இருந்திருப்போம் என்று நினைக்கிறேன் !'' என்றாள் லவினியா.

''முன் ஜன்மத்தில் மட்டும் என்ன! இந்த ஜன்மத்திலும் அக்கா தங்கைகளாகத்தானே இருக்கிறோம் நாம் !'' என்று மறுமொழி சொன்னாள் மங்களம், அகமும் முகமும் மலர்ந்தவாறு! ஆனால் அந்த வார்த்தை லவினியாவின் உள்ளத்தில் சுருக்கென்றது. மங்களத்தின் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள்! அதில் தோன்றிய பரிசுத்தமான உணர்ச்சி அலைகளைப் பார்த்ததும் லவினியாவின் முகம் மேலும் கலவரம் அடைந்தது! மங்களம் அதைக் கவனித்து விடக் கூடாது என்று கைக் குட்டையினால் தனது முகத்தைத் துடைத்துக் கொண்டாள் லவினியா!

''உனக்குத்தான் என்னிடம் எத்தனை அன்பு லவினியா!'' என்றாள் மங்களம். இப்படிச் சொல்லும் போதே குரலில் மெய்யன்பு சுரந்தது. கண் கலங்கியது. மங்களமும் தனது முகத்தைக் கைக் குட்டையினால் துடைத்துக்கொண்டாள். இதைப் பார்த்தபோது லவினியாவின் துணுக்கம் இன்னும் அதிகரித்தது!

## 6

''நேற்றிலிருந்து லவினியாவுக்குக் குளிர் ஜுரமாம். உடம்பெல்லாம் நடுங்குகிறது'' என்றான் வாசு, வெளியே போனவன் திரும்பி வந்து கொண்டே!

இந்த வார்த்தைகளைக் கேட்டதும் மங்களத்துக்கு உடம்பு நடுங்கியது.

உண்மையிலேயே ஒரு வேண்டாத குறுக்கீடுதான் .... இருந்தாலும் . ஒரு சுவாரஸ்யமான சதுரங்க ஆட்டத்தில் தொந்தரவு செய்யக் கூடாது என்பது ஒரு குழந்தைக்கு எப்படித் தெரியும். அவனுடைய **பாங்க் ஆப் இந்தியா சேமிப்புக் கணக்கு பாஸ் புத்தகத்தைக்** கண்டு பெருமைப்படுகிறேன். அதை ஒவ்வொருவரிடமும் காண்பிக்க வேண்டுமென்ற ஆசையை அவனும் அடக்கமுடியவில்லை. சேமிப்பு செய்யும் பழக்கம் ஒரு நல்ல பழக்கம் — **உங்களுடைய குழந்தைகள்** சிறு வயதிலிருந்தே இந்த நல்ல பழக்கத்தை ஆரம்பிக்க உதவுங்கள்.

## தி பாங்க் ஆப் இந்தியா லிட்.

T. D. கன்ஸாரா, ஜெனரல் மானேஜர்



லலிலியாவை உடனே போய்ப் பார்க்க வேண்டும் என்று புறப்பட்டு விட்டாள் அவள் !

வேகமாக வந்த மங்களம் லலிலியாவின் அருகில் சென்று உடம்பைத் தொட்டபோது லலிலியாவுக்கு நடுக்கம் இன்னும் அதிகமாயிற்று. மேலெல்லாம் அனலாகக் கொதித்தது.

மங்களம் அன்று வீடு திரும்பவில்லை. லலிலியாவுடன் அங்கேயே இருந்து அவளுக்குச் சிகிச்சை செய்தாள் !

ஒரு நாள், இரண்டு நாள், மூன்று நாள் ஆயிற்று. மங்களம் வீடு திரும்பாமல் அங்கேயே தங்கியிருந்து லலிலியாவைக் கவனித்துக் கொண்டாள். ஆனால் ஜுரம் நாளுக்கு நாள் அதிகமாயிற்றே தவிரத் தணியக் காணோம் !

''நீ வீட்டுக்குப் போ அம்மா! இது ஒரு தொத்துநோய். நீ இங்கே என்னுடனேயே இருந்தால் உன் உடம்புக்குக் கெடுதல். அதை நினைத்தால் என் காய்ச்சல் இன்னும் அதிகமாகிறது. நான் சொல்வதைக் கேள். நீ வீட்டுக்குப் போ. நான் ஒரு வைத்திய விடுதியில் சேர்ந்து சிகிச்சை பெற வேண்டும். இல்லையென்றால் பிழைக்க மாட்டேன்!'' என்றாள் லலிலியா.

தான் இருக்கும் போது விடுதி எதற்கு என்று மங்களம் எத்தனையோ சொல்லியும் கேட்க வில்லை லலிலியா ! அவளுடைய பிடிவாதத்தின்பேரில் அன்றிரவே அவளை ஒரு வைத்திய விடுதியில் சேர்த்தார்கள். மங்களம் இரவெல்லாம் படுக்கைக்கு அருகிலேயே இருந்து நர்ஸோடு நர்ஸாகத் தானும் சிகிச்சை செய்தாள்.

காலையில் விழித்ததும் லலிலியா சொன்னாள்: ''தங்கையே, நீ வீட்டுக்குப் போனால் ஒழிய என் மனம் நிம்மதி அடையாது. என்னுடைய நோயும் தணியாது. நீ போய்க் கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொள்!''

லலிலியா இவ்வாறு சொன்னதும் மங்களம் கூறுவாள்: ''அப்படியானால் இங்கே உன்னோடு அவரை இருந்து பார்த்துக் கொள்ளும்படி சொல்லுகிறேன். இல்லையென்றால் வீட்டுக்குப் போனாலும் எனக்கு நிம்மதி இராது! சரிதானே?''

''சரி, அப்படியே செய்!'' என்றாள் லலிலியா கம்மிய துயரக் குரலில் !

மங்களம் வீட்டுக்கு வந்து களைப்போடு படுக்கையில் சாய்ந்தாள். உடம்பெல்லாம் ஒரே களைப்பு. தொடர்ந்து இரண்டு மூன்று இரவுகள் கண் விழித்திருந்த காரணத்தால் நன்றாகத் தூங்கி விட்டாள்.

காலையில் மங்களம் விழித்து எழுந்த போது, வேலைக்காரி ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தாள். விடுதியிலிருந்து யாரோ ஒரு நர்ஸ் வந்ததாகவும், கடிதத்தை இரகசியமாக மங்களத்திடம் கொடுக்கும்படி சொன்னதாகவும் கூறினாள்.

இத்தாலி மொழியில் எழுதப்பட்டிருந்த அந்தச் சிறிய கடிதத்தை வாங்கிப் பார்த்தாள் மங்களம். அப்படியே விரல் பதறியது. உடம்பு முழுதும் நடுங்கியது. கடிதத்தில் எழுதியிருந்த வாசகம் அத்தனை பயங்கரமாக இருந்தது:



''இந்த வைத்திய விடுதியில் உன் கணவனுக்கும் லலிலியாவுக்கும் நடைபெறுகிற காதல் பேச்சுக்களை எப்போதாவது ஒரு சமயம் நீ இரகசியமாக வந்து கேட்டுப் பார். அப்போதுதான் கபடமில்லாத உனக்கு இந்த இருவரும் இழைக்கிற மாபெரும் துரோகம் நேருக்கு நேர் புலனாகும்!''

கடிதத்தைப் படித்ததும் மங்களத்துக்குத் தலை சுற்றியது. அகில உலகமும் சேர்ந்து சுழல்வது போல ஒரு மயக்கம்! கோபமும் ஆத்திரமும் பொங்கிப் பொங்கிச் சீறின. கடிதத்தை மடித்துப் பத்திரமாகப் பெட்டியிலே வைத்துப் பூட்டினாள். மறு விநாடியே வைத்திய விடுதிக்குப் புறப்பட்டாள் மங்களம்!

என்ன ஆச்சரியம்! அறையில் நுழையும் போதே தீக் கங்கைக் கொண்டு செவியிலே கொட்டுவது போல இருந்தது மங்களத்துக்கு! லலிலியா வாசுவுடன் பேசிக் கொண்டிருந்தாள்:

''அன்பே! என்னை இனி நம்பாதீர்கள். நான் இந்த உலகில் அதிக நாள் இருக்க மாட்டேன். இந்த நோயிலேயே நான்.... நான்.... நான்.....''

''லலிலியா, என் கண்ணே! ஏன் அப்படியெல்லாம் சொல்லுகிறாய் ?''

''இந்த நோய் என் இதயத்தையும் இரத்தக் குழாய்களையும் பலமாகத் தாக்கியிருக்கிறதாம். இப்போது பிழைத்து எழுந்தாலுங்கூட இனி அதிக நாட்களுக்கு ஓடாது என்று டாக்டர் சொல்லி விட்டார்!''

''ஐயோ லலிலியா! திடீரென்று உனக்கு இத்தகைய கொடிய நோய் எப்படியடி வந்தது கண்ணே! நீ இல்லாத உலகத்தில் இனி நான் என்ன செய்வேன் !''

இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே மங்களம் அந்த அறையினுள் காலடி எடுத்து வைத்தாள். லலிலியாவுக்கு அருகில் கட்டிலிலே உட்கார்ந்து அவளுடைய நெற்றியைத் தொட்டுப் பேசிக் கொண்டிருந்த வாசு அப்படியே அதிர்ச்சியடைந்து பதறி எழுந்தான்.

''மங்களமா, என்ன திடீரென்று?''

''யார், மங்களமா!''

மங்களம் இருவரையும் ஏற இறங்கப் பார்த்தாள். உதடு படபடத்த போதிலும் ஒரு வார்த்தையும் பேச வில்லை மங்களம்.

''என்ன மங்களம், நிற்கிறாயே!''

''இல்லை. நான் நிற்கவில்லை. வீட்டுக்குப் போகிறேன் !''

விறுவிறு என்று விடுதியிலிருந்து வீடு நோக்கி விரைந்தாள் மங்களம் !

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு மங்களமும் வாசுவும் தங்களுக்குள் அதிகமாகத் தர்க்கம் செய்து கொள்ள வில்லை. அவர்களிடையே அந்தரங்கமான பேச்சு நின்று விட்டது! கணவன் மனைவி என்ற வெறும் சம்பிரதாயச் சட்டத்துக்குள் மாட்டப்பட்டிருந்த அசைவற்ற உயிரற்ற ஒரு மங்கிய சித்திரமாக நின்றது அவர்கள் உறவு!

லலிலியா? அவள் விடுதியிலிருந்து ஏதோ கொஞ்சம் குணமாயிற்று என்று வீட்டுக்கு வந்தாள். ஆனால் அதற்குப் பிறகு அவளால் எழுந்து நிற்க முடியவில்லை. நொந்து போன நரம்புகளில் ஏற்பட்ட ஒரு பெருநிச்சியின் விளைவு அது! படுக்கையிலேயே இருந்தாள். எவ்வளவோ சிகிச்சைகள், எல்லையற்ற வாசுவின் பரிவான கவனிப்பு — இத்தனை இருந்தும் லலிலியா உயிர் வாழ முடியவில்லை !

ஆம்: லலிலியா இந்த உலகிலிருந்து பிரிந்தாள். அந்தத் துயர நாளிலிருந்து தினமும் வாசு அவளையே தன் கண் முன் நிறுத்திக் கொண்டான். ஆண்டு முழுதும் அவளுடைய ஓவியங்களையே ஆயிரம் ஆயிரம் நிலைகளில் ஆயிரம் ஆயிரம் சித்திரங்களாக எழுதினான் !

மங்களத்துக்கு இதெல்லாம் தெரியும். ஆனாலும் இருவரும் இது பற்றிப்

பேசவதே இல்லே! பேச மனமில்லே மங்களத்துக்கு ; பேசுவதற்கு வேண்டிய தைரியமில்லே வாகவுக்கு ! இப்படி ஓராண்டு கழிந்தது! அப்பா மறுபடியும் பணம் அனுப்பினர். உடனே ஊருக்கு வரும்படி மீண்டும் எழுதினர்.

இந்தத் தடவை வாக தன் தந்தைக்கு விவரமாகப் பதில் எழுதினன். மனேவியும் தானும் ஊருக்குப் புறப்படுகிற நினைத்தையும் குறிப்பிட்டு எழுதினன். அதோடு நிற்கவில்லே! மனேவியிடம் சொன்னுன் !

''மங்களம்! இன்னும் ஒரு வாரத்தில் நாம் இந்தியாவுக்குப் புறப்படுவது என்று முடிவு செய்திருக்கிறேன். தயாராக இரு... !''

எப்படியோ தைரியமாக இந்த வார்த்தைகளேச் சொல்லி விட்டான் வாக. உடனே வந்தது பதில்:

''நான் எந்த நிமிஷமும் ஊருக்குப் புறப்படத் தயார்தான்! இங்கே நம்மை விருப்பதற்கு வேண்டிய உயிருள்ள பொருளோ அல்லது உயிரில்லாத பொருளோ எனக்கு ஒன்றும் இல்லே இந்தப் பீஸா நகரத்தில் !''

நீண்ட நாட்களாகப் பூட்டியிருந்த இதயத்திலிருந்து இப்படி ஒரு சொல் வந்ததும், வாகவுக்கு மேற்கொண்டு பேசுவதற்கு வேண்டிய வார்த்தை பிறந்தது. சொன்னுன்:

''மங்களம்! சித்திரக் கலே என் பாதையே அடியோடு மறந்து விட்டு, ஊருக்குப் போய் வக்கீலாகத் தொழில் செய்வது என்று தீர்மானித்து விட்டேன்! இப்படி ஒரு முடிவுக்கு வந்து விட்டதால் இனி மேல் உன்னிடம் எதையும் மறைக்க விரும்ப வில்லே நான்! இங்கிருந்து என்னுடன் நான் எடுத்துப் போவது லவீனியாவின் நினேவு ஒன்றைத்தான். நான் இது வரை வரைந்துள்ள லவீனியாவின் சித்திரங்கள் அனேத்தையும் இந்தப் பீஸா நகரத்துக் கண் காட்சி நிலேயத்தில் வைத்து விடப் போகிறேன்! ஒரே ஒரு சிறு படத்தை மட்டும் இந்தியாவுக்கு எடுத்துச் செல்ல எண்ணியிருக்கிறேன். மற்றப்படி லவீனியாவையும் பீஸா நகரத்தையும் அந்தச் சாய்ந்த கோபுரத்தையும் பூரணமாக மறந்து விடுவேன். இது உறுதி. இதை நம்பு!''

இவ்வாறு சொல்லிவிட்டு ஒரு சிறிய ஓவியத்தை மங்களத்திடம் நீட்டினுன் வாக !

அரை குறை மனத்தோடு அந்தப் படத்தின் பக்கம் தன் கண்களேச் செலுத்திய மங்களம் அப்படியே அதிர்ந்து போனுள் !

''என்ன என்ன! இந்தச் சித்திரத்தின் அடியில் கையால் எழுதியிருப்பது யார்? இந்த எழுத்து யாருடையது?''

''மங்களம், இதில் என்ன சந்தேகம்? நான் வரைந்த லவீனியாவின் சித்திரத்துக்குக் கீழே அவளே தன் கைப்பட இரண்டு வரிகள் அன்பு மொழிகளேக் கொட்டிக் கையெழுத்தும் போட்டிருக்கிறுள். பார்!''

''இந்த எழுத்தை இதற்கு முன்பு எங்கோ பார்த்திருக்கிறேனே நான் ! நில்லுங்கள், இதோ ஒரு விஞடி—''




ஓடியே சென்று தனது பெட்டியைத் திறந்தாள் மங்களம். அந்தக் கடிதத்தை எடுத்தாள்.

''இந்த வைத்திய விடுதியில் உன் கணவனுக்கும் லவீனியாவுக்கும் நடைபெறுகிற காதற் பேச்சுக்களே எப்போதாவது ஒரு சமயம் நீ இரகசியமாக வந்து கேட்டுப் பார். அப்போதுதான்....''

அந்தக் கடிதத்தின் எழுத்தையும் இந்தப் படத்தின் அடியில் எழுதியிருந்த எழுத்தையும் மாறி மாறி ஒப்பிட்டுப் பார்த்தாள் மங்களம். சந்தேகமே இல்லே. இரண்டுமே லவீனியாவின் கைப்பட எழுதியதுதான் !

உடன்பிறந்த சகோதரியைப் போல் கள்ளம் கபடம் இல்லாமல் பழகும் மங்களத்திற்குத் தான் செய்கிற துரோகம் தனக்கே தாங்க முடியாமல் இப்படி ஒரு கடிதத்தைத் தன் கைப்படவே எழுதி யனுப்பியிருக்கிறுள் லவீனியா!

மங்களத்தின் கண்கள் கலங்கின !

''இந்தப் படத்துக்குச் சட்டம் போட்டு எடுத்துக் கொண்டு வருகிறீர்களா?'' என்று கேட்டாள் மங்களம்.

''மங்களம், என்ன சொல்லுகிருய்நீ?''

''ஆமாம். இந்தக் கடிதத்தைப் பார்த்தால் உங்களுக்குப் புரியும் அது! லவீனியாவின் நினேவை இந்தியாவுக்கு எடுத்துப் போவதில் இனி என் பங்கும் இருக்கிறது! சீக்கிரம் இதற்குக் கண்ணுடிச் சட்டம் போட்டுக் கொண்டு வாருங்கள். நான், நான், நான் லவீனியாவை மன்னித்து விட்டேன்!''

''அவளே மட்டுந்தானு?'' என்று பரிவோடு கேட்டான் வாக.

''நம் சமூகத்தில் கணவனே மன்னிக்கும் அதிகாரம் மனேவிக்கு இல்லே. மனேவியை மன்னிக்கும் அதிகாரம்தான் கணவனுக்கு உண்டு!'' என்றுள் மங்களம். இப்படிச் சொல்லும் போது அவளுடைய முகத்தில் அமைதியோடு கூடிய ஓர் எல்லேயற்ற வாஞ்சை புத்தொளி விசி மிளிர்ந்தது!

''மங்களம்! இது போல் உன் முகம் மலர்வதைப் பார்த்து எத்தனே காலம் ஆகிவிட்டது! நம் வாழ்வின் நேசம் சரிந்து விழுந்து விட்டதோ என்று பயந்தேன். இல்லே. இந்தப் பீஸா நகரத்துக் கோபுரத்தைப் போலச் சற்றே சாய்ந்திருந்தது. சில மாதங்களுக்கு! அவ்வளவுதான்!'' என்றுன் வாக.

இருவரும் இத்தாலி தேசத்திலிருந்து இந்தியாவுக்குத் திரும்பிய போது புனர் வாழ்வு பெற்ற அன்புடன் கணவனும் மனேவியுமாகத் திரும்பினுர்கள் !

''பீஸா நகரத்துச் சித்திரக் கலேயை அந்த ஊரில் கற்று அந்த ஊரிலேயே மறந்து விட்டும் வந்து விட்டேன். இனி நான் வக்கீலாகத் தொழில் செய்கிறேன் அப்பா!'' என்றுன் தந்தையிடம் வாக தேவன்.

தாயாருக்கு இதை யெல்லாம் பற்றிக் கவலேயில்லே. பீஸா நகரத்தின் சாய்ந்த கோபுரத்தைப் பற்றி மகனிடம் அவள் ஆவலோடு கேட்டாள் :

''அந்த ஊரில் ஒரு கோபுரம் சாய்ந்தபடியே விழாமல் இருக்கிறதாமே. அது உண்மையா வாக?''

''ஆமாம், அம்மா. அந்தக் கோபுரத்தைப் பற்றி உன் மருமகளுக்கு நன்ருகத் தெரியும். உலக அதிசயங்களில் ஒன்று அது! கோபுரம் சாய்ந்தது போல் தோன்றுவது என்னவோ உண்மைதான். ஆனுல் இந்த விஞடி வரை சரிந்துவிழ வில்லே அது! அப்படித்தானே மங்களம்?'' என்று கடைக்கண்ணுல் மனேவியைப் பார்த்தான் வாக!

தங்கள் வாழ்வோடு இணேந்த அந்த வார்த்தைகளின் உட்பொருளேப் புரிந்து கொண்டவளாக மகிழ்ச்சிப் புன்முறுவல் செய்தவாறு, ''ஆமாம்'' என்றுள் மங்களம் !

ASP/GM/K-4A TAM




புதியது-தூயது...

கோலினூஸின் சுவை:
நாவில் புத்துணர்ச்சியூட்டும் இனிய சுவை.
கோலினூஸின் நுரை:
துலக்குவதை எளிதாக்கும்,
பூரணமாகத் தூய்மைப்படுத்தும்.
கோலினூஸ் கொடுக்கும் அந்த
இனிய சுவாசத்தை நீங்கள் விரும்புவீர்கள்,
மற்றவர்களும் விரும்புவார்கள்.

அந்த ஐந்தாவது சிறுவனுக்கு ஒரு அருமையான யோசனை: கோலினூஸ் உபயோகித்து மற்றவர்களைப்போல் புன்னகை புரியவும். கோலினூஸ் டென்டல் கிரீம் மூலம் உன்னுடைய பற்களை நாள்தோறும் காலையிலும் இரவிலும் துலக்கவும். மற்றவர்கள் மத்தியில் நம்பிக்கையோடும் மகிழ்ச்சியோடும் உலவ உதவுவது கோலினூஸ்.



களிப்பில் மலரும் புன்னகை...அது கோலினூஸ் தரும் புன்னகை

பயன் படுத்த பதிவுசெய்யப்பட்டுள்ளோர்: ஜெப்ரி மானேர்ஸ் அண்ட் கம்பெனி லிமிடெட்.



# வில் விஜயன் காதலியர்

## திரௌபதி

மகாபாரதத்தின் கதாபாத்திரங்களில் பாண்டவர் — கௌரவர் — இரு சாராருமே இணையான அந்தஸ்தைப் பெறுகிறார்கள் என்றாலும் பாண்டவர்களே அறவுணர்வைச் சார்ந்து நிற்பதால் காவிய நேயர்களின் கருணைக்குப் பெரிதும் பாத்திரமாகிறார்கள். பாண்டவர்களில் வில் விஜயனான அர்ச்சுனனே வீரமும் இன்பமும் ஒருங்கு நிறைந்த பாத்திரமாக இலங்குகிறான். திரௌபதி சுயம்வரம் தொடங்கித் தீர்த்த யாத்திரைக் காலம் வரை விஜயன் காதலித்து மணந்த மணக் கோலங்களை யெல்லாம் ஓவியர் 'ஸாமி' இங்கு வரைந்து கண்ணுக்கினிய விருந்தாக வழங்குகிறார். துருபத மன்னனுடைய சபா மண்டபத்தில் சுயம் வரத்திற்காக அரசர்கள் கூடியிருக்கும் சூழ்நிலையில் அந்த மண்டபத்தின் மேலே மகர மீன் வடிவில் சுழன்று கொண்டிருக்கும் எந்திரப் பொறியைக் கீழேயுள்ள நீரின் நிழலில் கண்டு எய்து வெற்றி வீரனான அர்ஜுனன் மணமகளை அடையும் காட்சியை முதலில் காண்கிறோம்.



## உலூபி

அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை புறப்பட்ட போது முதல் முதலில் கங்கைக் கரையை அடைந்தான். கங்கையில் அவன் நீராடுவதற்காக இறங்கிய துறையருகே பெரும் பெரும் கற்பாறைகளும், பாறைக் குகைகளும் இருந்தன. அர்ச்சுனன் நீராடிக் கொண்டிருக்கும்போது அத்தகைய குகை ஒன்றின் அருகேயிருந்து வளையொலியும் சிலம்பொலியும் கிளர இளம் பருவத்து நாக கன்னிகைகள் சிலர் அங்கு வந்தனர். விண் மீன்களுக்கு நடுவே முழுமதியைப் போல் அந்தப் பெண்களின் கூட்டத்தில் நாக லோகத்து இளவரசி உலூபியும் இருந்தாள். காவியுடையும் இளந் தாடியுமாக முனிகுலத்து இளைஞனைப் போன்று, பொன்னிற மேனி புனலிடை மின்ன நீராடிக் கொண்டிருந்த அர்ச்சுனனைக் கண்டு காதல் கொண்டாள் அந்த நாகலோகத்துக் கன்னி. பின்பு கங்கை நதியில் உள்ள குகைகளின் வழியாக உலூபியோடு நாகலோகத்துக்குச் சென்று அவளை மணந்து கொண்டான் அர்ச்சுனன்.



## சித்திராங்கதை

தீர்த்த யாத்திரையின்போது சித்திக்கு ஒருவித் தாகிய தென்னுட்டை அடைந்து பாண்டிய மன்னனைக் காணச் சென்றுன் அர்ச்சுனன். பாண்டிய மன்னன் இளந் துறவிக் கோலத்திலிருந்த அர்ச்சுனனை அன்புடன் வர வேற்றுத் தன் அரண்மனை நந்தவனத்திலே அவன் தங்கு வதற்கு ஆசிரமம் போன்றதொரு பர்ணசாலை அமைத் துக் கொடுத்தான். அர்ச்சுனன் அங்கே தங்கிய நாளில் இனிய நிகழ்ச்சியொன்று நடந்தது. விஜயனின் அழகிய தோற்றத்திலே மையல் கொண்டாள் பாண்டிய மன்ன வின் மகளாகிய சித்திராங்கதை. கள்ளத்தனமாக அவனைக் கண்டு களிப்பது காதல் வயப்பட்ட அந்தக் கன்னிக்கு இதயத்தைக் குளிர்விக்கும் இன்செயலாக இருந்தது. அதுவும் போதாதபோது, பூப்பந்து விளை யாடுவதற்காகவும் மலர் கொய்வதற்காகவும் தன் தோழிகளோடு அந்த நந்தவனத்துக்கு அடிக்கடி அவன் வரத் தொடங்கினுள். கண்கள் சந்தித்தன. நந்தவனத் தில் தங்கியிருந்த அர்ச்சுனனுக்கும் அவளுக்கும் காதல் பிறந்தது. பின்பு அது திருமணமாகவும் நிறைந்தது.



## சுபத்திரை

அர்ச்சுனன் தீர்த்தயாத்திரையின்போது துறவிக் கோலத்தில் அவன் துவாரகைக்குச் சென்றிருந்த வேளையில் அவ்வூருக்கு அருகில் உள்ள மலையொன்றில் இந்திரனுக்காகத் திருவிழா நடந்து கொண்டிருந்தது. அந்த மலையடிவாரத்தில் ஒரு மரத்தடியில் அர்ச்சுனன் தவக் கோலத்தில் அமர்ந்து கொண்டிருந்தான். பலராமனும், கண்ணனும், சுபத்திரையும் அந்த வழியாக வந்தார்கள். ''அண்ணு! இவர் பெரிய ஞானி. நம் தங்கை சுபத்திரையோ கன்னிகை. மணமாக வேண்டியவள். இவரைப் போன்ற ஞானியர்களுக்குக் கன்னிகைகள் தொண்டு செய்தால் விரைவில் நல்ல கணவனை அடையலாம். எனவே இந்த முனிவரின் தொண்டில் சுபத்திரை ஈடுபடுவது நல்ல பலனை அளிக்கும்'' என்று கண்ணன் பலராமனை நோக்கிக் கூறினன். பலராமனும் அதற்குச் சம்மதித்து, அர்ச்சுனனுக்குப் பணி செய்வதற்காகச் சுபத்திரையை அங்கே விட்டுச் சென்றார். பின்பு அர்ச்சுனன் சுபத்திரை மணுளனை கதைதான் யாவருக்கும் நன்கு தெரியுமே!

---

# இருளும் ஒளியும்

## திருலோக சீதாராம்

(1)

நேற்று,
மாலையில், மேற்கு மலையின் உச்சியில்,
மடங்கிய கதிரோன் — மற்றும், இற்றைநாள்
வேலையில் தொடங்கி விரைந்திட, வானில்
வெளிப்பட் டிருந்த விடியலில்.........

கிழக்குப்
பூசிய இருளும் பொடிப்பொடி யாகிப்
போனது, வையம் புதுநகை செய்தது.

இரவெலாம்,
விரிய குளிரில் வெளிறிப் போன
வெண்மதிப் பிள்ளை விறைத்துக் கிடந்த
மலைச்சிக ரத்தில், மயங்கி உறங்கும்
மழைமுகில் ஒளியில் மண்டி யெழுந்து
தொலைவில் எங்கோ தீப்பட் டெரியத்
தொட்டிலைத் திடவே தொடர்ந்தன புட்கள்!

பொய்கைக் கரையில் புன்புடை அவிழும்
பூம்புன லாடும் போதொரு தும்பி
செய்த குறும்பிற் சிறுநகை செய்து
செம்மது வார்த்தாள் செந்தா மரையாள்.

காற்றும் புனலுங் கலந்துற வாடிக்
களித்தன பச்சைக் கதிரொளி முயக்கில்.
சோற்றுக் கவலை, சொந்தநல் உடைமை,
சோர்வெதும் இல்லாச் சொக்கழகு இயற்கை!

(2)

இரவு போர்த்திய இருளோ, எதிர்ந்து
பொங்கிய கதிரின் பொருக்(கு) அஞ்சிப்
போனது. தேடப் புகுந்தேன்........

நில
வானில் வடிந்த மையிருள், நெடிய
மலையில் இறங்கி, மண்மிசை அடர்ந்த
கானில் தியங்கிக், கதிவெளி தாண்டிக்,
கருத்திலா வாழ்விற் கலுழும் மானிடப்
பொய்நிறை உள்ளப் பொந்தில் நுழைந்து
புகுந்தது கண்டேன்!..........
............புகுந்தது கவலை
செய்யும் இருள்தான்! செய்கையொன் றறியேன்.

சினம், பொய், காமம், சிறுமைகள், அச்சம்
விலங்குகள் வாழும் வேட்டைக் களமாய்
வெறியாட் டயரும் வேதனை யல்லால்,
உலைத்திடும் நெஞ்சத்(து) ஒளிநிதிதேனும்
ஒட்டுவ துண்டோ? உற்றறிங்(கு) இருளோ!

(3)

நண்பகல் வந்தது.
நாவிவான் வெளியில் தனிச்சுடர் மோனத்
தனிக்கொலு விருந்த தருணம், காலையில்
மேவிய ஒளியில், மேனி சிலிர்த்து
மேதினி யெங்கும் மெல்லென வருடித்
தண்ணிழல் நீட்டித் தழைத்த தாவரம்
தம்நிழல் பருகித் தவம்நிறை வுற்று
எண்ணயர்ந் தோங்கிய இன்பத் திளைப்பில்
ஏதும் உரையாது இருந்தன. அமைதி!

(4)

நில்லாது ஓடும் நெடுந்தேர் உருட்டி
நிச்சலும் ஏகிடும் நீள்சுடர், மாலை.....
எல்லா உலகும் ஏற்றிய விளக்கை
எடுத்துப் போனான்....ஏழையேன் சேர்த்த

இருளும் மெதுவாய் இறங்கி நடந்து,
இறும்பூ துடனே எங்கணும் பரவி,
தெருளும் ஒளியில் திகழ்ந்தவை யாவும்
தேடிக் களைக்கச் சென்றது...நன்றால்!

நாளைக் காலை வரையும் நமது
நடப்புக்கு இங்கே நச்சரிப்பு இல்லை.
வேலை உணவும் விதவிதக் கவலையும்
வேண்டவே வேண்டாம்........

களைபல நாடிச்
சோர்வுறச் செய்யும் சொந்தநற் புலனே
சோர்ந்திடும் இரவில்
அவையெலாம் அயர்ந்த போது
உளத் தனியில்
அழகொளி காலும், ஆயிரங் கோடி
சூரியர் நிகர்த்த சுடரொழுக் கண்டு
சொக்கிக் கிடக்கும் சொருகடன் பாவை
விரித்துப் போட்டேன், விம்மிதம் உற்றேன்
வேதனை இருளை வெளியில் எறிந்தேன்
பெயருக் கொண்டு பெருகிய இருளில்
பெரிய உலகமும் வாழும் இனித்தேன்
சிந்தையில் ஏற்றிய சிறிய கை விளக்கைச்
சிறுகாற் றணுகா வண்ணம் உணர்வுப்
பொந்தில் வைத்துப் பொத்திக் காத்தேன்
பொங்கியது ஒளியே.

உலகெலாம் ஒளியில் உவந்திட, நெஞ்சில்
ஒண்டிய இருளும், உலகம் களிமிழந்து
உறங்க நெஞ்சினில் ஒளியும்
காண்பதோர் விந்தைக் கருத் தென்னவோ?

OSR

# சுகப் பிரசவம்

நா. பார்த்தசாரதி

மணல் வெளிக்கும், கடல் நீர்ப் பெருக்கிற்கும் நடுவே மிக நளினமாய் மினுக்கிக் கொண்டிருந்த நீல மின் விளக்குகள் கூட அணைக்கப்பட்டாகிவிட்டது. ஒரு சீராய் அருகில் ஒலிக்கிறாற்போல் பெரிதாக நெருங்கி வந்து—அப்படி வந்த விரைவிலேயே தொலைவில் ஓடிப் போய்ப் பின் தங்கி ஒடுங்கும் அலை ஓசை மெரினா சாலைக்கே தனியானதொரு கவினை உண்டாக்கிக் கொண்டிருந்தது. விட்டு விடுதலையாகிச் சுதந்திரமாகத் திரியும் ஒரு கவியின் கட்டுக்கடங்காத மன நிலையோடு இந்த ஓசையைக் கேட்கும் போது தான் எத்தனை பேரின்பமாக இருக்கிறது!

இத்தனை புகழுக்கு அப்பால், இவ்வளவு பெருமைக்கும் ஆளாகி விட்ட பிறகு இனி மேல் உயிருடனிருந்து வாழ்வதற்கும் அவசியமில்லை என்பது போல் எல்லையற்ற திருப்தியான ஒரு மன நிலையோடு, 'இந்த உலகம் போதும் போதும்' என்று நினைத்துக் கொண்டு — அந்தக் கடல் ஓசையை அனுபவிப்பது மனத்துக்கு மிக மிக ரம்மியமாக இருப்பதுபோல் உணர்ந்தான் அவன். கடலும் மணல்வெளிக்கு அப்பால் நேர் கிழக்கே இருட் குவியலாய் மங்கி விட்ட அதன் முடிவு தெரியாத நீர்ப் பரப்பும், காற்றில் ஆடும் சிறு சிறு மரங்களும், சாலையில் இரவு நேரம் அதிகமாகி விட்டதன் காரணமாக எப்போதாவது சந்தைக்கொருதரம் சீறிப் பாய்ந்து ஓடும் ஏதாவதொரு காரின் ஹெட் லைட் விளக்கொளியும், துன்றாவுள் அருகே எங்கோ சாக்கடைத் தண்ணீரைப் 'பம்ப்' செய்யும் ஒரு பம்பிங் ஸ்டேஷனின் வழக்கமான ஓசையும் ஓசையும் நிறைந்த அர்த்தங்களும், அர்த்தத்துள் நிறைந்த உள்ளர்த்தங்களுமாக ஜனசஞ்சாரமற்ற அந்த நள்ளிரவு நேரத்துக் கடற்கரை எப்படி விளக்கிச் சொல்லுவதென்றுதெரியாத ஏதோ ஓர் அழகுடன் அல்லது எப்படி எப்படி விளக்கிச் சொன்னாலும் அந்தச் சொல்லளவு நிறைவடையாத ஏதோ ஓர் அழகுடன் தனியாகவும் கம்பீரமாகவும் இருந்தது. கடற்கரையை ஒட்டினாற் போல் பன்னிரண்டு மணி நேரம் தங்கிப் போக மட்டும் நூறு ரூபாய்க்கு மேலும் வாடகை வாங்கும் அந்த அதிநவநாகரிக ஹோட்டலில் நான்கு நாட்களாக அவனைத் தங்க வைத்து உபசாரங்கள் செய்து கொண்டிருந்தார் படத் தயாரிப்பாளர். ஒரே மாதிரிப் பழக்கமாகிவிட்ட வசதிகளும், 'காலிங் பெல்'லை அமுக்கினால் ஏனென்று ஓடி வந்து கேட்கும் ஆட்களும் சௌகரியங்களும் - தன்னை மந்தமாக்கி ஜீவ களை இல்லாமற் செய்து விட்டாற்போல் அவனுக்கே தோன்றியது. கவி நவபாரதிக்கோ விநோதமான பழக்க வழக்கங்களும் ஆசை அபிலாஷைகளும் உண்டு.

எல்லையற்ற பல வசதிகளுக்கும், சௌகரியங்களுக்கும் நடுவே வைத்து ஒரு பாடலை உருவாக்கி வாங்கிவிட வேண்டுமென்று நினைக்கும் பணக்காரப் படாதிபதியின் மனப்பான்மையை அவன் வியந்தான். தூக்கமும் வராமல், அந்த ஹோட்டல் அறைக்குள் இருப்பும் கொள்ளாமல் நள்ளிரவு ஒன்றரை மணிக்குமேல் நடந்து வெளியேறிக் கடற்கரைக்குச் சென்றான் அவன். கார் இல்லாத — சொந்தக் கார் இல்லாத — அந்தஸ்துக் குறைவான மனிதர்கள் யாரும் அந்த ஹோட்டலில் வந்து தங்குவதில்லையாதலால் அர்த்தராத்திரிக்கு மேல் அங்கவஸ்திரத்தை இழுத்துப் போர்த்தியபடியே வெறும் காலோடு நடந்து வெளியேறும் கவி நவபாரதியை விநோதமாகப் பார்த்தான் வாசலில் காவல் நின்ற கூர்க்கா. கவி நவபாரதியின் உபயோகத்துக்காகவும் ஒரு பெரிய காரை டிரைவரோடு அந்த ஹோட்டலுக்குள் நிறுத்தி வைத்திருந்தார் படத் தயாரிப்பாளர். ஆனால் என்ன? நடந்து போய் உலகத்தை அனுபவிக்கிறவன் அடைகிற சௌகரியங்களையும், இன்பங்களையும் காரில் போகிறவன் அடைந்துவிட முடியாதே! சௌகரியங்கள் மனிதனைத் திருப்தி செய்து விடுகின்றன. திருப்தியின் எல்லையில் எதை உருவாக்க வேண்டும் என்ற துடிப்பும் இல்லையே! அதிருப்தியில்தானே கவி பிறக்கிறது? ஏர்க்கண்டிஷன் குளுமை, ஆள் உயர நிலைக் கண்ணாடி, பூப் போட்ட நைலான் உறையில் ஒளித் தாரகைகள் பூத்தாற் போல மங்கலான மேஜைவிளக்கு, டெலிபோன், ரேடியோ, இதமான மெத்தையோடு கூடிய கட்டில்,



சொகுசான பாத்ரூம், விதம் விதமான சோபாக்கள் — எல்லாம் அடங்கிய அந்த ஹோட்டல் அறையில் நான்கு நாட்களாக இருந்து இருந்து சலித்து முடங்கிச் சுறுசுறுப்பின்றிப் போய் விட்டது போல் உணர்ந்து மனம் கொள்ளாத தவிப்புடன், இன்னொருவர் குறுக்கிடாத தனிமையில் — தன்னிச்சையாகப் புறப்பட்டிருந்தான் அவன். முதல் நாள் மாலை நடந்த பாராட்டு விழாவின் ஞாபகம் அவனுக்கு வந்தது. பார்த்துப் பார்த்து அலுத்துப் போன முகங்கள்— புகழ்ந்து புகழ்ந்து பழக்கமாகிப் போன வழக்கமான புகழ்க் குரல்கள் — சொல்லில் பெருமையும் அதைச் சொல்கிற தொனியில் பொறுமையுமாக எதிர்வந்து நின்று பேசுகிறவர்கள் — எல்லாரையும் அந்தப் பாராட்டுக் கூட்டத்தில் சந்தித்திருந்தான் அவன். தனிமையில் தன் அபிப்பிராயத்தையும் அதன் அசல் தன்மையையும் முழுமையாக மறைத்துக் கொள்ள முடியாதவர்கள் கூடப் பலர் கூடிய கூட்டத்தினிடையே தன்னையும் தன் அசல் மனோபாவத்தையும் முழுமையாக மறைத்துக் கொண்டு பழக முடிவதைப் பல சமயங்களில் அவன் கண்டிருக்கிறான். தனித் தனியான மனோபாவங்களை உடைய பலர் ஒரு கூட்டத்தில் இரண்டு மணி நேரமோ, மூன்று மணி நேரமோ ஒரே மனோபாவமுள்ளவர்களைப் போல் பழகுவதற்குச் சமூக வாழ்க்கை அவர்களுக்குக் கற்றுக்கொடுத்திருக்கிறது. விட்டுக் கொடுக்காமல் பழகி விடுகிற இந்தச் சில மணி நேர ஒற்றுமைதான் நாகரிக வாழ்வின் தற்காலிக வெற்றி அல்லது நிரந்தரத் தோல்வி என்று அவன் நினைத்தான். ஆயிரம் கவிதைகள் — அதாவது கடந்த பத்தாண்டுகளில் அவன் இயற்றி அவ்வப்போது வெளிவந்த ஓராயிரம் கவிதைகள் ஒன்றாகத் தொகுக்கப் பெற்று வெளிவந்த புத்தகத்தின் பாராட்டு விழாத்தான் அது. 'இத்தனை இளம் வயதிலேயே கவிஞர் நவபாரதி புகழ் ஏணியின் உச்சியில் ஏறி விட்டார்' என்று ஒருவர் புகழ்ந்ததும் —'இத்தனை இளமையிலேயே இவ்வளவு புகழ் இவருக்கு வந்திருக்கக் கூடாதென்று அவர் சொல்வது போலவும் — இனி மேலே ஏறுவதற்கு இடமில்லையாதலால் புகழ் ஏணியின் உச்சியிலிருந்து கீழே தலை குப்புற விழ வேண்டுமென்று அவர் கருதுவது போலவும் அந்தப் புகழின் தொனி இருந்தது. புகழே ஓர் அளவுக்கு அதிகமாகக் காதில் விழுந்தால் ஆளைக் கேலி செய்வது போல் அசிங்கமாக இருக்கிற அபூர்வ இரகசியம் இப்போது இந்த நள்ளிரவில் பாமரனாக எந்தத் துணையுமில்லாத நிரமான தீவிரமான — தனிமையோடும், சிந்தனையோடும் இப்படி மௌன சாலையில் நடக்கிற இந்த வேளையில் அவனுக்குத் தோன்றியது. மார்பளவுக்கு இரண்டு கைகளையும் உயர்த்திக் கூப்பி வணங்குவது போல் கரங்குவித்தால் மரியாதையாகவும், தலைக்கு மேல் ரொம்ப உயரத் தூக்கிக் கரங்குவித்தால் கேலியாகவும் தோன்றுவது போல் புகழும் — ஓர் எல்லைக்கு மேல் கேலியாகி விடுவதை எண்ணிக் கூசினான் அவன். இதோ அமைதியான இந்தக் கடற்கரை நள்ளிரவை மேலே இருந்து பார்க்கும் சிறு சிறு நட்சத்திரங்களையும், ஆகாயத்தையும் கடலையும், பாற்குடமாய் மிதந்து வரும் பன்னீர் நிலாவையும் பொருளாக வைத்து ஏதோ பாட்டு எழுத வேண்டுமென்று மனக்கருக் கொண்டு — ஒன்றும் சொல்லுருவில் பிறக்காத பிரசவ வேதனையோடு அவன் நினைவு தவிக்கிறது. கடற்கரைச் சாலையில் கால்களில் செருப்புமின்றி நோக நோக நடந்து கொண்டிருக்கிறான் அவன். மார்பில் பனியனோ சட்டையோ இல்லாமலே வெறும் அங்கவஸ்திரத்தை உதறிப் போர்த்திக் கொண்டு நடப்பதால் கடற்கரை இருளில் குளிர் காற்று மயிர்க்கால்களைக் குத்திட்டு நிற்கச் செய்தது. இந்த மெல்லிய இருட்டும் குளிர் காற்றும், கடல் அலைகளின் ஓசையும், நட்சத்திரங்களும் மரங்களின் அசைவும், அப்படி அப்படியே தோற்றமாகவும், சொல்லாகவும் விளங்கிட ஏற்றதொரு கவிதை பிறக்க வேண்டும். இந்தச் சூழ்நிலையில் இந்தக் கேட்பாரற்ற தனிமையில் ஒரு பாட்டு எழுதவேண்டும் என்று அவனுக்குத் தோன்றுகிறது. எழுதத் தோன்றுகிறது என்பதைவிட எழுதுவதற்குத் தாகமாயிருக்கிறதென்பது பொருத்தமான வார்த்தையாயிருக்கும். நினைவைக் கருக் கொண்டாயிற்று. ஆனால் கவிதை தான் இன்னும் பிறக்கவில்லை. சங்கீத சாஸ்திரங்கள் எட்டளவில் இலட்சணம் சொல்லி விட்ட ராகங்களுக்கு யாரோ ஒருவருடைய குரலின் இனிமையிலே சரியான வடிவம் பிறப்பது போல் — அகராதியிலே நிரம்பிக் கிடக்கும் பல அபூர்வமான சொற்களுக்கு அவனுடைய வாக்கிலிருந்துதான் சம்பூர்ணமான அர்த்தம் பிறக்க வேண்டும். நினைவுகளைச் சுமந்து பிரசவிப்பதில் உள்ள சிரமங்களை இந்த நள்ளிரவில் அவன் நன்றாக உணர்ந்தான். செருப்பில்லாமல் 'ஏதோ வெளியே புறப்பட்டுவிட வேண்டும்' என்ற அவசரத்தில் புறப்பட்டு விட்டதனால் 'தரையை மிதித்து நடக்கிறோம்' என்று ஒவ்வொரு கணமும் கால்கள் உறுத்த உறுத்த நடந்து கொண்டிருந்தான் அவன். இப்படி வலிக்க வலிக்க நடப்பதும் வாழ்க்கையைக் கற்கும் ஓர் அநுபவம்தானே?

நடந்து நடந்து சோர்வடைந்தாற் போல் இருக்கவே அரை வேட்டியின் இழுத்து மடித்துக் கட்டிக் கொண்டு வந்திருந்த சிகரெட் பாக்கெட்டையும் தீப்பெட்டியையும் எடுத்து ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான். அரை வேட்டியின் இடுப்புப் பக்கத்து மேல் நுனியைச் சட்டைப் பைபோல் இழுத்துக் கட்டிச் சொருகிக் கொண்டு அதில் வெற்றிலை பாக்கு, சிகரெட், தீப்பெட்டி, சில்லறைப் பணம், பேனா, துண்டுக் காகிதம் எல்லாவற்றையும் வைத்துக் கொள்ளும் பாமரத்தன்மை நிறைந்த ஒரு நாட்டுப்புறத்துப் பழக்கம்- ஆயிரமாயிரமாகச் சம்பாதிக்கும் திரையுலகக் கவி மன்னனாகிய பின்பும் இன்னும் கூட அவனிடமிருந்து போகவேயில்லை. பல பேருடைய உள்ளங்களில் நவபாரதியின் கவிதைகளும், சிந்தனைகளும், ஒரு நளினமான ஞாபகமாகத் தங்கி விட்ட காலம் இது. எல்லாருடைய ஞாபகத்திலும் அவன் ஒரு புதுமையாக நிறைந்திருந்த போதிலும் 'நான் இத்தனை விரைவில் பழமையாகி விட்டேனே?' என்ற பயமும் எச்சரிக்கையும் அவனுடைய ஞாபகத்தில் மட்டும் அவ்வப்போது தோன்றி அவனை விழிப்படையச் செய்வது வழக்கம். நினைத்தபடி ஓர் அழகிய கவிதையை இயற்றி முடிக்க இயலாத இந்த நள்ளிரவிலும் அவனுக்கு அப்படித்தான் தோன்றியது. எதிரே தெரிகின்ற ஒவ்வொரு பொருளையும், ஒவ்வொரு காட்சியையும், தன்னிச்சையாகப் பார்த்துத் தன்னிச்சையாகச் சிந்தித்துக் கொண்டு சுதந்திரமாக நடக்க முடிந்த தனிமையான இந்த இரவில் துண்டு துண்டாக எத்தனையோ கவிதைத் தோற்றங்கள் அவன் கண்ணில் தெரிகின்றனவே !

அதோ கடற்கரைச் சாலையின் ஓரத்தில் அந்த மர நிழலில் — தலை தாங்காமல் பூ வைத்துக் கொண்டு ஒரு பெண் ஒதுங்குகிறாள். அவள் இதழ்களில் அளவுக்கு அதிகமாக வெற்றிலைச் சாயம். மின்சார விளக்கொளியில் தேவைக்கதிகமாக மின்னும் நகையலங்காரங்கள். நகையலங்காரங்கள் மட்டுமல்ல, எல்லாமே தேவைக்கதிகமாகத்தான் இருந்தன. கொஞ்சம் தாராளமாகவே அடக்கமின்றி ஒலிக்கும் அதிகப்படியான வளையொலி. அதேமாதிரிச் சிரிப்பொலி. சற்று நேரம் நின்று பேசியபின் யாரோ ஓர் இளைஞனோடு புதரில் மறைந்து விடுகிறாள் அவள். கவி நவபாரதியின் முகத்தில் இந்தக் காட்சியைக் கண்டு புன்சிரிப்பு மலர்கிறது. வலது கை மணிக்கட்டில் கட்டம் போட்ட கைக் குட்டை ஒன்றை இறுக்கி முடிந்து கொண்டு, காலர் வைத்த பனியனும் இடுப்பில் கங்குடிப் புடைவை போல் தோன்றும் ஒரு சிங்கப்பூர்க் கைலியுமாக, 'இன்னா வாத்தியாரே!.... இந்நேரத்துக்கு எங்கே வந்தே......? கிராக்கியா?' என்று உலகத்தின் ஆதிகாரியத்துக்குத் தரகு வேலை பார்க்கும் ஒரு கடற்கரை மைனர் ஏஜன்டும், நிலா வெளிச்சத்தில் ஒரு கட்டுமரத்தையும், வலையையும் சரி பார்த்துக் கொண்டிருந்த இரண்டு செம்படவர்களுமாகக் கடற்கரை செயற்கைக் கலப்பில்லாத அசல் பச்சைத் தன்மையோடு அப்படி அப்படியே இருந்தது அந்த நேரத்தில். 'இதில் இருந்து — இதைப் பார்த்து, இதை உணர்ந்து — அநுபவித்த நினைவிலிருந்து எதையாவது பாட வேண்டும் அல்லது இயற்ற வேண்டும்' என்று நினைத்தபோதுதான் இப்படி ஒரு பிரசவ வேதனையை மனம் அநுபவிக்கிறது. ஒன்றும் நினைக்காமல் பார்த்ததை நினைத்ததை — உணர்ந்ததை — அநுபவித்ததை அப்படி அப்படியே விட்டு விடுகிற பாமர வாழ்க்கை எவ்வளவு நிம்மதியானது?' — என்று ஒரு கணம் சோம்பலின் காரணமாக வார்த்தைகளையும் அர்த்தத்தையும் தேடிப் பாட்டு எழுதுகிற தொழிலின் மேலேயே வெறுப்புத் தோன்றியது கவி நவபாரதிக்கு.

'அப்பப்பா! நினைத்ததை எழுத— வார்த்தை வராமல் இந்த மனம்தான் எப்படிக் கிடந்து தவிக்கிறது? பிரசவ வேதனை எப்படி யிருக்கும் என்பதை ஓர் ஆண் பிள்ளை அநுபவபூர்வமாக உணர முடியாது. ஆனால் நினைப்பில் கருக் கொண்ட ஓர் எண்ணத்தை வெளியிட வளப்பமிக்க வார்த்தைகளையும் அர்த்தத்தையும் தேடி உருகுகிற ஒரு கவியின் வேதனையைப் போலத் தான் பிரசவ வேதனையும் இருக்க வேண்டும்

என்று பல வேளைகளில் சுலபமாக அவனும் அநுமானிக்க முடிந்திருக்கிறது.

நடப்பது அலுத்துப் போய் விட்டதனால் சாலையோரம் ஒரு மரமும் இடுப்புயரத்துக்குக் கத்திரித்து விட்டிருந்த பசுமையான செடி வேலியுமாக இருந்த ஓரிடத்தில் கடலைப் பார்த்தவாறு மெளனமாக அமர்ந்தான் கவி நவபாரதி. பக்கத்தில் இருந்த மகாத்மா காந்தி சிலை அந்த இருட்டிலும் எங்கோ அவசரமாகவும் அவசியமாகவும் வடக்கு நோக்கி விரைவாக நடந்து போய்க் கொண்டிருப்பது போல் ஒரு பிரமை தட்டியது. அந்தச் சிலையைப் பார்த்து முடித்த கண்கள் அப்படியே மேலே ஆகாயத்தையும், விண் மீன்களையும், நிலாவையும் பார்த்தன. உடனே மின்னல் வெட்டினாற்போல் மனத்தில் இரண்டு வரிகள் தோன்றின.

''ஆயிரம் விண் மீன் அலங்காரம்
ஆழி மழைக் கடல் நிலத்தோரம்''

தன்னுடைய இதய வீணையில் சுருதி சேர்வது போல் இந்த ஆரம்பம் தோன்றியது அவனுக்கு. தோன்றிய வரிகள் மறந்து போய் விடாமல் இருப்பதற்காக — எதிலாவது குறித்துக் கொள்ளலாம் என்றால் அப்போது கையில்—காகிதமில்லை — பேனா மட்டும்தான் இருந்தது. தோன்றியது மறந்து விடாமல் எழுதிக் கொண்டுவிட வேண்டுமென்ற ஆத்திரத்தில் சிகரெட் பாக்கெட்டைப் பிரித்து உலைத்து அதன் நான்கு மடிப்பான அட்டையை விரித்துக் கவிதை வெறியோடு அதில் தோன்றியதை எழுதலானான் கவி நவபாரதி. சிகரெட் அட்டைப் பெட்டியின் பின்புறமாகிய அந்த ஏட்டில் மை ஊறியது. வெளிச்சமும் சரியாகத்தெரியவில்லை. எழுத்தே மறைந்து குப்பல் குப்பலாக மை குவிகிற அளவு நன்றாக ஊறும் மட்டரகக் காகிதமாயிருந்தது அது.

''ஆயிரம் விண் மீன் அலங்காரம்
ஆழிமழைக் கடல்நிலத்தோரம்
பூமியில் இன்னும் விடியவில்லை
பொய்யிருள் இன்னும் மடியவில்லை.
காம நிலாக் கதிர் சாயவில்லை
கடற்கரை அலைகள் ஓயவில்லை''

முன்பு தோன்றிய இரண்டு வரிகளுக்கு மேலும் இப்படிப் புதிதாக நான்குவரிகள் தோன்றி விட்டன. முகம், கழுத்து, மார்பு என்று படிப்படியாக உருத்தெரியக் கர்ப்பத்திலிருந்து பிஞ்சுக் கைகால்களை உதைத்துக்கொண்டு வெளிப்படும் குழந்தையைப்போல் பாட்டும் மெல்ல மெல்லப் பிறந்துகொண்டிருந்தது. 'முன்னிக் கவிதை வெறி மூண்டெழுந்து' என்று பாரதி பாடியிருக்கிறாரே, அப்படிக் கவிதை வெறி மூண்டெழுகிற மனத்தோடு புதிதாக ஒரு வரி தோன்றுகிற வரை அது நன்றாகவும், நயமாகவும் அமைய வேண்டுமே என்ற கவலையும், தோன்றியபின் அது நயமாயிருக்கிறதா அல்லது இன்னும் எப்படி எப்படி நயமாக இருந்திருக்க முடியும் ? என்ற கவலையுமாகப் பாட்டு அவன் கற்பனையில் கொஞ்சம் கொஞ்சமாகப் பிறந்து கொண்டிருந்தது. 'காம நிலாக் கதிர்' என்ற மூன்றும் அடியின் ஆரம்ப எதுகைக்குப் பதிலாக — 'சேம நிலாக் கதிர்' என்று மாற்றினால் நன்றாயிருக்குமோ? என்பதாக நடுவிலேயே ஒரு சந்தேகமும் அவனுள் தனக்குத்தானே ஏற்பட்டது. அடுத்த கணமே, 'காம நிலாக் கதிர்' என்பதிலுள்ள அழகும், அழுத்தமும் 'சேம நிலாக் கதிர்' என்பதில் வரவே வராது. காமம் என்றால் பேராசை. 'காம நிலாக் கதிர்' என்றால் 'அநுபவிக்கிறவர்களுக்கு — அதாவது, நிலவை அநுபவிக்கிறவர்களுக்கு — இன்னும் இன்னும் அநுபவிக்க வேண்டும். விட்டு விடக் கூடாது' என்ற பேராசையை உண்டாக்கும்படியான 'சோபை நிறைந்த நிலவு' என்னும் பொருள் விரியும். 'சேம நிலாக் கதிர்' என்பதில் இவ்வளவு பொருள் விரித்துச் சொல்வதற்கு இடமில்லை. 'அநுபவிக்கிறவர்களுக்குச் சேமத்தை உண்டாக்கும் நிலாக் கதிர்' என்று மட்டுமே சாதாரணமாக அர்த்தம் விவரிப்பதில் அவ்வளவாக நயமிருக்க முடியாது. ஒரு புதிய கவிதையை இயற்றும் வேளையில் அப்படி இயற்றிக் கொண்டிருக்கும் போதே இயற்றியவரையில் உள்ள வரிகளைத் திரும்பத் திரும்பச் சொல்லிப் பார்த்து அநுபவித்துக் கொண்டு மேலே பாடுவது ஒரு கலாரசியமான வழக்கம்.

இப்போதும் நவபாரதி ஆறாவது முறையாகவோ ஏழாவது முறையாகவோ முதலில் இயற்றிய வரிகளைத் தனக்குத் தானே சொல்லிப் பார்த்துக் கொண்டான். இயற்றிய வரை சொல்லிப் பார்த்துச் சொல்லிப் பார்த்து — அந்த வேகத்திலேயே இயற்ற வேண்டிய மீதப் பகுதியை — அபரிமிதமாக வரவழைத்து முடிப்பதும் ஒரு பழக்கம். இது வரை பாடிய பகுதியை முனகிப் பார்த்து இனி மேல் பாட வேண்டிய பகுதியைத் தேடும் இந்த வழக்கத்தை என்னும் போது ஜெறன்கல் நாட்களில் 'லாங் ஜம்ப்' தாண்டுவதை நினைத்துக் கொள்வான் நவபாரதி. பின்னால் எவ்வளவு தூரத்திலிருந்து வேகமாக ஓடி வருகிறோமோ, அவ்வளவு தூரம் அதிக வேகமாக முன்னால் தாண்டிக் குதிக்க முடியும். எழுதி நிறுத்தியிருக்கிற இடம் வரை சொல்லிப் பார்த்துச் சொல்லிப் பார்த்து எழுத வேண்டிய எல்லைக்குத் தாவும் அநுபவமும் 'லாங் ஜம்ப்' தாண்டுவதைப் போலத்தான். ஆனால் இப்போது கவிதையில் 'லாங் ஜம்ப்' தாவவும் அவனால் முடியவில்லை.

''ஆயிரம் விண் மீன் அலங்காரம்
ஆழி மழைக்கடல் நிலத்தோரம்
பூமியில் இன்னும் விடியவில்லை
பொய்யிருள் இன்னும் மடியவில்லை.
காம நிலாக்கதிர் சாயவில்லை
கடற்கரை அலைகள் ஓயவில்லை...''

என்று சொல்லிச் சொல்லி ஜபம் செய்தும் கவிதை மேலே நகராமல் சண்டித்தனம் செய்தது. 'கொஞ்ச நேரம் விட்டுப் பிடிக்கலாம்' என்ற எண்ணத்தோடு மீண்டும் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு எழுந்து சிறிது தொலைவு கடற்கரையில் நடந்தான். வேறு இடமும் வசதியும் இல்லாத காரணத்தால் கடற்கரைச் சாலை மின் விளக்கின் அடியில் நாடக ரிஹர்ஸல் செய்து வசனங்களை உரக்கப் பேசிக் கொண்டிருந்தது நாலைந்து இளைஞர்கள் அடங்கிய ஓர் ஏழை அமெச்சூர் நாடகக் கோஷ்டி. ''அடே! சமூகத் துரோகி! இதோ உன்னை என்ன செய்கிறேன் பார்'' என்று இருந்தாற்போலிருந்து கடற்கரையில் யாரோ கூச்சலிடுவதைப் போல் கேட்கவே திடுக்கிட்டுத் திரும்பிப்பார்த்த போதுதான் விளக்குக் கம்பத்தடியில், இந்த நாடகக் கோஷ்டி 'டயலாக்' மனப்பாடம் பண்ணி ஒத்திகை நடத்திக் கொண்டிருப்பதை அவனே கண்டான். 'என்ன விநோதமான கடற்கரை இது?' என்று நினைத்துச் சிரித்துக் கொண்டே அவன் மேலே நடக்க வேண்டியதாயிற்று. நடந்து நடந்து தொலைவும் நேரமும் தெரியாமலே உழைப்பாளிகள் சிலை அருகே வந்தாயிற்று. எதிரே பல்கலைக் கழகத்தின் நூற்றாண்டு விழாக் கட்டிடம்



களும், வேறு பல கட்டிடங்களும், நிலா ஒளியில் மிகமிகப் பொலிவுடன் தோன்றுகின்றன. உழைப்பாளிகள் சிலையருகே விளக்கு வெளிச்சத்தில் பருத்த தோற்றத்தையுடைய ஒரு முரட்டுச் செம்படவப் பெண் கிழிந்த புடைவையைத் தைக்கும் முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறாள். அவளருகே இரண்டு பரட்டைத் தலைக் குழந்தைகள் சண்டை போட்டுக் கொண்டிருக்கின்றன. அந்த இடத்தில் போட்டிருந்த பிரகாசமான மின்சார விளக்கின் ஒளியில் — ஊசி—நூல் கோத்துப் புடைவையின் கிழிசல்களைத் தைப்பதென்பது அவளுக்கு மிகச் சுலபமான காரியமாயிருக்கும் போல் தோன்றுகிறது. 'வேறு எதை விடச் சுலபமோ, சுலபமில்லையோ? பாட்டு எழுதுவதை விடக் கிழிந்த புடைவையைத் தைப்பது இந்த வேளையில் நிச்சயம் சுலபமான காரியமாகத்தான் இருக்க முடியும்' என்று நினைத்தபின் — இந்தப் பொருத்தமில்லாத உவமைக்காக வெட்கப்பட்டு, 'சே! சே! பாட்டு எழுதுவது எங்கே? கிழிசல் புடைவை தைப்பது எங்கே?' என்று இரண்டையும் சேர்த்துத் தானே அப்படி ஒப்பிட்டதற்காக மனம் கூசி விட்டு மேலே நடந்தான் அவன். உழைப்பாளிகள் சிலைக்கு நேரே பின்புறம் கடற்கரையின் உள் பக்கத்துச் சாலைக்கு இறங்கும் படிகளின் வழியே இறங்கி வடக்குப் பக்கமாகச் சிறிது தொலைவு சென்றபின் மரங்களும், புதருமாக அடர்ந்த ஓரிடம் வந்தது. அந்த அடர்த்தியின் இடையே தரையில் பொன் சிதறினாற்போலத் துணுக்குத் துணுக்காகக் கிழிந்த நிலாக் கற்றையின் சாயல்கள் சிதறியிருந்தன. சிள் வண்டு ஓசையும், புதர் காற்றில் சலசலப்பதுமாக அந்த இடம் — அந்த வேளையில் ஆங்கிலத் துப்பறியும் படங்களில் வருகிற பயங்கரக் கொலைப் பிரதேசங்களைப் போல் இருந்தது. தொலைவில் கடல் ஓசை வேறு அந்தப் பயங்கரத்துக்குப் பின்னணி கூட்டிக் கொண்டிருந்தது. இருட்டில் அங்கு ஒரு மூலையில் கிடந்த சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்தான் கவி நவபாரதி. சுற்றுப் புறத்தைப் போலவே அவனது சிந்தனையும் தெளிவில்லாமல் இருந்தது. இயற்றத்தொடங்கிய பாட்டு மேலே வரவில்லை. சிகரெட் தான் ஒவ்வொன்றாகத் தீர்ந்து கொண்டிருந்தது. விடியும் நேரம் நெருங்கிக் கொண்டிருப்பதற்கு அறிகுறியாகக் காற்றில் குளிர் அதிகமாகிக் கொண்டிருந்தது. கடற்கரை ஓசையும் செவியில் ஓயாமல் பழகி விட்ட ஒரு பெரிய ராகமாக ஒலிக்கத் தொடங்கியிருந்தது. நீண்ட நேரம் சிந்தித்த பிறகு — அரைகுறையாக நின்று போயிருந்த — கவிதையில் இப்போது இன்னும் ஒரு வரி புதிதாகச் சேர்ந்தது. அத்தனை தூரம் ஓடி வந்து அவனால் தாவ முடிந்த 'லாங் ஜம்ப்'பின் தூரம் அந்த ஒரே ஒரு வரிதான்:

''ஆயிரம் விண் மீன் அலங்காரம்
ஆழி மழைக் கடல் நிலத்தோரம்
பூமியில் இன்னும் விடியவில்லை.
பொய்யிருள் இன்னும் மடியவில்லை.
காம நிலாக் கதிர் சாயவில்லை
கடற்கரை அலைகள் ஓயவில்லை
சாமக் கோழியும் கூவவில்லை''

புதிதாகத் தோன்றிய இந்த ஒரு வரியை எழுதுவதற்காக வெளிச்சத்துக்கு வந்து — அரையில் மடித்து வைத்துக் கொண்டிருந்த சிகரெட் பாக்கெட்டின் காகிதத்தில்—ஏழாவது வரியாக மை ஊற ஊற இதைக் கிறுக்கிக் கொண்டபின் மறுபடியும் புதரருகே சிமெண்ட் பெஞ்சியில் போய் உட்கார்ந்தான் கவி நவபாரதி. மீதமிருந்த கடைசி சிகரெட்டையும் பற்ற வைத்து இழுக்கத் தொடங்கினான். அப்போது பின்புறம் புதரில் யாரோ ஈனஸ்வரத்தில் முனகுவதுபோல் ஒரு பிரமை தட்டியது. அந்த இடத்திற்கே உரிய துப்பறியும் கதைக் களையினால்தான் இப்படி யாரோ முனகுவது போல் பொய்யாகத் தனக்குத் தோன்றுகிறதோ — என்ற சந்தேகத்தினால் ஓரிரு கணங்கள் ஒன்றும் செய்யத் தோன்றாமல் அப்படியே உட்கார்ந்திருந்தான் அவன். மறுபடியும் அதே முனகல் ஒலி—யாரோ வலியெடுத்துப் பதறுவது போன்ற ஈனக் குரல். 'பயம் திகைப்பு — வியப்பு எல்லாம் ஒருங்கு அவனை உந்தின. கடற்கரையின் அழகைத் தனியாக அநுபவித்து ரசிக்க வேண்டுமென்று புறப்பட்டு வந்தால் — வந்த இடத்தில் இங்கு நமக்கு என்னென்னவோ அநுபவங்களெல்லாம் காத்துக் கொண்டிருக்கின்றனவே !'— என்ற நினைப்போடு வெளிச்சத்துக்காக ஒரு தீக்குச்சியை உரசி எரிய வைத்துக் கொண்டு புதரில் எட்டிப் பார்த்த கவி நவபாரதி — உடனே பார்க்கக் கூடாததைப் பார்த்து விட்ட கூச்சத்தோடு தலையைத் திருப்பிக் கொள்ளும்படி நேரிட்டது. பரிதாபமும் பரிவும் கொள்ள வேண்டிய ஒரு காட்சி அங்கே தென்பட்டது. தெரு முனைகளிலும், சேரிக் குடிசைகளிலும், பஜாரப் பக்கங்களிலும் சர்வசாதாரணமாகச் சந்திக்க முடிகிற பஞ்சைப் பெண்களில் ஒருத்தியைப் போல் தோன்றும் அநாதை ஒருத்தி அந்த இருளில் அந்த மரத்தடியில் பிரசவ வேதனைப்பட்டுக் கொண்டிருந்தாள். அவள் வயிறு உப்பி உப்பித் தணிவதையும் முழுங் கால்களை உதைப்பதையும் பார்த்து ஒரு கணம் அழுக்குப் படாமல் நாசுக்காக வாழ்ந்து பழகி விட்ட நவபாரதிக்கு அருவருப்பாக இருந்தது. அருகில் சென்று விசாரிப்பதற்குக் கூச்சமாகவும் இருந்தது. இந்த நள்ளிரவில் இத்தனை பயங்கரமான ஓர் இடத்தில் இவ்வளவு நிர்க்கதியாக ஓர் அநாதைப் பெண் பிள்ளை விரும்பியோ, விரும்பாமலோ தனக்கு வந்து சேர்ந்து விட்ட தாய் ஸ்தானத்தை அடைய முயன்று கொண்டிருப்பதைப் பார்த்து அவன் நெஞ்சை ஏதோ சில உணர்வுகள் பிசைந்தன. அவ்வளவில் தீக்குச்சி நுனி வரையில் எரிந்து கைவிரலைச் சுட்டது. மறுபடியும் ஒரு தீக்குச்சியை உரசி ஒளி உண்டாக்கி அவள் பக்கமாகப் பார்த்த போது — முகத்தில் முத்து முத்தாக வியர்வை அரும்பித் தலை அவிழ்ந்து நெற்றியில் காலணா அகலக் குங்குமப் பொட்டு வியர்வையில் சேறுபட வழிந்து ஓட — வலது கையை மெல்லத் தூக்கிச் சுட்டு விரலை வாய் உதட்டின் மேல் வைத்துக் 'குடிப்பதற்கு நீர் வேண்டும். ரொம்பத் தாகமாயிருக்கிறது' என்பது போல் ஜாடை காட்டினாள் அவள். அந்த நள்ளிரவு நேரத்தில் குடிப்பதற்கு ஒரு சொட்டு நீரும் பயன்படாத உப்புக் கடலருகே — அவளுடைய தாகத்தைத் தீர்ப்பதற்கு எங்கே போவதென்று புரியாமல் தவித்தான் கவி நவபாரதி. சற்று முன் உழைப்பாளிகள் சிலை விளக்கடியிலே பார்த்த அந்த முரட்டுச் செம்படவப் பெண்ணின் ஞாபகம் வரவே அவள் இருந்த இடத்தை நோக்கித் தலைதெறிக்க ஓடினான் அவன். நல்ல வேளை! கிழிசல் புடைவையைத் தைத்து முடித்து விட்டு அவள் அப்போதுதான் எழுந்திருந்து புறப்பட்டுக் கொண்டிருந்தாள். அவன் அவளெதிரே ஓடிப் போய்ச் செய்தியைக் கூறியவுடன் முதலில் அவள் அதை நம்பவில்லை. அப்புறம் சொல்ல வந்திருக்கிற ஆள், அந்த ஆளின் நாகரிகமான பாவனை, முகம் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாகப் பார்த்து விட்டுத்தான் அவன் வந்து சொல்கிற செய்தி நிஜமாயிருக்கலாமென்று நம்பினாள்.

'' தண்ணி இங்கே எங்கியும் கிடைக்காது. முடிஞ்சா எங்கியாவது இல்லக் கேணிப் பக்கமாப் போயிச் சோடா வாங்கிட்டு வரலாம். நீங்க போயிச் சோடா வாங்கிட்டு வாங்க. நா வேணு அந்தப் புதரண்டை போயி அவளைப் பார்த்துக்குறேன்'' என்று ஒப்புக்கொண்டாள் அந்தச் செம்படவப் பெண். கவி நவபாரதி பைகிராப்ட்ஸ் ரோடுக்கு ஓடி அந்த அகாலத்திலும் தப்பித் தவறித் திறந்திருந்த ஒரு வெற்றிலைப் பாக்குக் கடையில் — பாட்டிலுக்கும் சேர்த்து அட்வான்ஸ் கொடுத்து ஒரு சோடாவையும், திறப்பதற்குக் கட்டையையும் வாங்கிக் கொண்டபின், முன் யோசனையாக அங்கிருந்த ஒரு பொது டெலிபோனில் ஆம்புலன்ஸையும் கூப்பிட்டுத் தகவல் தெரிவித்து விட்டு அப்புறம் கடற்கரைக்கு ஓடினான். அவன் அங்கு போய்ச் சேர்ந்த போது அந்தப் பெண்ணுக்குக் குழந்தை பிறந்திருந்தது. செம்படவப் பெண்ணிடம் சோடாவை உடைத்துக் கொடுத்து அதை அந்தப் பெண்ணின் வாயில் ஊற்றுமாறு வேண்டிக் கொண்டான் கவி நவபாரதி. தான் ஆம்புலன்ஸுக்குப் போன் பண்ணியிருப்பதையும் இன்னும் சிறிது நேரத்திலே கார் வந்து அவளை அழைத்துப் போகும் என்பதையும் அவன் தெரிவித்த போது அந்தப் பெண்ணின் முகம் சுருங்கி இருண்டது. ஆம்புலன்ஸ் வருவதை அவள் விரும்பவில்லை என்று இதிலிருந்து தெரிந்தது கவி நவபாரதிக்கு.

''வயிறும் புள்ளையுமாச் சமுத்திரத்திலே விழுந்து போயிடணும்னுதான் வந்தேன். கடைசி நேரத்திலே மனசு கேக்கலே. வலி தாங்காமே இந்தப் புதர்லே வந்து சாஞ்சதுதான் எனக்குத் தெரியும். அப்புறம் பிரக்ஞையே இல்லே. இந்த ஐயா வந்து அந்தப் பெஞ்சியிலே உட்கார்ந்து சிகரெட் பிடிச்சப்பத்தான் மறுபடியும் நெனப்பு வந்திச்சு......'' என்றாள் அந்தப் புதிய தாய். 'அந்தப் பெண் யார்? எதற்காக வயிறும் பிள்ளையுமாகத் தற்கொலை செய்து கொள்ள ஓடி வந்தாள்?' என்பதை எல்லாம் கேட்க நினைத்தும் — அந்தக் கேள்விகளுக்கு எல்லாம் அவள் உற்சாகமாகப் பதில் கூறுகிற நிலையில் இல்லை என்று தானாகவே அநுமானித்துக் கொண்டு, பேசாமல் இருந்து விட்டான் கவி நவபாரதி. ஆம்புலன்ஸ் வந்ததும் வேண்டா

# அனாஸின்

## ஜலதோஷம் மற்றும் ஜுரத்திற்கு சிறந்தது



**அனாஸின் வலியைப் போக்குகிறது-ஜுரத்தைத் தணிக்கிறது. நரம்புகளைச் சமனப்படுத்துகிறது. மேலும், சோர்வைப் போக்குகிறது.**

அனாஸின் ஒரு டாக்டரின் அபாயமற்ற குறிப்பைப் போன்றதாகும். அதில் வைத்திய முறைப்படி அங்கீகரிக்கப்பட்ட பொருள்கள் கலந்திருப்பதால் துரிதமாகவும், பூரணமாகவும், தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலி முதலியவைகளிலிருந்து நிவாரணம் அளிக்கிறது.









2 வில்லைகளுக்கு 13 ந. பைசேதான்.

Registered User: GEOFFREY MANNERS & CO. LTD

வெறுப்பாகவும் தவிர்க்க முடியாமலும் அவன் அதில் ஏறிக் கொண்டு போனதாகவே அவனுக்குத் தோன்றியது. போகிற போது அவளை அவன் கண்கள் நன்றியோடு நோக்கி வணங்கத் தவறவில்லை. "சமயத்துலே வந்து ஒத்தாசை பண்ணியிருக்கே! இந்தா, நீ இதை வச்சிக்க" என்று செம்படவப் பெண்ணிடம் ஓர் ஐந்து ரூபாயை எடுத்து நீட்டினான் கவிநவபாரதி.

"ஐயே! இதென்னு.... சாமீ...ஒரு பொம்பிளைக்கு இன்னொரு பொம்பிளே இந்த மாதிரி நேரத்துலே செய்யறதைத் தானே நா செஞ்சிருக்கேன்... இதுக்குப் போயிக் காசு குடுக்கிறியே?" – என்று மறுத்து விட்டாள் அவள்.

"என்னத்தைச் சொல்றது? அவ பண்ணின புண்ணியத்திலே சோகமாப் பெத்துப்பிட்டா...." என்று போகிற போக்கில் அந்தச் செம்படவப் பெண் சொல்லிக் கொண்டு போனாள். கவி நவபாரதி சிந்தனையில் ஆழ்ந்தான். கிழக்கே வானம் வெளுத்துக் கொண்டு வந்தது.

அவளுடைய பிரசவ வேதனையும் கூடத் தீர்ந்து விட்டது. அவனுடைய மனத்தின் பிரசவ வேதனைதான் இன்னும் தீரவில்லை. விடியும் நேரம் நெருங்கி விட்டதனால் கடற் கரையில் எல்லா விளக்குகளையும் அணைத்து விட்டார்கள். இரவின் முடிவு நேரமும் நெருங்கி விட்டது. அவன் எழுதத் தொடங்கிய கவிதைக்குத்தான் இன்னும் முடிவு கிடைக்கவில்லை. அதற்குக் கடவுளருளால் ஒரு நல்ல முடிவு பிறக்க வேண்டும்.

"ஆயிரம் விண்மீன் அலங்காரம்
ஆழி மழைக் கடல் நிலத்தோரம்
பூமியில் இன்னும் விடியவில்லை
பொய்யிருள் இன்னும் மடியவில்லை
காம நிலாக் கதிர் சாயவில்லை
கடற்கரை அலைகள் ஓயவில்லை
சாமக் கோழியும் கூவவில்லை
......... ........ ........"

இவற்றைத் திரும்பத் திரும்பச் சொல்லிப் பார்த்துக் கொண்டேயிருந்தான் அவன். மேலே ஒரு வரிகூட ஆகவில்லை. அந்த அநாதைப் பெண் நிர்க்கதியாகப் பிரசவிக்க எவ்வளவு வேதனையடைந்தாளோ அதைவிட அதிக வேதனையை இப்போது அவன் மனம் அடைந்தது. ஆஸ்பத்திரிக் கட்டிலில் சகல சௌகரியங்களுடன் பிரசவிக்கிறவளானாலும் சரி, மெரினாக் கடற்கரைப் புதரில் நள்ளிரவில் நிர்க்கதியாகத் துணையின்றிப் பிரசவிக்கிறவளானாலும் சரி, பிரசவ வேதனை இருவருக்கும் ஒன்று தான். வலியும் இருவருக்கும் ஒன்று தான். இப்போது 'தன்னை ஒரு தாயாகப் பாவித்துக் கொண்டு ஒரு நிமிடம் தனக்குத்தானே சிந்தித்தான் கவி நவபாரதி. தான் தன்னுடைய கருத்தைப் பிரசவிப்பதற்கு வசதி நிறைந்த ஆஸ்பத்திரியாகப் படத் தயாரிப்பாளர் தனக்கு ஏற்பாடு பண்ணியிருந்த ஹோட்டல் அறையின் நறுமணம் நிறைந்த சௌகரியச் சூழலில் பிறக்காத ஒரு கவிதை மீன் நாற்றமும், முடை நாற்றமும் நிறைந்த கடற்கரையில் வந்து பிறந்ததை நினைத்த போது அவனுக்கே வேடிக்கையாக இருந்தது. "நானும் அவளும் ஒரே இடத்தில் ஒரே விதமான சூழ்நிலையில்தான் பிரசவித்திருக்கிறோம்! அவளுக்குச் சுகப் பிரசவம் ஆகிவிட்டது. எனக்கு ஆகவில்லை. இது தான் வித்தியாசம்.....' என்று நினைத்தபடியே அதே ஆவேசத்தோடு வாய் திறந்து.

"ஆயிரம் விண்மீன் அலங்காரம்
ஆழி மழைக்கடல் நிலத்தோரம்
பூமியில் இன்னும் விடியவில்லை
பொய்யிருள் இன்னும் மடியவில்லை
காம நிலாக் கதிர் சாயவில்லை
கடற்கரை அலைகள் ஓயவில்லை
சாமக் கோழியும் கூவவில்லை
......... ........ ........"

என்று தன்னம்பிக்கையோடு இரைந்து பாடத் தொடங்கினான் கவிநவபாரதி.

"சாமக் கோழியும் கூவவில்லை...
......... ........ ........
சாமக் கோழியும் கூவவில்லை
சாலை நாயகன் வானிலில்லை
தூமப் புகையிருள் அகலவில்லை
சுடர்மணித் தேரும் நகரவில்லை"

என்று மேலும் சில வரிகள் தொடர்ந்து கற்பனையில் உருவாகித் தோன்றின.

"சாமக் கோழியும் கூவவில்லை...
......... ........ ........
சாலை நாயகன் வானிலில்லை
தூமப் புகையிருள் அகலவில்லை
சுடர்மணித் தேரும் நகரவில்லை
நாமும் இருளில் தவிக்கின்றோம்
நாளை விடிவை நினைக்கின்றோம்'

என்று அரை குறை இருளில் எழுதும் இடத்தை அடையாளமாகக் கொண்டு சிகரெட் பாக்கெட் அட்டையில் பேனாவை ஓடவிட்ட வரிகளை–ஹோட்டல் அறைக்குப் போய் ஒன்று சேர்த்துத் திருத்திச் செப்பம் செய்து கீழ்க்கண்டவாறு எழுதி.

"ஆயிரம் விண்மீன் அலங்காரம் - கீழே
ஆழிமழைக் கடல் நிலத்தோரம்
பூமியில் இன்னும் விடியவில்லை-மூடும்
பொய்யிருள் இன்னும் மடியவில்லை
காம நிலாக்கதிர் சாயவில்லை - அந்தக்
கடற்கரை அலைகள் ஓயவில்லை
சாமக் கோழியும் கூவவில்லை - நிமிர்ந்
சாலை நாயகன் வானிலில்லை
தூமப் புகையிருள் அகலவில்லை-அவன்
சுடர்மணித் தேரினும் நகரவில்லை
நாமும் இருளில் தவிக்கின்றோம்-இனி
நாளை விடிவென நினைக்கின்றோம்"

என்று தெளிவாக எழுதி வைத்து விட்டுத் தலை நிமிர்ந்தபோது – எதிரே கழுகுக்கு மூக்கில் வேர்த்தாற் போல் வேர்த்தோ என்னவோ படத் தயாரிப்பாளர் வந்து நின்றார்.

"என்ன, ஒரு பாட்டாவது முடிஞ்சுதா இல்லியா?"

"முடிந்து விட்டது! இதோ எடுத்துக் கொண்டு போகலாம்...." என்று எழுதியதை எடுத்து அவரிடம் நீட்டினார் கவி நவபாரதி. மகிழ்ச்சியோடு அதைக் கையில் வாங்கிக் கொண்ட படத் தயாரிப்பாளர், "இந்த ஹோட்டல் அறைக்கு எப்போதுமே ஒரு நல்ல ராசி உண்டு! நான் அப்பவே சொன்னேனா இல்லியா? இங்கே தங்கினால் பத்து நாளிலே எழுதற ஒரு பாட்டை நாலு நாளிலேயே எழுதிட முடியும்னு.... என் யோசனையைக் கேட்டது எவ்வளவு நல்லதாயிற்றுப் பார்த்தீர்களா?" என்று கவிஞரிடம் பெருமையடித்துக் கொண்டார்.

"இந்தப் பாட்டில் ஓர் அட்சரம்கூட நீர் ஏற்பாடு செய்து கொடுத்த இந்த ஹோட்டல் அறையில் பிறக்கவில்லை. காலில் செருப்பில்லாமல் மேலே சட்டையில்லாமல் எழுதச் சரியான காகிதமில்லாமல் – மெரினா சாலையில் பாமரனாக அலைந்தபோது நள்ளிரவில் உழைப்பாளிகள் சிலருக்கு அப்பால் முடை நாற்றமும், உப்பு நீர் வாடையும் நிறைந்த புதர் ஒன்றிலேதான் இந்தப் பாட்டும் ஓர் அநாதைப் பெண்ணின் குழந்தையும் சுகப் பிரசவம் ஆயிற்று.... தெரிந்து கொள்ளும்......." என்று அவருக்குப் பதில் சொல்ல நினைத்து அந்தப் பதிலைப் பொறுமையாகக் கேட்கக் கூட அவகாசமில்லாத அவரது நிலை நினைவு வந்ததன் காரணமாய்ப் பேசாமல் விட்டு விட்டான் நவபாரதி. பாட்டை முடித்து அவரிடம் கொடுத்த வேளையில், "என்னத்தைச் சொல்றது? அவ பண்ணின புண்ணியத்திலே கஷ்டப்படாமச் சோகமாப் பெத்துப்பிட்டா" என்று மெரினாவில் அந்தச் செம்படவப் பெண் சிரித்துக் கொண்டே கூறிய சொற்கள்தான் நவபாரதிக்கு நினைவு வந்தன. ஒரு தாயின் பரிபூரணமான சந்தோஷம் – சுகமாகப் பிரசவித்த ஒரு தாயின் களிப்பு – நன்றாகக் கவி எழுதி முடித்த ஒரு கவிஞனுக்கும் இருக்கிறது என்ற ஆத்மாநுபவமாகிய தன் சொந்தப் பெருமையை – அவன் நினைத்து நினைத்து அநுபவித்து மகிழ்ந்து கொண்டிருந்தான். இந்த அபூர்வமான அநுபவத்துக்கு விலைதான் ஏது? மற்றொன்று இணைதான் ஏது ?



# பெயர்ப் பொருத்தம்



ராஜாத்தி, ராஜாத்தி, ராஜாத்தி! நிடரென்று அவளுக்குத் தன் பெயர் கர்நாடகமாக, பழங்காலத்துப் பெயராக ஒலித்தது. ஆனால் அது இனி எப்படி மாறப் போகிறது? அதற்கு ஒரு வழியுமில்லை; அவசியமும் இல்லை என்றுதான் ஆகி விட்டதே!

கல்லூரியிலே கனகா, "ராஜ்–ராஜி–ஜாஜி" என்று இஷ்டப்படியெல்லாம் அழைத்துக் கொண்டிருந்தாள். அவளுடைய அழகுக்கும் சொகுசுக்கும் அதெல்லாம் ரொம்ப ரொம்பப் பொருத்தமாக இருப்பதாக அவள் எண்ணிக் கொண்டாள். சுப்பிட்டால் காதுக்கு நிறைந்திருந்தது.

பங்களூரிலிருந்து வந்திருந்த மாமா பெண் சுபா, "ஜாதி" என்று அவளைச் செல்லமாக அழைத்தாள். அதுகூட ஒரு மோஹனராகத்தான் காதிலே ஜிலு ஜிலு என்று ஒலித்தது. 'ஜா–த்தி!'– அவளுடைய மழலைக் குரலில் இருந்த இனிமையினாலும் அப்படி இருந்திருக்கலாம்.

யாரோ, "ராஜம், ராஜம்!" என்று கூப்பிட்டு அவள் மானத்தை வாங்கிக் கொண்டிருந்தார்கள். அப்படியே அறையலாம் போல இருக்கும்.

'போயும் போயும் பொறுக்கியெடுத்து எனக்கு என்று பெயர் வைத்தாளே, அத்தைப் பாட்டி; அவளைச் சொல்ல வேண்டும்!' ஆனால் அந்த அத்தைப் பாட்டியை எதிர்த்துச் சொல்ல யாரால் முடியும்? அவள் ஒரு சட்டம் போட்டால் போட்டதுதான். அதை மாற்ற யாருக்குமே துணிவு இல்லை; அதிகாரமுமில்லை. முப்பதாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள வீட்டுக்கு ஆசைப்பட்டால், மூவாயிரம் ரூபாய் ரொக்கத்துக்கும், மூவாயிரம் ரூபாய் நகை நட்டுக்களுக்கும் ஆசைப்பட்டால், அவள் பேச்சுக்கு மறு பேச்சுப் பேசக்கூடாது. எந்த அற்பமான விஷயமாக இருக்கட்டுமே, அவளைக் கேட்டுக் கொண்டுதான் செய்ய வேண்டும்.

"அத்தை! நல்ல கத்திரிக்காயாக வந்திருக்கு. வாங்கச் சொல்லட்டுமா? ரஸவாங்கி வேணுமானாலும் செய்யறேன். உங்களுக்குப் பிடிக்குமே!" என்பாள் அம்மா.

"வேண்டாம்; என்ன கத்திரிக்காய் வேண்டிக் கிடக்கு. கத்திரிக்காய், எப்பப் பார்த்தாலும்! இன்னிக்கு முள்ளங்கி இருந்தால் போய் வாங்கிக் கொண்டு வரச் சொல். இத்தனை பருப்பைப் போட்டுச் சாம்பார் வைக்கலாம்!"

"முள்ளங்கி என்றால் நீங்கள் சாப்பிட முடியாதே!"

"நான் ஒருத்திதானா சாப்பிடறேன்? எனக்கு இல்லாட்டா என்ன? உன் அகமுடையானுக்குப் பிடிக்கும். குழந்தைகளும் சாப்பிடும். எனக்கு வெறும் ரஸம் இருந்தால் போதும்."

"முள்ளங்கி அதிகமாய் இருக்கு......"

"எதுதான் வாய்த்தது? எல்லாந்தான் அதிகமாய்த்திலே அழிந்த போறது! வேணும்னு வாங்கித்தான் ஆகணும். அரைக்கால், கால் கணக்குப் பார்த்திண்டு இருக்க முடியுமா?"

அத்தைப் பாட்டி எதையும் ஒரு தடவைதான் சொல்வாள். அப்புறம் எதைச் சொல்லியும் அவளைத் திருப்ப முடியாது; சமாதானப்படுத்தவும் முடியாது. அவளுடைய அதிகாரம் மூலை முடுக்கெல்லாம் செல்வதில் அவளுக்கு அத்தனை ஆனந்தம். துளி மாறுதல் எங்கேயாவது ஏற்பட்டு விட்டால் அவளுக்குத் தெரியாமலும் இருக்காது; பொறுக்கவும் மாட்டாள்.

இரண்டு பெண்களுக்குப் பிறகு மூன்றாவதும் பெண்ணாகப் பிறந்து விட்டதே என்று அவளுடைய அப்பா அலுத்துக் கொண்டார்; அம்மா சலித்துக் கொண்டாள்.

"கொண்டா, குழந்தையை இப்படி வெளிச்சத்துக்கு!" என்று உத்தரவு போட்டாள் அத்தைப் பாட்டி. மருத்துவச்சி கையிலிருந்த ரோஜாப் பூக் குழந்தையை உற்றுக் கவனித்தாள். பிறகு சட்டென்று கையை நீட்டித் தன் கையில் வாங்கிக் கொண்டு, "சரிதான்டி போடி, பொண்ணுன்னு அத்தனை தள்ளுபடியாய்ப் போயிட்டுதோ? ராஜாத்தியாட்டமா

இருக்கு, குழந்தை. ராஜாத்திபோட்டமா இருக்கப் போறது. பாரு! என்னவோ ரெண்டுக்கு மூணுப் போறத்துட்டா குடியா முழுகிப் போயிடும்? நான்கூடத்தான் அந்த பொன்னுக்கு நடுவிலே பொறந்தேன். அப்புறம் மூணு பிள்ளைகள் பிறந்தது. இப்ப என்ன கெட்டுப் போச்சு?'' என்று அடித்துப் பேசி விட்டாள் அத்தைப் பாட்டி.

அன்று முதல் அவள் ராஜாத்தியாகவே விளங்கினாள். அத்தைப் பாட்டிக்குச் செல்லப் பெண். மற்ற இரண்டு பெண் குழந்தைகளுக்குச் செய்யாத நகையெல்லாம் இதற்குச் செய்து போட்டு அழகு பார்த்தாள். எது போட்டாலும் ராஜாத்திக்குத்தான் பொருத்தமாய் இருக்கிறது என்று சொல்லிப் பெருமையும் பட்டுக்கொண்டாள். மேலுக்காகவோ, பிறத்தியாருக்காகவோ அவள் கரிசனம் காட்டவில்லை. அவளுக்கு ஒரு நல்ல அபிப்பிராயம் விழுந்து விட்டது. அப்புறம் அது வளர்ந்ததே தவிர, கண்ணை மூடுகிற வரையில் அந்த அன்பு மாறவே இல்லை. அவள் ஆசைப்பட்டபடிதான் ராஜாத்தி கல்லூரியில் போய்ச் சேர்ந்தாள். அவள் போட்டிருந்த புள்ளி பிசகாமல் ராஜாத்தி பார்க்க அத்தனை லட்சணமாய் இருந்ததோடு, படிப்பிலும் சூடிகையாக இருந்தாள்.

''அவளுக்கு என்று ஒருவன் இனிமேலா பிறக்கப் போகிறான்? தன்னாலே வந்து, பழத்தைக் கிளி கொத்திண்டு போறாப்பலே போகப்போறான். பாரு! இன்னிக்கு நான் சொல்றேன். நான் இருந்து பார்க்காட்டாலும் எவனோ ஒருத்தன் அவளைத் தேடிண்டு வந்து, 'நான் சீராளனுக் காக செலவு இல்லாமெ பண்ணிக்கிறேன்'னு கல்யாணம் பண்ணிண்டு போறான். இல்லையான்னு பாரு!'' என்று அவள் அன்றைக்கே ஜோஸ்யம் பார்த்துச் சொல்லி விட்டாள்.

அத்தைப் பாட்டி சொன்னது அப்படியே பலித்து விட்டதே! அவளைத் தேடிக் கொண்டுதான் வந்தான் தியாகராஜன். அவளுக்குப் பொருத்தமாக நல்ல உயரம்; நல்ல நிறம்; களையான முகம்; இரண்டுபேரும் சேர்ந்து போனால் பார்த்தவர்கள் திரும்பித் திரும்பிப் பார்ப்பார்கள். எட்டின மட்டும் எடை போட்டுப் பார்ப்பார்கள். திருஷ்டிப்பட்டுப் போகிற அளவுக்கு அத்தனை பொருத்தம்.

''பையன் பெரிய குடும்பத்துப் பையன் ஆச்சே; படிப்பும் பெரிய படிப்பாச்சே! நமக்கு அவ்வளவுக்குப் போகட்டுமா?'' என்று மிரண்டு போய்த் தட்டிக் கழிக்க நினைத்தார்கள் அப்பாவும் அம்மாவும். அத்தைப் பாட்டி எழுதி வைத்துவிட்டுப் போன வீடுதான் இப்போது மிச்சம். நகை நட்டு, ரொக்கமெல்லாம் முன் இரண்டு பெண்களுக்குச் செய்ததோடு தீர்ந்து போய் விட்டன. கைக்கும் வாய்க்கும் என்ற நிலைதான் அவருடைய வருவாய். இந்த நிலையில், அந்தஸ்துக்கு மீறி எப்படி ஆசைப்படலாம்?

ராஜாத்திக்கு உள்ளூறத் தயக்கம். உதைப்பு! பேச்சு கொஞ்சம் நெருங்கும்போதெல்லாம் இந்தக் கவலை அவளை அதிகம் வாட்டும். ஆனால் அவனோ அந்தக் கவலையெல்லாம் இருப்பவனாகவே தோன்ற வில்லை. எண்ணம், பேச்சு, செயல் எல்லாவற்றிலும் அவன் ரொம்பவும் நேர்மையுள்ளவனாகவே இருந்தான். ஒருவர் பார்த்து வம்பு பேசவோ, வீண் பொறுமைப்படவோ, புறம் பேசவோ இடம் தெரியும் இல்லாதபடி கம்பீரமாக, ஒளிவு மறைவு இல்லாமல் நடந்து கொண்டான். அவனுடைய தோற்றத்தைப் போலவேதான் குணமும் குறை சொல்ல முடியாத நிலையில் இருந்தது.

கல்லூரி சம்பிரதாயப்படி ஆரம்பத்தில் அவன், ''நீங்கள், வாருங்கள், பாருங்கள்....'' என்றுதான் மரியாதையாக அவளிடம் பேசிக்கொண்டிருந்தான்.



ஆர்வி

அவளுடைய உள்ளம் நாளடைவில் அந்த மரியாதையைக் கண்டு குன்றிப் போகத் தொடங்கியது. அவன் எங்கேயோ எட்டாக் கையில் இருப்பதாகவே ஒரு பாவனை தோன்றியது. அவ்வளவு தூரம் வேற்றுமையும் வித்தியாசமும் பாராட்ட அவளால் முடியவேயில்லை. நெஞ்சுக்கு அடியில் ஏக்கத்தின் மெல்லிய கோடு ஒன்று நீட்டியவாறு உறுத்தியது. ''மிஸ்டர் தியாகு — தியாகு — தியாகு! எனக்கு இவ்வளவு மரியாதை காட்டி உயரத்திலேயே வைத்திருக்கிறீர்களே, இது சரியா? சம தரையில் நின்று என்னைவிட நீங்கள் உயரம் என்று நான் எப்படி நிரூபிப்பேன்?'' என்று அக்குரல் ஒலியெழுப்பிக் கொண்டேயிருந்தது.

மின்சார வண்டியில் வரும்போதெல்லாம் அவர்கள் எதிரும் புதிருமாகத்தான் உட்கார்ந்து வருவார்கள். பக்கத்தில் பக்கத்தில் உட்காருவதில்லை. அப்படி உட்கார அவர்கள் விரும்புவதுமில்லை. அந்த இருபது நிமிஷ நேரப் பிரயாணம் இருபதே நொடியில் தீர்ந்து விடுவது போலத்தான் அவளுக்கு இருக்கும். சில நாளைக்கு அவன் முகத்தை எதிட்டுப் பார்த்துப் பேசவே அவளுக்குக் கூச்சமாக இருக்கும். இனம் புரியாத வெட்கம் வந்து பார்வையிலேயே எங்கோ இழுத்துச் செல்லும். மற்ற நாட்களில் அந்த இருபது நிமிஷங்களில் இருபது வார்த்தைகள் பேசுவார்கள் என்றால், அது போன்ற நேரங்களில் இரண்டு வார்த்தைகளோடு பிரயாணம் முடிந்து விடும். அப்புறம் மறு நாள்தான். காலைப் பிரயாணத்தின் போது அவர்கள் சேர்ந்து பிரயாணம் செய்ய நேர்வது அத்தனை நிச்சயமில்லை. நேர்ந்தாலும் கூட்டம் நெருக்கித் தள்ளும். உட்கார முடியாது; பேச முடியாது. தாம்பரம் வருகிற வரையில் பேசாமல் பார்த்துக் கொண்டு வரலாம். பார்வை சந்தித்துக் கலந்து விட்டால் காரணமே இல்லாமல் கூடப் புன்னகையைப் பரிமாறிக் கொள்ளலாம். பார்க்கப் போனால் அவளுக்கு அது தேவலைபோல் இருந்தது. பேசினால் தானே, 'நீங்கள் — நாங்கள்' என்ற மரியாதை எல்லைகள்? சங்கடங்கள்! எண்ணச் சுழிப்பிலே அத்தனை வேற்றுமையோ, தூரமோ ஏது?

அப்படி நேர்ந்து விட்டது ஒரு நாள். கொஞ்சம் எல்லை கடந்துதான் போய் விட்டது பேச்சு.

''உங்களைவிட உங்கள் பெயர் நன்றாகத்தான் இருக்கிறது — அதாவது என் வரையில் சொல்கிறேன்!'' என்றான் தியாகராஜன்.

துணிச்சல்தான்! சிறிது நேரம் அவள் பேசாமலே பேனாவை உருட்டிக் கொண்டிருந்தாள்.

''அது என்னவோ? நீங்கள் மறக்காமல் இவ்வளவு மரியாதை போட்டுப் பேசுவதைவிடப் பேசாமல் இருப்பதுதான் நன்றாயிருக்கிறது'' என்றாள் ராஜாத்தி.

''அதாவது என் வரையில் சொல்லுகிறேன்!'' என்றான் அவன்.

தியாகராஜன் சிரித்துக் கொண்டே, '' 'ஒன் வே டிராபிக்' முறை வந்து தான் தீர வேண்டும்; இல்லையா?'' என்றான்.

ராஜாத்தியின் கண்கள் மகிழ்ச்சி தாளாமல் அலை பாய்ந்தன. அவள் பேசவில்லை. எல்லாவற்றையும் பேசுவதில், பேசி விடுவதில் என்ன இன்பம் இருக்கிறது? மௌனத்தில் காண வேண்டிய இனிய உணர்ச்சிகளையெல்லாம் வார்த்தைகளாகக் கொட்டுவது கதை எழுதுகிறவர்கள் கையாள்கிற நுட்பம் புரியாத காரியம். அவள் கதையா எழுதுகிறாள்? கதைக்குரிய நாயகியாக இருக்கிறாளே! பார்வைகூட எதற்கு? வேறு எங்கேயோ பார்த்தால் போதாதா? நெஞ்சில் நிறைந்தவன் எதிர்ப் பெஞ்சிலா இருக்கிறான்? பார்க்குமிடமெங்கும் நிற்கிறானே!

''ராஜாத்தி, ராஜாத்தி, ராஜாத்தி!''

பெயர் — சொல் — குரல் மூன்றும் மூன்று வாள்களாக அவளுடைய உயிர் நிலையை வெட்டி இழுத்தன. அவள் உடலில் மயிர்க்கூச்செறிந்தது. உமிழ் நீரே விழுங்க முடியவில்லை. பதிலுக்குக் கோபமாக, ''தியாகு — தியாகு— தியாகு!'' என்று கத்தலாமா என்று வேகம் வந்தது. ஆனால் தொண்டையை விட்டுச் சத்தம்தான் புறப்படவில்லை.

உதட்டைப் பழிப்பாக இழுத்துக் கொண்டு, ''பழங்காலத்துப் பெயர். பாட்டி வைத்த பெயர். அதற்கு என்ன செய்கிறது?'' என்று சொல்லி விட்டு, அவனைத் திரும்பிப் பாராமலே நின்ற வண்டியிலிருந்து இறங்கிப் போனாள்.

மறு நாள் நுங்கம்பாக்கத்திலிருந்து அவள் ஸ்டேஷனுக்கு வருமுன்பே அவன் மாம்பலத்துக்கு வந்து காத்திருந்தான். அவனைக் கண்டதும் அந்த ரோஜாப் பூ முகம் சிரிப்பது போல் மலர்ந்தது.

''நேற்றைக்கு என்ன, கோபம் வந்து விட்டது போல் இருக்கிறதே! அதற்காகத்தான் இன்று முன்னால் வந்து நிற்கிறேன், கேட்டுத் தெரிந்து கொள்ள'' என்றான் தியாகராஜன்.

''இன்றைக்கு என்ன, பிளாட்பாரத்தில் கூட்டத்தையே அதிகமாகக் காணுமே. ஏதாவது விசேஷமோ? விடுமுறையோ?'' என்றாள் ராஜாத்தி.

''பேச்சை அப்புறம் மாற்றிக் கொள்ளலாம். எப்போதும் உள்ள கூட்டத்துக்கு ஒரு குறைச்சலுமில்லை. அதற்கென்ன, ஸ்டேஷனுக்கு வருகிறவர்கள் எல்லாம் கொஞ்சம் வழக்கத்துக்கு முந்தியே வந்தால் கூட்டம் குறைச்சலாகத்தான் தெரியும்'' என்றான் தியாகராஜன்.

''வருவதும் வந்து விட்டுப் பேச்சைப் பார், பேச்சை!''

''கண்ணைப் பார், கண்ணை. பார்க்காதது போலப் பாசாங்கு!''

''கண்ணைத்தானே? தாராளமாகப் பார்த்துக் கொள்ளலாமே! அதற்கு யாரும் டிக்கட் வைக்கவில்லை.''

''இருந்தாலும் கவலையில்லை! எவ்வளவு டிக்கட் வைத்தாலும் நான் வாங்குவேன். அதாவது எல்லா டிக்கட்டுகளையும் நான் ஒருவனே வாங்கி விடுவேன்! கண்டவர்களெல்லாம் இந்தக் கண்களை நான் பார்ப்பது போல் பார்க்க ஒரு நாளும் விடமாட்டேன். இடம் கொடுக்கவும் மாட்டேன்!''

''சரி சரி'' என்றாள் ராஜாத்தி, அருகில் யாராவது நிற்கிறார்களோ என்று பயந்து கொண்டு.

''ராஜாத்தி ராஜாத்தி ராஜாத்தி!''

மேம்பாலத்துப்படிக்கட்டுக்களில் அவள் மெல்லத்தான் இறங்கி வந்தாள். கல்லூரியில் படிக்கும்போது அவளுக்கு இப்படியெல்லாம் மெதுவாக, நிதானமாக இறங்கிப் பழக்கமில்லை. காற்றிலே பறப்பது போலத்தான், ஏறுவதும் இறங்குவதும். அவள் திரும்புவதையும் வளைந்து ஒதுங்கிச் செல்வதையும் பார்த்தால் தண்ணீரினுள்ளே பளிச்சென்று நெளியும் அழகான மீனின் நினைவுதான் வரும். அப்படி ஒரு சுறுசுறுப்பு; சுருக்கு. இன்று — இப்பொழுது — கொஞ்ச நாட்களாகவே எல்லாம் மாறிப் போயிருந்தன. மெல்ல, மெல்லத்தான் எல்லாம்...

இவ்வளவு மெதுவாக வந்தும் அவளுக்கு மேல்மூச்சு வாங்கியது. மினுமினுப்பாகப் பளபளவென்று இருந்த உச்சி நெற்றியில், உதட்டோரங்களில் வேர்வை முத்து முத்தாக அரும்பியிருந்தது. அவளுக்கே அவள் உடல் கொஞ்சம் பளுவாகத் தோன்றியது. நீரோட்டம் நிறைந்த கண்கள் பிளாட்பாரத்தில் தொங்கிய கடிகாரத்தைப் பார்த்தன.

இன்னும் முப்பது நிமிஷங்கள் போல இருந்தன. அவசரப்பட்டு அவள் முன்பு ஒரு நாள் வந்தது போல வந்து விட்டாள். அதற்குப் பிறகு அவள் எதிலும் அவசரப்பட்டதேயில்லை. கல்யாணத்துக்குக்கூட அவள் படிப்பு முடியுமட்டும் அவசரப்பட்டதேயில்லை. மற்றவர்கள், தியாகராஜன் உள்பட, எல்லாரும்தான் சுபமான காரியம் சீக்கிரம் முடிய வேண்டும் என்று அவசரப்பட்டார்கள்.

எல்லாவற்றிலும் கொஞ்சம் மெது என்ற அளவுக்கு அவளுக்கு ஒரு நிதானம் வந்து விட்டது. அதுவே அவளுக்குப் பொருத்தமான அழகாகவும் அமைந்து விட்டது. பேச்சிலே, நடையிலே, செயலிலே அவள் தீவிரம் காட்டவில்லை. அதிலும் இன்று இன்னும் நிதானமாகவே நடந்து கொள்ள விரும்பினாள். இன்னும் இருபது நிமிஷங்களாவது கழித்துத்தான் போக வேண்டும். அப்படிப் போனால் தான் சரியாக ஐந்தரை மணிக்கு அவள் போய்ச் சேரலாம். அதற்கு முன்னால் போனால் தப்பு இல்லைதான். இருந்தாலும் போவானேன்?

நிற்க, நிற்க, இரண்டு கால்களும் கடுத்தன. நல்ல வேளையாக ஒரு சிமெண்டுப் பெஞ்சு காலியாக இருந்தது. கடிகாரத்தைப் பார்த்தபடி அவள் அதில் மெதுவாக உட்கார்ந்து கொண்டாள். வருவோர், போவோர் எல்லாம் அவளைப் பார்த்துக் கொண்டே போனார்கள். தனியாக வந்திருக்கிறாளா, கூட யாராவது வந்திருக்கிறார்களா என்று சிலர் குறுக்கும் நெடுக்குமாகப் பார்த்துக் கொண்டே போனார்கள்.

தடதட வென்று ஐந்தாறு குழந்தைகள் ஓடி வந்தன. பெஞ்சியிலே காலியாக இருந்த இடத்தை, பந்தல்கால் விளையாட்டில் பிடித்துக் கொள்வது போல் பாய்ந்து வந்து பிடித்துக் கொண்டன. பின்னால் அவர்களுடைய தாய் தான் போலிருக்கிறது! நிறைமாதக் கர்ப்பிணி! ராஜாத்தி காரணமில்லாமலே குழந்தைகளை எண்ணிப் பார்த்தாள். ஒன்று, இரண்டு, மூன்று..... வயிற்றுப் பிள்ளையைச் சேர்த்தால் ஏழு! மாதம் நெருங்க நெருங்க வயிறு இவ்வளவு பெரிதாகவா பருத்துப் போகும்? அவளால் அதை எண்ணிப் பார்க்க முடியவில்லை. என்னவோ பயத்தையே மடியில் மூட்டையாக வைத்துக் கட்டிக் கொண்

# மனமார்ந்த
# தீபாவளி
# வாழ்த்துக்கள்



SPARK PLUG

FUEL INJECTION PUMPS & NOZZLE HOLDERS



**WORLD FAMOUS BOSCH (GERMAN) QUALITY**



FILTERS

**MICO**



NOZZLES





FILTER INSERTS

ELEMENTS & DELIVERY VALVES



*for* **DIESEL**
*and* **PETROL**
**ENGINES**

MC-CO/9

**MOTOR INDUSTRIES CO., LTD.,**
**BANGALORE**

Sales Houses at:

BOMBAY-2: 41, Queen's Road
CALCUTTA-16: 91A, Park Street
MADRAS-2: 1/155, Mount Road
NEW DELHI-1: Ghaziabad Engg. Co.,
29A/1, Asaf Ali Road

டிருப்பது போல் ஒரு கற்பனை உண்டாயிற்று. தோள் பட்டை இரண்டும் ஒரு குலுங்குக் குலுங்கின.

ஒரே ஒரு பயல் மட்டும் தனியாக, துணிச்சலாக நின்று அவளை ஒரு முறை முறைத்துப் பார்த்தான். மற்றவர்களை விட்டு விட்டுத் தனியாகக் கொஞ்சம் நெருங்கி வந்தான். அவள் உட்கார்ந்திருந்த பெஞ்சியை ஒரு வலம் வந்து விட்டு, தன்னை அவள் ஏறெடுத்துப் பார்க்கிறாளா என்று பொறுத்திருந்தான். அப்படிப் பார்த்ததும் ஏதோ அந்தரங்கமாகப் பேச நினைப்பதுபோல் ஒரு புன்னகை செய்தான். ராஜாத்திக்கு அந்தச் சிறுவனைக் கண்டு அப்படி ஒரு வெட்கம் பிடுங்கித் தின்றது. உள்ளத்துக்குள்ளே ஒரு குறுகுறுப்பு ஏற்பட்டது. கண்களைத் திருப்பிக் கொண்டு அவனைப் பாராதவள் போல் கடிகாரத்தைப் பார்த்தாள்.

அந்தப் பாசாங்குக்கெல்லாம் அவன் ஏமாந்தவனாகத் தோன்ற வில்லை. இன்னும் சிறிது பக்கத்தில் வந்து நின்று வாயைப் பிளந்தபடி அவளைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

ஆறு ஏழு வயதுதான் இருக்கும் அந்த வாண்டுப் பயலுக்கு. கண்கள் இரண்டும் நாகப் பழம் போல வட்டமாக உருண்டன. கருட்டை மயிர் சுருள் சுருளாகத் தொங்கியது. மாநிறம்தான். முன் வரிசைப் பல் ஒன்று விழுந்து வாய் பொக்கையாக இருந்தது. இருந்தாலும் அவன் முகத்தில் ஏதோ ஒரு கவர்ச்சி இருந்தது. ஒரு கண் கறுப்பு விழி ஓர் இம்மி தள்ளியிருப்பது போல் தோன்றியது.

''எனக்குத் தெரியும், எனக்குத் தெரியும்'' என்று அவன் சட்டென்று கைகொட்டிக் கொண்டு சிரித்தான். மற்றக் குழந்தைகள் இவனைக் கவனிக்கவில்லை. இவனும் அவர்களை லட்சியம் செய்யவில்லை.

ராஜாத்தி முதலில் கூச்சத்துடன் பேசாமல் இருந்து விடத் தான் நினைத்தாள். பிறகு சிறிது அதட்டலான குரலில், ''என்னடா தெரியும் உனக்கு, வாண்டுப் பயலே?'' என்று கேட்டாள்.

''எனக்குத் தெரிஞ்சி போச்சி. என்னை ஏமாத்த முடியாது. உன் வயித்துக்குள்ளே என்ன தெரியுமா இருக்கு ? சொல்லட்டுமா? ஒரு சின்ன பாப்பா, இக்குனூண்டுப் பாப்பா!'' என்று அவன் முழங்கை அளவு காண்பித்தான்.

அவள் வயிற்றிலேயே ஒரு குத்துக் குத்திக் கலக்கியது போல் இருந்தது அவன் பேச்சு. ஆனால் அந்தச் சிறுவனை அதற்காக என்ன செய்ய முடியும்? அவன் சொன்ன விதம், நின்ற நிலை, பார்க்கிற பார்வை எல்லாம் அவளுக்கு மிகவும் பிடித்துப் போயிருந்தன. இருந்தாலும் இந்த வயதில் இப்படிப்பட்ட துணிச்சல் வருமோ ஒரு பையனுக்கு?

''என்னடா சொல்றெ நீ?'' என்று அவள் புரியாதது போல் கேட்டாள். அதட்டலாகத்தான் கேட்டாள். ஆனால் குரல் அப்படி யில்லை.

''வேணும்னு எங்கம்மாவைக் கேக்கலாமா? அம்மாவே சொல்லியிருக்கா, வயித்துக்குள்ளே பாப்பாதான் இருக்குமாம்...!''

''சரி, சரி! நீ போ, உங்கம்மாகிட்டே. வண்டி வருகிற சமயம். நீ மட்டும் தனியாக வரக் கூடாது.''

மற்றப் பிள்ளைகளெல்லாம் தாறுமாறாக ஓடாமல் ஒன்றுசேர்த்துக் கொண்டிருந்தாள் அந்தத் தாய்.

''நீ சொன்னாத்தான்!''

ராஜாத்திக்குத்தான் ரொம்பச் சங்கடமாகப் போய் விட்டது. பயப்படுகிறவனாய் இருந்தால் அதட்டலாம். இவன் அப்படியில்லையே!

''எம் பேரு என்ன தெரியுமா? வி. டி. ராஜன், தியாகராஜன். அப்பா பேரு சிதம்பரம்!''

ராஜாத்திக்கு இன்னும் கிளர்ச்சியாக இருந்தது.

''சரி, சரி! அம்மாகிட்டே போ!''

சிறுவன் அசையாமல் சிறிது நேரம் நின்றான். பொக்கைப் பல் குழந்தைப் பருவத்தின் இனிய தன்மையை உணர்த்திக் கொண்டிருந்தது.

'' மாமி! நீ ரொம்ப வெள்ளையா இருக்கே! உன்னைக் கண் டாத்தான் எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு!''

ராஜாத்தி தவிப்போடு நெளிந்தாள்; அவனோடு சமரசமாகப் போக நினைத்தாள். 'பையன் 'காக்காய்' பிடிக்கிறானே, துளி தூண்டு இருந்து கொண்டு!' என்று சொல்லிக்கொண்டாள் தனக்குள்.

''எங்க அம்மா கறுப்பு. எங்க அப்பாவும் கறுப்புத்தான். அதான் நானும் கறுப்பா யிருக்கேன்.''

ராஜாத்தி அவனுடைய பேச்சைக் காதில் வாங்கிக் கொள்ளாதவளைப் போல் இருந்தாள்.

''மாமி! உங்கிட்டே உக்காந்துக்கலாமா ?''

''எதுக்கு?''

''சும்மாத்தான்!''

''ஒன்னும் வேண்டாம். அதெல்லாம் உட்காரப்படாது.''

''காலை வலிக்கிறது, மாமி.''

''போய்! காலை வலித்தால் அம்மாகிட்டப் போய் உட்காரேன்.''

''ஏன், இங்கேதான் இடமிருக்கே? நான் உக்காந்தால் என்ன?''

# குரல்

பெ. தூரன்

எங்கிருந்தோ குரல்கேட்கும்
யார்குரலோ நானறியேன்
மங்கியொளி குன்றியிருள்
வளருமென்றன் கதவிடித்து
எங்கிருந்தோ குரல் கேட்கும்
யார்குரலோ நானறியேன்

பொங்குமினம் போதையிலே
புகுந்தங்கே பலசெய்வேன்
தங்குமிடம் தவ்மறைவாய்ச்
சதுராக நடத்திடினும்
எங்கிருந்தோ குரல்கேட்கும்
இடித்திடித்து நெஞ்சுலுக்கும்

பங்கமிலா வாழ்வின்பம்
பதித்ததிலே மெய்மறப்பேன்
தங்கமிவன் எனச்சாற்றித்
தாரணியோர் புகழ்ந்திடினும்
எங்கிருந்தோ குரல்கேட்கும்
இதுதானோ வாழ்வென்னும்

அகல்வானில் பறந்திடுவேன்
ஆழியிலே மூழ்கிடுவேன்
புகவொண்ணா இடமெனநான்
புதைந்தாலும் அவ்விடத்தும்
எங்கிருந்தோ குரல்கேட்கும்
இதயவுணர் வெழுத்தட்டும்

சோர்ந்துடலம் தளர்வெய்திச்
சகமெல்லாம் கனவெனவே
ஓர்ந்துன்னைக் கூவிடுவேன்
ஒருகணந்தான் என்றாலும்
எங்கிருந்தோ குரல்கேட்கும்
என்பசிக்கே தூபமிடும்

என்றுமுன்றன் நாமவினைக்
நீ தெய்வமலர் ஏற்றிவைத்து
அன்றுமின்றும் கேட்டதெலாம்
ஆர்குரலென் றுணரும்வரை
எங்கிருந்தோ குரல்கேட்கும்
எச்சரிக்கும் அதன்மேலும்

எங்கிருந்தோ குரலில்லை
இங்ககத்துள் எனத்தெளிந்து
எங்கணுமே குரல்கேட்கும்
இன்பநிலை எய்தும்வரை
எங்கிருந்தோ குரல்கேட்கும்
ஏற்றமெலாம் பெறவுதவும்



''நீ உட்கார்ந்துக்கோ; நான் எழுந்து போய் நிற்கிறேன்.''

''காலே வலிக்குமே. நிற்க முடியாதே. வயித்துக்குள்ளேதான் பாப்பா இருக்கே –''

நல்ல வேளே; அப்போது வந்த வண்டி அவன் பேச்சின் பிற்பகுதியைக் கேட்க விடவில்லை. கொஞ்சம் உட்கார்ந்து போகலாம் என்று நினைத்தவள், பெண்கள் பெட்டியில் இடம் காலியாக இருக்கவே ஏறிக் கொண்டு விட்டாள். கார்டு இரண்டாவது முறை ஊதலை ஊதிய போது அவள் பக்கத்தில் அதே சிறுவன் வந்து உட்கார்ந்து கொண்டு பொக்கைப் பல்லைக் காட்டி வெற்றிச் சிரிப்புச் சிரித்தான். அவளும் பதிலுக்குச் சிரித்தாளொழிய அவள் தாபம் அடங்காது போலிருந்தது.

''கோவிச்சுக்கப்பியா, மாமி? உங்கிட்டே உக்காரப்படாதா?''

''பேசாமல் வருவியா? பேசாமல் வந்தால் உக்காந்துக்கோ!''

''சரி'' என்று வெகு சந்தோஷமாக உட்கார்ந்து கொண்டான் பையன். அவனிடம் காரணமில்லாமல் கொஞ்சம் கடுமையாக நடந்து கொண்டு விட்டதாக அவள் நினைத்துக் கொண்டாள். அவன் சொன்ன சொல் தவறாமல் பேசாமல் உட்கார்ந்திருந்தான். அவள் மனம் இளகி விட்டது.

''உன் பேரென்ன சொன்னாய்?''

''ராஜன் – ராஜு – ராஜா!''

''மூணு பேரா?''

''ஆமாம்; உனக்கு எது பிடிக்கிறது, மாமி ?''

''மூணுந்தான்! மூணுமேபிடிக்கிறது!''

சிறுவன் பொக்கைப் பல்லை அழகாகக் காட்டிச் சிரித்தான். முகத்திலே அசாதாரண மகிழ்ச்சி பொங்கி நின்றது.

''மாமி–''

''உம்?''

''உன் பேரென்ன?''

''பாத்தியா? பேசப்படாது என்று சொன்னேனே!''

''நீதானே பேசினே? பேருதானே கேட்டேன்!''

'' எம் பேரும் ராஜு – ராஜி– ராஜாத்தி!''

திடீரென்று பையன் மகிழ்ச்சியோடு கைகையக் கொட்டிச் சிரித்தான். ''ராஜாத்தி – ஐயே – சின்னப் பாப்பா பேரு மாதிரி யிருக்கு!''

வண்டி அடுத்த ஸ்டேஷனில் வந்து நின்று விட்டுப் புறப்பட்டது. இன்னும் கொஞ்ச நேரந்தான். அதற்குள் இவனோடு எப்படி சமரசமாகப் பேசுவது?

''எனக்கு ஒண்ணு, தெரியுமே!'' என்று ஆசை காட்டினான் பையன்.

''என்ன அது?''

அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த அவன், ''மாமி, உன் சின்னப் பாப்பாவுக்கு என்ன பேர் வைக்கப் போறே?'' என்று கேட்டான்.

''அதை எப்படிச் சொல்ல முடியும்? அது என்ன பாப்பாவோ?''

''கீத் மாலா! பேரு நன்னு இருக்கா?''

'' அது பெண் பிள்ளையின் பெயராச்சே !''

''எனக்குத் தங்கச்சி பாப்பாதான் பிடிக்கும். எனக்குத் தங்கச்சி பாப்பா தான் பொறக்கப் போறது. கீத்மாலா பேரு அம்மாவுக்குப் புடிக்கலியாம். ஆனா நான் அப்படித்தான் கூப்பிடுவேன். மீனுச்சின்னு வைக்கப் போறளாம். போர்! கீத் மாலா – ஜம்னு பேரு!''

''அது சரி. உனக்கு எப்படி அம்மாவுக்குத் தங்கச்சி பாப்பாதான் பிறக்கப் போறதுன்னு தெரியும்?''

''மாமி, இந்த ஜோசியம் நான் எப் படிச் சொல்றேன்னு சொல்லட்டுமா?''

''சொல்லேன் கேட்கிறேன்.''

''நீ இடது கையை ஊன்றிக்கொண்டு உக்காந்திருக்கே. அதனுல்தான் உனக்கு தங்கச்சி பாப்பாதான். வலது கையை ஊன்றி உட்கார்ந்து எழுந்திருந்தால் வலது பக்கமாகப் படுத்துக் கொண்டால் உனக்குத் தம்பிப் பாப்பா. இதை நான் ஒரு புத்தகத்திலேயே படிச்சேனுக்கும்.''

ராஜாத்தி வியப்பிலாழ்ந்து போனுள். இந்த வயதில் எதையெல்லாம் படித்திருக்கிறான் இந்தப் பயல்?

''மாமி–''

''என்னடா, நான் இறங்க வேண்டிய ஸ்டேஷன் வந்துடுத்து. சட்டுனு சொல்லு!''

**வ**ண்டி நின்றது. ராஜாத்தி வேகமாக வண்டியிலிருந்து இறங்கினுள்.

''மாமி! என்னே தெரியலை வெச்சிக்கோ! .....ராஜுமோகன்! மறந்து போயிட்டு முழிக்காதே. கீத்–மாலா இல்லே; ராஜு மோகன் ! இல்லாட்டா ராஜ ராஜன் ! என்ன ?''

''சரி.''

''போயிட்டு வரீயா? டா–டா !''

''டா – டா !''

பின்னும் வந்து நின்றான் நினைவாக ராஜன். ராஜாத்திக்கு எதனுலோ அந்த வண்டியிலேயே போக மாட்டோமா என்று இருந்தது. அந்தப் பொக்கைப் பல் கண்ணை விட்டு அகலவே இல்லை.

''என்ன யோசனே, நான் வந்ததைக் கூடக் கவனிக்காமல் ?''

''ஒன்றுமில்லை. ஒரு வேடிக்கை!''

''என்ன அது?''

''ஒரு பையன் ஆறு ஏழு வயசு இருக்கும். நம்ம குழந்தைக்கு ஐந்து நிமிஷத்துக்குள்ளே பேரு வைச்சுட்டான்!''

''யார் அந்தப் பையன்?''

''உங்க பேருதானும் அவனுக்கும். அந்த வயசில் நீங்களும் அப்படித்தான், துணிச்சலா, போக்கிரியா இருந்திருப்பீர்களோ, என்னமோ?''

''பேசிக் கொண்டே நின்றால் டாக்டர் மிஸ் காத்திண்டிருக்க மாட்டாள். அவளேப் பார்த்து விட்டு அப்புறம் வீட்டுக்கு எப்போது?''

''டாக்டர் மிஸ் ஒன்றும் பார்க்க வேண்டாம்!''

''ஏன் அப்படி, திடீரென்று !''

''இந்தப் பையன் சொன்னதே போதும். குழந்தை ராஜுமோகனுகவே இருக்கட்டும்! இல்லாட்டா ராஜ ராஜனுகவே இருந்தாலும் சரிதான்!''

''ராஜ ராஜன் மட்டும் பழங்காலத்துப் பெயர் இல்லையா?''

''ஆனுல் அதிலே பொருத்தம் இருக்கே! இல்லையா?'' என்று அவன் விரலைப் பிடித்து ரகசியமாகக் கிள்ளினுள். ஸ்டேஷனிலிருந்து வெளியே வரும் வரையில் அத்தனை கண்களும் அவர்களுடைய பொருத்தத்தையே– பார்த்துக் கொண்டிருந்தன.

இசை நிகழ்ச்சி நடக்கிறது — வெவ்வேறு பாடல்கள், வெவ்வேறு மொழியிலமைந்த பாடல்கள், வெவ்வேறு ராகங்கள், வெவ்வேறு பாவங்கள். என்றாலும் பலவேறு அம்சங்கள் சேர்ந்த இசை நிகழ்ச்சிக்கு ஒருமை இருக்கிறது. எதனால்? சுருதியால். தொடக்கத்திலிருந்து முடிவு வரை மாறாதிருக்கும் சுருதி என்ற சரட்டிலேயே மற்ற அம்சங்கள் தனித்தனி மணிகளாகக் கோக்கப்பட்டிருக்கின்றன.

ஹிந்துக்கள் என்று சொல்லப்படும் நாம் பலவேறு பகுதிகளாகப் பிரிந்து பலவேறு தெய்வங்களை வழிபடுகிறோம். பலவேறு தத்துவங்களையும் சடங்குகளையும் அனுசரிக்கிறோம். இவ்வளவு பிரிவினரும் ஹிந்துமதம் என்ற ஒன்றைச் சேர்ந்தவர்களே என்பது எதனால்?





இசைக்கு சுருதிபோல் நம் மதத்துக்கும் ஒரு சுருதி இருப்பதால்தான். சுருதி என்றால் வேதம். அத்தனை பிரிவினரும் வேதத்தையே ஆதாரமாகக் கொண்டிருக்கிறோம். டார்வினின் பரிணாமக் கொள்கை பௌதிக உலகில் பொருந்தக்கூடுமெனினும், ஆன்மிக உலகில் வேதகாலப் பெருமக்கள் போல் விசால வெளி எங்கிலும் தெய்விகத்தை நுகர்ந்து, வாழ்க்கை முழுவதையும் சமயமாக வாழ்ந்து, வீரம், காதல், கல்யாணம், விளையாட்டு எல்லாவற்றிலும் ஆன்மிகப் புனிதங்களைக் காணும் உயர்நிலை பிற்காலங்களில் குன்றிக் கொண்டேதான் வந்திருக்கிறது.

வேதகாலத்தில் இகம் – பரம் என்ற பேதங்கள் பெரிதாக இராமல் இக வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிஷமும் பரம்பொருளின் நினைவோடு வாழப்பட்டது. இயற்கைச் சக்திகளை சூரிய தேவனாகவும், வருண தேவனாகவும், வாயுவாகவும், அக்கினியாகவும், இந்திரனாகவும் நேரில் கண்டு போற்றும் ஒரு சூட்சமப் பார்வை வேதகால மக்களுக்கு இருந்தது. வேதகால வித்தைப் பெருமக்கள் ஒன்றேயான ஒரு சக்தியை எங்கும் உணர்ந்து ஆனந்தித்தார்கள். பரம்பொருளை அவர்கள் மெய்ப்பொருளாகவும் (சத்தியம்) ஒழுங்காகவும் (ரிதம்) நன்மையாகவும் (பத்ரம்) கண்டார்கள். இவற்றுக்கெல்லாம் மேலாக அழகாகவும் (வாமம்) கண்டார்கள். 'பிரபஞ்சத்தின் அத்தனை அழகுகளையும் நாங்கள் அநுபவிப்போமாக' (விசுவா வாமானி நீமஹீ) என்று கோஷித்தார்கள். 'நாட்டியமாடவும், நகைத்து மகிழவும் (நிருதயே ஹஸாய) நாம் நீண்ட நாட்கள் வாழ்வோமாக' என்று வேண்டினார்கள். அவ்வளவு பெரும் கவிகள்! தீர்க்க தரிசனம் பெற்ற ரிஷிக் கவிகள்! தூய்மையே வாழ்நாள் நோன்பாகவும் (சுசி விரதம்), மங்களமே சிந்தனையாகவும் (சிவ சங்கல்பம்) கொண்டு பிறப்பிலிருந்து இறுதிச் சடங்குவரை இசையிலேயே வாழ்ந்தவர்கள். அந்த இசைதான் இன்றும் நம் செவிகளையும் இதயத்தையும் நிரப்பும் சாந்த கம்பீரமான வேத மந்திரங்கள்.





உன்னதமான வேதகால வாழ்க்கையைப் பற்றி அறிய இந்த வேத மந்திரங்கள் தாம் உதவுகின்றன. சத்திய உணர்வும், சௌந்தர்ய உணர்வும் கொண்ட ரிஷிகள் தங்கள் அறிவைக் கொண்டு யோசனை புரிந்து இம்மந்திரங்களை இயற்றவில்லை. தங்களது இதய வானத்தில் அருவ மேகங்கள் சூழ்ந்து நெரியும் வேகத்தில் தாமாகவே பிறக்கும் மின்னல் கொடிகளாக மந்திரங்களைக் கண்டு நமக்கு அளித்திருக்கிறார்கள். இந்த மந்திரங்களில் பதங்கள் வேறு, ஸ்வரம் வேறு, பொருள் வேறு என்று பிரிக்க முடியாமல் பொருளே பதமாகி, ஸ்வரமுமாகி அமைந்துள்ளது. வண்ணம், மணம், உருவம் மூன்றும் ஒன்றாகப் பொருந்தியதுதானே மலர்?

ஆனால் அந்தப் பொருளைப் பெற்று ஆத்மீகச் செல்வர்களாவதில் நமக்கு ஈடுபாடு இல்லை. வேத ஆராய்ச்சி பெருகி வருவது உண்மைதான். ஆனால் ஏதோ சரித்திரச் சம்பவங்களைக் காண்பதற்காகத்தான் வேதத்தை ஆராய்கிறார்கள். சம்பவம் வேறு, சத்தியம் வேறு. சௌந்தர்யம்தான் சத்தியம். சௌந்தர்ய சமய அநுபவத்துக்காகத்தான் வேதத்தைப் பார்க்க வேண்டும். மொழி வல்லுநர்களும் வேதங்களை அலசிப் பிழிந்து ஆராய்ச்சி நடத்துகிறார்கள். உயிரைக் கவனியாமல் உடலை மட்டும் கவனிக்கும் காரியம்தான் அது. இந்த ஆராய்ச்சிகளின் விளைவாக, முன்பு ஹிந்து சமயத்தின் எல்லாப் பிரிவுகளுக்கும் ஆதாரமாயிருந்து ஒற்றுமைப் படுத்திய வேதங்களைக் கொண்டு இன்று பேதங்கள் வளர்க்கப் பட்டிருக்கின்றன. வேதம் ஒரு நாளும் பேதத்துக்கு வழி வகுக்காது. அந்த அழகுப் பெட்டகம்





# வேதகால வனிதையர்

எல்லா உலகுக்கும், எல்லா இன மக்களுக்கும் பொதுவானது.

**யதேமாம் வாசம் கல்யாணீம்**

**ஆவதானி ஜனேப்ய:....**

'மந்திரங்களாகிய இந்தக் கல்யாண வாசகங்களை நான் எல்லா மக்களுக்கும் பரப்புவேனாக! வேதியனுக்கும், வீரனுக்கும், வேளாளனுக்கும், வர்த்தகனுக்கும் பரப்புவேனாக! என் இன மக்களுக்குப் பரப்புவேனாக. பிற மக்களுக்கும் பரப்புவேனாக!' என்று ரிஷி சர்வலோகத்துக்கும் அளித்த செல்வம் யாருக்கும் அந்நியப் பொருளல்ல.

இன்பங்கள் அனைத்தையும் இறைவனுக்கு வேள்வியாக்கும் வேதகால வாழ்க்கையை இன்று புனர் நிர்மாணிப்பது அசாத்தியமாயிருக்கலாம். என்றாலும் அவ்வாறு வாழ்ந்தவர்களின் உன்னத உணர்வுகளை உறைவித்துத் தரும் மந்திரங்களையேனும் நாம் நினைவுக்குத் தந்து கொள்ள வேண்டும். நம் தலைமுறை வரை வாய்மொழியாக வந்துவிட்ட வேத சாகைகளை நமக்குப் பின் வருபவர்களுக்கும் காத்துத் தர வேண்டும்.

புத்தகத்திலிருந்து படித்துப் பாடம் பண்ணுகிற விஷயமல்ல வேத மந்திரங்கள். மனிதனின் உயிருக்குள் ஊறி, அவனது வாய்மொழியாக வெளி வந்து இன்னொரு செவி மூலமாக மற்றோர் உயிருக்குள் பாய வேண்டியது அது. வேதம் நசியாதிருக்க வேண்டுமெனில் சிலர் வேறு சிந்தனையின்றி வேதமோதுவதையே ஆயுட்காலத் தொழிலாகக் கொள்ள வசதி அளிக்க வேண்டும்.

'என்னுடைய இந்த வேத வாக்குகளை, வரப்போகும் யுகங்களெல்லாம் எதிரொலிக்கும்' (ஏதத் வசோ....... கோஷான் உத்தரா யுகானி) என்று ரிஷி நம்பிக்கையுடன் கானம் செய்ததை நம் முன்னோர்கள் மெய்யாக்கி வைத்தார்கள். நாமும் அதனை மெய்யாக்குவோமாக!

வேதத்தை வாழ்விக்கும் புனிதப் பணியில் நம் வாசகர்களை ஈடுபடுத்து முகமாக அக்காலத்தின் பெருமையை விளக்கும் ஓவிய மடலொன்றை இங்கு அளிக்கிறோம். வேத காலத்தின் தனிப் பெருமை அதன் புனிதம் மிகுந்த அழகுணர்ச்சி. புனிதமும் அழகும் இணைந்து வாழும் இடம் எது? பெண்மை. வேத கால சமூகத்தில் பெண்களுக்கு உயர்ந்த இடம் அளித்திருந்தனர்.

பகவான் என்ற பதத்தின் வேர்ச் சொல்லாகிய 'பக' என்பதைப் பொருத்திப் பெண்களை 'ஸுபகே' என்றும், மங்கள நிலையமாக அவர்களைக் கருதிக் 'கல்யாணி' என்றும் கௌரவமாக, சுந்தரமாக அழைத்தார்கள். 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதாக அன்னையை முன்வைத்துத் தமிழ் மரபு பேசுவது போல் வேதமும் முன்பே பேசியிருக்கிறது.

அன்னையைத் தெய்வமாகச் சொல்வது போலவே, ரிஷிகள் தெய்வத்தை அன்னையாகவும் கண்டனர். அதர்வ வேதத்தில் 'நீ பெண்; நீயே ஆண்' (த்வம் ஸ்த்ரீ, த்வம் புமான் அஸி) என்று பரம்பொருளை முதலில் பெண்ணாக பாவித்துப் போற்றுகிறார்கள்.

வேத காலக் கடவுளர்களில் பெண் தெய்வங்களாகிய அதிதியும், சரஸ்வதியும், உஷையும், துர்க்கையும், லக்ஷ்மியும் அற்புதத் துதிகளால் போற்றப்படுகின்றனர். இளங் காலையை உஷையாகக் கண்ட ரிஷிகள் இரவையும் ராத்ரீ என்ற பெண் தெய்வமாகவே வழிபட்டனர்.

ஸூரியா, ஸாவித்ரீ, இந்திராணி, ஊர்வசி முதலிய தேவ ஸ்திரீகள் ரிஷிகளும் ஆவர். மண்ணுலகில் மானுட ஸ்திரீகளாக வாழ்ந்த விச்வவாரா, அபாலா, லோபாமுத்திரை, சிபலி, கோஷா, காக்ஷீவதி, மைத்ரேயி, கார்கி, வாகாம்ப்ருணி முதலிய நாரீமணிகளும் ரிஷிகளாகப் பல வேத மந்திரங்களைக் கண்டு நமக்கு அளித்திருக்கிறார்கள்.

தாவர வர்க்கத்தில் எவ்வளவு புனிதமாகக் குடும்ப வாழ்வு நடக்கிறதோ அதே போல் மனிதர்களும் கணவன்–மனைவி உறவைத் தூய்மையாக வாழலாம் என்பதற்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறது வேதகால வாழ்வு. யக்ஞங்களில் பதியைப் போலவே பத்தினியும் ஈடுபட்டிருந்தாள். சத்தியத்தின் உருவமாகப் பதியும், சிரத்தையின் உருவமாக ஸதியும் வேள்வி செய்தனர். பத்தினி மட்டும் செய்யக் கூடிய ஒரு வேள்வியும் உண்டு. ஸ்திரீகள் அக்னிஹோத்ரம் செய்தது குறிப்பிடப் படுகிறது. நாட்டில் புத்தி வாய்ந்த பெண்கள் தோன்ற வேண்டும் என்று யஜுர் வேதம் பிரார்த்திக்கிறது. கல்வியில் சிறந்த பெண்ணைப் பெறுவதற்காக அரிசியை எள்ளோடு கலந்து நெய்யில் வேகவைத்து உண்டு நோன்பு இருந்திருக்கின்றனர். பெண்களுக்கும் உபநயன ஸம்ஸ்காரம் செய்வித்தனர்.

இல்லறம் நடத்தும் சுமங்கலியின் பாவனமான மகிமையைப் பற்றி வேதம் கூறும் மந்திரங்கள் நம்மைப் புரித்து நெகிழச் செய்யும். மாசற்ற மனைவி மணாளனிடம் உறைவது போல (அருவதியா பதி ஜுஷ்டேவ நாரீ) பரம்பொருள் பிரபஞ்சத்தில் புனிதமயமாக உறைகிறது என்று ரிக்வேதம் கூறுகிறது. மந்திர வாசகங்கள் முனிவரின் மனக் கண் முன் மிளிர்வது, திவ்விய வஸ்திர மணிந்த அன்புப் பத்தினி கணவன் முன் தோன்றுவது போல் உள்ளது (ஜாயேவ பத்ய உசதீ ஸுவாஸா:) என்கிறது ஒரு மந்திரம். 'மணமகள் மணமகனை ஏற்றுக் கொள்வது போல் என் மந்திரத் துதியை ஏற்றுக்கொள்' என்று ஆண்டவனிடம் ரிஷி பிரார்த்திக்கிறார். மனைவியே மனை; ஜாயேதஸ்தம் என்கிறது ரிக்வேதம். கணவனின் அன்பைப் பெறும்போது ஜாயா என்றும், குழந்தைகளுக்குத் தாயாக அருள் சுரக்கும் போது ஜனி என்றும், வேள்வியில் பங்கு கொண்டு தெய்விகத்தில் இசையும் போது பத்தினி என்றும் மாதரை அழைத்தார்கள்.

முனிவர்களின் அநுபவங்களைப் பெற்றிருந்த மங்கையர் அவர்களின் வாதங்களிலும் ஈடுபட்டு ஆத்ம ரகசியங்களை அறிந்து கொண்டனர். ஜனகர் சபையில் யாக்ஞவல்கியரைக் கேள்வி மீது கேள்வியாகக் கேட்டாள் கார்கி வாசக்னு. 'உன் தலை புவியில் உருளும்' என்று அவர் ஆத்திரப்பட்டுப் பேசிய பின்னரும் விடாமல் வினாத் தொடுத்து அக்ஷரப் பிரம்மத்தைப் பற்றி விசாரித்தறிந்தாள்.

வாழ்வின் இன்ப துன்பங்களில் எல்லாம் பெண்மைக்கு முதலிடம் தரப்பட்டிருந்தது. வாழ்வே முடிந்து போன பின் ருத்ர பூமியில் நிலவும் மகத்தான சோகச் சூழலில் கூடப் பெண்களின் பெருமைக்கு முதலிடம் தரப்பட்டது. பரம்பொருளின் விளையாட்டாகிய உலக வாழ்க்கையையே தங்கள் விளையாட்டாகவும் மகிழ்ந்து விளையாடிய ஸ்திரீகள் ருத்ரபூமியில் நடைபெறும் இறுதிச் சடங்குகளைக் கண்ட பின்னும் மனம் குலையாமல் மகத்தான சாந்தியுடன் நிற்கிறார்கள். கண்ணீர் இழியாத கண்ணான முகமும், களையாத திரு ஆபரணங்களும், கலையாத கண் மையுமாகக் கம்பீரமாக நிற்கும் அந்தப் பெண்மணிகளை முதலில் திரும்பி இல்லத்தில் பிரவேசிக்குமாறு கேட்டுக் கொண்டு, அவர்களின் சாந்த நிழலிலேயே ஆண்மக்கள் பின் செல்கிறார்கள். இதனைக் கூறும் அற்புதமான மந்திரம் ரிக்வேதம் அதர்வ வேதம் இரண்டிலும் காணப்படுகிறது.

சௌந்தரிய நுட்பமும், சாந்தத் திட்பமும் இசைந்து வாழ்ந்த அந்தப் பெருமகளிரின் வாழ்வைக் குறித்த 'வேத கால வனிதையர்' என்ற ஓவிய மடலை நம் கண்ணும் கருத்தும் குளிரச் சைத்ரீகர் ராஜம் நமக்கு அளிக்கிறார்.

**முதல் சித்திரம்:** பனிமலையிலிருந்து பிரித்துச் சொல்ல முடியாதவாறு முக்கண் படைத்த திரயம்பகனாகிய பரமேசுவரன் அமர்ந்திருக்கிறான். இறைவனின் முடிமீது படிந்த மதியே உருகி நதியாய்ப் பெருகுவது போல் கங்கா தேவி பிரவகிக்கிறாள்.

ஞானிகளும் பழுத்த இல்லறத்தவர்களும் இறைவனிடம் வேண்டுகிறார்கள்: 'நறுமணத்தவனும், ஊட்டமளிப்பவனுமான திரயம்பகனை வேண்டுகிறோம்; வெள்ளரிக் கொடியிலிருந்து, முதிர்ந்த வெள்ளரிக்காய் நோவின்றி, பதமாக, இற்று விடுபடுவது போல நாங்கள் மரணத்தினின்று விடுபட வேண்டும். ஆனால் மோக்ஷத்தினின்று ஒருநாளும் விடுபடக் கூடாது' என்று. ஞானக் கனிகளின் இந்த மந்திரத்தையே சிறிது மாற்றி எழில் மலர்களான கன்னிகைகள் மறுபுறத்தில் அதே பரமேசுவரனைப் பிரார்த்திக்கிறார்கள்: 'நறுமணத்தவனும், ஊட்டமளிப்பவனுமான திரயம்



பகலை வேண்டுகிறோம். வெள்ளைக் கொடிகளிலிருந்து, முதிர்ந்த வெள்ளரிக்காய் நோவின்றி, பதமாக, இற்று விடுபடுவது போல் நாங்கள் பிறந்தகத்திலிருந்து விடுபட வேண்டும்; ஆனால் புகுந்த இடத்திலிருந்து ஒரு நாளும் விடுபடக் கூடாது' என்று. இரண்டும் வேத மந்திரங்கள். சந்நியாசப் பிரார்த்தனைக்குச் சமமாக, யுவதிகளின் திருமணப் பிரார்த்தனையை மதித்த பான்மையை என்னென்பது!

**இரண்டாம் சித்திரம்:** பெண்கள் திருமணத்தைத்தான் விரும்பினார்கள் என்பதில்லை. திருமண வாழ்வை நல்ல முறையில் நடத்தியபின் தகுந்த தருணம் வந்தபோது சந்நியாசியாகப் புறப்படக் கணவன் முற்பட்டபோது தாங்களும் சந்நியாசினிகளாகப் புறப்பட விரும்பிய ஸ்திரீகள் வேத காலத்தில் வாழ்ந்தார்கள். அதோ யாக்ஞவல்கிய முனிவரின் முன்பு சிஷ்யக் குழந்தைபோல் புனிதம் இலங்க உபதேசம் கேட்கும் மைத்ரேயியைப் பாருங்கள். காத்தியாயனி, மைத்ரேயி ஆகிய இரு மனைவிகளுடன் இனிதாக இல்லறம் நடத்தியவர் யாக்ஞவல்கியர். இல்லறத்தை நீத்துப் புறப்பட அவர் விழைந்தபோது தாம் பெற்றிருந்த செல்வத்தை இரு மனைவிகளுக்கும் பிரித்து அளித்தார். பசுக்களையும் அக்காலத்துப் பொற்காசுகளையும், வஸ்திரங்களையும், தானியங்களையும் கணக்குப் பார்த்துக் காத்தியாயனி திருப்தி அடைந்து விட்டாள். மைத்ரேயி புத்திசாலி. இத்தனை செல்வத்தையும் விட்டு விட்டுக் கணவர் மகிழ்ச்சியுடன் புறப்படுகிறார் என்றால் அவர் இனி பெறவிருக்கும் செல்வம் இவற்றை விட உயர்ந்ததாகத்தானே இருக்க வேண்டும் என்று எண்ணுகிறாள். அந்தச் செல்வத்துக்காகத் தானும் தாகம் கொள்கிறாள். அந்தச் செல்வத்தைப் பற்றிக் கூறுமாறு கணவனைக் கேட்கிறாள். அன்பு சொட்டச் சொட்ட அவர் பரம்பொருளைப் பற்றி அவளுக்கு உபதேசிக்கிறார். தமக்கு அவளிடம் உள்ள அன்பும் அவளுக்குத் தம்மிடமுள்ள அன்பும் அவர்களின் உள்ளுறையும் பரம்பொருள் என்ற அன்புப் பண்டத்தின் எதிரொலிதான் என்று விளக்குகிறார்.

அதோ இன்னோர் ஆசிரமத்தில் வேறொரு மந்திரம் சித்திரமாகிறது. 'தாய் தந்தையர் பிள்ளைக்கு உபதேசிப்பதுபோல் எனக்கு உபதேசித்து அருள்' என்று ஒரு பெண் ரிஷி ஆண்டவனிடம் பிரார்த்தித்ததை ஆதாரமாகக் கொண்டு இச் சித்திரத்தைத் தீட்டியிருக்கிறார் ஓவியர். தந்தையோடு தாயும் சேர்ந்து சரீரம் முழுவதுமே மந்திரத்தில் ஊறி மொழிவதுபோல் ஸ்வரத்தை உச்சரிப்பதைக் கவனியுங்கள். இங்கே பதி பத்தினிக்கு உபதேசிக்கிறார். அங்கே பெற்றோர் புதல்வனுக்கு உபதேசிக்கிறார்கள். எத்தகைய ஆத்மிக வாழ்வு!

**மூன்றாவது சித்திரம்:** வேத காலத்தில் பெண்ணுக்களித்த பெருமைகள் எல்லாம் பொங்கி நின்றது திருமணத்தில்தான்.

ஸாவித்ரி தேவனின் பெண்ணான ஸூர்யாவின் விவாக வருணனையில் அந்நாள் மணவினை பற்றி அறிகிறோம். அதோ உள்ள வெண்காளை பூட்டியுள்ள ரதம்தான் ஸூர்யாவின் வாகனம். அவளிடம் அன்பு கொண்ட பூஷன், இளங்காலை ஒளி என்ற தங்கப் படகில் ஏறி, தனது பிரேமையே துடுப்பாக உந்தித் தன்ன வானமாகடலை அளைகிறான். அந்தச் சாகஸச் செயலைக் கண்டு மகிழ்ந்த தேவர்கள் ஸூர்யாவை அவனுக்குக் கன்னிகாதானம் செய்து கொடுக்கிறார்கள். அல்ல, பெண்ணைப் பெருமைப்படுத்திய ரிஷிகள் ஸூர்யாவைப் பூஷனுக்குக் கொடுத்ததாகக் கூறவில்லை. பூஷனை ஸூர்யாவுக்குக் கொடுத்ததாகத்தான் சொல்கிறார்கள் (யம் தேவாஸோ அதது: ஸூர்யாயை). பயிர்த் தொழிலையும், பசு வளர்ப்பதையும் முக்கியமாகக் கொண்ட வேத காலத்தின் விவசாய தேவதையான பூஷன் கையில் தார்க்குச்சியுடன் ஆடுகள் மேய்ப்பதையும், காதல் பெண் கடைக் கண் பணியில் இவன் காற்றிலேறி அவ்விண்ணைச் சாடியவுடன் மணமுடித்துத் தந்த சூரியன், இந்திரன், மிருத்யு ஆகிய தேவர்களையும் சித்திரத்தில் காண்கிறோம்.

'இட்டலட்டமான அங்கங்களும், வழுவழுப்பான கேசமும், கழுத்துக்கு மேல் இயல்பாகச் சுருண்ட இரு குழல் கவிழவுமாக' வேதம் வருணிக்கும் பெண்ணழகை ஸூர்யாவிடம் காண்கிறோம். ரிக் வேத காலத்தில் பால்ய விவாகம் நடக்கவில்லை என்பதையும், வதூ — வரன் இருவரும் ஏறக்குறைய சம வயதினராயிருந்தனர் என்பதையும் ஓவியத்தில் காண்கிறோம். இருவரும் ஒரேபோல் 'நிஷ்கம்' என்ற தங்கக் காசுகளாலான மாலையும், கர்ண சோபனம் என்ற காதணியும் அணிந்திருப்பதைப் பார்க்கிறோம். பிறந்த வீட்டிலிருந்து விடுபட்டு அவள் கணவனுடன் செல்லப் போகிறாள் என்பதற்கு அறிகுறியாக அவளது முடி தளர்ச்சியாக அவிழ்ந்து விடப்பட்டிருக்கிறது. அவன் அவளை அழைத்துச் செல்லு முன் மதுக மலர் மாலையை அவளுக்கு அணிவிக்கிறான். இல்லற இடுக்கண்களைத் தீர்ச் செய்வதற்காக முள்ளம்பன்றிக் கொம்பையும், சிக்கல்களைக் களைவதற்காக முப்புரி நூலொன்றையும் (இதுவே பிற்காலத்தில் மங்கல சூத்திரமாக உருப்பெற்றிருக்கக் கூடும்) அவளது வலக் கரத்தில் தரும் பூஷன், சௌந்தர்யத்தின் சின்னமான கண்ணாடியை இடக் கரத்தில் அளிக்கிறான். அவளது உறவுக்காரப் பெண்ணொருத்தி, தோஷங்களைப் போக்கும் ரக்ஷாபந்தனமாக மூன்று மணிகள் பதித்த செல்விய இடைப் பட்டாடையைக் கட்டுகிறாள். ஆகா, அவர்களுடைய ஆடையின் இதமான வண்ணங்களைக் கவனியுங்கள். வேத காலத்தில் மெல்லிய கம்பளி ஆடைகள் உபயோகமாயின என்று அறிஞர்கள் சொல்கிறார்கள்.

மணமக்கள் இருவரின் தூய்மை நிறைந்த நெருக்கத்தைக் காணும்போது கணவன் மனைவியிடம் கூறும் விவாக மந்திரங்கள் நம் காதுகளில் ஒலிக்கின்றன.

'நான் கீதம் (ஸாமம்); நீ தோத்திரம் (ரிக்); நான் வானம்; நீ பூமி.'

'நம் இருவரின் நயனங்களும் மதுவைப் பொழியட்டும்; நமது திருமுகங்கள் அஞ்சனமென மிருதுவாக விளங்கட்டும்; என்னை உன் இதயத்தில் பொதிந்துகொள்; நமது மனங்கள் ஒன்றாகவே இசைந்து விளங்கட்டும்.'

மணவினையின்போது மனைவியும் மந்திரம் மொழிந்து ஆஹுதி செலுத்துகிறாள். 'என் உறவினர்க்கெல்லாம் நான் மகிழ்ச்சி அளிப்பேனாக! என் பதி நீண்ட காலம் வாழ்வாராக! ஸ்வாஹா!' என்று கூறி ஆஹுதி அளித்தாள். தன் அன்பில் கணவனைக் கட்டிப் போட்டதற்கு அடையாளமாகத் தனது உத்தரீயத்தால் அவனைச் சுற்றிக் கொண்டு ''உங்களுக்குக் கடிவாளம் போட்டு விட்டேன்; நீங்கள் என் சொத்து'' என மந்திரம் மொழிந்தாள்.

இதெல்லாம் சிருங்காரக் கவிகளின் கேளிக்கைப் பேச்சு மட்டுமல்ல. வேத காலத்து மண வாழ்க்கையில் உயிர்த்துடிப்போடு புனிதமும் கட்டுப்பாடும் கூடவே இலங்கின. அன்பு உணர்ச்சியின் வேகங்களையும் மென்மைகளையும் ஒயில்களையும் ஞான மயமான கட்டுப்பாட்டில் அடக்கி கிருகஸ்தாசிரமம் நடத்திய காலம் அது. மணமகன் வீட்டுக்குச் சென்ற பின் இளம் தம்பதியர் மனக்கிளர்ச்சியின்றி இரவு முழுவதும் அகண்ட வெளியை நோக்கித் தியானம் புரிந்திருக்கின்றனர்! நட்சத்திரங்கள் மறையும் பொழுதில் மோனத்தைக் கலைத்து அவன் அவளுக்கு அருந்ததித் தாரகையைச் சுட்டிக் காட்டியிருக்கிறான்.

புக்ககத்தில் மாற்றுப் பெண்ணை வரவேற்கும் மந்திரங்களைத்தான் என்னென்பது? ''இவ்வீட்டின் எஜமானியாக வா; இங்கே ராணியாக ஆள்வாய்; மாமனாருக்கு ராணியாக, மாமியாருக்கு ராணியாக, நாத்தினளுக்கு ராணியாக,



மைத்துனர்களுக்கு ராணியாக வா'' என்று வரவேற்றிருக்கிறார்கள்.

இளம் மனைவியை அறிஞர் சபையில் பேச வைத்திருக்கிறார்கள். பெண் சுதந்திரத்தின் உச்ச நிலையை இங்கே காண்கிறோம் அல்லவா?

**நாலாவது சித்திரம்:** வேத காலத்தில் இல்லறம் முழுவதுமே யக்ஞம்தான். சக்கரத்தின் குடத்தைச் சுற்றி ஆரங்கள் சுழல்வதுபோல் வேள்வித் தீயைச் சுற்றிக் குடும்பத்தினர் வாழ்ந்தனர் என்கிறது அதர்வ வேதம். இவ் வேள்விகளில் முக்கியமானது ஸோமரஸத்தைக் கொண்டு செய்வது. சாறு, செழுஞ் சாறு: ரஸம், ரஸகனம் என்று கூறப்படும் பரமாத்மச் சுவைக்கு ஓரடையாளம் தித்திக்கும் தேமதுரமான ஸோமரஸம். வேதகால உணர்வுகள் இன்று நசித்து விட்டது போல் ஸோமா என்ற மூலிகையும் நசித்து விட்டது. எனினும் அறிஞர்கள் அக்கால ஸோமாவைப் பற்றி ஆராய்ச்சி செய்து பல முடிவுகள் கண்டிருக்கிறார்கள். ஸோமாவில் ஒரு வகையானவை ஸரோவரத்தில் வளர்ந்ததாகவும் பொன் வாழைமரம் போன்ற இந்த ஸோமா வளர்பிறைப் பிரதமையிலிருந்து பௌர்ணமி வரை தினம் ஒன்றாக ஓர் இலையை வெளியிட்டதாகவும் சொல்கிறார்கள். தோல் விரிப்பின் மீது உரல் வைத்து ஸோமா இலைகளைக் கணவனும் மனைவியும் மந்திரபூர்வமாக ஒரே சிந்தனையுடன் இடித்தனர். சாற்றை மரத் தொட்டியில் பிடித்து தேவதைகளுக்காக சாமு என்ற கோப்பையிலும், புரோஹிதர்களுக்காகக் கலசத்திலும் நிரப்பினர்.

ஸோமரஸம் பிழிவதோடு வேறு பல கடினமான காரியங்களையும் இல்வாள் ஆனந்தமாகச் செய்தாள். நெசவு பெரும்பாலும் பெண்டிராலேயே செய்யப்பட்டது. கம்பளத்தில் சிங்கார இழை வேலைப்பாடுகள் செய்தனர். 'க்ரோஷா' வைப் போல் முள்களை வைத்துக்கொண்டு பின்னல் வேலைசெய்து கண்டகிகாரி என்று பெயர் பெற்றனர். கூடைகள் பின்னுவது, மாவு அரைப்பது போன்ற காரியங்களையும் செய்தனர். 'தம் தந்தை வைத்தியர்; அன்னை மாவரைப்பவள்' என்று ஒரு ரிஷி பாடியிருக்கிறார்.

ரிக் வேத காலத்தில் பெண்கள் செய்த தொழில்களை யெல்லாம் பாங்குற விளக்கும் இச்சித்திரத்தில் ஆண்கள் செங்கல் வைத்து விசாலமான வீடுகள் கட்டுவதில் தேர்ந்திருந்தார்கள் என்பதையும் குறிப்பால் காண்கிறோம். 'நமக்குத் தொழில் கவிதை' என்று நவயுகக் கவி பாடினார். கவிதையே தொழிலாகவும், தொழில்கள் எல்லாம் கவிதையாகவும் வாழ்ந்தவர்களை இங்கு நாம் காண்கிறோம்.

**அடுத்த சித்திரத்தில்** வேதகால மாதர்களின் அற்புதமான ஆத்ம அநுபவத்துக்கு ஓர் உதாரணத்தைக் காண்கிறோம். தேவீஸூக்தம் எனப்படும் மந்திர மாலையில் வாகாம்ப்ருணி என்ற ரிஷிகுமாரி—இவளே ஒரு ரிஷியுமாவாள்—தான் பிரம்மத்துடன் ஒன்றியிருந்து, பிரம்ம சக்தியாகப் பிரபஞ்சம் முழுவதையும், பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்ட தெய்வங்களையும் இயக்கி வைத்ததை முழங்குகிறாள். சூரியனையும், வருணனையும், இந்திரனையும், அக்கினியையும் தானே இயக்குவதாகக் கூறும் வாகாம்ப்ருணி 'நான்தான் ருத்திரனுக்கு வில் பூட்டித் தருகிறேன்' என்னும் போது நம் உள்ளம் விம்முகிறது. சாந்தமயமாகக் குழந்தை போல் பரமேசுவரன் அவளிடம் வில் வித்தை பயிலுவதையும், பின்னர் கோபத்தில் ஜொலித்துக் கொண்டு ருத்திரனை அசுரர் மீது அம்பு பொழிவதையும் சித்திரத்தில் காண்கிறோம். காதளவு இழுத்த நாணின் ஒலி காமினியின் கிசுகிசுப்பாகத் தொனிக்கிறது என்று வீரத்தையும் வனிதையரோடு ஒட்டிப் பேசும் மந்திரமும் நினைவு வருகிறது. அக்காலத்தில் மரத்தாலான வில்லில் இரும்பு நுனியையுடைய அம்புகளைத் தொடுத்ததையும், அம்பறாத் தூணிகள், உடற் கவசம், கைக் கவசம் முதலியன பயன்பட்டதையும் படம் குறிப்பிடுகிறது.

**ஆறாவது சித்திரம்:** வேதக் கவிதையின் வனப்புக்கள் எல்லாம் மலரும் பல துதிகளைப் பெற்ற உஷையை இங்கு காண்கிறோம். சூரிய பகவான் தெரிந்தும் தெரியாமலும் தோன்றும் வைகறைப் பொழுதே உஷை. அந்தப் போதின் செவ்விள ஒளியையே குதிரையாக்கி அவள் அழகுப் பவனி வருகிறாள். பொழுது புலரும் அந்த அமைதியில் உழவர்கள் தங்கள் தொழிலைத் தொடங்குகிறார்கள். வேத வித்துக்கள் வேள்விக்குப் புறப்படுகிறார்கள். பிரம்மவாதினியாகிய விசுவவாரா என்ற பெண்ரிஷி ஒளி ஊறும் கிழக்கு திசையைப் பார்த்தபடி தேவதைகளைத் துதித்தவாறு வேள்வி நிவேதனங்களிட்ட கும்பத்தைக் கையிலேந்திச் சென்று ஒரு திவ்யமான நாளைத் தொடங்குகிறாள்.

வேதகாலத்து சிருங்கார ரஸத்தை **அடுத்த ஓவியம்** சித்திரிக்கிறது. அதோ தலையை நான்கு பின்னல்களாகத் திரித்து விட்டுக் கொண்டு (சதுஷ்கபர்த்தினி) சயனித்திருக்கும் அழகியிடம் அந்த வீணாதாரனுக்குப் பிரேமை. ('ஒலிக்கு முரசம்; மகோன்னதத்துக்கு வீணை': மஹாவீணாவாதம் என்கிறது யஜுர் வேதம்) இரவு வேளையில் அவளது வீட்டில் உள்ள எல்லோரையும் உறங்கச் செய்து, அவள் மட்டும் விழித்திருக்குமாறு செய்யும் வசீகர மந்திரங்களை அவன் பாடி வருகிறான். அது சரி, வாசல்புறத்தில் இன்னொரு யுவன் இருக்கிறானே, அவன் யார் என்பீர்கள். இங்குதான் வேத காலக் காதலில் உள்ள கட்டுப்பாட்டைக் காண்கிறோம். வாலிபர்கள் தாமாகக் காதல் பேசாமல் நண்பர்கள் மூலம் அன்பை யுவதிக்குத் தெரிவிப்பதாக வேதத்தில் கூறப்படுகிறது. ஒத்த வயதினனை இளைஞனைக் கொண்டு காமினியிடம் ஒருவன் பிரேமையைத் தெரிவிப்பதெனில் அக்காலத்தில் நண்பர்களிடம் எத்தகைய அந்நியோந்நிய பாவமும், நம்பிக்கையும் நிலவியிருக்க வேண்டும்?

**கடைசிச் சித்திரம்** அக்காலத்துக் கேளிக்கைத் திருவிழாவாகிய ஸமநாவை விளக்குகிறது. இரவிலிருந்து உதயம் வரையில் இந்த விழா நடைபெறும். தேர்ப் போட்டி, தாய விளையாட்டு இவை அங்கு இடம் பெறும். பொன்னகையும், புன்னகையுமாகக் கன்னியர் அங்கு வாலிபர்களோடு ஆடுவர்; பாடுவர்.

மிருதங்கம் முதலிய சர்ம வாத்தியங்கள், வீணை முதலான தந்திரீ வாத்தியங்கள், குழல் முதலிய ரந்திர வாத்தியங்கள், தாளம் தட்டும் லோஹ வாத்தியங்கள் ஆகிய யாவுமே வேத காலத்தில் உண்டு என்பதை ஓவியத்தில் காண்கிறோம்.

யுவதிகள் தங்கள் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்க அங்கு வருவார்கள். ஆணும் பெண்ணும் சமமாகப் பங்கு கொண்டதால்தான் இவ்விழாவுக்கு ஸமநா என்று பெயர் வந்தது என்பர். வேதகால உணர்வுகள் நசித்தும், 'சரிநிகர் சமான'த்தை மட்டும் முழக்கும் இக்காலத்துக்குப் பொருத்தமாக ஸமநா காட்சியோடு சித்திர மடல் நிறைகிறது.



# குழந்தையின் கேள்வி!

சிறுவன் மணியும் அவன் தங்கை கமலாவும் ஆளுக்கொரு வெள்ளைக் காகிதத்தை வைத்துக் கொண்டு தனித்தனியே பட்டியல் தயாரித்துக் கொண்டிருந்தார்கள். பென்சிலால் எழுதுவதும், அடிப்பதும், திருத்துவதுமாக ஒவ்வொருவரின் பட்டியலும் நீண்டு கொண்டிருந்தது. தீபாவளிக்கு அவர்களுக்குத் தேவையான பொருள்களின் திட்டம் அது.

திடீரென்று மணிக்கு ஒரு சந்தேகம் முளைத்து விட்டது. ''கமலா! எதுக்காகத் தீபாவளி வருதுன்னு தெரியுமா உனக்கு?''

கமலா பதில் சொல்லத் தெரியாமல் விழித்தாள். அவளுடைய வட்ட வடிவமான முகத்தின் அகன்ற விழிகள் அவளது அறியாமையை ஒப்புக் கொண்டன. மணிக்குப் பெருமை தாங்கவில்லை. அவளை அருகில் இழுத்து வைத்துக்கொண்டு தன் அறிவை அவள் செவிகளின் வாயிலாக ரகசியமாக இறக்குமதி செய்தான். புதுச் சட்டைகள் போட்டுக்கொள்ளவும், நெய்ப் பலகாரம் சாப்பிடவும், பட்டாசுகள் சுட்டுத் தள்ளவும் தீபாவளி வருகிறதென்பது அவன் வாதம்!

''போடா, மண்டு!'' என்றாள் கமலா; ''இது யாருக்குத் தான் தெரியாது?''

''சந்திரன்தான் எனக்குச் சொன்னான்'' என்றான் மணி. சந்திரன் அவர்கள் குடியிருந்த வீட்டுக்காரரின் பிள்ளை.

''அவன் உன்னைவிட மண்டு!'' என்றாள் கமலா.



அகிலன்

''சரி, நீ, நான், சந்திரன் மூணு பேருமே மண்டு. இதை அப்பாகிட்டே கேட்போமா?''

''வேண்டாம், அம்மாவையே கேட்போம்'' என்றாள் கமலா.

பிறகு இருவரும் சுறுசுறுப்பாகத் தங்கள் பட்டியலை முடித்து, மற்றவர்களிடம் காண்பித்துக் கொண்டார்கள். கமலாவின் எழுத்து அவளைப்போலவே அழகாக இருந்தாலும் அவள் வாலைப்போலப் பட்டியலும் நீட்டமாக இருந்தது. அடுத்தாற்போல் அவைகளை அப்பாவிடம் சேர்ப்பிக்க வேண்டும். இது அந்த வீட்டுத் தலைவர் சோமசுந்தரம், பி.ஏ.,பி.டி. ஏற்படுத்தி வைத்திருந்த வழக்கம். அவர் மனைவி சரஸ்வதி முதற்கொண்டு அவரிடம் எதையும் வாயால் கேட்கக் கூடாது. காகிதத்தில் எழுதி வைக்க வேண்டும்.

மணிக்கு ஒன்பது வயது; பரவலான முகம்; அகன்ற நெற்றி; கூர்மையான பார்வை. தகப்பனாரைக் கொண்டு பிறந்தவன் அவன். கமலா அவனைவிட இரண்டு வயது சிறியவள். அகன்ற விழிகளும் நெளி நெளியாய் அடர்ந்த கூந்தலுமாகத் தன் தாயை உரித்துக்கொண்டு வந்திருந்தாள்.

கலை சிந்தும் முகமும் ஒளி பொங்கும் விழிகளும் கொண்ட அவர்கள் சதைப்பிடிப்பு இல்லாத துள்ளித் திரியும் மான் குட்டிகள்போல் துறுதுறுவென்று திரிந்தனர். தாயார் பெட்டி போட்டுக்கொடுத்த மடிப்புக் கலையாத சட்டைகளில் ஒவ்வோர் இடத்தில் தையல் போடப் பட்டிருந்தது. ஏழைமையில் செம்மையும், எளிமையில் அழகும் அவர்களிடம் ஒட்டிக் கொண்டிருந்தன.

மிகப் பெரிய காம்பவுண்டுச் சுவருக்குப் பின்புறம், அதன் கடைசிக் கோடியில் இரண்டே அறைகள் உள்ள சிறு வீட்டில் அவர்கள் குடியிருந்தார்கள்...பின்புறத்துச் சந்தின் பக்கம் அவர்களுக்கு வாசற்படி. முன்னால் இருந்த ஒட்டுத் திண்ணையில் குழந்தைகள் மட்டுமே உட்கார முடியும். இப்போது காலை நேரம். காலை வெயில் அங்கு வருவதில்லையாதலால் குழந்தைகளுக்கும் அது ஏற்ற இடமாகப் போய்விட்டது.

பட்டியலை எடுத்துக்கொண்டு மணி வீட்டுக்குள் நுழைந்தான். தாயார் சரஸ்வதி குழந்தைகளுக்கு முதலில் சாப்பாடு போடுவதற்குத் தயார் செய்து கொண்டிருந்தாள். குளியலறையில் அப்பா வேஷ்டி துவைக்கும் சத்தம் கேட்டது. சந்தடி செய்யாமல் அப்பாவின் மேஜைமேல் பட்டியலை வைத்து, அப்பா 'பேப்பர் வெயிட்'டாக உபயோகிக்கும் கூழாங்கற்களில் ஒன்றை அவற்றின்மேல் நகர்த்திவிட்டான். பிறகு அவனும் கமலாவும் சாப்பிட உட்கார்ந்தார்கள்.

''அம்மாவிடம் அதைக் கேட்கலாமா?'' என்று மணியின் காதைக் கடித்தாள் கமலா. தீபாவளிபற்றிய விளக்கத்தைத்தான். ''சாயங்காலம் ஆகட்டும்!'' என்று பதிலளித்தான் மணி. அப்பா குளித்துவிட்டு வருவதற்குள் பள்ளிக்கூடத்துக்கு நழுவி விடவேண்டும் என்பது அவன் எண்ணம்.

அப்பா கட்டாயம் கோபித்துக்கொள்ள மாட்டார். ஆனாலும் என்னவோ தெரியவில்லை, அவனுக்குப் பயமாயிருந்தது. குற்றம் புரியும் உணர்ச்சி அவனுக்குள் குறுகுறுத்துக் கொண்டிருந்தது. தகப்பனாரின் சக்திக்கு மீறிய ஒரு பளுவை அவர் தலைமேல் தூக்கி வைத்து விட்டது போன்ற தயக்கம் அவனுக்கு. என்றாலும் 'அடுத்த வீட்டுச் சந்திரனுக்கு அவன் அப்பா வாங்கிக் கொடுக்கும்போது நம் அப்பா ஏன் நமக்கு வாங்கிக்கொடுக்கக் கூடாது?' என்ற வீம்பும் அவனை விடவில்லை.

பரக்கப் பரக்க அவர்கள் இருவரும் பையை எடுத்து மாட்டிக் கொண்டு செருப்புக்களைப் போட்டுக் கொண்டு பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பினார்கள்.

அவர்களுடைய பள்ளிக்கூடம் ஒன்பதரை மணிப் பள்ளிக்கூடம். அது அருகில் இருந்தது. அப்பாவுக்குப் பத்தரை மணிக்குப் போனால் போதும். அது தொலைவில் இருந்தது.

சோமசுந்தரம் குளித்து முழுகி, மாற்றுடை உடுத்துக் கொண்டு மேஜைக்கு வந்தார். இளமை நிறைந்த தோற்றம் தான் அவருடையது. ஆனால் அதன் தளதளப்புக்குப் பதிலாக இறுக்கமே அவர் முகத்தில் நிலவியது. புன்முறுவலுடன் பட்டியலைக் கையில் எடுத்தார். முறுவல் மறைந்து நெற்றி சுருங்கியது. அவருக்குக் கோபம்கூட வந்தது. தம்முடைய நெற்றியை மெல்லத் தடவி விட்டுக் கொண்டார்.

சில்க் சட்டை, உல்லன் சராய், பூட்ஸ்கள், பட்டாசு வகைகள் வேண்டுமாம் மணிக்கு. கமலாவோ ஜரிகைப் பட்டுப் பாவாடை, பட்டுச் சட்டை, மத்தாப்பு ரகங்கள் கேட்டிருந்தாள். கோபம் மறைந்து

மறுபடியும் புன்னகை தவழ்ந்தது அவர் முகத்தில். பிழை இல்லாமல் எப்படி இவர்களால் எழுத முடிந்தது! பட்டியலை மடித்துச் சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டு சாப்பிடுவதற்கு வந்து உட்கார்ந்தார்.

இலையில் சாப்பாடு என்று ஒன்று இருந்தது. அவர் மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுத்த உடல் இயல் விஞ்ஞானப் புத்தகத்தில் அச்சிடப் பட்டிருந்த பாலாடை, தயிர், நெய், காய்கறி, கீரை வகை எதுவும் அங்கில்லை. அவருக்கும் அவர் குழந்தைகளுக்கும் அவரிடம் படித்த முக்கால்வாசிக் குழந்தைகளுக்கும் அவை எட்டாக் கொம்புகள். மனப்பாடம் செய்வதற்கும், வீட்டில் ஏங்குவதற்கும், பிறகு ஏட்டில் எழுதி மடித்துக் கொடுப்பதற்கும் காகிதங்களில் விளைவிக்கப்பெற்ற உணவுப் பண்டங்கள் தான் அவை!

''குழந்தைகள் உன்னிடம் தீபாவளியைப் பற்றி ஏதாவது பேசினார்களா?'' என்று கேட்டார் மனைவியிடம்.

''ஊஹூம்'' என்று தலையை ஆட்டினாள் சரஸ்வதி; ''அவர்களுக்குள்ளே ஏதோ பேச்சு வார்த்தை நடந்தது; வீட்டுக்காரர் மகன் சந்திரனும் அவர்களும் பேசிக் கொண்டார்கள்.''

பட்டியலுக்கான மூலகாரணத்தைத் தெரிந்து கொண்டார் சோமசுந்தரம். மனைவியிடமும் ஒன்றும் பேசவில்லை. பஸ்ஸுக்குக் காத்து நின்று தொத்திக் கொண்டு இரண்டுமைல் தொலைவிலிருந்த தம்முடைய பள்ளிக்குப் போய்ச் சேர்ந்தார் அவர்.

வகுப்பில் இப்போது அதிகமான மாணவர்கள். முன்போல் தனித்தனியே ஒவ்வொருவரையும் கவனித்துப் பாடம் சொல்லுவது கடினமாக இருந்தது. முடிந்த வரையில் தம் கடமையைக் கவனித்தார். ஏனோ இன்றைக்கு அவர் மனம் மாணவர்களின் உடையை ஆராய்வதில் சென்றது. பளபளப்பும் மினுமினுப்புமாய்க் காட்சியளித்தவர்கள் மிகவும் குறைவு.

மூன்றே மூன்று 'செட்' உடுப்புகள் சோமசுந்தரம் பி. ஏ., பி.டி.,க்கு. அவர் வீட்டில் எல்லோருமே இதில் சமதர்மவாதிகள். மாற்றி மாற்றி உடுத்துக் கொள்வதைத் தவிர, கைக்காவலுக்கென்று சரஸ்வதி ஒன்றைப் பத்திரப் படுத்தி வைத்திருந்தாள். பெட்டி போட்டு வைக்கும் வேலை அவளுடையது. செல்வக் களஞ்சியமாம் சென்னை மாநகரில் சரஸ்வதி தேவியின் கருணை கடாட்சத்தை இளம் பிஞ்சு மூளைகளில் ஏற்றிவிடுவதற்காக அவருக்குக் கிடைத்த நூற்றி எழுபத்தைந்து ரூபாய் வருவாயில் அவர் வகுத்துக் கொண்ட வாழ்க்கைத் திட்டம் அது.

மாணவர்களை ஏமாற்றுகிற வழக்கம் அவரிடமில்லை. தம்மை அவர்கள் ஏமாற்றவும் விடமாட்டார். உண்மையிலேயே அவர்கள் படித்து முன்னுக்கு வரவேண்டுமென்ற ஆவல். வீட்டுப் பாடங்கள் கொடுப்பார்; படிக்கத் தூண்டுவார்; தம்முடைய வீட்டுக்கு நோட்டுகளைச் சுமந்து கொண்டு வந்து திருத்துவார். ஆகவே, படிப்பு வராத பணக்காரப் பிள்ளைகளைக் கட்டி அழுது அவர்களிடம் 'பிரைவேட்'டாகச் சம்பாதிக்க அவருக்கு நேரமில்லை. கடனுக்கு வகுப்புக்களைக் கட்டி மேய்த்து விட்டு வெளியில் பாடுபட்டுத் தங்கள் பிழைப்பைச் சரிக்கட்ட முயன்றவர்களையும் அவருக்குத் தெரியும். பாவம்! அப்படியுந்தான் அவர்களால் என்ன முடிந்தது?

திடீரென்று ஒருநாள் அவர் எதையோ நினைத்துக் கொண்டு தம்முடைய மேல் படிப்பைத் தொடங்கினார். வீட்டில் நேரம் ஏற்படுத்திக் கொண்டு எம். ஏ.க்குப் படிக்க முனைந்து விட்டார்.

**ப**த்தடிக்குப் பத்தடி உள்ள தமது சமையல் அறை சாம்ராஜ்யத்தை ஒழுங்குபடுத்திவிட்டு, அடுத்த அறைக்குள் சிறிது நேரம் கட்டையை நீட்டி விட்டாள் சரஸ்வதி. அதிகாலையில் ஐந்து மணிக்கு முன்பே எழுந்துவிட வேண்டும்; இரவில் படுப்பதற்குப் பத்து மணியாகி விடும். வீட்டு வேலைக்கோ துணைக்கோ ஆள் கிடையாது; வைத்துக்கொள்ளவும் முடியாது.

கணுக் கணுவாய் வலி எடுத்தது சரஸ்வதிக்கு. ரவி வர்மாவின் சித்திரமாக அவள் இருந்தாலும் முப்பது வயதுக்குள் நாற்பது வயதின் உடல் தளர்ச்சி. உள்ளத்தின் தெம்பு ஒன்றினால்தான் அவளால் நடமாட முடிந்தது. அந்தத் தெம்பு அவளுக்குச் சோமசுந்தரம் கொடுத்தது. அவரால் அவளுக்குப் போதிய உணவைக் கொடுக்க முடியவில்லை; உடையைக் கொடுக்க முடியவில்லை; இடத்தைக் கொடுக்க முடியவில்லை. ஆனால் தமது உடல், உள்ளம் உயிரை மட்டும் அவளிடம் இழந்து விட்டார். அவருடைய அந்த இழப்புத்தான் அவளுடைய மனோ பலம்; உயிர் மூச்சு.

தங்களோடு ஒண்டுக் குடித்தனம் நடத்திக் கொண்டிருந்த சிட்டுக் குருவிகளை வேடிக்கை பார்த்தாள் அவள். அவருடைய புத்தக அலமாரிக்கு மேல் வசதியான ஓர் இடம் பார்த்துக் கூடு கட்டியிருந்தன அவைகள். அவை நடத்திக் கொண்டிருந்த குதூகலமான நாடகம் அவள் முகத்தில் சிரிப்பை மலரச் செய்தது. கீச் கீச்சென்று கத்துவது, சிறகை ஆட்டிச் சிலிர்த்துக் கொள்வது, தத்தித் தத்தி ஓட்டம் காட்டுவது, பறந்தோடிச் சென்று துரத்திப் பிடிப்பது—இப்படி அங்கு ஒரே கும்மாளம்.

சரஸ்வதியின் முகத்தில் நாணம் படர்ந்தது. 'சே! வெட்கமில்லை உங்களுக்கு!' என்று சொல்லித் தன் விழிகளிரண்டையும் பொத்திக் கொண்டாள். அவளுடைய இதழ்களில், கண்களில், கன்னங்களில் புன்னகை படர்ந்தது. மூடியிருந்த விழிகளை மெல்லத் திறந்து தனது விரல்களினூடே திருட்டுத்தனமாக அவற்றின் ஊடலைக் கண்ணுற்றாள். எல்லையற்ற இனம் புரியாத பரவசமொன்று அவள் உள்ளத்தில் ஊற்றுப் பெருக்கெடுத்தது.

ஆண் குருவி பெண்ணை விடச் சற்று உருவத்தில் பெரிது போலும். அதன் அலகு, நெற்றி, கண்கள் இவற்றிலிருந்து மையன்னைக் கறுப்பு வழிந்து கழுத்திலும் முகத்திலும் கரைந்திருந்தது. கிளையில் புதிதாக வெடித்த வெண் பஞ்சுபோன்ற தூய வெள்ளை மார்பு அதற்கு. இயற்கையாகவே அதற்கு அதிகமான துடிதுடிப்பு, சுறுசுறுப்பு, பரபரப்பு — சரஸ்வதியால் மட்டுமே உணர்ந்துகொள்ள முடிந்த சோமசுந்தரத்தைப் போல!

பெண் குருவி உருவத்தில் சிறியது. கண் மையை எண்ணெயில் கரைத்து அதில் சந்தனத்தைக் கலந்து தெளித்தால் எப்படியிருக்கும்? கண்களில் மட்டுமே அது தன் கொள்ளை அழகைத் தேக்கி வைத்துக் கொண்டிருப்பதாக நினைத்தாள் சரஸ்வதி. அடடா! அது தான் என்ன பாடுபடுத்தி வைக்கிறது அந்த ஆண் குருவியை! ஏதுமறியாதது போல் மாய்மாலம் செய்து கொண்டே அது தன் துணைவன் தவிக்கும் தவிப்புக்களை ஓரக் கண்களால் கண்டு மகிழ்கிறது. அருகில் வந்தால் தன் இரு கால்களால் தத்தித் தத்தித் தொலைவில் ஓடுவதும், பின்னர் அதைத் திரும்பிப் பார்த்துத் தன் கண் வலையால் அதைப் பற்றி இழுப்பதும், மீண்டும் சட்டென்று வேறு புறம் திரும்பிக்கொள்வதும் எத்தனை சாகசம் அதற்கு!

'பாசாங்கு, பாசாங்கு, அத்தனையும் பாசாங்கு!' என்று தன் தோழியிடம் கேலி பேசி நகைப்பதைப்போல் நகைத்தாள் சரஸ்வதி. 'வெட்கப்படுவதுபோல், பயப்படுவதுபோல், ஒன்றும் தெரியாதது போல் வெறும் நாடகமா நடிக்கிறாய்?'

அந்த இரண்டு அறைகளுக்கும் அவர்கள் ஐம்பது ரூபாய் வாடகை கொடுத்து ஒண்டுக் குடித்தனம் வந்த போது, அவர்கள் இந்த அடுத்த குடியையும் எதிர்பார்க்கவில்லை. திறந்த சன்னல் வழியாக முதலில் பெண் பறந்து வந்தது; அதை ஒட்டி ஆணும் வந்தது. விலை பேசாமலே 'பிளாட்' தேடிக் கொண்டார்கள் அவர்கள். சிமென்டுக்கு மனுப் போட்டுச் சிபாரிசுக்கு ஆள் பிடிக்காமலே கட்டடம் கட்டத் தொடங்கி விட்டார்கள். இன்ஜினியர், கன்ட்ராக்டர், கொத்துச் சித்து எல்லாமே அவர்கள் இருவர்தாம். சின்னஞ்சிறு வைக்கோல் துண்டுகள், குச்சிகள், கந்தல், குப்பை கூளம் எல்லாவற்றையும் கொண்டு வந்து, எப்படியோ கட்டி முடித்துக் குடித்தனமும் நடத்தி ஆயிற்று. குஞ்சுகளும் பொரித்தார்கள்.

ஒரு சமயத்தில் சேர்ந்தாற்போல் இரண்டு நாட்களாக மழை பிடித்துக் கொண்டு கொட்டியது. அப்போது இரவு நேரம். அறைக்குள் கமலாவும் மணியும் திடீரென்று அழும் குரல் கேட்டு அங்கே ஓடி வந்தாள் சரஸ்வதி. வெளியில் சென்றிருந்த சோமசுந்தரமும் தம் குடையை மடக்கி வைத்து விட்டு உள்ளே நுழைந்தார்.

அழும் குழந்தைகளைப் பார்த்துக் காரணம் கேட்டார் சோமசுந்தரம். குழந்தைகள் குருவிக் கூட்டை நோக்கிக் கரங்களை நீட்டினார்கள்.

கூட்டுக்கு வெளியில் வந்து குஞ்சுகள் இரண்டும் பசி தாங்காமல் 'கீச் கீச்' சென்று கத்தின. தங்கள் வாய்களை மிகவும் அகலமாகத் திறந்து கொண்டு தவியாய்த் தவித்தன. தாய்க் குருவி கொண்டு வந்து ஊட்டி விட்டுப் போன உணவு அவைகளுக்குப் போதவில்லை போலும். அவை போட்ட கூச்சலையும் துடித்த துடிப்புக்களையும் சரஸ்வதியால் கூடப் பொறுக்க முடியவில்லை. ஆண் குருவியோ குஞ்சுகளுக்கு இரை தந்து காப்பாற்றுகிற வேலை தன்னுடைய

# சுதேசி டைப் பவுண்டரி

(ஸ்தாபிதம்: 1906)

51, குருவப்ப செட்டித் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2

டெலிபோன்: 84469 தபால் பெட்டி: 2433 தந்தி: "புலஞு"

(இந்திய அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட்ட கண்டிராக்டர்கள்)

ஸ்தாபகர்




தோ. ஆறுமுக முதலியார்

கிளைக் காரியாலயங்கள்:

B-13, இண்டஸ்டிரியல் எஸ்டேட், சனத் நகர்
ஹைதராபாத்-18

போன்: 39002 தந்தி: "புலஞு", செகந்திராபாத்

B-6, இண்டஸ்டிரியல் எஸ்டேட், ராஜாஜி நகர்
பெங்களூர்-10

போன்: 70495 தந்தி: "புலஞு", பெங்களூர்

XIV/8310-A, கரியில் ரோடு, தபால் பெட்டி நெ. 4
எர்ணாகுளம்-8 (கேரளா)

போன்: 3207 தந்தி: "புலஞு", எர்ணாகுளம்



இத் தீபாவளித் திருநாளில் நண்பர்களுக்கும் அபிமானிகளுக்கும்

**எங்களது மனமார்ந்த நல் வாழ்த்துக்கள்!**

இவை எந்தத் தயாரிப்புகட்கும் தலைசிறந்ததும், நீடித்து உழைக்கக் கூடியதும், அழகும் கவர்ச்சியும் பொருந்தியனவுமாகும். விலையுயர்ந்த நவீன யந்திர சாதனங்களால், மேனாட்டு முறைப்படி தயாரிக்கப்பெற்ற எங்கள் "கணபதி" புதிய தமிழ் எழுத்துக்களும் "ஆறுமுகம்" புதிய தெலுங்கு எழுத்துக்களும் "மணி" புதிய கன்னட எழுத்துக்களும் "சுதேசி" புதிய மலையாள எழுத்துக்களும் புகழ் சிறந்த பல்லோராலும் பாராட்டப் பெற்றுள்ளன. மேலும் அச்சாபீஸ் நிர்வாகிகள் அனைவருடைய நன்மதிப்பையும் ஆதரவையும் பெற்றவையாகும்.

இந்தத் **தீபாவளி** மலரில் உபயோகிக்கப்பட்டிருக்கும் எழுத்துக்கள் "**கணபதி**" புதிய தமிழ் எழுத்துக்களே. இந்த எழுத்துக்களின் உறுதிக்கும், அழகான அமைப்பிற்கும் இந்த மலரே தக்க சான்று

பூரா விவரங்களுக்கு எழுதவும்

**தோ. ஆ. சுப்பிரமணிய முதலியார்,** நிர்வாக பாகஸ்தர்

இல்லே என்று சொல்வது போல், தூரத்தில் அமர்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. தாய்க் குருவி அங்குமிங்கும் பறந்து பார்த்தது. 'மழைக் காலத்தில் இந்த வேளையில் ஏன் என் பிராணனை வாங்குகிறீர்கள்? பேசாமல் தூங்குங்கள்!' என்பது போல் தன் குஞ்சுகளை அடக்கப் பார்த்தது.

அடங்குகிற குஞ்சுகளா அவை? மணியையும் கமலாவையும் நூறு மடங்கு சேர்த்துக் கொள்ளலாம் போலிருந்தது. கழுத்துக்களை நீட்டி, நீட்டி, வாயைத் திறந்து, திறந்து கூச்சலிட்டன. இன்னும் இறகு முளைத்தபாடில்லை. நாரும் தோலுமாகத் தோற்றமளித்த தங்கள் உடல்களை வெளியே உந்தித் தள்ளிக் கொண்டு ஆர்ப்பாட்டம் செய்தன.

''அப்பா! பாவம், அதுக்குப் பசிக்கிறதப்பா!'' என்று தேம்பிக் கொண்டே கூறினான் மணி.

''அம்மா! அதுக்கு ஏதாவது கொடும்மா!'' என்று அடம் பிடித்தாள் கமலா. இவ்விரு குழந்தைகளின் பிடிவாதமும் அழுகையும்தான் அதிகமாயிற்று.

சோமசுந்தரத்துக்கும் சரஸ்வதிக்கும் இப்போது நான்கு குழந்தைகளின் அழுகையை அடக்க வேண்டிய நெருக்கடி வந்து விட்டது. அவசரம் அவசரமாக ஒரு சிறு கிண்ணத்தில் சாதம் வைத்து அதைச் சோமசுந்தரத்திடம் கொடுத்தாள் சரஸ்வதி. அதை அவர் அந்தக் கூண்டின் அருகில் மெல்லக் கொண்டு போய் வைத்தார். என்ன விந்தை! தாய்க் குருவி அதைச் சட்டை செய்யவே இல்லே. அலட்சியமாகத் திரும்பிப் பார்த்துவிட்டு, சற்றுஒதுங்கிக்கொண்டுவிட்டது!

கோபம் கோபமாக வந்தது மணிக்கு. ''இந்தா, நீ அதை எடுத்துக் கொடுக்கிறாயா இல்லையா?'' என்று கத்தினான்.

குருவிக் குஞ்சுகளோ கத்திக் கத்தித் தங்கள் பசியைப் பறைசாற்றிக்கொண்டிருந்தன.

''அம்மா! நீதான் சாதத்தை எடுத்து அந்தக் குஞ்சுகளுக்கு ஊட்டிவிடம்மா!'' என்று அழுதுகொண்டே கூறினாள்கமலா.

சோமசுந்தரம் யோசனை செய்து ஒரு வழி கூறினார். ''இதோ பாருங்கள், நாமெல்லாம் இங்கு அடைத்துக்கொண்டிருப்பதைப் பார்த்து அது பயப்படுகிறது. வாருங்கள் நாம் வெளியில் போய் விடுவோம். பிறகு அது பயமில்லாமல் எடுத்துக் கொடுக்கும்.''

கதவைச் சாத்திவிட்டு எல்லோரும் வெளியில் வந்தார்கள். ஆனால் உள்ளே என்ன நடக்கிறது என்பதைப் பார்க்க வேண்டுமென்கிற பரபரப்பு அவர்களுக்கு. குஞ்சுகள் சாப்பிட்டாலே தாங்களும் சாப்பிட முடியும் என்று அடம் பிடித்தார்கள் குழந்தைகள். ஆகவே நால்வரும் மழையைப் பொருட்படுத்தாமல் ஒட்டுத் திண்ணைக்கு வந்தார்கள். சன்னல் வழியே எட்டிப் பார்த்தார்கள். அப்போதும் அந்தச் சோற்றுக் கிண்ணம் தேடுவாரற்றுத் தான் கிடந்தது.

ஆனால்?–

தாய்க் குருவி சுற்றுமுற்றும் பார்த்தது. பிறகு அந்தக் குஞ்சுகளைத் தள்ளிக் கொண்டு அந்தக் கூட்டுக்குள் தலையை ஆழமாய்ப் புதைத்தது. உள்ளே புகுந்து மறைந்தது. அதற்குள் எங்கோ ஒரு மூலையில் சென்று எதையோ தேடியது. பிறகு குபீரென்று வெளியில் பறந்து வந்தது. அதன் மெல்லிய சிறு அலகில் அப்போது ஒரு புழு காணப்பட்டது!

குஞ்சுகளுக்கு ஒரே ஆனந்தக் கொண்டாட்டம்! அதைச் சிறிது சிறிதாக ஒவ்வொரு குஞ்சுக்கும் மாறி மாறிக் கொடுத்தது தாய்க் குருவி. பசியடங்கிய பிறகு மெதுவாகத் தங்கள் உருண்டை விழிகளை மூடிக் கொண்டு உள்ளே பதுங்கின குஞ்சுகள்.

அன்றைக்குச் சோமசுந்தரம் உறங்கவில்லை. ''சரசு! நான் நாளையிலிருந்து எம். ஏ.க்குப் படிக்கப் போகிறேன்'' என்றார் திடீரென்று.



''என்ன விஷயம்?''

''மழைக் காலம் என்று ஒன்று இருப்பதையும், அந்தக் காலத்திலும் குஞ்சுகளைப் பட்டினி போடக் கூடாதென்பதையும் எனக்கு அந்தச் சிட்டுக் குருவி கற்றுக் கொடுத்துவிட்டது.''

''ஆனால் அது தாய்க் குருவி!'' என்றாள் சரஸ்வதி.

''யார் கண்டார்கள்? தந்தை தேடி வந்ததைத் தாய் பத்திரப்படுத்தி எடுத்துக் கொடுத்திருக்கலாம்.''

பெருமை தாங்கவில்லை சரஸ்வதிக்கு.

அன்று இரவு அவரிடம் அந்தக் குருவிகளின் கொண்டாட்டம் நிறைந்த காட்சியைச் சொல்ல வேண்டுமென்று தோன்றியது சரஸ்வதிக்கு. குழந்தைகள் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பினார்கள். அவர்களுக்கென்று இரண்டணாவுக்கு வாங்கி வைத்திருந்த பூவன் பழங்களை எடுத்துக் கொடுத்துச் சாப்பிடச் செய்தாள். தண்ணீர் கொடுத்தாள். காப்பி என்கிற பானத்துக்குச் சர்க்கரை போட வேண்டியிருந்ததால் அது அவர்களுக்கு ஆடம்பரப் பொருளாகி விட்டது. சென்னை நகரத்தில் நிரம்ப பணக்காரர்களின் கார்களும் பங்களாக்களும் பெருகப் பெருகத் தரையில் நடப்பவர்களுடைய வயிறுகள் உள்ளே சுருங்கிய ரகசியம் அவனுக்குப் புலப்படவில்லை. விலைவாசிகள் வானத்தில் பறக்கத் தொடங்கியது மட்டுமே அவனுக்குத் தெரியும்.

அப்போது பெரிய ஆப்பிள் பழம் ஒன்றைக் கடித்துக் கொண்டே குட்டிப் பயில்வான்போல் தோற்றமளித்த சந்திரன் அங்கு வந்து சேர்ந்தான். ''வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டு வா; அப்புறம் இவர்களோடு சேர்ந்து விளையாடலாம்'' என்று நயமாகச் சொல்லி அவனை அனுப்பி வைத்தார்கள். சந்திரன் அவனுடைய அப்பாவைக் கொண்டு வந்தவன். வேண்டுமென்றே மற்றவர்களுக்கு முன்னால் வந்து சாப்பிடுவான். தோலைக்கூட மறந்து போய் உரித்து நீட்ட மாட்டான். சரஸ்வதி தன் குழந்தைகளை யாரிடமும் எதையும் வாங்கப் பழக்கவில்லை.

சொல்லி வைத்தாற் போல் இரண்டு குழந்தைகளும் அவளிடம் தீபாவளியைப் பற்றி அப்போது விசாரிக்கத் தொடங்கிவிட்டார்கள். ''தீபாவளி எதுக்காக வருது?'' என்று கேட்டான் மணி. ''அந்தக் கதையைச் சொல்லம்மா!'' என்றாள் கமலா.

சரஸ்வதி தொடங்கினாள்: ''நரகாசுரன் என்று ஓர் அரக்கன் இருந்தான். அவன் வந்து....''

''அரக்கன்னு யார்?'' என்ற கேள்வி எழுந்தது மணியிடமிருந்து.

''இரக்கமில்லாதவன் அரக்கன்! அதாவது ஈவு, இரக்கம், மற்றவங்க மேலே அன்பு, பாசமில்லாதவன் அரக்கன்.''

''சரி, அவன் வந்து?....''

''யாருக்கும் ஒரு கெடுதலும் செய்யாமல், ஊர், உலகத்துக்கு நல்லது செய்து கொண்டு வாழ்ந்தவர்களை அழிக்கத் தொடங்கினான். நல்லவர்கள் பிழைப்பைக் கெடுக்கிறது, அவர்களோட வாழ்க்கையைக் கலக்கிறது, அவர்களைப் பயமுறுத்தறது, அவர்களோட வயிற்றிலே அடிக்கிறது, அவர்களைக் கொலை செய்யறது இப்படியெல்லாம் கொடுமைப்படுத்தினான்...''

''ஏன் செய்தான்?'' என்றான் மணி.

எதற்கெடுத்தாலும் 'ஏன்? எதற்கு?' என்று கேட்கும் இந்தக் காலத்துக் குழந்தைகளுக்கு ஏற்பத்தான் கதை சொல்லி வந்தாள் சரஸ்வதி. அவளையே திணற அடித்தான் மணி.

''இரக்கமில்லாதவன் எப்படி இருப்பான்? அவன் பேராசைக்காரன்! உலகத்திலே கிடைக்கிற எல்லாப் பொருளும் தனக்கு மட்டுமே வேணும் என்கிற பேராசை அவனுக்கு. நல்லவர்கள் பலரோட வாழ்வைக் கெடுத்ததால்தான் அவனால் பெரிய கோட்டை கட்டி வாழ முடிந்தது. ஆடம்பரமா, கோலாகலமா

வாழ்ந்தவன் அவன்! நல்லவர்களோட முயற்சி, உழைப்பு,பலன் இவற்றை யெல்லாம் கெடுக்கிறதுதான் அரக்கர் களோட தொழில்!''

''சரி, அப்புறம்?''

''நல்லவர்கள் பயமில்லாமல் பத்திர மாக வாழ முடியாத நிலே வந்திருச்சு. தாங்க முடியாத கஷ்டம் அவர்களுக்கு. கடைசியில் எல்லாருமாகப் போய்க் கடவுளிடம் முறையிட்டாங்க.''

''கடவுளிடமா?''

''ஆமாம்; நல்லவர்களுடைய கஷ்டம் அளவுக்கு மீறிப் போகும்போதெல்லாம் கடவுள் வந்து துஷ்டர்களைக் கடுமை யாகத் தண்டிப்பார். அப்படியே அப் போதும் கிருஷ்ண பரமாத்மா சத்திய பாமாவோட வந்தார். அரக்கனோடு போரிட்டார். சத்திய பாமா வந்து அவனைக் கொன்று தீர்த்தாள். தீமையை அடியோடு அழித்த நாள் தீபாவளி. சத் தியத்துக்கு வெற்றி கிடைத்த நாள். அரக்கனை அழித்த நாள். அதனுலே நாம் அதை ஆனந்தமாய்க் கொண்டாடு கிறோம்....!''

''கடவுள் சண்டை கூடப் போடு வாரா ?'' என்று பயத்தோடு கேட் டாள் கமலா.

''இரக்கமில்லாத அரக்கர்களை அவர் விடவே மாட்டார். அதற்காகத்தான் கையிலே சக்கரம், கதை, வேல், சூலாயுதமெல்லாம் வச்சிருக்கார். நல்ல வர்களைக் காப்பாற்றணும்னு போல் லாதவர்களோட சண்டை போட்டால் தானே முடியும்?''

''தீபாவளியப்போ நான் அரக்கனைத் துப்பாக்கியாலே சுடுவேன்'' என்றான் மணி.

''நான் அவனே மத்தாப்பிலே போட் டுக் கொளுத்துவேன்'' என்றாள் கமலா.

அவர்கள் வெளியில் விளையாடச் சென்றார்கள். அப்போது அவர்களுடைய தோழன் சந்திரன் ஒரு துணி மூட்டை யைக் கொண்டு வந்து கடை பரப்பினான். அவனுக்கும் அவன் தங்கைக்கும் வாங்கி யிருந்த உடுப்புக்கள். பளபளவென்று கண்ணைப் பறித்தன அவை.

''எங்கப்பாவும் எங்களுக்கு வாங்கித் தருவார்'' என்றான் மணி.

''உங்கப்பா இப்போ எங்கப்பா வோடத்தான் பேசிக்கிட்டிருக்கார்.''

எதற்காக அவர் அங்கு போனார் என்பது குழந்தைகளுக்குப் புதிராக இருந்தது. வாடகையைக் கூட அவர் மணியிடம் கொடுத்தனுப்புவதுதான் வழக்கம்.

சோமசுந்தரம் அன்றைக்கு வீட்டுக் குத் திரும்புவதற்கு வெகு நேரமாகி விட் டது. வந்தவுடன் தங்களிடம் அவர் ஏதாவது விசாரிப்பார் என்று குழந் தைகள் எதிர்பார்த்தார்கள். அவரோ அவர்கள் வீட்டிலிருப்பதையே கவனிக் காதவர் போல் நடந்து கொண்டார். சரஸ்வதி அன்றைக்கு வழக்கத்தைவிட அதிகமான கலகலப்புடன் காணப்பட் டாள். ஆகவே அவளால் சோமசுந்தரத் தின் மௌனத்தைப் புரிந்து கொள்ள முடிய வில்லை. யாரிடமும் எதுவும் பேசாமல் அவர் மௌனமாகச் சாப் பிட்டார். உள்ளே போய் நாற்காலியில் சாய்ந்து கொண்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்தார். மாணவர்களின் நோட்டுக் களைத் திருத்தவுமில்லை; தம்முடைய எம். ஏ. பாடங்களைப் படிக்கவுமில்லை.

சரஸ்வதி பரக்கப் பரக்கத் தன் வேலைகளை முடித்து விட்டுக் குழந்தை களுடன் வந்து படுத்தாள். அவர்களைத் தூங்கச் செய்து விட்டு, விளக்கை அணைத்து விட்டு, மெல்ல அடுத்த அறைக் குள் புகுந்தாள். அப்போதுதான் அவ ருடைய முகத்தில் தெரிந்த மாற்றத்தை அவளால் அறுதியிக் காண முடிந்தது. வகுப்பில் எந்த மாணவனாவது ஒழுங் காக நடந்து கொள்ளா விட்டாலோ, சரிவரப் படிக்கா விட்டாலோ, அவர் சில சமயங்களில் இப்படிக் கவலைப்படு வது உண்டு.

''இதோ பார், உன் குழந்தைச் செல் வங்கள் எழுதிக் கொடுத்திருப்பதை!''

கோபத்தோடு அவள் முகத்தில் வீசுவது போல் எடுத்து நீட்டினார் சோம சுந்தரம். 'இதற்குத்தான் இவ்வளவு கோபமா!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டு, அவற்றைப் படித்து விட்டுத் தன் பல் தெரியச் சிரித்தாள் சரஸ்வதி. அவளுடைய மனத்தில் குதூகலம் நிறைந்திருந்ததால், அவருடைய கோபத் துடன் சிறிது நேரம் விளையாட வேண்டு மென்று தோன்றியது அவளுக்கு.

''ஏன்? வாங்கிக் கொடுங்களேன் ! வாயால் சொல்ல வேண்டாமென் றீர்கள். எழுதிக் கொடுத்திருக்கிறார்கள்!''

''என்ன சொன்னாய்?'' என்றுமில் லாதபடி சீறினார் அவர்.

''வருஷத்துக்கொரு நாள் வருகிறது தீபாவளி. குழந்தைகள் ஆசையோடு கேட்பதை வாங்கிக் கொடுத்தால் என்ன குறைந்து போகிறதாம்?'' சரஸ்வதி குறும்புத்தனமாகத் தனக்குள் நகைத்துக் கொண்டாள். அவளுடைய அகன்ற விழிகளிலும் பரிகாசம் துள்ளியது.

''உனக்கு அறிவு இருக்கிறதா ?'' என்று கேட்டு அவளைத் தம் கண்களால் எரிக்கப் பார்த்தார் ஆசிரியர். ஓங்கி அறைந்து அவளுடைய பற்களை உதிர்த் துக் கையில் கொடுத்து விட்டால் கூடப் பாவமில்லை என்ற ஆத்திரம். ''வருஷத் துக்கு ஒரு நாளாம், ஒரு நாள்! ஒவ் வொரு நாளும் இந்த வீட்டில் நாலு பேருக்கு நாலு வேளைக்குப் பசிக்கிறது. நான் வாங்குகிற சம்பளத்தை உன்னிடம் தான் கொடுக்கிறேன். கணக்குத் தெரி யுமா?'' என்றார்.

விட்டுக் கொடுக்கவில்லை சரஸ்வதி. கணவனோடு சண்டை போட்டுக் கொள் ளாத வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா!

''கணக்குப் பார்க்கிறவர்கள் கல் யாணம் பண்ணிக் கொள்ளக் கூடாது. குழந்தை குட்டிகள் பெறக் கூடாது. வீடு வாசல் எதுவுமே வேண்டியதில்லை அவர்களுக்கு !''

''குழந்தைகள் கேட்பதை மட்டும் வாங்குவதற்கு எழுபத்தைந்து ரூபாய் வேணும். குழந்தை களுக்குத் தான் விவரம் தெரியாதென்றால், நீயுமா குழந்தை ?''

''சந்திரனுடைய அப்பா அவர் குழந்தைகளுக்கு எல்லாம் வாங்கிக் கொடுத்திருக்கிறார். அதைப் போல் நீங்களும்.... நீங்களும்......''

அவ்வளவுதான்! அவள் முகத்தில் வேக மாகப் பறந்துவந்து விழுந்தது ஒரு பெரிய புத்தகம். ஆசிரியருக்குக் கோபமென்றால் புத்தகமே ஆயுதம் போலும்.












"என்ன சொன்னே, சந்திரனோட அப்பாவா?" உறுமினார் அவர். "அவன் ஒரு மனுஷனா! கடலெண்ணெயை நல்லெண்ணெயாக்கி, கொழுப்பிலே நெய்யைக் கலந்து, அரிசியைப் பதுக்கிவைச்சு ஐந்து வருஷத்திலே ஐந்து லட்சம் கொள்ளையடிச்சவன். அரிசி வியாபாரம் பாதி, அரசியல் வியாபாரம் பாதி அவனுக்கு. அவனோட என்னையும் சேர்த்து வச்சுப் பேசறியா?"

"அவனோட குடும்பமும் குழந்தைகளும் இப்படி அலாய்ப் பறக்கலே!" என்று சூடு கொடுத்தாள் சரஸ்வதி.

சூடு ஆழமாய்ப் பட்டு விட்டது அவர் நெஞ்சத்தில். "இதோ பார், இப்போ இந்த நாட்டிலே தர்மம் அழிஞ்சுபோச்சு. நம்ப குடும்பம் மட்டும்தானா அலாய்ப் பறக்குது? அயோக்கியத்தனம் பண்ணாமல், திருடாமல், சுரண்டாமல் நாணயமாய் உழைக்கிற ஒவ்வொரு குடும்பமும் தான் அலாய்ப் பறக்குது. நான் மனுஷன்; மனுஷனாய்த்தான் வாழ்வேன். அரக்கனா என்னாலே மாற முடியாது; மாறத் தெரியாது."

"மனுஷராவே நீங்க வாழுங்க. நாங்க சாகிறோம்!" என்று கத்தினாள் சரஸ்வதி.

குழந்தைகள் ஏற்கனவே சத்தம் கேட்டு விழித்துக் கொண்டு விட்டன. மணி மெல்லத் தன் தங்கையின் மேல் கரத்தை வைத்தான். அவள் தேகம் பயத்தால் கிடுகிடுவென நடுங்கிக் கொண்டிருந்தது. அவன் வாய் விட்டு அழப் பார்த்தான்; ஆனால் அழவில்லை.

உள்ளே ஒரு பெரும் போர் நடந்து கொண்டிருந்தது. அது வரையில் அவர்கள் கேள்விப்படாத, பார்த்தறியாத, அநுபவிக்காத போர். அந்தப் போருக்குத் தாங்களே மூல காரணம் என்பதையும் அவர்கள் உணர்ந்து கொண்டார்கள்.

அங்கே சரஸ்வதி தேம்பித் தேம்பி அழுதாள். சற்று நேரம் சிரித்துப் பேசி மகிழலாம் என்று நினைத்தவளின் ஆசைக்கு இப்படி ஒரு சோதனை வந்து விட்டது. அவளுக்குத் திடீரென்று எழுந்து ஓடி விட வேண்டும் போல் தோன்றியது. ஆனால், அவருடைய மனவேதனையின் ஆழம் அவளுக்குத் தெரிந்து விட்டது. பாவம்! அவர் நல்லவர்;..... அவர் நல்லவர்; அவர்....

"சரசு!"

சட்டென்று பாய்ந்து சென்று அவர் மடியில் விழுந்து விம்மினாள் சரஸ்வதி. அவருடைய விரல்கள் காடு போல் மண்டிக் கிடந்த அவளுடைய கருங்கூந்தலை அளைந்தன. கண்ணீர் மளமளவென்று பொங்கி வழிந்தது அவர் கண்களில்.

"சரசு! சரசு! இங்கே, பாரம்மா!"

"என்னை மன்னிச்சிடுங்க. எனக்கு எல்லாம் தெரியும். நான் ஒண்ணும் குழந்தையில்லே!" அவள் குமுறினாள்.

"சரசு! நீதான் என்னை மன்னிக்கணும். என்னோட கோபத்துக்கு நீ காரணமில்லே; நம்ப குழந்தைகளும் காரணமில்லே; நம்மை யெல்லாம் எந்தப் படுபாவிகள் தங்களோட பெரிய வயிற்றுக்குள்ளே தள்ளிச் சீரணம் பண்ணிக்கிட்டிருக்காங்களோ அவங்க மேலே வந்த கோபம் அது. ஊரிலே இப்போ பொருளுக்குப் பஞ்சமில்லே; தொழிலுக்குப் பஞ்சமில்லே; மனுஷத் தன்மை ஒண்ணைத் தவிர வேறே எதுக்குமே பஞ்சமில்லே. நான் வந்து.... ஒரு ஏழை வாத்தியார்..... என் கோபத்தை.... வேறே யாரிடம் காட்ட முடியும்?"

சோமசுந்தரத்தின் குரல் தழுதழுத்தது. நாத் தடுமாறியது. தொண்டை அடைத்துக் கொண்டது. மெல்லத் தன் அன்புக் கரத்தால் அவர் கண்ணீரைத் துடைத்து விட்டாள் சரஸ்வதி.

"சந்திரனோட அப்பாவிடம் நான் போயிருந்தேன். பல்லைக் காட்டிக் கெஞ்சினேன். அடுத்த மாச வாடகையை அதற்கடுத்த இரண்டு மாசத்திலே இருபத்தஞ்சு இருபத்தஞ்சா சேர்த்துத் தருவதாகச் சொன்னேன். 'கஷ்டம் எல்லாருக்குந்தான் இருக்கு'ன்னு ஒரே பேச்சில் என்னை அனுப்பிச்சிட்டான். அதிகாரத்தோட அதட்டிக் கேக்கிறவனுக்கு அவன் எவ்வளவு கொடுக்கிறான் தெரியுமா? எனக்கும் என் குழந்தைகளுக்கு ஒரு நல்ல துணி போட்டுப் பார்க்க வேணும்கிற ஆசை இருக்காதா சரசு?" என்றார் அவர்.

சரஸ்வதி அப்போது தான் ஒரு தெய்வத்தின் மடியில் படுத்துக் கிடக்கும் பாக்கியம் பெற்றிருப்பதை உணர்ந்தாள். உலகத்தில் மனிதத் தன்மைக்குப் பஞ்சம் வந்தால் என்ன? அது அவருடைய வீட்டில் இருந்தது; அருகில் இருந்தது; கழுத்தில் மாங்கல்யமாய்த் தொங்கி அவள் இருதயத்துடன் இணைந்து துடித்தது.



"குழந்தைகளுக்குநான்சொல்கிறேன். சொன்னால் கேட்கவா மாட்டார்கள்?"

"அவர்கள் தெய்வங்கள்!" என்று உணர்ச்சி பொங்கக் கூறினார் சோமசுந்தரம். "ஒரு நாள் குருவிக் குஞ்சுகளுக்கு இரை கிடைக்கவில்லையென்று, சாப்பிட மறுத்தார்களே நினைவிருக்கிறதா? அந்த உணர்ச்சியோடு அவர்களை உருவாக்கி வளர்த்து விட வேண்டும். என்னைப் போல் கோழையாக மாற்றாமல், தர்மத்துக்காகப் போராடக் கற்றுக் கொடுக்க வேண்டும். நீயே சொல்: என்னுடைய உழைப்போ, தகுதியோ, பண்போ இந்தச் சமூகத்துக்குச் சந்திரனின் அப்பாவைவிட எந்த வகையில் தாழ்ந்து போய் விட்டது?"

அவள் அவருடைய கழுத்தைத் தன் இரு கரங்களாலும் வளைத்துக் கொண்டாள். "கடவுள் இந்த அக்கிரமங்களை அதிக நாள் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டார். தெய்வம் நின்று கேட்கும்; கட்டாயம் கேட்கும்!"

சோமசுந்தரம் பிடிவாதமாகப் பேசினார். "இதோ பார், நான் குழந்தைகள் கேட்பதைக் கட்டாயம் வாங்கிக் கொடுக்கத்தான் போகிறேன். தினமும் இனிமேல் பள்ளிக்கூடத்துக்கு நடந்து போவதென்று தீர்மானித்து விட்டேன். காப்பியை நிறுத்தி விட்டேன். கஷ்டத்தைச் சொல்லிச் சொல்லி அவர்களைக் கோழைகளாகவும் அடிமைகளாகவும் நான் இனி வளர்க்கப் போவதில்லை. அவர்கள் கேட்பது நியாயம்; அதுதான் உண்மையான தர்மம் !"

சண்டி மிரண்டால் காடு கொள்ளாது என்பார்கள். ஆனால் சரஸ்வதி அருகில் இருந்தாள். அதிலும் அன்றைக்குப் பிற்பகல் அவளுக்கு அந்தப் பேடைக் குருவி எவ்வளவோ புதுப் பாடங்களைக் கற்றுக் கொடுத்திருந்தது. தனது குளிர் விழிகளால் நறுமணம் கலந்த தென்றல் வீசினாள். அன்பு கனிந்த இன்குரலால் அவர் உள்ளத்தின் வெந்தணலை ஆற்றி, தன் தணலை மூட்டினாள். குருவிக் கூட்டைக் கட்டிக் காட்டிச் சிரித்தாள். வெற்றி கொண்டாள்.

பொழுது புலர்ந்தது.

காலையில் அந்த வீட்டில் உற்சாகம் பொங்கி வழிந்தது. குழந்தைகள் எழுதிக் கொடுத்த காகிதங்களை எடுத்து வைத்துக் கொண்டு, அவர்களைத் தம்மிடம் அழைத்தார் சோமசுந்தரம். மணியும் கமலாவும் திருட்டுத்தனமாக ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். இரவோடு இரவாகத் தங்களுக்குள் பேசிக் கொண்ட ரகசியங்களை யெல்லாம் அவர்கள் மறக்கவில்லை.

"மணியும் கமலாவும் என்னோடு நாளைக்குக் கடை வீதிக்கு வரப் போகிறீர்கள். நீங்கள் எழுதியிருப்பதை யெல்லாம் நான் உங்களுக்கு வாங்கித் தரப் போகிறேன்!" என்று பெருமையோடு கூறினார் சோமசுந்தரம்.

குழந்தைகள் குதிக்கவில்லை. ஆர்ப்பாட்டம் செய்யவில்லை. அவர்களுடைய முகங்களில் மருந்துக்குக் கூட மகிழ்ச்சியைக் காணோம்.

"எங்களுக்கு வேண்டாம்பா !....." என்று இழுத்தான் மணி.

"கட்டாயமா நாங்க வாங்கிக்கப் போறதில்லே" என்றாள் கமலா.

திடுக்கிட்டு, "என்ன விஷயம்?" என்று கேட்டார் சோமசுந்தரம்.

"அரக்கனைக் கடவுள் கொன்றால் தானே தீபாவளி கொண்டாடணும் ? அவன்தான் இன்னும் உயிரோடு இருக்கானே ?" என்று தன் தந்தையையே திணறச் செய்தாள் கமலா.

"அப்பா!" என்று மணி தொடர்ந்தான். "அந்த அரக்கனோட பெரிய வயிற்றுக்குள்ளே நாம்ப இப்போ அகப்பட்டுக் கஷ்டப்படறோம். கடவுள் இன்னும் வந்து அவன் வயிற்றைக் கிழிச்சு நம்மைக் காப்பாற்றலே. எதுக்காக நம்ப இப்ப அரக்கன் செத்துப் போனான்னு தீபாவளி கொண்டாடவேணும் ?"

குழந்தைகளின் இந்தக் கேள்விக்குச் சோமசுந்தரம் நெடு நேரம் பதில் தேடிப் பார்த்தார். சரஸ்வதிக்கும் பதில் சொல்லத் தெரியவில்லை. நானும் தடுமாறிக் கொண்டிருக்கிறேன். தயவு செய்து நீங்கள் சொல்லுகிறீர்களா?

# இந்த தீபாவளிக்கு உங்களுக்கு ஓர் அழைப்பு—
## வந்து பாருங்கள்
# ஆறு புதிய மர்பி மாடல்கள்



**மாடல் டிபி 0709**
9 டிரான்ஸிஸ்டர்களும், டயோடும் • ஆல்-வேவ் • 3-பேண்ட் (பாட்டரி விலை தனி)
ரூ. 400/- சுங்கவரி மாத்திரம் உள்பட, மற்ற எல்லா வரிகளும் தனி.



**சொகுசான டேபிள் மாடல் டிஏ 0366**
கூட்டாக 11 செயல்பாடுகள் கொண்ட 7 வால்வுகளும், ஒரு டயோடு டிடெக்டரும் • 6-பேண்ட் • பியானோ-கீ பேண்ட் செலக்டர்கள் • ஹை-ஃபை முறையில் ஒலிபரப்பு அதற்கென அமைக்கப்பட்ட இரு ஸ்பீக்கர்களும், முட்டைவடிவான ஒரு ஒலிபெருக்கியும் • மீடியம் வேவ் ஸ்டேஷன்களுக்காக, சுழலக்கூடிய ஃபெர்ரைட் ராட் ஏரியல்
ரூ. 666.33/- சுங்கவரி மாத்திரம் உள்பட, மற்ற எல்லா வரிகளும் தனி.



**மாடல் டிஏ 0922 ஏஸி**
**மாடல் டியு 0922 ஏஸி/டிஸி**
6-வால்வ் • 3-பேண்ட் தொடர்ச்சியான ஒலிக்கட்டுப்பாடு • நூதன பியானோ-கீ ஸ்விட்ச் • முட்டைவடிவான ஒலி பெருக்கி • கிராமபோன் பிக்-அப் பொருத்தங்கள் • வெளிப்புற ஒலிபெருக்கிப் பொருத்தங்கள்.
ரூ. 390/- சுங்கவரி மாத்திரம் உள்பட, மற்ற எல்லா வரிகளும் தனி.



**மாடல் டிஏ/டியு 0822**
5-வால்வ் • ஆல்-வேவ் • 3-பேண்ட் • தொடர்ச்சியாக மாற்றி அமைக்கக்கூடிய ஒலிக்கட்டுப்பாடு • நுட்பமான 5" ஒலிபெருக்கி • கிராமபோன் பிக்-அப் பொருத்தங்கள் • வெளிப்புற ஒலிபெருக்கிப் பொருத்தங்கள் • மரக் காபினெட்.
ரூ. 298/- சுங்கவரி மாத்திரம் உள்பட, மற்ற எல்லா வரிகளும் தனி



**மாடல் டிபி 0583**
9 டிரான்ஸிஸ்டர்களும், டயோடுகளும் • ஆல்-வேவ் 3 பேண்ட் (பாட்டரி விலை தனி)
ரூ. 375/- சுங்கவரி மாத்திரம் உள்பட, மற்ற எல்லா வரிகளும் தனி.



**மாடல் டிஏ/டியு 0774**
6-வால்வ் • 4-பேண்ட் • பியானோ-கீ ஸ்விட்ச் • மீடியம் வேவ் ஸ்டேஷன்களுக்கென சுழலக்கூடிய ஃபெர்ரைட் ராட் ஏரியல்
ரூ. 516.67/- சுங்கவரி மாத்திரம் உள்பட, மற்ற எல்லா வரிகளும் தனி



இவற்றையும், இதர மர்பி மாடல்களையும் தற்சமயம் 800க்கு மேற்பட்ட மர்பி வியாபாரிகளின் கடைகளில் காணலாம். நண்பர்களைப்போன்ற இந்த மர்பி வியாபாரிகள் எந்தச் சமயத்திலும், நீங்கள் தேர்ந்தெடுக்கும் மாடலை இலவசமாக இயக்கிக் காண்பிக்கத் தயாராக இருக்கிறார்கள். நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் அருகாமையிலுள்ள மர்பி வியாபாரியிடம் செல்வதுதான்......கூடவே குடும்பத்தினரையும் அழைத்துச் செல்லுங்கள்.

**murphy radio**

**மர்பி ரேடியோ இல்லத்தை மகிழ்விக்கிறது!**

# நாகரிகமென்பது இதுதானா?

ராவ்சாஹேப் ராமசேஷன் வீட்டில் அன்று ஏக தடபுடல். அந்த வருஷம்தான் அவரது ஒரே அருமை மகள் நந்தினிக்குப் பெரிய இடத்தில் திருமணமாகி விருந்தது. மாப்பிள்ளைக்கும் நல்ல உத்தியோகம். தலை தீபாவளி கொண்டாட வந்திருந்தார். ஆசார உபசாரத்துக்கும் விருந்து விமரிசைக்கும் கேட்க வேண்டுமா?

பணியாட்கள் ஓடியாடி வேலை செய்து கொண்டிருந்தார்கள். எட்டத்து உறவு முதற்கொண்டு கிட்டத்து உறவு வரை எத்தனையோ விருந்தினர்கள் வந்திருந்தார்கள். அதியற்புதமாக அறுசுவை விருந்து தயாரிக்கப்பட்டிருந்தது. பந்தியில் உட்கார்ந்திருந்த விருந்தினர்கள் விருந்தை வெகுவாக ரசித்துப் புசித்துக் கொண்டிருந்தார்கள்.

பரிமாறும்போது பாத்திரங்களிலிருந்து பறந்த ஆவி கம்மென்ற நறுமணத்தைக் காற்றிலே மிதக்க விட்டுச் சமையலின் அருமையை அக்கம் பக்கத்தாருக்குப் பறைசாற்றிக் கொண்டிருந்தது.

அண்டை அயல் வீடுகளிலோ டங்கிக் காய்ச்சல். நேர்த்தியாகத் தின்பண்டங்கள் தயாரித்து உண்ண வேண்டியவர்கள் — அல்லது ராமசேஷன் வீட்டு விருந்தையே ஒரு கை பார்க்க வேண்டியவர்கள் மிளகு ரஸமும் பாகற்காய் கறியும் வைத்துக் குடித்துக் கொண்டிருந்தனர். ஆயினும் அவர்களுக்கு ஓர் அருமையான நல்வாய்ப்புக் கிடைத்தது! ராமசேஷன் வீட்டு நறுமணம் கமழும் அறுசுவை உண்டியின் ஆனந்தத்தை நாசி மூலம் அநுபவித்து மகிழும் வாய்ப்பே அது!

இந்த நறுமணம் அக்கம் பக்கத்து வீடுகளில் மட்டுமென்ன? தெருவில் போகும் நாய்களையும் கூடக் கவர்ந்திருந்தது. குருவிக்கு மூக்கில் வியர்த்த கதையாகத் தெரு நாய்களை அவர்கள் வீட்டுக் கொல்லை மேட்டில் கொண்டு வந்து நிறுத்தியிருந்தது. நாய்கள் மட்டும் என்ன, நரிக்குறவர்களும் எச்சில் சோற்றுக்காக ஏங்கிக் கிடக்கும் பிச்சைக்காரர்களும் கூட எப்படியோ மோப்பம் பிடித்துக் கொண்டு அங்கு வந்து குழுமி விருந்தார்கள், நாய்களுக்கும் ஒரு படி மேலாக.

அழையாவீட்டு விருந்தினர்கள் தாமே அவர்கள்? அதனால் அவர்கள் அமருவதற்கென்று எந்த விதமான ஏற்பாடும் செய்யப்படவில்லை. எனவே, நாய்கள் பிச்சைக்காரர்கள் உட்காரு மிடத்தில் உட்கார்ந்திருந்தனவா, அல்லது நாய்கள் உட்கார வேண்டிய இடத்தில் பிச்சைக்காரர்கள் உட்கார்ந்திருந்தனரா என்று இனம் கண்டு கூறுவது கடினமாயிருந்தது.

மனிதன் முன்னேறி முன்னேறி மிக மிக உச்சாணிக் கிளையில் ஏறி அமர்ந்தாலும் அல்லது விழுந்து விழுந்து அதள பாதாளத்தில் அழுந்திக் கிடந்தாலும் மனிதன் மனிதன்தானே? அதனால்தான் நாய்களும் பிச்சைக்காரர்களும் கலந்து ஒன்றுசேர்ந்து உட்காரவில்லை. சற்று விலகியே அவர்கள் உட்கார்ந்திருந்தனர்.

நாய்களும் விசுவாசமுள்ள பிராணிகளாகையால், மனிதர்களுக்குள்ள மதிப்புக்குக் குந்தகம் விளைவிக்காமல் தனித்தே உட்கார்ந்திருந்தன. ஆம், அவை மனிதர்களை மனிதர்களாக மதித்து நடந்து கொண்டன.

ஆனால் இந்த மதிகெட்ட மனிதர்களை என்னவென்பது? கூட்டம் அதிகரிக்கவே அவர்கள் நாய்கள் இருக்குமிடத்தையும் ஆக்கிரமித்துக் கொள்ளலாயினர். மனிதர்களது இந்த மதியீனச் செயல் நாய்களுக்குச் சிறிது மன வருத்தத்தையே அளித்தது.

அதோடு அவற்றின் மனத்திலே இன்னுமோர் எண்ணமும் தலைதூக்கியது. நம்களுக்கு ஓர் வஞ்சனை இழைக்கப்பட்டால் என்ன செய்வது என்று அவை சிந்தித்தன. ஏனெனில் எச்சில் இலைகளை எறிய வருபவனும் மனித இனத்தைச் சேர்ந்தவனாயிற்றே! இனம் இனத்தைச் சேரும் என்ற கொள்கைப்படி அவன் தன் இனத்தவர்களைக் கவனிப்பது தான் தன் கடமை என்று கருதலாமே! அப்படி அவன் செய்துவிட்டால் மனிதன் நாயாகப் பாய்ந்து குரைத்துக் கடித்துச் சண்டையிட்டு, எச்சிற்கலத்தைப் பருக்கை விடாமல் சாப்பிட்டு விடலாமே! நாம் வாயைப் பிளந்து கொண்டு வாலைச் சுருட்டிக் கொண்டு வெறுமனே உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருக்க நேரிடலாமே! அப்போது நாம் என்ன செய்வது?

நாக்கைத் தொங்க விட்டுக் கொண்டு நாய்கள் இத்தகைய சிந்தனையில் ஈடுபட்டிருந்தன. அதோடு நிமிஷத்துக்கு நிமிஷம் நாய்க் கூட்டத்தைக் காட்டிலும் பிச்சைக்காரர்களது கும்பல் பெருகிக் கொண்டே போயிற்று.

இதைக் கண்ணுற்ற நாய்களில் சில எழுந்து விட்டன. கோபத்தில் அவற்றின் வால்கள் விறைத்துக் கொண்டன. மனிதக் கும்பலின் மீது பாய்ந்து பிடுங்கலாமா என்று அவை யோசித்தனவோ, என்னவோ?

அதே சமயம் ஒரு கிழட்டு நாய் உறுமியது. அது அவற்றை அதட்டி அடக்கியதோ, என்னவோ? ஆம், அப்படித்தான் இருக்க வேண்டும்.

"இளமைத் துடிப்பில் தன்னை மறந்து நிற்கும் மூட நாய்களே! நாலு எச்சில் இலைக்காக எந்தப் பாவமும் அறியாத மனித இனத்தினிடம் விரோதம் பாராட்டிப் பழி வாங்க முற்பட்டு விட்டீர்களே, இது நியாயமா? இனப் பாகுபாடு இன்றி உங்களோடு தங்கள் இனத்தவர்களையும் ஒன்றாக உட்கார வைத்துச் சோறு படைக்க முன் வந்திருக்கும் மனிதனின் பெருந்தன்மை எங்கே? உங்கள் சிறுமை எங்கே? சீ, வெட்கங் கெட்ட நாய்களே! நம்மோடு நம்மில் ஒருவனாக அமர்ந்து உயர் சாதி என்று சொல்லிக் கொள்ளும் மனிதனும் உணவு அருந்துகிறானே என்று பெருமைப்படுவது போக, இப்படியா வயிற்றெரிச்சல் படுவது? நமக்கும் மானிட இனத்துக்கும் இடையே உள்ள அகழி தூர்க்கப்படுவதைக் காணும் பொழுது நாம் பெருமகிழ்ச்சி அல்லவா கொள்ள வேண்டும்? மானிட இனத்துக்கு நன்றி அல்லவா தெரிவிக்க வேண்டும்? நன்றி கொன்றார்க்கு இவ்வுலகில் உய்வில்லை, தெரியுமா?"

கிழட்டு நாயின் இந்த உபதேசத்தைக் கேட்டதும் வாலை முறுக்கிக் கொண்டு சண்டைக்குப் புறப்பட்ட நாய்கள் அத்தனையும் மீண்டும் தங்கள் தங்கள் இடத்தில் போய் உட்கார்ந்து கொண்டன. சிறிது நேரத்துக்கெல்லாம் தூங்கியும் வழியலாயின. பசி முற்றி ஏற்பட்ட களைப்பினால் அவை அப்படித் தூங்கி வழிந்தனவா? அல்லது மனிதனின் நன்றிக் கடலில் ஆழ்ந்து மயங்கிக் கிறங்கிக் கிடந்தனவா? இது இன்று வரையில் விளங்காத இரகசியம்.

ஆனால்....

நாகரிகம் முற்றிய மனிதனின் செயலுக்கு நாய்களும் தலைவணங்கிக் குனிந்தன என்று கொள்வதுதான் சாலப் பொருந்தும், நாகரிகம் மிகுந்த செயலும் ஆகும் என்று தோன்றுகிறது.





ரா.வி.




என் பாட்டனார் மழவராயனேந்தல் சிதம்பர பாரதி அவர்களுடைய மூத்த தமையனார்தான் மழவராயனேந்தல் சுப்பராமய்யர் என்ற சுப்பராம பாரதி. அவர் சகஸ்ர அவதானி என்ற பிரக்யாதி அடைந்த பெரியார். எட்டு அவதானங்களைச் செய்பவர் அஷ்டாவதானி. அதற்கு மேற்பட்டுச் செய்யக் கூடியவர்களைச் சதாவதானி (நூற்றுக் கணக்கில் அவதானம் செய்பவர்கள்) என்றும் சகஸ்ராவதானி (ஆயிரக்கணக்கில் அவதானம் செய்பவர்கள்) என்றும் அழைப்பது வழக்கம்.

இக்காலத்தில் அவதானம் செய்வது என்பது நாம் பார்த்து அனுபவிக்கக் கிடைக்காத ஓர் அதிசயக் கலையாக இருக்கிறது. ஆனாலும் அவதானத்தைப் போன்ற சில அரிய விஷயங்களை, தினசரி வாழ்க்கையிலே அன்றாட நிகழ்ச்சிகளில் சிற்சில சமயங்களிலே கேள்விப்படுகிறோம். அனகேசன் என்ற பிரசித்தி பெற்ற சதுரங்க நிபுணர், தம் கண்களைக் கட்டிக் கொண்டு பன்னிரு பிரபல ஆட்டக்காரரோடு ஆடி, வெற்றி கொண்டாராம். ஒவ்வொரு பலகையில் உள்ள ஸ்தானங்களும், காய்கள் நிற்கும் ஸ்தானங்களும், அவை மாறிக் கொண்டிருக்கும் நிலைகளும் அப்படியே படம் பிடித்து வைத்துக் காட்டுவது போல் அவர் மனத்தில் பதிந்து நிற்கா விட்டால் எப்படி அவர் பல ஆட்டக்காரர்களோடு ஆடிக் காட்டியிருக்க முடியும்? மனத்தின் ஞாபக சக்தியின் பெருமைதான் என்ன?

மற்றொரு பிரபல சங்கீத வித்வான், வாயினால் பாடிக் கொண்டிருப்பார். அது ஒரு தாளத்தில் போய்க் கொண்டிருக்கும். ஆனால் தம் இரு கைகளில் ஒரு கை வேறு ஒரு தாளத்தைப் போட்டுக்கொண் டிருக்கும். இரண்டாவது கை மூன்றாவது தாளம் ஒன்றைப் போட்டுக் கொண்டிருக்கும். வித்வான் எல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து ஓர் இடத்துக்குக் கொண்டு வந்து முடிப்பார். இதையும் ஒருவித அவதானம் என்றே சொல்ல வேண்டும்.

அதுவும் போகட்டும். சாதாரணமாக ஒருவர் வீணை வாசிப்பதை எடுத்துக் கொள்வோம். வாய் பாடுகிறது. ஒரு கை மெட்டிலுள்ள ஸ்வர ஸ்தானங்களைத் தொட்டுக் கொண்டு வருகிறது. மற்றொரு கையில் உள்ள விரல்கள் தந்திகளை மீட்டுகின்றன. அதே கையில் உள்ள சுண்டுவிரல் தாளக் கம்பியை மீட்டிக் கொண்டிருக்கிறது. மனமோ இவைகளையெல்லாம் ஒன்று சேர்த்துப் புதுப் புதுக் கற்பனைகளை உதிர்த்துக்கொண்டிருக்கிறது.

இவைகளை விடப் பன்மடங்கு சிரமமான காரியங்களைச் செய்து காட்டும் ஆற்றல்தான் அவதானம். பல கலைகளிலே விற்பன்னர்களான பெரியார் பல விஷயங்களைக் கேட்டுப் பரீட்சை செய்வார்கள். அதற்கெல்லாம் அவதானி சரியான விடைகளைத் தருவார். ஒரு புலவர், அவதானியை 'மூட்டைக்கும் கோட்டைக்கும்' சேர்த்து வெண்பா ஒன்றைப் பாடச் சொல்வார். இரண்டாமவர், தமக்குத் தெரிந்த பல அரிய புஷ்பங்களின் பெயரைச் சொல்லிக் கொண்டு போவார். மூன்றாமவர், தாம் விஷ்ணுபரமாகச் செய்திருக்கும் காவியத்தை வாசித்துக் காட்டி, அதைச் சிவபரமாக மாற்றித் திருப்பிச் சொல்லிக் கேட்பார். நாலாவது மனிதர் பத்துப் பதினைந்து ஸ்தானங்களுடைய ஒரு கணக்கைப் போட்டுவிட்டு, அதற்குச் சரியான விடை என்ன என்று கேட்பார். அவதானி ஒவ்வொரு கேள்வியையும் மனத்தில் வாங்கிக்கொண்டு அதததற்குத் தகுந்தாற் போல் விடையளிப்பார். மூட்டையையும் கோட்டையையும் இசைத்து வெண்பா செய்து காட்டுவார். புஷ்பங்களின் பெயர்களைச் சொன்னவர் சொன்ன வரிசையிலேயே திருப்பிச் சொல்லுவார். விஷ்ணுபரமான காவியத்தைச் சிவபரமாகத் திருத்தி அமைத்துப் பாடிக் காண்பிப்பார். போடப்பட் டிருக்கும்

கணக்கை மனத்திலேயே தீர்த்து அதற்குச் சரியான விடையைத் தருவார்.

இத்தகைய அற்புத சாதனைக்குத்தான் அவதானம் என்று பெயர். ஒருவர் தம் மனத்தை ஒரு விஷயத்தில்தான் செலுத்த முடியும். பால் கணக்கைத் தீவிரமாகப் பார்த்துக் கொண்டிருக்கும்போது பையன் வந்து ஏதாவது கேள்வி கேட்டு விட்டால் கணக்குத் தவறி விடுகிறது. ஆனால், அவதானம் செய்பவர், கிருஷ்ண பகவான் எப்படித் தான் ஒருவனே, ஒவ்வொரு கோபிகையோடும் தனித்தனியாக இருப்பதாக ஒரு தோற்றத்தைச் செய்தானோ, அது போல் தம் மனத்தை விசுவரூபம் எடுக்கச் செய்து பல விஷயங்களில் மனத்தைத் தனித்தனியாக ஒன்றி நிற்கச் செய்யும் ஆற்றலைப் படைத்திருக்கிறார். இது மனத்தை நிலைநிறுத்தும் அப்பியாசத்தினாலும், தெய்வீக உபாசனையின் அருளாலும் கிடைக்கப் பெறும் அரிய வித்தை.

மழவை சுப்பராம பாரதியின் புகழைக் கேள்விப்பட்டிருந்த புதுக்கோட்டை இராமச்சந்திரத் தொண்டைமான் மகாராஜா அவர்கள், அவர் அவதானம் செய்யும் அற்புதத்தைப் பார்த்து ஆனந்திக்க விரும்பினார். தம் அபிப்பிராயத்தை, சிறந்த சங்கீத வித்வானும், கலை விஷயங்களில் மகாராஜாவுக்கு ஆலோசகராகவுமிருந்த ஒருவரிடம் சொன்னார். அந்த வித்வான் சுப்பராம பாரதிக்குப் பந்துவாகவுமிருந்தார். இருந்தாலும், சுப்பராம பாரதி அவ்வளவு பிரக்யாதி அடைந்திருந்ததில் சிறிது அசூயை கொண்டு இருந்தார் போலும். ''மகாராஜா! அவருடைய அவதானத்தைப் பார்க்க விரும்புகிறீர்கள். அது என்னவோ அவ்வளவு உசிதமாக எனக்குப் படவில்லை. துர்த்தேவதைகளை உபாசிப்பதில் 'பிலி', 'சூனியம்' போன்றதொரு விரும்பத்தகாத ஒரு வித்தை இது. பார்த்தால் துர்த்தேவதைகளினால் மகாராஜா அவர்களுக்கு ஏதாவது ஹிம்சை ஏற்பட்டாலும் ஏற்படலாம். ஆகவே, இந்த எண்ணத்தை மேற்கொள்ள வேண்டாமென்று தாழ்மையாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்'' என்று மகாராஜாவிடம் பரிவுடன் பேசினார்.

ஆனால் மகாராஜாவோ அவர் எடுத்துச் சொன்ன ஆட்சேபணைகளைப் பொருட்படுத்தவில்லை. ''பரவாயில்லை. நீங்கள் அவரை அவதானம் செய்ய வரவழையுங்கள். நான் துர்த்தேவதைகளைக் கவனித்துக் கொள்கிறேன்'' என்று ஆணித்தரமாகக் கட்டளையிட்டுவிட்டார்.

வேறு வழியின்றி, சங்கீத வித்வான் சுப்பராம பாரதிக்குப் பத்திரிகை அனுப்பி, அவருடைய அவதானத்துக்கு ஏற்பாடு செய்தார். இருந்தாலும் அவர் மனத்திலிருந்த துவேஷம் மேலும் பொங்கி எழுந்தது. பாரதி அவதானம் செய்யும் பொழுது ஏதாவது ஒன்றைச் செய்து அவர் மானபங்கம் அடையும்படி செய்ய வேண்டுமென்று முடிவு கட்டினார். அதற்கு ஒரு யுக்தியும் தோன்றியது அவருக்கு.

நவராத்திரியின்பொழுது அவதானம் செய்ய ஏற்பாடாகியிருந்தது. அந்தச் சமயத்தில்தான் மகாராஜா பிரபலமான பண்டிதர்களையும், வித்வான்களையும், கலைச் செல்வர்களையும் வரவழைத்து, பெரிய சதஸைக் கூட்டி, அந்த விற்பன்னர்களின் திறமைகளைக் காட்டும்படி செய்து, அவரவர்களுக்குத் தகுந்தபடி சன்மானங்கள் செய்து சந்தோஷப்படுத்துவது வழக்கம். அந்த நவராத்திரிக்கும் புலவர்கள், சங்கீத மேதைகள், வேத விற்பன்னர்கள், பண்டிதர்கள், அவரவர்களுடைய திறமையைக் காட்ட ஏராளமாய் வந்திருந்தார்கள். இந்த வைபவங்களில் மழவை சுப்பராம பாரதியின் அவதானமும் ஒன்றாகச் சேர்க்கப்பட்டிருந்தது.

இதைப் பார்ப்பதற்கு ஏராளமான மக்கள் குழுமியிருந்தார்கள். பெரிய மனிதர்கள், சின்ன மனிதர்கள், படித்தவர்கள், படிக்காதவர்கள் எல்லோரும் அந்த அதிசயத்தைக் காணத் திரண்டு வந்திருந்தார்கள். மகாராஜா கம்பீரமாகத் தம் ஆசனத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார். அதிகாரிகள் தங்கள் தர்பார் உடையோடு அவரவர்களுக்கேற்ற இடத்தில் உட்கார்ந்துகொண்டனர்.

சுப்பராம பாரதியார் விழா மேடையில் வந்து உட்கார்ந்தார். தம் குலதெய்வமான சுப்பிரமணியக் கடவுளைத் தியானித்துக் கண்மூடி மௌனியாகச் சில விநாடிகள் இருந்தார். கண்ணைத் திறந்து அவதானத்துக்குத் தயாராக நின்றார். பரீட்சைகள் ஒவ்வொன்றாக ஆரம்பமாயின. ஒவ்வொன்றையும் மனத்தில் நன்கு வாங்கிக் கொண்டார். அன்று அவருக்குத் தரப்பட்ட பரீட்சைகளில் ஒன்று, மகாராஜாவின் ஆலோசகரும், பாரதியின் அவதானத்துக்கு எதிராக

**மோப்பக் குழையும் .....**



இருந்த சங்கீத வித்வானுடையதே. ஒரு புதுவிதமான பரீட்சைக்கு அவர் ஏற்பாடு செய்து வைத்திருந்தார்.

சங்கீத வித்வான் திரைக்குப் பின்னால் நின்று கொண்டு ஒரு வெங்கலப் பாத்திரத்தை எடுத்துத் தட்டுவார். கணீரென்று அது ஒரு சுநாதத்தை எழுப்பும். அந்த நாதத்தைக் காட்டிவிட்டு, ''இது ஏழு சேர்'' என்றார். அவதானி, அந்த நாதத்தையும், அந்தப் பாத்திரத்துக்குள்ள எடையையும் மனத்தில் வாங்கி நிறுத்திக் கொண்டார். சங்கீத வித்வான் வேறு பாத்திரத்தை எடுத்துத் தட்டிக் காட்டினார். ''இது பத்துச் சேர்'' என்றார். மற்றொன்றைத் தட்டிக் காட்டி ''இது ஆறு சேர்'' என்றார். இப்படிச் சுமார் பத்துப் பன்னிரண்டு பாத்திரங்களின் நாதத்தைக் காட்டி அதன் எடையைச் சொல்லி வந்தார். இதைத் தவிர மற்றப் பரீட்சைகளும் நடந்தன. அதாவது பாட்டுக் கவனம் செய்தல், கணக்குப் போடுதல் போன்ற மற்றப் பரீட்சைகளும் நடுநடுவே கலந்து கலந்து நடந்தன.

பின்னர் சங்கீத வித்வான் திரும்பவும் பாத்திரங்களை எடுத்துக்கொண்டு, ஒன்றைத் தட்டிக்காட்டி, ''இது எத்தனை சேர்?'' என்றார்.

''ஆறு சேர்'' என்று அடுத்த விநாடியே பதில் கொடுத்தார் அவதானி. சங்கீத வித்வான் மற்றொன்றைத் தட்டிக் காட்டி ''இது எத்தனை சேர்?'' என்று கேட்டார்.

''ஒன்பது சேர்'' என்று பளிச்சென்று பதில் கொடுத்தார். இப்படி ஒவ்வொன்றாகத் தட்டிக் காட்டியதற்கெல்லாம் உடனுக்குடனேயே கணீரென்று பதில் சொல்லி வந்தார் சுப்பராம பாரதியார். வித்வான் மற்றொரு பாத்திரத்தை எடுத்துத் தட்டினார். ''இது எத்தனை சேர்?'' என்று கேட்கும்பொழுது சவால் விடுவது போல் இருந்தது. அவதானி பதில் சொல்லவில்லை. மறுபடியும் தட்டி, ''இது எத்தனை சேர்?'' என்றார். திரும்பவும் பாரதியார் பதில் சொல்லவில்லை. என்ன, அதன் எடை ஞாபகம் வரவில்லையா? என்ன காரணம் பேசாமல் இருக்கிறார்? மூன்றும் தடவை தட்டும் சங்கீத வித்வான் முகத்தில் வெற்றிக் குறி தோன்றியது. இந்தப் பரீட்சையில் அவதானம் செய்ய வந்தவர் தோற்றுத்தான் போவார் என்று தீர்மானித்தார். ''இது எத்தனை சேர்? சரியாகச் சொல்லுங்கள்'' என்று அறைகூவினார்.

பாரதியார் ஒரு விநாடி கண்களை மூடிக்கொண்டார். தம் இஷ்ட தெய்வத்தைத் தியானித்துக் கொண்டார். மறு விநாடி அந்த வெண்கல ஒலியைப் போலவே கணீரென்று பதில் சொன்னார். ''மகாராஜா அவர்களே! இப்பொழுது சங்கீத வித்வான் தட்டிக் காட்டுகிறாரே, இந்தப் பாத்திரம் வேறு. முன்பு தட்டிக் காட்டிய பாத்திரம் வேறு'' என்றார்.

எல்லோரும் ஆச்சரியப்பட்டு நின்றனர். மகாராஜா என்னவென்று விசாரித்தபோது, சங்கீத வித்வான் ஒரு பாத்திரத்துக்குப் பதிலாக அதே நாதத்தைக் கொடுக்கும் வேறு ஒரு பாத்திரத்தை வைத்து மாற்றிவிட்டார் என்பது தெரிந்தது. அசல் பாத்திரத்தின் எடையைச் சொன்னால் அது தவறாகும்; சொல்லாமலிருந்தாலும் தவறாகும். அவதானியால் செய்ய முடியவில்லை என்று நிரூபித்ததாகிவிடும் என்று முடிவு கட்டியிருந்தார் சங்கீத வித்வான். ஆனால், அவதானியோ சூழ்ச்சியை அம்பலப்படுத்திவிட்டார்.

இதை எப்படிக் கண்டுபிடித்தார் என்பதை மகாராஜா கேட்டபொழுது, ''மகாராஜா அவர்களே! என் நண்பர் சங்கீத வித்வான். சங்கீதத்தில் அபரிமிதமான ஞானத்தைக் கொண்டவர்தான். இருந்தாலும் அசல் பாத்திரத்துக்கும், புதுப் பாத்திரத்துக்கும் உள்ள நாதமானது ஒன்று போன்றிருந்தாலும் சுருதியிலே சிறிது வித்தியாசத்தைக் கொண்டிருந்தன என்பதைச் சுருதியிலேயே நிலைத்து நிற்கும் என் நண்பர் கவனிக்கவில்லை. இரண்டாவது பாத்திரத்தின் நாதம் எழுந்தவுடனேயே அதன் சுருதிக் குறைவைக் கண்டு கொண்டுவிட்டேன். இரண்டாம் தடவை அந்தப் பாத்திரம் வேறு என்பது தெளிவாகி விட்டது. மூன்றும் தடவைக்குள் இவர்கள் பாத்திரத்தை மாற்றி என்னைப் பரீட்சை செய்கிறார்கள் என்பதைத் தீர்மானித்து விட்டேன்'' என்றார்.

மகாராஜாவும், சபையிலுள்ள பெரியோர்களும் ஆச்சரியப்பட்டு, தங்கள் சந்தோஷத்தைத் தெரியப்படுத்திக் கொண்டார்கள். பாத்திரங்களை மாற்றிய வித்வானும் சந்தோஷப்பட்டார். அவர் மனத்தில் இருந்த துவேஷம் நீங்கி, அவரிடம் மரியாதையையும், அபிமானத்தையும் கொண்டார். மகாராஜா இராமச்சந்திரத் தொண்டைமான் அவர்கள், மழவை சுப்பராம பாரதி அவர்களுக்கு விசேஷ சன்மானங்களும் மரியாதைகளும் செய்து கௌரவப்படுத்தினர்.

..... மூக்கு!



பனிமுடி மீது ஒரு

# கண்ணகி

எம்.வி.வெங்கட்ராம்

ஹிமாசலத்தின் அந்தரங்கமான அந்தப்புரம். உயிர் உருவங்களில் தான் இருக்க வேண்டியதில்லை என்று மட்டும் அல்ல, உருவற்றும் உயிர் தோன்றி வளர்ந்து உலாவும் என்னும் ரகசியத்தை மலையரசன் மறைத்து வைத்திருக்க இடம் அது.

பாறைக் கரும்பைகளை விரித்து, உயிருக்கு ஒரு தொடக்கமோ, ஒரு முடிவோ இல்லை என்பதைத் தூலமாய்க் காட்டிக் கொண்டிருந்தது இயற்கை....

சிருஷ்டிக்கு ஆணும் பெண்ணும் தேவை என்ற மனிதக் கற்பனையின் பொருளற்ற தன்மையை விளக்குவதற்காக, பாறைகள் சரமாகி, கருத்தாங்கி, வயிறு பிளந்து ஈன்ற விருட்ச ராசிகள், மதம் கொண்ட அஞ்ஞானிகள்போல் உண்டு கொழித்துப் பருத்து உயர்ந்து விரிந்து விரிந்தும், உயரத்தை எட்ட முடியாமல் தவித்து, உயரத்துக்குமேல் உயரமும், பெருமைக்கு மேல் பெருமையும் இருப்பதை அறியாமல், மேலும் உயர்ந்து, மேலும் விரிந்து மேலும் தவிக்க;

நீண்டு வளைந்து நெளிந்து ஓடோடியும் முடியாமல் களைத்துச் சுருண்டு துவண்டு கிடந்த கொடிகள், 'ஆழத்தின் கீழ் ஆழம் உண்டு; அந்த ஆழம் கண்டால் அற்புதம் காணலாம்' என்று தேடுவனவே போல் பாறைச் சந்துகளிலும், பள்ளத்தாக்குகளிலும், இறங்கிக் குனிந்து தேடும்போது, தம்மை அறியாமல் தாம் பெற்ற மணத்தை 'கீழும்' என்று பரப்பிக் கொண்டு மகிழ;

தேடியதைக் கண்டறிந்து பரவசமுற்றவர்களைப் போல், 'மேடும் பள்ளமும் எமக்கு இல்லை' என்று கலகலவென நகைத்தவண்ணம் சிற்றருவிகள் களித்து வெறித்துக் குதித்தாட;

என்ன என்பதையும், ஏன் என்பதையும் நிரூபிப்பதற்காக அறிவின் புதுப் புது ஆராய்ச்சிகளைத் தொடுத்து ஓயாத வாதப் போர் புரியும் தர்க்கவாதிகளைப் போன்று வண்ணப் பறவைகள் மரங்கள்மீதும் பாறைகள் மீதும் அமர்ந்தும், ஆகாசத்தில் பறந்தும் ஓயாமல் ஆரவாரம் செய்ய;

சிகரங்கள் மீது அலை அலையாக வந்த வெண் முகில்கள், ஒன்றன்பின் ஒன்றாக வருவதும், ஒன்றன் மீது ஒன்று அமருவதும், ஒன்றும் ஒன்றும் ஒன்றாய்க் கலப்பதுமாய் இருப்பது ஓர் ஒன்றுதான் என்பதை வரையறுக்கும் ஒரு தோற்றம் எழுப்ப;

ஓர் அமைதி மலையாக அங்கு நிற்கிறது.

★

அந்த இடத்திலும் மனிதக் குரல் கேட்கிறது. ஆகா! மனிதன் ஏறாத உயரம் இல்லையா? கம்பீரமும் இனிமையும் செறிந்த அந்தக் குரல் பாடுகிறது:

"ஒளியில் விளைந்த உயர் ஞானப்
பூதரத்துச்சியின் மேல்
அளியில் விளைந்த தோர் ஆனந்தத்
தேனை அநுதியிலே











**வெளியில் விளைந்த வெறும் பாழைப்
பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பியவா முகமாறுடைத்
தேசிகனே!"**

திரை கடல் ஓடித் திரவியம் தேட முற்படாமல், பருவத்தின் உச்சி ஏறி அறிவு தேட முனைந்த தமிழகத்து இளைஞன் அவன். இல்லாவிட்டால், தமிழின் இனிமை அந்த மலைப் பிரதேசத்தில் இவ்வளவு பாங்காக எவ்வாறு இசையும்?

அவன் பெயர் கண்ணன்.

ஆரோக்கியமே வடி வெடுத்தது போன்ற உடற்கட்டு; அப்போதுதான் அருவியில் குளித்த புது மெருகு. அந்த உடலுக்கு ஒரு பொலிவு அளித்தது. கௌபீனதாரியாக, தன் இசையில் பரவசமுற்றவனாக, செடிகொடிகளையும் மலைப் பாம்புகளையும் மிதித்துக் கொண்டும், எதிர்ப்பட்ட விலங்குகளைத் தடவிக் கொடுத்தவாறும் அவன் நடந்தான்.

பாட்டு முடியும்போது அவன் எதிரில் ஒரு குடிசை நின்றது.

அடைத்திருந்த கதவிடம் அவன் குரல் கொடுத்தான்.

"கண்ணனி! சூரியோதயம் ஆகிவிட்டது; இன்னுமா தூக்கம்?"

"ஏன் வெளியில் நின்று கூச்சல் போடுகிறாய்? உள்ளே வந்தால் என்ன?" என்ற பதில் குரல். பெண் குரல்; அதுவும் தமிழ்க் குரல்தான்.

"கதவு மூடியிருக்கிறதே!"

"என்னடா புதிய கேள்வி இது? தாழில்லாத கதவு என்று இன்று புதிதாகத் தெரிந்து கொள்கிறாயா? மிருகங்களின் அல்லலுக்காகத்தான் கதவை அடைத்தேன். நீ மிருகம் இல்லையே?"

கதவைத் தள்ளிக் கொண்டு கண்ணன் நுழைந்தான்.

குடிலுக்குள் இருபது வயதுப் பெண் ஒருத்தி; இரண்டாயிரம் ஆண்டு இளமைப் பாறை மீது இரண்டு முழத் துண்டு ஒன்றைப் 'பெயருக்கு'ப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

கண்ணன் பார்த்தான்; கண்கள் இருக்கின்றனவே! ஒரு பெருமூச்சைத் தொண்டைக்குள் நெரித்து மறைத்துக் கொண்டான்.

"இப்போது தான் எழுந்தாயா, கண்ணனி?"

"என்னைப் பார்த்தால் அப்படித் தோன்றுகிறதா?"

"குளிக்க வரவில்லையே நீ என்று கேட்டால்—"

"குளிக்க வேண்டுமா?"

"வேண்டாமா? மனக்கு ஒரு கலகலப்பு; தியானத்துக்கு ஒரு தெளிவு."

"அப்படியா? குளித்தால் கலகலப்பும் தெளிவும் வருமா?" என்று முறுவலித்தாள் கண்ணனி.

"என்ன இன்று இடக்காகவே பேசுகிறாய். முதலில் என்னை மிருகம் என்றாய்."

"நீ மட்டும் உள்ளே வர வழி தெரியாமல் தவங்கலாமா?"

"கதவு மூடியிருக்கிறதே, நீ உள்ளே என்ன செய்கிறாயோ என்று தயங்கினேன்.....!"

"உனக்குத் தெரியாமல் என்னிடம் இன்று வரையில் ரகசியம் ஏதாவது இருந்திருக்கிறதா?"

"அதற்கல்ல. என்ன இருந்தாலும் நீ பெண்—"

"இமயமென்று இன்று நீ ஆளுமி விட்டாயாக்கும். அது போகட்டும். நாம் நம் குருதேவரோடு இமாசலம் வந்து நேற்றோடு பன்னிரண்டு ஆண்டுகள் பூர்த்தி ஆகின்றன; இல்லையா கண்ணா?"

★

கண்ணன் கூறினான்: "எனக்கு ஞாபகம் இருக்கிறது. குருதேவர் நம்முடன் ஒன்பது ஆண்டுகள் இருந்தார். எல்லா விதப் பயிற்சிகளையும்கூட இருந்து சொல்லிக் கொடுத்தார்; செய்ய வைத்தார். தியானம், பிராணாயாமம், யோக சாதனைகள்......"

"குளிக்கவும் சாப்பிடவும் தூங்கவும் கூடத்தான் கற்பித்தார். நமக்கு ஒரு சின்னக் குறைகூட அவர் வைக்கவில்லை. இல்லையா, கண்ணா?"

"உண்மை."

"நாம் எங்கிருந்து எங்கு வந்திருக்கிறோம் என்பதை இந்த நல்ல நாளில் நினைத்துப் பார்க்க வேண்டாமா?"

"நான் எதையும் மறக்கவில்லை. பன்னிரண்டு வருடங்களுக்கு முன், நான் பதின்மூன்று வயதுச் சிறுவன். அனாதை; ஆண்டி. பெற்றவர்கள் யார் என்கிற செய்தியே எனக்குத் தெரியாது. அதைப் பற்றி அப்போது நான் கவலைப்பட்டதாகவும் ஞாபகம் இல்லை. பசி ஒன்றுதான்; ஊரார் ஊட்டினார்கள். யாரோ சில பாடல்களைச் சொல்லித் தந்தார்கள். நல்ல குரல் இருந்ததால், பாட்டு வயிற்றுப் பையை நிறைத்தது. திருச்செந்தூரில் இருந்தேன் ஒரு முறை. 'தென்னிய ஏனைமிற்கின்னைக் கள்ளச் சிறுமியெனும் வள்ளியை வேட்டவன் தான் வேட்டிலே' என்று ஆனந்தமாகப் பாடிக் கொண்டே ஒரு நாள் அலையாடிக் கொண்டிருந்தேன். அலையின் சுடலுக்குள் சிக்கி மூச்சுக்குத் தவிக்கும்போது, யாரோ என் கரம் பற்றி வெளியில் இழுத்தார்கள். ஒரு பெரியவர்; நான் அதற்கு முன் பார்த்ததில்லை. 'என்னோடு வருகிறாயா தம்பி?' என்றார். 'எங்கே?' என்றேன். 'அங்கேதான்' என்றார் சிரித்துக் கொண்டே. அலைகளுக்கு வெளியில் வந்து அவரைப் பார்த்தேன். ஏதோ ஒன்று, அவருடன் போகும்படி உள்ளிருந்து உந்தியது. பிச்சை எடுக்கிற பிழைப்பு, எங்கு நடந்தால் என்ன என்று முடிவு செய்தேன். கால்களில் விழுந்துவும் பிட்டேன். அவரோடு கிளம்பினேன்."

கண்ணனி தொடர்ந்தாள்: "நீங்கள் இருவரும் எங்கெல்லாமோ சுற்றி விட்டுப் பழனிக்கு வந்தீர்கள். உன்னைப் போல் நானும் அனாதைதான். பெற்றவன் முகம் மட்டும் நிழலாய் நினைவிருக்கிறது. பழனி அடிவாரத்தில், நடு வீதியில் என்னை எறிந்து விட்டு, 'பிச்சை எடுத்துப் பிழைத்துக் கொள்' என்று உபதேசம் அளித்துப் போய் விட்டான். எட்டு, ஒன்பது வயசு இருக்கும் எனக்கு. 'முருகா, முருகா' என்றும் 'தண்டபாணிக்கு அரோகரா' என்றும் கத்துவதைத் தவிர வேறு ஒன்றும் தெரியாது. அடிவாரத்தில், பிச்சைக்காரர்களின் வரிசையில் உட்கார்ந்திருந்த போது, நீங்கள் இருவரும் என் பக்கத்தில் வந்து நின்றீர்கள். குருநாதர் அன்புடன் என் தலையும் முதுகும் வருடினார். 'கண்ணனி என்னோடு வா. இந்தப் பிழைப்புக்காக



ஆசிரியர்: ஊர்வன இனத்தில் பாம்பு மிகவும் கொடியது. டேய் முத்து! என்ன உன் காதில் நுழைந்தது?

முத்து: ஓ!ஸார்! அதுதான் கொஞ்ச நாழிக்கு முந்தி ஏதோ காதிலே புகுந்தமாதிரி குடைந்தது! அதுதானா?

நீ பிறக்க வில்லை' என்றார். ஓர் அப்பா கிடைத்த நிம்மதியோடு அவருடன் நடந்தேன்.''

''ஒவ்வொரு க்ஷேத்திரமாகத் தரிசனம் செய்துகொண்டே, இந்த உச்சிக்கு அழைத்து வந்தார். ஆறு ஆண்டுகள் நமக்குத் தமிழ் ஞானம் முழுவதும் அளித்தார். மூன்று ஆண்டுகள் மௌன சாதனை செய்வித்தார்.''

''பிறகு, மூன்று ஆண்டுகள் நீயும் நானும் தனித்திருந்து சாதனை செய்ய வேண்டும் என்று கூறி நம்மை நம் பொறுப்பில் விட்டு விட்டு எங்கோ போயிருக்கிறார்.''

நூறாவது பெருமூச்சைத் தொண்டைக்குள் நெறித்துக் கண்ணன் சொன்னான்: ''ஆனால் நம்மைத் தனியாகச் சாதனை செய்ய விட்டு அவர் போனது தவறு என்று தோன்றுகிறது. இல்லையா, கண்ணனி?''

''தவமே தவறு என்று உனக்குத் தோன்றவில்லையா, கண்ணா?''

''பார்த்தாயா, நீ என்னைப் பரிகசிக்கிறாய்.''

''குருநாதர் தவறு செய்கிறார் என்று சொல்லும் அளவுக்கு நீ உயர்ந்த சித்தி அடைந்து விட்டாயே, அதனால் கேட்டேன்.''

''அதல்ல கண்ணனி. நான் அப்படிச் சொல்வேனா? அவரைக் குறை சொல்வேனா? குருநாதர் எவ்வளவு பெரியவர்! நான் நன்றி கெட்டவனா? அவரைக் குறை சொல்வேனா? ஆனால் –''

''ஆனால் என்ன?''

''இந்தத் தனிமை.''

''தனிமைதானே சாதனைக்கு அவசியம்?''

''நான் தனியாகவா இருக்கிறேன்?'' என்றான் கண்ணன்.

''ஓ, நான் உன் தவத்துக்கு இடையூறாக இருக்கிறேன் என்கிறாயா? என்னை உன்னுடன் பெரியவர் விட்டுச் சென்றது தவறு என்கிறாய். நான் வெளியேறி விடுகிறேன். சரிதானே?'' அவள், அரையில் சேலைத் துண்டு கட்டிக் கொண்டு எழுந்து குடிசை வாயில் நோக்கி நடக்கலானாள்.

அவன் பாய்ந்து, வழிமறித்தான். இரு கரங்களைப் பரப்பி எதிர் நின்று.

''எங்கே போகிறாய், கண்...ணனி?''

அவள் பதில் சொல்லவில்லை.

''என்னைத் தனியாக விட்டு நீ போய் விடுவாயா?''

''நான் இடையூறு என்றாயே நீ.''

''எப்போது சொன்னேன்?''

''தனிமை, அதாவது நீயும் நானும் இருக்கும் தனிமை பிடிக்கவில்லை என்று கூறினாய்.''

''நான் அப்படிக் கூறினேனா? உட்கார்ந்து கொள்.''

அவளுடைய இரண்டு தோள்களையும் பிடித்து அழுக்கி, அவளை உட்கார வைத்தான். மலர் மிருது; பாறை உறுதி; ஆனால் பூவின் மென்மையும் பாறையின் திண்மையும் அவள் உடலுக்கு எப்படி வந்தன, ஏக காலத்தில்?

அவன் இரு கால்களையும் நீட்டிக் கொண்டு உட்கார்ந்தான். அவள் வாசலை அடைத்துக் கொண்டு உட்கார்ந்தாள் எதிரில்.

அவன் சிரித்தான்.

''ஏன் சிரிக்கிறாய், கண்ணனி?''

''நீ என் உடலைத் தொட்டாயா? எனக்குச் சிரிப்பு வருகிறது.''

''நான் தொட்டால் உனக்குச் சிரிப்பு வருகிறதா?''

உட்கார்ந்தவாறே நகர்ந்து அவன் அருகில் போனாள். அவனுடைய இரண்டு கைகளையும் எடுத்து வருடினாள்; அவன் மார்பகத்தைத் தடவிக் கொடுத்தாள்; தலையைக் கோதி விட்டாள். ''நீ என்னைத் தொட்டாயா, எனக்கும் சிரிப்பு வருகிறது!'' என்று அவள் கிளி மிழற்றுவது போல் 'கீ கீ' என்று சிரித்தாள்.

''நீ எவ்வளவு அழகாயிருக்கிறாய், கண்ணா!''

''நான் அழகா?'' என்று குரங்கு போல் இளித்தான் அவன்.

''பிராணாயாமமும் யோக சாதனைகளும் உன் உடம்பை நன்கு உரப்படுத்தி விட்டன. பாவம், அதனால் நீ எவ்வளவு சிரமப்படுகிறாய்!''

அவன் கண்களில் சிருஷ்டி வெறி வெறித்தது.

''பாவம்!'' என்றாள் கண்ணனி;

அவன் கண்களில் சிருஷ்டி வெறி வெறித்தது.

★

''ஹரிமாசலத்துக்கு நாம் வந்து நேற்றோடு பன்னிரண்டு ஆண்டுகள் முடிந்துவிட்டன. இல்லையா, கண்ணா?''

'ஆம்' என்பதுபோல் கண்ணன் தலையாட்டினான்.

''நம் பாக்கியம் நமக்கு ஒரு மகாப் பெரியவர் குருவாகக் கிடைத்தார். அவர் ஆதரவிலும், ஹிமவானின் அரவணைப்பிலும் இருந்து கொண்டு நாம் பன்னிரண்டு ஆண்டுகளாக அறிவுத் தேட்டத்தில் ஈடுபட்டிருக்கிறோம். இல்லையா, கண்ணா?''

'ஆம்' என்பது போல் கண்ணன் மறுமுறை தலையாட்டினான்.

''ஆனாலும் நீ என்னை ஏன் இப்படி வெறித்துப் பார்க்கிறாய்?''

கண்ணன் திடுக்கிட்டான். எங்கோ பார்த்து விழித்தான்.

''அஞ்சாமல் என்னைப் பார், கண்ணா! சில நாட்களாக நான் உன்னைக் கவனித்துக் கொண்டிருக்கிறேன். எந்த நேரத்திலும் உன் உடல் என் உடலைத் தியானித்துக் கொண்டிருக்கிறது. இரவு நேரம் தான் உனக்கு மிகவும் கொடுமையாக இருக்கிறது. இந்தக் குடிசையின் அடர்த்தியும், ஆண் பெண் ஏகாந்தமும் தான். நேற்று இரவு, உடலை விடுத்து, உயிர் நிலையில் நின்று, ஆத்மானந்தம் நுகர்ந்து கொண்டிருந்தேன். உணர்வு வந்து என் உடல் புரண்டபோது, நீ எட்டிச் சென்று எழுந்து வெளியில் ஓடுவதைக் கண்டேன்.''

உனக்குத் தெரியுமா என்று கேட்பவள் போல் அவள் அவனை நோக்கினாள்.

''இந்த உடம்பு ஒரு விந்தைப் பொருள். எந்தப் பயன் கருதி இது சிருஷ்டிக்கப்பட்டதோ, அந்தப் பயனைக் குருதேவரின் துணையால் நான் அடைந்து விட்டேன். இனி இந்த உடல் எனக்குத் தேவை யில்லை. உனக்கு இதனிடம் கவர்ச்சி ஏற்பட்டுள்ளது. நீ உன் விருப்பம் போல் இதை உபயோகித்துக் கொள்ளலாம். ஆனால் பன்னிரண்டு வருஷங்களாக நீ தேடிய பொருள் இதனுள் கிடைக்கும் என்று ஏமாந்து விடாதே!''

கண்ணன் கேட்டுக் கொண்டிருந்தான்.

கேட்டு முடிந்ததும் திரும்பினான்.

எதிரில் மலைச் சிகரங்கள் தீப்பற்றி எரிந்தன. மரங்கள், பறவைகள், ஆகாசம், செடிகள், கொடிகள், பாறைகள் அனைத்திலும் தீ தொத்திப் பரவி எங்கும் நிறைந்தது.

மீண்டும் திரும்பினான்.

எதிரில் நெருப்பு, நெருப்பு.....

★

''ஹரா ஹரா மஹாதேவ்!'' என்று கணீரென வாசலில் கேட்டது குருதேவரின் குரல்.



# மலைப்

"மலைப் பணிக்கன்மார்களைக் காண நீர் மலைக்குத்தான் போக வேண்டும்'' என்று மைசூர் குண்டல்பேட்டையில் கூறினார்கள். ஆகையால் குண்டல் பேட்டையிலிருந்து பண்டிப்பூர் காட்டின் மார்க்கமாகவும், கூடலூர் வழியாகவும் ஜீப்பில் போய்க் கொண்டிருந்தேன்.

தென்னிந்தியாவில் மலைகளின் அழகையும், காடுகளின் பயங்கரத்தையும் காண வேண்டுமென்றால் மலையாள நாட்டுக்குத்தான் போக வேண்டும். பச்சைப் பசேலென்று இருக்கும் மலைகளின்மேல் தேவ கன்னியரோ இவர்கள் என்று நினைக்கும்படி மலையாளிகள் வெள்ளை முண்டுகள் அணிந்து அன்ன நடை நடந்து செல்வது கண்கொள்ளாக் காட்சியாகும்.

மலையாள நாட்டுக் காடுகளில் எடுப்பான மரங்களையும், கம்பீரமான மலைப் பாறைகளையும் காணும்போதும் பாறைகளின் இடுக்குகளில் உருண்டோடி வரும் அருவிகளின் ஓசையையும் மரங்களில் தொங்கிக் கொண்டிருக்கும் பழங்களைப் பறவைகள் உண்ணும்போது ஏற்படும் ஓசையையும் கேட்கும்போதும் மிகவும் அழகாகவும் இன்பமாகவும் இருக்கும். மலைகளின் நடுநடுவே தூரத்தில் கொம்புகளின் மேல் நின்று பறவைகளால் பயிர்களுக்குச் சேதமுண்டாகாமல் இருக்க மக்கள் கொடுக்கும் கூக்குரலும் கேட்பதற்கும் காண்பதற்கும் இன்பமாக இருக்கும். இவ்விதமான இன்பக் காட்சிகளைப் பார்த்துக்கொண்டே நான் ஜீப்பில் சென்றேன். கடைசியில் நிலம்பூரின் தென்பகுதியில் வடபுறம், மம்பாடு அம்சத்தைப் போய்ச் சேர்ந்தேன். ஜீப்பை விட்டு இறங்கியதும், என் மூட்டைகளை 'ஏக் தம்மில்' தோளின்மேல் தூக்கிக் கொண்டு நடக்க ஆரம்பித்தேன்.

கண்ணுக்கு எட்டிய தூரத்தில் ஒரு டீக்கடை இருந்தது. வேகமாக நடந்து அந்தக் கடைக்குச் சென்றேன். கடையில் என்னைக் கண்டதும், 'சாயா வேணுமா?' என்று கேட்டார்கள். நானும் 'ஆமாம்' என்று தலையை ஆட்டினேன்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவர்களிடம் மெதுவாகப் பேசக் கொடுத்தேன். பிறகு அவர்கள் மூலம் வழியறிந்து ஒற்றையடிப் பாதையில் சுமார் மூன்று மைல்கள் நடந்து, ''மச்சன் பெட்டி'' என்ற மலையடிவாரத்திலிருக்கும் காட்டை அடைந்தேன். அங்கே பெரிய பெரிய மரங்கள் வளர்ந்திருக்கின்றன. அந்த மரங்களின் மத்தியில் ''மலைப் பணிக்கன்மார்'' கூட்டம் கூட்டமாகக் குடிசையில் வாழ்கிறார்கள். அவர்கள் வாழுமிடத்துக்கு ''அம்சம்'' என்று பெயர். ஓர் அம்சத்தில் சுமார் பத்துப் பதினைந்து குடிசைகள் இருக்கின்றன. குடிசையை நெருங்கியதும் ஒரு மாது புன்னகையுடன் ''எவ்டே பரி!'' என்று வரவேற்றாள். இவர்கள் குடிசைகளை மண் சுவரின்மேல் ஓர் ஆள் உயரத்துக்குத் தூக்கிக் கட்டுகிறார்கள். சாதாரணமாய்த் தமிழ்நாட்டு ஆதிவாசிகள் காடுகளிலும், மலைகளிலும் திண்ணைகளைக் குடிசைக்கு வெளியில்தான் அமைக்கின்றனர். ஆனால் மலையாள நாட்டு மலைமக்களோ திண்ணைகளைக் குடிசையின் உட்பகுதியில் அமைக்கின்றனர். வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்குக் குடிசையினுள் திண்ணை இருப்பதாகவே தெரியாது. அப்படியோர் அமைப்பு. அதைக் கவனித்து நான் அவர்களிடம் காரணம் கேட்டேன். அதற்கு அவர்கள், ''இங்கு காட்டுயானைகளும், மலைப் பாம்புகளும் அதிகம். திடீரென்று மழை கொட்டுக் கொட்டென்று கொட்டும். சில சமயங்களில் ஒரு மாதம்கூட மழை விடாமல் பெய்யும். அந்தச் சமயத்தில் வெளியில் ஒரு வேலைக்குக் கூடத் திண்ணை உபயோகப்படாது. ஆகையால் சாதாரணமாய் இந்த மலைப் பிராந்தியத்தில் குடிசை கட்டுகிறவர்கள் எல்லாரும் உள்ளேதான் திண்ணையை அமைப்பது வழக்கம்'' என்று கூறினார்கள்.

ஒவ்வொரு குடிசையின் மேலும் தங்கள் உபயோகத்துக்கு வேண்டிய காய்கறிக் கொடிகளைப் படர விட்டிருக்கின்றனர்.

ஆண்களும் பெண்களும் நல்ல உயரமான தோற்றமுள்ளவர்கள்; தேகக் கட்டுடன் இருக்







றார்கள். "வேலை நிலையே பார்க்காத உடலோ இது!" என்று நினைத்துக் கொண்டேன். இவர்கள் எல்லா ஜாதியினரிடத்திலும் சகஜமாகப் பழகும் சுபாவமுள்ளவர்கள். ஆண்களும் பெண்களும் இடையில் முண்டுகள் அணிந்து காணப்படுகின்றனர். வயல்களில் வேலை செய்யும்பொழுது ஓலைக் குடைகளைத் தலையுடன் இணைத்துக் கொண்டு இரண்டு கைகளையும் பணியில் ஈடுபடுத்துகின்றனர். கையால் குடையைப் பிடிக்க வேண்டும் என்ற அவசியமில்லை. பெண்கள் கைகளில் பித்தளை வளையல்களும், விரல்களில் பித்தளை மோதிரங்களும், காதுகளில் ஓலைச் சுருள் தோடுகளும் அணிந்து கொண்டிருப்பார்கள். அவர்கள் வெள்ளைத் துணி உடுத்துவதால் அவர்களுடைய தூய உள்ளத்தையும், கபடமற்ற தோற்றத்தையும் நன்றாகக் காணலாம்.

பண்டைக் காலத்தில் மூன்று, நான்கு வயதுச் சிறுவர்களாக இருக்கும் பொழுதே பால்ய விவாகம் செய்வதுண்டாம். ஆனால் 1904ம் ஆண்டில்,

# பணிக்கன்மார்






பால்ய விவாகம் சட்ட விரோதமாக்கப் பட்டது. ஆகையால் அரசாங்கத்துக்குப் பயந்து, பால்ய விவாகம் மறைந்து, இன்று வயது வந்தோர் விவாகமே நடைபெறுகிறதாம்.

நடனக் கலையில் இவர்களுக்கு ஈடுபாடு அதிகம். நடனத்தில் வெறும் உடலின் அசைவு மட்டுமே இருக்குமானால் கதையின் பொருளோ, வருணனையோ வெளிப்படாது. இவர்கள் ஆடும் நடனங்களில் கதையைப் புலப்படுத்தும் சங்கேதங்கள் இருக்கின்றன. எல்லா விஷயங்களையும் உடல் அசைவுகளாலும், அழகிய



வளைவுகளாலும் காட்டுகின்றனர். ஓணம் திருவிழாக்களில் யுத்த வருணனையைக் காட்டும் இவர்களது நடனம் நாம் போர்முனையில் காண்பது போன்ற ஒரு காட்சியை நினைவூட்டுகிறது.

பெண்கள் நெற்றியில் அழகான திலகம் வைத்துக் கொள்கின்றனர். ஆனால் உடலில் பச்சை குத்திக் கொள்வதில்லை. உடல் முழுதும் மழமழவென்று அழகாகக் காணப்படுகின்றது. திருமணம் செய்ய வேண்டியதாக இருந்தால் அம்சத்தில் இருக்கும் மூப்பன்மூலம் பெற்றோர்கள் கலந்து பேசி முடிவு செய்கின்றனர். அப்பொழுது பெண் வீட்டார் ரூபாய் ஐம்பது பையனுடைய கையில் கொடுக்க வேண்டும். திருமணம் பையன் வீட்டிலோ பெண் வீட்டிலோ நடைபெறும். திருமணத்தன்று சைவச் சாப்பாடுதான் செய்கின்றனர். அன்று நான்கு கால்கள் வைத்துப் பச்சைப் பந்தல் போடுகின்றனர். திருமணப் பந்தலில் சாதாரணமாய் நம் தமிழர்கள் வைக்கும் சாமான்கள்தான் வைக்கப்படுகின்றன. ஆண்கள் ஆசைநாயகிகளை வைத்துக் கொள்வதால் விவாகரத்து ஏற்படுவதுண்டு. அப்பொழுது திருமணத்தன்று பெண் வீட்டாரிடம் வாங்கிய ரூபாய் ஐம்பதைப் பிள்ளை வீட்டார் திருப்பி மூப்பன் மூலம் கொடுத்து விட வேண்டும். அப்போதுதான் விவாகரத்து செய்து கொண்டதாகுமாம். இந்த மலைப் பணிக்கன்மார்களிடம் தாலி கட்டும் சடங்கு உண்டு. ஆனால் அந்தத் தாலியைத் திருமணத்தன்று கட்டுவதில்லை. மேலும் 'தாலி' என்றதொரு நகையைச் சிறு வயது முதல் சிறுமிகள் அணிந்து கொண்டேயிருக்கிறார்கள். அந்தத் தாலியையே திருமணமானபின் புதிதாகச் செய்து மாப்பிள்ளையின் மூலம் அணிந்து கொள்ளுகிறார்கள். ஆனால் தாலி என்ற நகையைப் பெண்களுக்கு ஐந்து வயதாகும் போது மாமன் செய்து அன்பளிப்பாகக் கட்டும் பழக்கம் அன்றும்




இன்றும் உண்டு. திருமணத்துக்கும் இந்த மாமன் ஐந்து வயதில் கட்டும் தாலிக்கும் சம்பந்தமே கிடையாது. தற்காலத்தில் காதல் திருமணங்களும் நடைபெறுகின்றன. திருமணச் சடங்கிலும் மற்ற விஷயங்களிலும் மலைப் பணிக்கன்மார் மற்றவர்களைக் காட்டிலும் மிகவும் சிக்கனமாகவும், சாதாரணமாகவும் பல சடங்குகளைச் செய்வதைக் கண்டேன். வீண் ஆடம்பரத்தையும் கல்யாணத்துக்காகப் பெரும் கடன் வாங்கிச் செலவு செய்யும் பழக்கத்தையும் இவர்களிடம் காண முடியாது.

விதவைகளைக் கூடுமான வரையில் மனைவி இழந்த ஆண்களே திருமணம் செய்து கொள்ளுகின்றனர், இவர்களுக்குச் சாதாரணமாய் மலைக் காய்ச்சல் வருவதுண்டு. அப்பொழுது அது முற்றினால் கைகால் வீக்கம் கண்டு கண்ணை மூடி விடுகின்றனர். தற்காலத்தில் ஆஸ்பத்திரிகளுக்குப் போகும் பழக்கம் சிலரிடம் இருந்தாலும் மூன்று மைல், ஐந்து மைல் நடந்து போக வேண்டுமே என்று யோசிக்கின்றனர். மற்றொன்று பஸ்ஸில் சென்றால் வயிற்றைக் குமட்டி விடுமோ என்ற பயம். ஆகையால் வீட்டு மருந்துகளே சாப்பிடுகின்றனர். ஆனால் வியாதி அதிகமாகி விட்டால் மாட்டு வண்டிகளில் ஆஸ்பத்திரிக்குப் போகின்றனர்.

பிரசவ சமயங்களிலும் இதே கஷ்டங்கள்தான். ஆகையால் தனிக் குடிசையில் அவர்களே பிரசவம் பார்த்து விடுகின்றனர்.

சில விசித்திரமான நம்பிக்கைகள் அவர்களிடம் குடிகொண்டிருக்கின்றன. கர்ப்பிணி ஸ்திரீயின் நிழல் ஒரு பாம்பின் மீது விழுமானால் பாம்பின் ஓட்டம் தளர்ந்து விடுமாம். மேலும் அதனுடைய நச்சுத் தன்மை நீங்கி அது இறந்து போய்விடுமாம். பிறகு அந்தக் கர்ப்பிணி பாம்புக் கடி பட்டவர்களை வாயால் ஊதினால் கடி பட்டவர்களுக்கு விஷம் நீங்கிவிடும் என்றும் அவர்கள் கூறுகிறார்கள்.

''கர்ப்பிணியின் வயிற்றிலிருக்கும் குழந்தையை ஆணா பெண்ணா என்று நாங்கள் கண்டுபிடிப்போம்!'' என்று ஒருத்தி கூறியதும் எனக்கு அப்படியே தூக்கி வாரிப் போட்டு விட்டது. ஏனென்றால் பெரிய பெரிய மருத்துவ நிபுணர்களுக்கே எட்டாத ரகசியமாயிற்றே இது? அப்படியிருக்க இவர்களால் மட்டும் இந்த ரகசியத்தை எப்படித் தெரிந்து கொள்ளமுடியும்?

கர்ப்பிணியின் மார்பகங்களில் சுரக்கும் பாலைக் கொண்டு பிறக்கப் போகும் குழந்தை ஆணா பெண்ணா என்று நிர்மாணிப்பார்களாம். பால் சிறிய அளவு துளித் துளியாக வருமானால், பிறக்கப் போவது ஆண் குழந்தை. அவ்வாறின்றிப் பால் கெட்டியாகப் பிசின் போல் சிரமத்துடன் வருமானால் பிறக்கப்போவது பெண் குழந்தைதான். அதில் ஒன்றும் சந்தேகமே இல்லை என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினார் அந்தப் பெண்மணி. இந்தக் கூற்றை இவர்கள் முழுமையாக, மனப் பூர்வமாக நம்புகிறார்கள்!

சிறு வயது முதல் பெண்கள் உழைத்து வேலை செய்வதால் பேறு காலத்தில் அதிகச் சிரமமில்லாமல் இருக்கிறார்கள்.

முதன் முதலில் குடும்பத்தில் பெண் குழந்தைதான் பிறக்க வேண்டுமாம். அப்பொழுதுதான் குடும்பம் விருத்தியடையும் என்பது இவர்களது நம்பிக்கை. மூன்றாவது மட்டும் பெண்ணாகப் பிறக்கக் கூடாதாம். ஏனெனில், அவள் எங்கும் திரிந்து கொண்டே யிருப்பாளாம். மேலும் ஒரு கணவனிடம் அவள் வாழ மாட்டாள் என்றும் கூறுகின்றனர். நான்காவது பையன் பிறந்தால் அவன் ஆடி அம்பலத்தில் நிற்பானாம். நான்காவது பெண்ணாகப் பிறந்தாலும் அதைவிடக் கஷ்டம் என்று கூறுகிறார்கள்.

ஐந்தாவது குழந்தை பெண்ணாக இருக்க வேண்டும் என்று எல்லாத் தெய்வங்களுக்கும் பிரார்த்தனை செய்து கொள்ளப்படுகிறது. ஏனென்றால் ஐந்தாவது பெண் வீட்டுக்கு லட்சுமி என்றும் அந்தக் குழந்தையின் வருகையால் கால்நடைகள் விருத்தியாகும் என்றும் நம்புகின்றனர். ஆறாவது குழந்தை கட்டாயம் ஆணாக இருக்க வேண்டும் என்று மறுபடியும் தெய்வங்களை யெல்லாம் வேண்டிக் கொள்கின்றனர். ஏனென்றால் ஆறாவது பெண்ணாய்ப் பிறக்கக் கூடாதாம். அப்படிப் பிறக்கும் பெண் ஆறாத் துயரடைவாளாம். கடைசியில் தவறியோ அல்லது வேண்டுமென்றோ ஆற்றில் விழுந்து விடுவாளாம். எட்டாவதாக ஆணும் பிறக்கக் கூடாது; பெண்ணும் பிறக்கக் கூடாது. அந்தக் குழந்தை எட்டிப் பிடிப்பதெல்லாம் குட்டிச் சுவராகப் போகுமாம். அந்தக் குழந்தை எதற்கும் லாயக்கு இல்லாததாகப் பிற்காலத்தில் இருக்குமாம்.

''மேற்படி நிபந்தனைகளுக்கு விரோதமாகக் குழந்தைகள் பிறந்து விட்டால் என்ன பரிகாரம் செய்வீர்கள்?'' என்று கேட்டேன்.

''அதற்காக என்ன செய்ய முடியும்? நிபந்தனைக்கு விரோதமாகப் பிறந்தால், ஆண் குழந்தைக்கும் பெண்

## எங்கள் சொந்தத் தறியில்....



அழகிய நவீன பார்டர்களில் தயாரிக்கப்படும் பட்டுச் சரிகை சேலைகள், ரவிக்கைகள், பாவாடைகள், தாவணி ரகங்கள் சேலம் வெண்பட்டு சரிகை போட்டு வேஷ்டி, துப்பட்டா ரகங்கள், கலியாண ஜவுளி ரகங்கள் முதலியன சாயத்துக்கு உத்தரவாதமுள்ளவை. மற்றும் பலவிதமான மில், கைத்தறி நூல் ஜவுளிகளுக்கு நம்பிக்கையும் நாணயமும் வாய்ந்த இடம்

★

# ஸ்ரீ லக்ஷ்மி விலாஸ்

## A. பெரியதம்பி முதலியார் & சன்ஸ்

பட்டு, நூல் அண்டு மில் ஜவுளி வியாபாரம்

போன் : 11 - 183A-B, காந்தி ரோடு, காஞ்சிபுரம் - தந்தி : "தம்பி"

---

Welded Ornamental Gates, Ornamental Grilles, Garage Doors Steel Sliding Doors etc.



"VIKRAMA" Single and Double Wheel Barrows of Box & Pan Type.



MANUFACTURED BY:

**THE VIKRAMA ENGINEERING COMPANY**

MECHANICAL & STRUCTURAL ENGINEERS

No. 2, Lattice Bridge Road

ADYAR, MADRAS-20 (Phone No. 71117)

For your requirements in Electric Motors, "BIECCO", "GEC", "CROMPTON", and other makes, Oil Engines, Oil Engine coupled pumpsets mounted on base plates and Trolleys, Electric Motor coupled pumpsets, Starters, Switches, cables, etc.

PLEASE CONTACT

## THE VIKRAMA ENGINEERING CO. (AGENCIES)

| | | |
|---|---|---|
| 1/11, Errabalu Chetty Street | P. B. No. 909 | West Boulevard Road |
| G. T. MADRAS-1 | ADYAR, MADRAS-20 | Teppakulam Post |
| Phone No. 24642 | Phone No. 71117 | TIRUCHIRAPALLI-2 |
| | | Phone No. 2163 |

# குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ

# ஃபாஸ்ஃபோமின்

உங்கள் குடும்பத்தினர் அனைவரும் வலிவும் ஆரோக்கியமும் பெற்றுத் தெம்புடன் திகழ வைட்டமின் 'பி' காம்ப்ளெக்ஸ் மற்றும் பலவகை கிளிஸரோ ஃபாஸ்பேட்கள் கலந்துள்ளது.

ஃபாஸ்ஃபோமின் அருந்தி வந்தால் களைப்பும் சோர்வும் உங்களை அணுகாது. களைப்பை நீக்கும். பசியைத் தூண்டும். வலிவை பெருக்கும். நோய்களை எதிர்க்கும் சக்தியை அளிக்கும். குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியமயமாய் வாழ உதவுவது பழரஸ மணம் கமழும் பச்சை நிற வைட்டமின் டானிக் ஃபாஸ்ஃபோமின்.

SQUIBB
Phosfomin
VITAMINS ELIXIR
SARABHAI CHEMICALS

SQUIBB SQUIBB
Phosfomin Phosfomin
MULTIPLE GLYCEROPHOSPHATES B COMPLEX
VITAMINS ELIXIR

SQUIBB

A Century of Experience
Builds Faith

SARABHAI CHEMICALS

Shilpi SC 43A Tam



"பட்டுப்போல் மிருதுவாக இருக்கு பார் என் ஆட்டுக் குட்டி!"



"என்னதும்தான்! வெல்வெட்டுப் போல வழவழப்பாயிருக்கு பார் என் நாய்க்குட்டி!"

புகைப்படம்: பி.வி. சுப்பிரமணியம்

குழந்தையின் பெயரும், பெண் குழந்தைக்கு ஆண் குழந்தையின் பெயரும் வைத்து நாமகரணம் செய்வோம். இந்தக் கஷ்டங்களெல்லாம் உண்டாகக் கூடாது என்று நாங்கள் ஓரிரு குழந்தைகளுக்கு மேல் பிறப்பதற்கு வழி வைத்துக்கொள்ள மாட்டோம். அப்படிக் குழந்தைகள் ஒருத்திக்கே அதிகம் பிறக்கும் என்று சந்தேகித்தால் உடனே இரண்டாவது திருமணம் செய்து கொள்ளுவோம்" என்று கூறினர்கள்.

இந்த விசித்திரக் காரணங்களால்தான் காடுகளில் வாழும் மங்கையர்களுக்கு இரண்டு மூன்று குழந்தைகளுக்குமேல் கிடையாது போலும்! பண்டைக் காலத்தில் குடும்பக் கட்டுப்பாடு என்று கூறாமல் ஒவ்வொரு குழந்தை பிறப்பதற்கும் ஒவ்வோர் அபசகுனங்களை அதில் நுழைத்து வைத்தார்கள் போலும்.

மேலும் பிள்ளைப் பேறு நடைபெறும் குடிசையோ, அல்லது அறையோ வடக்கோ அல்லது கிழக்கோ பார்த்ததாக இருக்க வேண்டும் என்பது மிகவும் முக்கியமானது. பொதுவாகப் பேறு காலம் ஆவதற்குச் சில மணி நேரத்துக்கு முன்னுல் கர்ப்பிணிகளைக் காய்ந்த வைக்கோலின் மேல்தான் படுக்க வைக்கின்றனர். கட்டிலிலோ, திண்ணையிலோ, பாயிலோ அவர்களைப் படுக்க வைப்பதில்லை. அதற்குப் பல காரணங்கள் கூறினாலும் சிலர் சொன்ன காரணங்களைப் பார்த்தால் சுகாதார விதிப்படி சுத்தமாக இருப்பதற்குத்தான் அப்படிச் செய்கின்றனர் என்று தெரிய வந்தது.

பேறுகாலம் முடிந்ததும் அந்த வைக்கோலைத் தூரத்தில் கொண்டு போய்ப் புதைத்துவிடுகின்றனர். பிறகு பிள்ளை பெற்றெடுத்த அறையை மூன்று நாட்கள் விடாமல் சாணத்தால் மெழுகிச் சுத்தம் செய்கின்றனர். ஐந்தாம் நாள் எப்பொழுதும் போலவே பிரசவமானவள் தன் குடிசைக்கு வந்து விடுகிறாள். அதுவரையில் பக்கத்திலிருக்கும் குடிசையினர் இடவசதி கொடுத்து உதவி செய்து அவளுக்கும், அவள் குழந்தைகளுக்கும் உணவு வசதிகளும் கொடுப்பதைக் கண்டு அவர்களுடைய பண்பையும், மற்றவர்களுக்கு உதவி செய்யும் நோக்கத்தையும் பார்த்துப் புகழ்வதா, அல்லது நகரங்களில் நடைபெறும் குழாய்ச் சண்டைகளை நினைத்துக்கொண்டு புலம்புவதா என்று சிந்திக்கலானேன்.

குழந்தை பிறந்து ஆறு மாதங்களுக்குப் பிறகு அம்சத்தின் சமுதாய மூப்பனைக் கிழக்குத் திசையின் பக்கம் உட்காரும்படி செய்து அவர் மடியில் குழந்தையைப் படுக்க வைத்து நாமகரணம் செய்கின்றனர். அன்று அந்த அம்சத்திலிருக்கும் எல்லோருக்கும் விருந்து நடைபெறும். விருந்துக்கு வரும் அன்பர்கள் குழந்தைக்கு அன்பளிப்புக் கொடுப்பதுண்டு. குழந்தைக்கு ஏணை கட்டும் பழக்கம் உண்டு. ஆனால் குறிப்பிட்ட மாதத்தில்தான் தொட்டிலில் இடுவது என்ற நியதியில்லை. எந்த மாதத்தில் வேண்டுமானாலும் ஏணையில் குழந்தையைப் போடுவார்கள். தாய் ஒருத்திக்குக் கைக்குழந்தை இறந்துவிட்டால், அதற்கு ஊட்டும்

பால் கொடுக்கப்படாமல் அவனுக்குப் பெருந் துன்பத்தை விளைவிக்குமல்லவா? அப்பொழுது அந்த அன்னை பாலை வெளிப்படுத்தி விடுக்குவதில்லை. வேறு குழந்தையின் தாயார் விரும்பினால் அந்தக் குழந்தைக்குப் பாலூட்டுவது வழக்கமாக இருந்து வருகின்றது.

ஆண் குழந்தைகளுக்கு ஒன்பது மாதமாகும்போது அவற்றின் எதிர்காலத்தை முன்னதாக அறியப் புதுமையானமுறையை இந்த மலைப் பகுதி மக்கள் கையாளுகிறார்கள்.

அந்தக் குழந்தைகளின் முன்னால் மண் வெட்டி, கொம்பு, மண் கொத்தி, புத்தகம், இனிப்புப் பண்டம் முதலியவற்றை வைப்பார்கள். 'பையன் கொம்பைத் தொட்டால் நிச்சயம் அவன் மாடு மேய்ப்பான்; மண் கொத்தியைத் தொட்டால் அவன் விவசாயி ஆவான்; புத்தகத்தைத் தொட்டால் அவன் கல்வியில் சிறந்தவனாவான்; இனிப்புப் பண்டத்தைத் தொட்டால் அவன் பூமிக்குப் பாரம், சோற்றுக்குத் தண்டமாகத் தின்று தின்று ஊர் சுற்றுவான்' என்பது அவர்கள் சோதனையின் முடிவு. ஆனால் இவைகளையெல்லாம் மிகவும் ஜாக்கிரதையாக மலைப் பணிக்கன்மார் ஒருவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்வதற்குள் என்பாடு போதும் போதும் என்று ஆகி விட்டது. ஏனென்றால் காட்டு மக்களுக்கு ஒருவரிடம் ஏதாவது சந்தேகமுண்டாகி விட்டால், பிறகு அவர் அங்கேயிருந்து உயிருடன் திரும்பி வந்துவிட முடியாது.

மலைப்பணிக்கன்மார்களில் யாராவது இறந்தால் அவர்களுக்குப் பாடை கட்டி மயானத்தில் புதைப்பார்கள். புதைக்கும் குழியில் பிணத்தைத் தலை தெற்காக இருக்கும்படி வைத்து, மல்லாக்காகப் படுக்க வைக்கின்றனர். மயானச் சடங்கில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வித்தியாசமில்லை. ஆனால் பண்டைக்காலத்தில் மரணம் அடைந்தவர்கள் உயிருடனிருக்கும்போது என்னென்ன சாமான்கள் உபயோகப்படுத்தி வந்தார்களோ அவைகளையும், அவர்கள் என்னென்ன சாமான்கள் விரும்பினார்களோ அவைகளையும் ஒரு பெரிய சாலில் போட்டுப் பிணத்துடன் அந்தச் சாலையும் புதைத்து விடுவார்களாம்.

ஒவ்வோர் அம்சத்திலும் பஞ்சாயத்துத் தலைவன் உண்டு. அவர் அந்த அம்சத்தில் நிகழும் குற்றங்களை விசாரிக்க வேண்டும். இவர்களுக்கு முக்கியமானது பயிர்த் தொழில்தான். அப்படி மழைக் காலங்களில் வேலை செய்யும்பொழுது தலையுடன் சேர்த்து அப்படியே அணிந்து கொள்வதற்கு வேண்டிய வகையில் ஓலைக் குடைகள் இருக்கின்றன. ஏனென்றால் கேரள நாட்டில் மழை எப்படி இருக்கும் என்பதைப் பற்றி நான் கூறவேண்டியதில்லை. ஆண்களும் இதே ஓலைக் குடைத் தொப்பியை அணிந்து கொள்ளுகின்றனர். இன்னும் சிலர் ஆடு மாடுகளை மேய்க்கின்றனர். இவர்கள் நூற்றுக் கணக்கான ஆடு மாடுகள் வைத்திருந்தாலும் அவை அம்சத்தில் நுழைந்து மக்களுக்குத் தொல்லை கொடுப்பதில்லை. ஆடு மாடுகள் போகும் வழியே வேறு. மக்கள் நடமாடும் வழி வேறு. நகரங்களில் கண்ட இடங்களில் ஆடு மாடுகளைக் கட்டுவதையும் மேய்ப்பதையும் போல் நாம் காட்டில் காண முடியாது. மேலும் சாணத்தை வறட்டி தட்டாமல் எருக் குழியில் சேர்த்து நல்ல உரமாக்கிப் பயிர்களுக்குப் போடுகிறார்கள். காட்டில் காப்பியோ, டீயோ அதிகமாக உபயோகப்படுத்துவதில்லை. நல்ல பசும்பாலை அருந்துகின்றனர். சிலர் பக்கத்திலிருக்கும் கிராமங்களுக்குச் சென்று கூலி வேலையும் செய்கின்றனர்.



குல்லாய்க்காரர் : **இந்த ஹோட்டலில் போர்டிங் இருக்கு – லாட்ஜிங் உண்டா?**

மற்றவர் : **அவசியமில்லை; ஒரு மசால் தோசை ஆர்டர் பண்ணி விட்டால் நாள் பூராவும் இங்கேயே இருக்கலாமே!**

வயது வந்த பெண்கள் இருக்கும் தனிக் குடிசையின் வாசற்காலில்தோல், யானை மயிர், இரும்பு முதலியவற்றைக் கட்டி வைக்கின்றனர் மலைப் பணிக்கன்மார்கள். ஏனெனில் பேய், பிசாசு, முனிகவரன் முதலிய காட்டுத் தேவதைகள் அவர்களை இரவில் வந்து பயமுறுத்திவிடுமோ என்று அஞ்சித்தான் அவ்வாறு செய்கின்றனர். காட்டுவாசிகளான அந்த மலைப்பணிக்கன்மார்களிடம் இந்த விநோத நம்பிக்கை இருப்பதில் ஆச்சரியமில்லை.

இவர்கள் எல்லா வகை இறைச்சியையும் விரும்புகின்றனர். ஆயினும் நண்டு, மாடு இவை இரண்டையும் சாப்பிடுவதில்லை. இவர்கள் தமிழகப் பண்டிகைகளுடன் மலையாளப் பண்டிகைகளையும் சேர்த்துக் கொண்டாடுகிறார்கள்.

''தம்புராட்டி'' என்ற மலைப் பெண் தெய்வத்தையும், கண்ணகி தேவியையும், ''பொட்டன் திருவடி'' என்ற ஆண் மலைத் தெய்வத்தையும் வழிபடுகின்றனர். ஆனால் எல்லாப் பெண் தெய்வங்களுக்கும் ஆடு, கோழிகளைப் பலி கொடுக்கின்றனர். இவர்கள் பேசுவது கொச்சை மலையாளம். இவர்களின் இல்லத்தில் வழங்கும் சாதாரணப் பொருள்களுக்கு மலையாளத்தில் சொல்லும் பெயர்கள் தமிழே. மலையாளத்தோடு கலந்திருக்கும் வடமொழிச் சொற்களை நீக்கினால் எஞ்சி நிற்கும் மொழி தமிழ். தமிழ் இல்லை என்றால் இன்று மலையாளத்தில் பேச இயலாது.

மெத்தப் படித்துள்ள மலையாள நாட்டில்தான் இந்த விசித்திரப் பழக்க வழக்கமுள்ள மலைப்பணிக்கன்மார்களுமிருக்கிறார்கள். அடர்ந்த காடுகளுக்கு மத்தியில் வசிக்கும் இம்மலைப் பணிக்கன்மார்களிடம் இருபதாம் நூற்றாண்டு நாகரிகமும், கல்வி வசதியும் இன்னும் எட்டவில்லை.

# GEVABO

**கேவாபாக்ஸ் !**



பெற்றுக்கொள்ளுங்கள் ஒரு கேவாபாக்ஸ் கேமரா
எடுங்கள் அழகழகான அருமையான புகைப்படங்களாக.
☐ 3 ஸ்பீடு, 2 அபெர்ச்சர் ☐ 'ஆல்-மெட்டல்' பாடி
☐ விலையோ ரூ. 38/-தான்.
உங்கள் வட்டார ஏபிஎல் வியாபாரியிடம் கேளுங்கள் கேவாபாக்ஸ்.

இந்தியாவில் தயாரித்தது

**அலைடு போட்டோகிராபிக்ஸ் லிமிடெட்**

கஸ்தூரி பில்டிங், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1.




81-APL-12-TAM




பாண்டியனின் கடைக்கும் பூர்வோத்திரப் பெயர் வெறும் 'வெற்றிலைப் பாக்குக்கடை'தான். இப்பொழுது அதற்குச் சரியான பெயர் சொல்ல வேண்டுமானால் கம்பன் தரத்துக்குக் குறையாத கவிஞர் ஒருவர் வந்தாக வேண்டும். ஆங்கிலத்தில் 'ஆல் இன் ஆல்' என்பார்களே அப்படியொரு சர்வடக்கக் கேந்திரம். வெற்றிலை பாக்கு இத்யாதி ஜனரஞ்சக வியாபாரம் ஒரு பக்கத்தில். பத்திரிகை விற்பனை இன்னொரு பக்கம். (பத்திரிகை என்பதில் 'காணாமல் போன மனைவி',- 'காணாமல் போகாமல் கழுத்தறுக்கும் கணவன்' வகையறா மர்ம நாவல்களும் அடங்கும்!) காய்கறி வியாபாரம் ஒரு மூலையில். இத்துடன் சீசன் வியாபாரம் இன்னொரு பக்கம். இந்தச் சீசன் வியாபாரம் இலக்கணத்துக்கு அப்பாற்பட்டது. அதில் எதுவும் இடம் பெறும். கோடை காலமா, ஐஸ் சர்பத்; குளிர் காலமா, சூடான பால் (என்ன பால் என்பது இன்னும் ஆராய்ச்சியிலிருக்கும் விஷயம்) ஆரஞ்சுப் பழ சீசனா, நார்த்தங்காய் கூட சாத்துக்குடி பட்டத்துடன் பலகையில் வரிசை வரிசையாக உட்கார்ந்திருக்கும். மாம்பழ சீசனா மாம்பழம். எதுவுமில்லையா, 'கடச் கட வேர்க்கடலை கிடைக்கும்' என்ற போர்டுக்கு அடியில் ஒரு பொடியன் உட்கார்ந்திருப்பான்.

இந்தச் சர்வடக்கக் கடையில் எனக்கொரு சர்வ வல்லமை பொருந்திய செல்வாக்கு உண்டு. இதற்கு இரண்டு காரணங்கள். ஒன்று, தினசரியும், வாரப் பத்திரிகையுமாக மாதம் பத்து ரூபாய்க்குப் பாண்டியனிடம் நான் கொண்டிருந்த பத்திரிகை வாடிக்கை. இன்னொன்று எனக்கும் பாண்டியனுக்குமிடையே இருந்த தேசாபிமானப் பிணைப்பு. இருவரும் திருநெல்வேலிப் பிராந்தியத்திலிருந்து சென்னைக்குப் பிழைக்க வந்தவர்கள்; அந்தப் பிறந்த மண் பாசம்.

இந்த உறவில் என்னைவிடப் பாண்டியனுக்கு அதிகம் பரவசம். என்னால் அவனுக்கு என்ன லாபமோ தெரியாது; ஆனால் எனக்கு இந்தப் பிணைப்பால் ஏகப்பட்ட சௌகரியங்கள். ஆபீஸிலிருந்து திரும்பும்போது பாண்டியன் கடையில் கிட்டத்தட்ட அரை மணி நேரம் முகாமிடுவேன். அந்த நேரத்தில், வாழ்க்கையில் சேர்க்கப்படாத அத்தனை பத்திரிகைகளையும் ஓசியில் பார்ப்பது முதல் கடச் கட வறுத்துக் கொட்டப்பட்டிருக்கும் வேர்க் கடலையை அனுமத்தாகக் கையாண்டு ருசி பார்ப்பதுவரை எல்லாவற்றையும் சர்வ சுதந்திரப் பாத்தியதையுடன் அனுபவிப்பேன். பாண்டியன் பேச்சு மூச்சு விடமாட்டான். பத்து ரூபாய்க்குப் பேப்பர் வாங்குகிற

'நம்ம ஊர் அன்னாசி'யாயிற்றே! குறுக்கிடுவதாவது! அவன் தரும் வரவேற்பைக் கேட்க வேண்டுமே! ''டேய் போடியா! நம்ம அன்னாசிக்கு 'மெயில்' எடுத்துக் கொடு!''; ''அன்னாசி! நம்ம ஊர் மொத்தம் பழம் வந்திருக்கு. பார்த்தீங்களா? ஒண்ணு பிய்த்துச் சாப்பிட்டுப் பாருங்க. சும்மா சாப்பிடுங்க, உங்களுக்குப் போய் மிச்சம்!''




அது மாம்பழ சீசன். அன்று மாலை வழக்கம் போல் அலுவலகத்திலிருந்து திரும்பும்போது பாண்டியன் கடையில் முகாமிட்டேன். முதலில் ஓசிப் பத்திரிகை நோட்டம் நடந்தது. மாலை வெளிவந்திருந்த அத்தனை பத்திரிகைகளையும் 'மேய்ந்துவிட்டு', ''இந்தியன் எக்ஸ்பிரஸ் இன்னும் வரலையாக்கும்!'' என்று ஒரு வறட்டு அதிகாரம் செய்துவிட்டு நிமிர்ந்த என்னை, இன்னொரு பக்கம் நடந்த 'சீசன் வியாபாரப்' பகுதி கவர்ந்தது.

அங்கே என் கவனத்தைக் கவர்ந்தது பாண்டியன் கையிலிருந்த ஒரு மல்கோவா மாம்பழமும் (மல்கோவா என்றுதான் அவன் சொல்லிக் கொண்டிருந்தான். நம்புவோர் நம்பலாம்), அந்த மாம்பழத்துக்கு நடைபெற்ற பேரமும்தான். பேரத்தை நடத்திக் கொண்டிருந்தவருக்கு நாற்பது வயதிருக்கும். அவர் தாமாக அந்தப் பேரத்தில் ஈடுபட்டதாகத் தெரியவில்லை. சூத்திரதாரியாக இருந்து அவரை இயக்கிக் கொண்டிருந்தது அவர் அருகில் நின்றுகொண்டிருந்த ஐந்து வயதுப் பையன்.

பேரத்தைப் பற்றிச் சொல்லு முன், பேரத்தை நடத்திக் கொண்டிருந்தவரையும் பையனையும் பற்றி இன்னும் இரண்டு வார்த்தைகள் சொல்லி விடுவது நல்லது. அவர்கள் இருவரையும் சாமானியமானவர்களுடன் ஒப்பிட முடியாது. தோற்றத்தில் அவர்களுக்கு உவமை சொல்வதென்றால், சாட்சாத் சிவபெருமானையும், அவருடைய குமாரன் முருகப் பெருமானையும் தான் சொல்ல முடியும். கங்கையும் பிறையும்தான் தலையில் இல்லை. மற்றப்படி சிவபெருமானின் ஆண்டிக் கோலம் அப்படியே பெரியவருக்குப் பொருந்தும். பையனோ உடை விஷயத்தில் பழனியில் குடியிருக்கும் முருகப் பெருமானேதான்! அதே கோவண அலங்காரம்தான்!

''ஒரே ஒரு பழம்தான் இருக்கு. வழ வழவென்று பேசாதேயும். ஒரே விலை பத்தணா! இல்லேன்னா பேசாமல் போம்!'' என்றான் பாண்டியன் கண்டிப்பாக.

அவர் பேசாமல் போகச் சித்தமாக இருப்பது போல்தான் தெரிந்தது. ஏனென்றால் அவருடைய நித்திய வருமானமே பத்தணாவாகத்தான் இருக்கக் கூடும்.

''பத்தணாவாம் பத்தணா! இதைப் போய்ப் பத்தணாவுக்கு யார் வாங்குவா! புளித்தாலும் புளிக்கும்!'' என்று பாலர் பாடத்து நரியின் முத்திரையுடன் நகரப் பார்த்தார் அவர்.

ஆனால் அவருக்கு ஏற்பட்ட அந்தப் 'புளிப்பை' மாற்றிய பெருமை கோவணாண்டியாக நின்று சேவை சாதித்துக் கொண்டிருந்த அவர் பையனையே சாரும்.

''நயினா! அந்தப் பழத்தை வாங்கித் தந்தால்தான் உடுவேன். உம்... உம்...'' என்று தந்தையின் மடியைப் பிடித்துத் தொங்கினான் தனயன்.

''வேட்டியை உட்ரு கழுதே! இந்தப் பழம் புளிக்கும்டா!''

''போ! நீ எந்நாளும் இப்படித்தான் புளிக்கும் புளிக்கும்பே! இன்னைக்கு நான் உடமாட்டேன். புளிச்சாலும் கம்மாத் துன்னுறேன். நீ வாங்கித் தா!''

தந்தை நிலைமை தர்மசங்கடமாயிற்று. தனக்கும் மாம்பழத்துக்குமுள்ள உறவைப் புனர்ப் பரிசீலனை செய்யவேண்டிய நெருக்கடி உருவாயிற்று. யோசனையுடன் தம் வேஷ்டி முடிச்சை அவிழ்த்துப் பார்த்தார். அதில் ஒரே ஒரு எட்டணா நாணயம்தான் இருந்தது. அதுதான் அவருடைய உச்சக் கையிருப்பாக இருக்க வேண்டும். அப்படி அதை உருட்டி உருட்டிப் பார்த்தார். பின் அதை மீண்டும் இறுக்கி முடிந்து கொண்டார். மாம்பழத்தின் பேரில் பழைய கண்ணோட்டம் சென்றது.

இரண்டு நிமிஷப் பார்வைக்குப் பின் கம்பீரமாகக் குரலைச் சுருதி சேர்த்துக் கொண்டு ''என்னப்பா கடைசியாக சொல்றே? உன் முகத்துக்காகத்தான் வாங்கணும். ஒவ்வோர் இடத்தில் இதற்கும் அப்பனை பழமெல்லாம் ஆறணாவுக்குச் சீரழியுது. போனால் போகுது. எட்டணாவுக்குக் கொடு!'' என்று மீண்டும் கோதாவில் இறங்கினார்.

அவர் ஆரம்பித்த விதத்தைக் கண்டு நான் வியந்தே போனேன். 'தேவலையே! ஆள் சூரர்தான்! தம் கையிருப்பே எட்டணாத்தான் என்பதைக் காட்டிக் கொள்ளாமல் எவ்வளவு தோரணையாகப் பேரம் செய்கிறார்! நான் அவரை ரசிக்கத் தொடங்கி விட்டேன்.

''பத்தணா என்றால் பத்தணாத்தான்'' என்று பழைய பல்லவியிலேயே நின்றான் பாண்டியன்.

உடனே நம் கதாநாயகர் எகிறிக் குதித்தார். ''என்னப்பா, ஒன்றும் தெரியாதவனிடம் பேசுபவன் போல் பேசறே! எனக்குக் கொத்தவால்சாவடி தெரியாதா? அங்கேதானே விடிய விடியத் தொழில் பண்ணுகிறேன். அசல்

மல்கோவா ஆயிரத்துக்கு முந்நூறு ரூபாய்தானே! இது அசல் மாதிரிகூடத் தெரியவில்லே. இது இந்தத் தெற்குச் சீமை சாம்பல் மாதிரியில்லே இருக்கு. இதைப் போய்ப் பத்தணா என்றீரேயே!'' என்று விளாசினார்.

அவர் அப்படி 'ஆயிரம்' 'அசல்' 'சாம்பல்' என்று வார்த்தைகளைக் கொட்டிக் குழப்பியதும், பாண்டியனும் குழம்பி விட்டான். அவனுக்கே தன் கைவிருந்த பழத்தின் ஜாதியைப் பற்றிச் சந்தேகம் வந்திருக்க வேண்டும்.

உடனே, ''ஒன்பதணாத்தான் கடைசி விலே!'' என்று இறங்கி வந்துவிட்டான்.

அவர் இன்னும் ஐந்து நிமிஷங்கள் உருட்டினார் என்றால், அவன் எட்டணாவுக்கே இறங்கி வந்துவிடுவான்போலிருந்தது. பழத்தை அவர் தட்டிவிடும் சூழ்நிலே உருவாகியது. அவ்வளவுதான்; எனக்கு அந்த விவகாரத்தில் ரொம்ப ஏமாற்றமாக இருந்தது.

நல்லதோ கெட்டதோ எனக்கு ஒரு பிறவிக் குணம். எந்தக் காரியத்திலும் நான் எதிர்பார்ப்பதற்கு மாறாக முடிவு ஏற்படும் என்றால் அதை என்னால் அவ்வளவாக ரசிக்க முடியாது.

எப்படியோ அவர் மீது எனக்குத் திடீரென்று ஒரு 'காட்டம்' ஏற்பட்டு விட்டது. இவருக்கென்ன அப்படிச் சாமர்த்தியம்! தம்மிடம் எட்டணாத் தான் இருக்கிறது என்பதைச் சொல்லிக் கேட்டு வாங்கினால் என்ன! ஏன் இந்த வறட்டுக் கௌரவமும், உருட்டலும்!

பாண்டியன் அவரிடம் 'ஏமாந்து' விடுவான் போலிருந்ததால் நான் மெல்ல மாம்பழ விவகாரத்தில் தலையிட்டுச் சீண்ட ஆரம்பித்தேன்.

இதுவரை எதையும் கவனிக்காதவன் போல், ''என்ன தம்பி! மாம்பழம் பன்னிரண்டணாவா, பதினாறு அணாவா? இதைவிடக் கொஞ்சம் சிறிதா ஒரு பழம் அங்கே ஒரு கடையில் கண்டேன். பன்னிரண்டணா குறையாது என்றான். நீ எப்படிக் கொடுக்கிறே?'' என்றேன்.

அடிபட்ட வேங்கை போல் அந்த ஆசாமி என்னே உறுத்துப் பார்த்தார். நான் அவர் பக்கம் பார்வையைத் திருப்பவேயில்லே.

என்னுடைய தலையீட்டுக்குப் பின் பாண்டியனின் 'பிடி'யைப் பற்றிக் கேட்க வேண்டியதில்லே. ஒன்பதணாவுக்கு இறங்கி வந்தவன் வெகு சுறுசுறுப்புடன் ஒரு எம்பு எம்பி உயரே போய்விட்டான்.

''அண்ணாச்சி! கேட்டீங்களா? நீங்க சொன்ன மாதிரி பதினாறு அணாவுக்கு விற்க வேண்டிய பழத்தைப் போனால் போகிறது என்று பத்தணாவுக்குத் தரேங்கிறேன். இவரு யோசிக்கிறாரு. நான் முடியாதுன்னுட்டேன்.''

''என்னப்பா இப்பத்தான் ஒன்பதணாவுக்குத் தரேன்னே, அதற்குள் பத்தணா என்று சொல்றயே! ஒன்பதணாவுக்காவது கொடு. இப்ப எட்டணா தாரேன், அப்புறம் ஆறு பைசா கொண்டாந்து தாரேன்!'' பதறினார் அவர்.

''போய்யா, நொன்னே வியாபாரத்திலே கடன் வேறேயா? பத்தணாவுக்கும் பழம் கிடையாது. என்ன பழம்னு நினைச்சே, பன்னிரண்டு அணா கைமேலே வை!'' என்றான் பாண்டியன்.

''என்னய்யா இப்படி ஏத்திக்கினே போறே!'' என்று பிலாக்கணம் வைத்தார் அவர். அவருடைய அரைடிக்கட் வேறு, ''பழம் வேணும்பா, வாங்கிக் குடு'' என்று அரிக்க ஆரம்பித்தது.

''பத்தணாவேணும்னாலும் தர்றேம்பா. முதலாளி 'நில்லக்கேணி' போயிருக்காரு. வந்ததும் இரண்டு அணா வாங்கித் தந்துடறேன். இந்த எட்டணாவை இப்ப வாங்கிக் கொண்டு பழத்தைக் கொடு.''

அவர் கெஞ்சக் கெஞ்சப் பாண்டியன் மிஞ்சிக் கொண்டே போனான். உண்மையில், அவன் மனோபாவம் வேறு பாதையில் திரும்பிவிட்டது. 'நம்ப ஊர் அண்ணாச்சி பழத்தைப் பற்றிக் கேட்டுட்டாரே!'

''போவ், வியாபாரம் நடக்கிற இடத்திலே என்யா அடைச்சுக்கிட்டிருக்கிறே? பழம் குடுக்கிறதுக்கில்லே! அண்ணாச்சி! நம்ப ராஜாவுக்குப் பழத்தை எடுத்துட்டுப் போங்க'' என்றான்.

நம்ப ராஜா என்பது என்னுடைய ஆறு வயது வாரிசு. நான் விளையாட்டுக் காகப் போட்ட சுருக்கு என் கையிலேயே விழுந்ததும் கொஞ்சம் அதிர்ச்சியாகத் தான் இருந்தது. இருந்தாலும் அவன் சொன்னபடி 'நம்ப ராஜா'வுக்குத்தான் இருந்துவிட்டுப் போகட்டுமே என்று தலையாட்டினேன்.

உடனே அவர் என்மேல் சீறிப்பாய்ந்தார். ''என்னய்யா, நான் பழத்தைக் கேட்டுக்கிட்டிருக்கிறது தெரியலேயா, நீர் வந்து கெடுக்கிறீரே!''

நான் சற்றுத் திணறினேன். அதற்குள் பாண்டியன் என் உதவிக்கு வந்தான். ''இந்தாய்யா, அவுககிட்டே ஏன் சண்டைக்குப் போறே! நான் குடுக்கிறேன். அவுக வாங்கிக்கிறாக. இடையிலே நீ யாரய்யா?'' என்று கத்தி விட்டுப் பழத்தை என் கையிலிருந்த பைக்குள் போட்டு விட்டான்.

''இந்தா ரூபாய். சில்லறை அப்புறம் வாங்கிக் கொள்கிறேன்'' என்று ஒரு ரூபாய் நோட்டை அவனிடம் கொடுத்து விட்டு நகர்ந்தேன். சில்லறை எவ்வளவு என்று கணக்குத் தீர்க்கவில்லை. அப்படித் தீர்க்காததில் பல சௌகரியம். அநேகமாக அவன் பழத்துக்கு எட்டணா அல்லது ஒன்பதணாத்தான் எடுப்பான்?

''தவிரு, பழம், பழம்!'' என்று என் பக்கம் கையைக் காட்டிக் கூப்பாடுபோட்டான் அந்த வாண்டுப் பயல். நான் எட்டச் செல்லச் செல்ல அவன் கூப்பாடு அதிகமாகிக் கொண்டிருந்தது. பயலின் கன்னத்தில் நாலைந்து போடு போட்டு மகனின் அழுகைக்கு எதிர் நடவடிக்கை எடுத்துக் கொண்டிருந்தார் அவர். எனக்கும் அநுதாபமாகத்தான் இருந்தது. இருந்தாலும் என்ன செய்வது? சூழ்நிலை அப்படியிருந்தது!

எனக்கென்னவோ, அந்தப் பையனுடைய அழுகைக்கு அவன் தந்தைதான் காரணமென்று தோன்றுகிறது. அவர் என் மனத்தில் அப்படி ஓர் எதிர்ப்பை ஏற்படுத்தாதபடி ஒழுங்காக நடந்திருக்கலாம். என்ன சொல்கிறீர்கள்?

என் சிந்தனைகளும் மனக் குறுகுறுப்பும் என் வீட்டுப் படி ஏறியதும் மறைந்து விட்டன. என் கையில் கொப்பரைத் தேங்காய் அளவையும் மிஞ்சியதாக இருந்த மாம்பழத்தைக் கண்டதும் 'குதி குதி' என்று குதித்தான் என் பையன் சுரேந்திரன். எனக்கும் ஒரே பூரிப்பு. எங்கோ வெளியே போயிருந்த மனைவியின் வரவைக் கூட எதிர்பார்க்காமல் முதல் வேலையாக நானே பழத்தை நறுக்கிக் கொடுத்தேன்.

''அப்பா, நல்ல அப்பா! நீங்க வாங்கிண்டு வந்த பழம்தான் இனிப்பா இனிக்குது. அம்மா மத்தியானம் வாங்கித் தந்த பழம் புளிச்சுது!'' என்று எனக்குப் புகழாரம் சூட்டியவாறு பழத்தைக் காலி செய்தான் சுரேந்திரன். என் பயலுக்கு உற்சாகம் வந்து விட்டால் இப்படித்தான். தாய் தந்தையரான எங்களுடைய திறமைகளைச் சமயத்துக் கேற்றாற்போல் விமரிசனம் செய்து மோத விடுவான். அதில் அவன் சூரன்.

அவனுடைய உற்சாகத்தை நான் மெய்மறந்து அநுபவித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது நிலை மிதித்தவள்போல் கையையும் காலையும் உதறிக் கொண்டு வந்தாள் என் மனைவி.

''என்னங்க இது! மாம்பழமா வாங்கிக் கொடுத்திருக்கீங்க?''

''ஆமா, மல்கோவாப் பழம்! ஏனொன் ரகம். உன் ஜன்மத்தில் தின்னிருக்க மாட்டே. கடையிலே ஒண்ணே ஒண்ணுன்னு இருந்ததை எவ்வளவு டிப்ளமேட்டிக்கா வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன் தெரியுமா?...''

நான் என் பெருமையை அவள் நிலையில் கொட்டு முன் அவள் சள்ளென்று எரிந்து விழுந்தாள்.

''நாசமாய்ப் போச்சு. மத்தியானம் அழுது அடம் பிடித்தான்னு தெருவிலே போன கூடைக்காரனிடம் இரண்டு மாம்பழம் வாங்கினேன். இரண்டையும் தின்னுட்டான். ஒரு பழம் முழுசாத் தின்னாலே அவன் உடம்புக்கு ஆகாது. பிடிவாதமா இரண்டையும் தின்னுட்டானே என்று பக்கத்து வீட்டுப் பாட்டியண்டை ஏதாவது கைப்பக்குவமா மருந்து கொடுக்கலாமா என்று கேட்டு விட்டு வருகிறேன். அதற்குள் நீங்க வேறு பனங்காயளவு பழத்தைக் கொடுத்துட்டீங்களா? அத்தனையும் தின்னுட்டானே! நான் ஒருத்தி இருக்கிறேனே, வரட்டும்னு பார்த்தீங்களா! இன்னைக்கு ஜுரம் பிள்ளையைப் போட்டு வறுத்து எடுத்துடுமே, என்ன செய்வேன்!''

என் உற்சாகமெல்லாம் தளர்ந்து விட்டது. என் மனத்துக்குள் ஒரு மகத்தான திறமைசாலியாக உருவாகியிருந்த என் கருவம் நிமிரென்று சிறுத்துக் குன்றி விட்டது. கடையிலும் சரி, வீட்டிலும் சரி ஓர் இடத்திலும் நல்ல பெயர் நமக்கு இல்லையே!

என் மனைவிக்கு ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் வாக்குச் சுத்தம் உண்டு. அது, பையன் உடம்பு பற்றி அவள் சொல்லும் ஜோஸ்யம்தான். அவள் சொன்ன மாதிரியே, அன்றிரவு ஜுரம் சுரேந்திரனை 'வறுத்து' எடுத்து விட்டது.

இரவு முழுவதும் ஏதோ கைப் பக்குவமாக மருந்து கொடுத்துப்பார்த்துவிட்டுக் காலையில் டாக்டரிடம் ஓடினேன்.

டாக்டர் எனக்கு அறிமுகமானவர். எனவே என் குழந்தை வளர்ப்பு அஞ்ஞானத்தைப் பற்றி, உரிமையுடன் நாலு வார்த்தை வைது தள்ளி விட்டு, பையனுக்கு ஊசியும் போட்டு மாத்திரையும் குறித்துக் கொடுத்தார். மாத்திரை வாங்கக் கம்பௌண்டரிடம் சென்றேன்.

அன்றைய பீஸ் ஆறு ரூபாய். அந்த ஆறு ரூபாயோடு மாம்பழச் செலவையும் சேர்த்துப் புத்திக் கொள்முதல் செலவாகக் கொள்வதா, பாவ விமோசனச் செலவாகக் கொள்வதா என்ற ஆராய்ச்சியுடன் கம்பௌண்டரின் கவுண்டரருகே நின்று கொண்டிருந்தேன். அச்சமயம் டாக்டர் யாரோ ஒருவரிடம் இரைந்து கத்திக் கொண்டிருந்த குரல் என் கவனத்தைக் கவர்ந்தது.

''திடீரென்று இப்படி ஜுரம் அடிக்குதே ; என்ன காரணம்? ஏதாவது கண்டதை வாங்கிக் கொடுத்தீங்களா?''

''என்னத்தைச் சொல்றதுங்க. ஒண்ணும் வாங்கிக் கொடுத்து வரலீங்க. அவன் கேட்டதை வாங்கிக் கொடுக்காததனால்தான் இப்படி ஆயிற்று. கடையிலிருந்த ஒரு மாம்பழத்தைக் கேட்டான். அதை வாங்கிக் கொடுக்க எனக்குச் சக்தி இல்லாமல் போச்சு. அவன் கேட்டு அடம் பிடித்து அழுதான். நான் ஆத்திரத்திலே போட்டு அடிச்சுட்டேன். ராவு முழுதும் 'மாம்பழம், மாம்பழம்'னு பினாத்திக்கிட்டே கிடந்தான்.''

அவரும், அந்தப் பையனும்தான்!

என் பையனுக்கு நடந்த அதே சம்ரட்சணைதான் அவனுக்கும் நடந்தது. ஊசியும் மாத்திரையும்தான்.

பையனைத் தோளில் சுமந்தவாறு மாத்திரைக்காகக் கம்பௌண்டரிடம் வந்தார் அவர். அவரைச் சந்திக்கத் திராணற்றுச் சற்று ஒதுங்கினேன். ஆனால் அவர் கண்டு விட்டார். எதிர்பாராத சந்திப்பினால் அவர் சற்றுத் திகைத்தது போல் தோன்றியது. மறு கணம், தம் பார்வையைக் கம்பௌண்டர் பக்கம் திருப்பிக் கொண்டார். அவர் பார்வையில் பழைய ஆத்திரம் இல்லை; ஏதோ அமைதி. ஆனால், அந்த ஆத்திரத்தை விட இந்த அமைதிதான் என்னை அதிகமாக உறுத்தியது.

''ஆறு ரூபாய்!'' என்று அவரிடம் கூறி விட்டு மருந்து ஊற்றுவதில் முனைந்தார் கம்பௌண்டர்.

மடியில் தனித்தனியாக மடிந்து கிடந்த ஒற்றை ரூபாய் நோட்டுக்களை நிமிர்த்தி அடுக்கி விட்டு அவைகளை எண்ணிப் பார்த்தார் அவர். நான்கு நோட்டுக்கள் சேர்ந்தன. பின் சில்லறையாகக் கிடந்த நாலணா, பத்து பைசா நாணயங்களைத் திரட்டி எண்ண ஆரம்பித்தார். எத்தனை பேர்களிடம் சில்லறை சில்லறையாகக் கைமாற்று வாங்கிச் சேர்த்து வைத்தியம் பார்க்க வந்தாரோ !

அவர் சில்லறைகளை எண்ணும் காட்சியைக் கண்டு என் உள்ளம் குலுங்கியது. இரண்டணா இல்லாத குறையால் மாம்பழம் வாங்கத் திராணற்றவரை இந்நிலைக்கு ஆளாக்கியது நான்தானே! சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தேன்.

''இந்தாங்க'' என்றேன்.

அவர் திரும்பிப் பார்த்தார்.

''வந்து, வந்து என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு ஏற்பட்ட இவ்வளவு சிரமத்துக்கும் நான்தான் காரணம். என்னைத் தயவுசெய்து மன்னித்துக் கொள்ளுங்கள். என்னால் ஏற்பட்ட இந்த மருந்துச் செலவு ஆறு ரூபாயையும் நானே கொடுக்கிறேன். மனத்தில் வித்தியாசமாக நினைக்காமல் வாங்கிக் கொள்ளுங்கள்'' என்றேன்.

அவர் ஒன்றும் பதில் பேச வில்லை. சில விநாடிகள் அவருடைய பார்வை என் முகத்தில் ஊன்றி நின்றது. பின் சாவதானமாக முகத்தைத் திருப்பியபடி மீதிச் சில்லறையையும் எண்ணலானார்.

என் மனம் அவமானத்தால் கூசியது.

''சார் !'' என்று இறைஞ்சுவது போல் மீண்டும் குரல் கொடுத்தேன்.

அவர் சில்லறைகளையும் நோட்டுக்களையும் கம்பௌண்டரின் கவுண்டரில் கொட்டி மருந்தை வாங்கிக் கொண்டு திரும்பினார். திரும்பும் போது என் அருகே ஒரு கணம் தாமதித்து நிச்சலனமான குரலில், ''சார்! நீங்களெல்லாம் பெரியவங்க. நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. மாம்பழத்தை வாங்கறதுக்கும் மருந்தை வாங்கறதுக்கும் பணம் இருந்தால் போதும். மனுஷத் தன்மையை வாங்கறதுக்கு அது பத்தாது!'' என்று பட்டென்று கூறிப் புறப்பட்டு விட்டார்.

### தா...தா...தா! போ...போ...போ!

"நீங்க ஊருக்குக் கிளம்பற அன்னிக்கு உங்களுக்கு மோதிரம் போடறேங்கறார், அப்பா."

"அப்படியா? அவர் மோதிரம் போடற அன்னிக்குத்தான் நான் ஊருக்குப் போறதாக இருக்கேன்."





### மெல்லியலாள்!

"உங்கப்பா எனக்கு மோதிரம் போடறேன்னாரே?"

"இல்லே. என் கைக்கு வளையலே போடறாராம்!"

### மோதிரத்துக்கு வீங்கி!

"அப்பா! கன்னம் வீங்கினா என்ன செய்யணும்?"

"அது பொன்னுக்கு வீங்கி. கழுத்துக்குப் பொன் சங்கிலி போடணும்."

"அப்போ! உங்க மாப்பிள்ளைக்கு மோதிர விரல் வீங்கி இருக்கு, அப்பா!"



# மாப்பிள்ளை மோதிரம்















# இது விழாக்காலம் அவளுக்கு ஒரு உஷா பரிசளியுங்கள்

பரிசு வழங்குவதற்கு ஏற்ற தருணம் இதுவே. உங்கள் பரிசு விசேஷமானதாக இருக்கட்டும். அது ஒரு உஷா தையல் மிஷின். ஐந்து வகை மாடல்களில் உங்களுக்கு பிடித்ததை தெரிந்தெடுங்கள். ஒவ்வொன்றும் வேலைப்பாடு மற்றும் தரத்தில் மேகோன்னதமாகவும், அநேக நவீன வசதிகள் பொருந்தியதாகவும் உள்ளது.

உஷா மிஷினில் தைப்பது அவளுக்கு ஓய்வு நேரத்தில் மகிழ்ச்சி தருகிறது.





தையலுக்குகந்தது
சிறந்த யந்திரம்
தையலுக்குக்ந்தது

ஜே என்ஜினியரிங் ஒர்க்ஸ் லிமிடெட்,
கல்கத்தா-31.

உஷா

JESM/(தமிழ்)

# விடியுமுன்...

**ராஜம் கிருஷ்ணன்**

"ரஞ்சனி!.... ஏ ரஞ்சனி!''

அப்போதுதான் கதைப் புத்தகமும் கையுமாக வந்து உட்கார்ந்த ரஞ்சனி அம்மாளின் குரலுக்குப் பதில் கொடுக்கவில்லை.

''பூனைக் கண் போல் வெய்யில் அடிக்கிறது பார்! துணிகளை முற்றத்துக் கொடியில் போடு... பெய்தாலும் பேய் மழை, காய்ந்தாலும் கடும் வெய்யில். நாகரிகம் பெருகப் பெருக, மனுஷக் கூட்டமும் பெருகி, காசும் பெருகி, துணிமணிகளும் பெருகி, இடம் மட்டும் படுத்துப் புரளக் கூட வசதி இல்லாமல் போச்சு. ரஞ்சனீ...!''

காலை மணி பத்தரை. காலை நெருக்கடியின் அலைகள் தள்ளி மோதுண்டபின் ஆசுவாசமாக அப்போதுதான் வாயிற்புறம் வந்து நோட்டம் விட்டுக் கொண்டிருந்தாள் அந்த அம்மாள். அவள் குரல், சந்துகளும், மாடி மேல் மாடியுமாகப் பெருகும் அந்த நெருக்கடிப் பேட்டைக்கே பிரசித்தம். அம்மாளின் சொந்தப் பெயர் இன்னதென்று யாருக்கும் தெரியாது. வீட்டுத்தலைவரின் பெயர் ராஜாங்கம். அந்தப் பெயர் அம்மாளுக்கே மிகவும் பொருந்தக் கூடியதென்றோ என்னவோ, ராஜாங்கத்தம்மா, ராஜாங்கம் மாமி என்று குறிப்பிடுவதே வழக்காக இருந்தது. வீட்டுத் தலைவராகிய ஆண் நபரைப் பற்றிய செய்திகளை அம்மாளின் குரல் மூலம் ஒலிபரப்பாகக் கேட்பவர்களே அதிகம். நேரடியாகக் கேட்பவர்கள் மிகவும் சொற்பம்.

''இந்த வெய்யில் இன்று பூராக் காயுமோ? அப்பா ஷர்ட்டை எடுத்துப் போட்டாயாமா? நாளைக்குப் போட்டுக் கொள்ள ஷர்ட் வேண்டுமே?...''

அருவி போல் வந்த குரல் சட்டென்று தடைப்பட்டது.

அந்த வீட்டு வாயிலில் ஒரு டாக்ஸி நின்றது. அதிலிருந்து ஓர் இளம் பெண் இறங்கினாள். அவள் ஜோடியே போல், ஆனால் ஜோடியில்லையென்று புலனாக, முன் ஆசனத்திலிருந்து ஓர் இளைஞன் இறங்கினான். ஒரு ஹோல்டால், தோல் பெட்டி, பிளாஸ்டிக் கூடை முதலிய சாமான்களை டாக்ஸிக்காரன் வெளிப்படுத்தினான்.

ராஜாங்கத்தம்மா அந்தப் பெண்ணை வைத்த கண் வாங்காமல் நோக்கினாள். அலையலையாகச் சரிந்த கூந்தலை ஒரு சரிகை ரிப்பன் பிடித்து வைத்திருந்தது. மின்னற் கொடி போல் துலங்கும் மேனி. மெல்லிய வயிலில் குளுகுளுவென்று ரோஜா பூத்திருந்தாற் போன்ற சேலை உடுத்து, பொய்யோ, மெய்யோ என்ற பாங்கில் ஒரு சோளியும் அணிந்திருந்தாள். இழைச் சங்கிலியின் பதக்கம் சேலை தழுவி மறைக்கும் மார்பகங்களுக்கிடையே விளங்கியது. மொழு மொழுத்த இடது கைத்தண்டிலே பொற் சங்கிலி பளபளக்கும் கடிகாரம். சற்றே குதியுயர்ந்த சரிகைக் காலணிகள்.

ராஜாங்கத்தம்மா கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகப் பட்டணத்தில் வாழ்ந்து கழிப்பவள்தான். இத்தகைய இளமை, அழகு, அலங்காரக் கோலங்களின் கூட்டமும் அவளுக்குப் புதிதில்லை. அந்தச் சந்தைவிட்டுச் சற்று வெளிச் சென்றால், பிரமீளா கல்லூரியின் நுழை வாசல். என்றாலும் அம்மாளுக்கு வைத்த கண் வாங்காமல் நோக்க விஷயம் இல்லாமல் இல்லை.

அந்த வீட்டின் சந்து வழிச் சென்றால் வீட்டை ஒட்டிய ஒரு பகுதி காலியாக இருந்தது. கடற்கரையை ஒட்டிக் கடல் போன்ற மாளிகையில் வாழ்ந்தாலும் அந்த வீட்டுச் சொந்தக்காரன் இடத்தின் அருமையைத் தெரிந்துவைத்திருந்தான். கொஞ்சம் காற்று வரக் காரணமாயிருந்த பின் முற்றத்தைத் தடுத்து, நீட்டி, ஒரு சிறு குடித்தனத்துக்கு இடமாக்கியிருந்தான். அந்தப் பிள்ளையாண்டான்தான் மூன்று நாட்களுக்கு முன் அந்த இடத்தை வந்து பார்த்து விட்டுப் போயிருந்தான். ஒற்றை ஆள்தான் என்று அவன் சொல்லிக் கேட்டிருந்ததாக அம்மாளுக்கு நினைவு இருந்தது. இப்பொழுது இரண்டு பேரா?

''அடி, ரஞ்சனி! கவர்க் கட்டையில் துணியைப் போட்டாயா? முற்றத்து ஜன்னல் கதவைச் சாத்து'' என்று உத்தரவிடும் போதே பையுடன் பூமா வந்தாள்.



விசுக்கென்ற நடை — பரபரப்பு. புருஷனையும் ஆபீசுக்கு அனுப்பிவிட்டு, மூன்று குழந்தைகளையும் பள்ளிக்கு அனுப்பிய பின் இப்படிப் பையைத் தூக்கிக் கொண்டு அலையும் வீடு வீடாக ஏறி இறங்குகிறாள். ஒருவர் சம்பாதித்துப் போதவில்லை என்றால் கஷ்டம் இல்லையா?

''பின் போர்ஷனுக்குக் குடி வந்தாச்சு பூமா!''

உள்ளே செல்லும் வரையிலும் பதில் போசாத பூமா, நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டு உட்கார்ந்தாள்.

''அடாடா! நூறு ரூபாயானாலும் தேவலை என்று சொல்லிவிட்டுப் போனார் ஆபீசுக்கு. நான் ஓடிவந்தேனே? எனக்கு இங்கேயே இருந்தால் வசதியாக இருக்கும் என்று எண்ணினேனே மாமி?''

''அதென்னமோ, அந்த நிமிஷம் ஆகவே, குடிவந்து- ஒரு சாமானு, சட்டா அடுப்பா, துடுப்பா ஒன்றையும் காணோம். அன்றைக்கு அவன் ஓர் ஆள் என்று சொன்னான். எங்கோ கம்பெனியில் வேலையாம். இப்போது பார்த்தால் காலேஜ் கும்பலிலிருந்து ஒன்று விடுபட்டு வந்தாற் போல் இருக்கிறது. இந்த இடத்துக்குக் கண்ணை மூடிக் கொண்டு நூற்றிருபது ரூபாய் யாரேனும் வாடகை கொடுப்பார்களா? பம்பாய், கல்கத்தாவிலே வாடகை அதிகம்தான். ஆனால் சாண் அகலமானாலும் விதரணையாகச் சௌகரியம் இருக்குமே?''

பூமாவின் முகத்தில் கவலையின் நிழல் படிந்தது.

''நீங்கள் ... என்ன சொல்கிறீர்கள் மாமி? நூற்றிருபது ரூபாய் வாடகையா?''

''அப்படித்தான் சொன்னான். அந்த இடத்திலே பாங்காகச் சமைத்துச் சாப்பிட்டுக் குடித்தனம் பண்ண முடியுமா? ஒரு சமையலறை (என்றும் அம்மி உண்டா? கல்லுரல் உண்டா? அரைக்க இடமா, கரைக்க இடமா? பாத்திரம் வைக்க ஒரு தட்டு இருக்கிறதா முற்றத்தில்? அந்தக் குளிப்பறையில் வெந்நீர் போட்டுக் குளிக்க முடியுமா? இதோ இந்த வீட்டிலேயே மழை பெய்தால் துணி காய்கிறது. அங்கே எங்கே உலர்த்து வார்கள்? முதலில் கோலமிட ஒரு வாசல் வேண்டாமாடி பெண்ணே?... இதெல்லாம் வசதி இல்லாமல் இங்கே இத்தனை வாடகையைக் கொடுத்துக் கொண்டு எவரோ எதற்காகவோ வந்திருக்கிறான். அம்பிகே, சர்வேசுவரி! இந்தப் பட்டணம் இப்படி அழிந்து போகிறதே? இதற்கு ஒரு கேட்பார் — கேள்வியே இல்லையே? ஆறு பெண்களைப் பெற்றுவிட்டு நான் இராத் தூக்கம் இல்லாமல் தவிப்பதை யாரிடம் சொல்ல? அவரானால் ஆபீஸ் பைல்களுக்குள் தலையை நட்டுக் கொண்டு உலகம் தெரியாமல் கிடக்கிறார். வயிற்றுக்குச் சோறும், மானத்துக்குத் துணி



வும், தங்க நிறமும் தரும் ஆபீஸ் வேலை தான். அதற்காக உலகத்தையும் பார்க் காமல் இருக்கலாமா? ரஞ்சனிக்குச் சித் திரைக்கே பதினெட்டு முடிஞ்சாச்சு. அடுத்த வருஷம் பாவியும் ஸ்கூல் பைனலை முடித்து விட்டுப் போது போகவில்லை என்று கொத்திப் பிடுங்க ஜோடி சேர்ந்து விடுவாள்....''

ராஜாங்கம் மாமி வாயைத் திறந் தால் அதிசயமாக ஏதாவது நிகழ்ந்தால் ஒழிய ஓயமாட்டாள் என்பதைப் பூமா அறிந்தவள்தானே?

''எந்தக் கம்பெனியில் வேலையாம்? கேட்டீர்களா மாமி?''

''நான் கண்டேனா? இரண்டுமாக வேலைக்குப் போகுமோ என்னவோ? ஒன்று நிச்சயம். வணங்கிப் பாங்காகக் குடித்தனம் செய்யும் பெண்ணில்லை. அதுபோகட்டும், நீயுந்தான் தெருத் தெருவாய் அலைகிறாய். என்ன வருகிறதடி அம்மா இதில்?''

''என்னமோ வருகிறது. குடும்பக் கவலையை மறக்க, பெரிய கவலையாக ஒரு வேலை. இந்த இடத்துக்கு அட்வான்ஸ் கொடுக்கலாமென்று வேகமாக வந்தேன் மாமி...'' என்று பெருமூச்செறிந்தாள் பூமா.

''நீ கவலைப்படாதே. இந்த மாதிரிக் குடித்தனங்கள் நிலைக்காது. நான் வேணுமானாலும் சொல்கிறேன் பாரேன்! பத்து நாளோ, பதினைந்து நாளோ இருக்கும். பட்டணம் ரொம்பக் கெட்டுப் போச்சுடி பூமா! பணத்துக்காக நானும் கூடத்தான் உனக்கு ஓர் அறையை ஒழிச்சுத் தந்திருக்கிறேன். இன்றுகூட அவர் கேட்டார். உன் சிநேகிதிக்கு இன்னும் சாமான் போட அறை கிடைக்க வில்லையா என்று. ஏதோ எல்லோரு மாகக் கூடத்தில் படுத்துக் கொண்டால் ஆச்சு. கெஞ்சினாயே என்று கொடுத்தேன். பணம்தானே பெரிசாக இருக்கு!''

பூமா கையிலிருந்த சாவியுடன் அந்த முன்னறைக்குப் பின்னிருந்த கூடத்து அறைப் பக்கம் சென்றாள். பூட்டி யிருந்த கதவைத் திறந்தாள். பத்து நிமிஷங்கள் சென்ற பின் வெளியே வந்தாள்.

''யாரோ ஃபினாய்ல் வேண்டும் என்று சொன்னார்கள் என்று அன்று சொன்னீர்களே மாமி? நல்ல ஃபினாய்ல் வந்திருக்கிறது. கூட ஆறு. பதின் மூன்று ரூபாய்...'' என்று நின்றாள்.

''பங்கஜா மாமியார் கதை கேட்கப் போனபோது மடத்தில் சொன்னாள். கேட்கிறேன்..'' என்று மறுமொழி தந்து விட்டுப் பின்புறம் பாயக் காத்திருந்தாள் ராஜாங்கம்.

''இதெல்லாம்... ரொம்ப வெட்ட வெளிச்சமாகச் சொல்ல வேண்டாம் மாமி, எனக்கு உனக்கு என்பார்கள். ரொம்பத் தெரிந்தவர்களிடமே இருக் கட்டும். என்னமோ, பற்றாக்குறை. நான் இதை வைத்துக் கொண்டிருக் கிறேன்...''

''ஆமா, எனக்குத் தெரியாதாடி பூமா! மூன்று குழந்தைகள். மட்டுச் சம்பளம். அலைந்து அலைந்து தேய்கிறாய். அப்படியெல்லாம் ஒருகுடும் பப் பெண்ணுக்கு நான் சட் டென்று கெடுதல் நினைப் பேனா?...''

''நான் வரேன் மாமி. என்னவோ உங்கள் தெம்பு தான். அந்தப் போர்ஷன் காலியானாலும் எனக்காக..... விட்டு விடாதீர்கள் மாமி!''

''ஆகட்டும்மா. இதுகள் வழியான குடித்தனம் இல் லாத போனாலும் விட்டு வைப்பேனா? நானும் வளர்ந்த பெண்களை வீட்டில் வைத்துக் கொண்டு வயிற்றில் நெருப் பைக் கட்டிக்கொண்டிருக்கிறேனம்மா!''

பூமா ஒருவகைத் திருப்தியுடன் படி யிறங்கிப் போனாள்.

ரஞ்சனி கூடத்தில் தூங்கிக் கொண் டிருந்தாள். ராஜாங்கத்தம்மா பின் முற்றத்துக்குப் போய் ஜன்னல் வழியே சற்று நோக்கினாள்.





எதிரும் புருமாக உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அவளுக்குப் புரியாத ஆங்கிலம்தானென்றாலும் கொஞ்சலும், குலாவலும், சிரிப்பும் கொழிப்பும் பார்க்கச் சகிக்கவில்லையே? நல்லவேளையாக ஜன்னலுக்குக் கதவு வெளிப்புறத்தில் இருந்தது. கதவைப் பட்டென்று மூடித் தன் வெறுப்பைப் புலனாக்கிவிட்டு வந்தாள்.

அவள் ஊகம் பொய்க்கவில்லை. அந்தப் புதிய சொருகக்காரி உண்மையில் உணவு போய்க்கவில்லை. ஒரு வேலைக்காரப் பெண் காலையிலும் மாலையிலும் டிபன், காப்பி வாங்கி வந்தாள். அந்த ஜோடிப் பையனை ராஜாங்கத்தம்மாள் பிறகு பார்க்கவே யில்லை. மாலை வேளைகளில் அவள் வானுலக மங்கையாகச் சிங்காரித்துக் கொண்டு சென்றாள். முன்னிரவில் ஒன்பது மணிக்கோ பத்து மணிக்கோ டாக்ஸியில் வந்து இறங்கிக் கதவு திறக்கும் சத்தம் கேட்டது. அவனும் ஒருகால் வந்திருப்பானோ என்ற சந்தேகம்தான்.

சுறாக்களும் திமிங்கிலங்களும் நிறைந்த அலைகடலில் தன் மக்களுடனும், அடங்கிய கணவனுடனும் படகைப் பத்திரமாகப் பார்த்துக் கொண்டு தன்னும் நிறைவு அன்றிலிருந்து அம்மாளுக்குக் குலைந்து போய்விட்டது. காதலா, தொண்டையிலா என்று புரியாததோர் அரிப்பு அவளைக் குடைந்தது. எவ்வளவோ ஜாடை மாடையாகப் பேசியும் தூற்றியும் அந்தப் பெண் கவனித்ததாகத் தெரியவில்லை. ஒன்று, சண்டைக்கு வரவேண்டும். இல்லையேல் சகஜமாகப் பேச வரவேண்டும். ஒன்றும் இல்லாத அக்கம் பக்கம் ஒரு குடித்தனமா?

நான்கு நாட்கள் பொறுத்த பிறகு ஒரு பிற்பகலில் ஜன்னலை மெதுவாகத் திறக்கும் ஓசை கேட்டதுதான் தாமதம். அவள் இதற்காகவே காத்திருந்தாற் போல் எழுந்து வந்தாள்.

அலங்காரமே இல்லை. ஒரு பழைய சேலையைச் சுற்றிக் கொண்டிருந்தாள். கையிலே ஒரு புத்தகம். படுக்கை விரித்துக் கிடந்தது.

''என்னம்மா, பார்க்கிறீர்கள்? என் பெயருக்கு ஏதேனும் தபால் வந்ததா?'' என்று முல்லைப் பல் வரிசைகள் தெரியும் நகையுடன் வினவினாள்.

குரலும்கூடத் தேன் சொட்டியது.

''உன் பெயரே தெரியாதம்மா ? தபால் எதுவும் வருமா?''

''வந்தாலும் வரும். எங்கப்பா அம்மா குண்டூரில் இருக்கிறார்கள். அவர்களிடமிருந்துதான் வந்தால் வரும்.''

''ஓகோ? நீ.... உன்.... அவரைக் காணவே யில்லையே அப்புறம்? கம்பெனிக் காரியமா வெளியே போயிருக்கிறாரா?''

அவள் இளங் காற்றில் சிலிர்க்கும் காலைப் புது ரோஜாவும் தோற்கும்படி நாணினாள்.

''எனக்கு..... இன்னும் கலியாணமாகவில்லையம்மா. நான் தனியேதான் இருக்கிறேன்.''

''தனியா?''

ராஜாங்கம் மாமியின் குரலில் புது வெள்ளத்தின் வேகம் தோன்றியது.

''அக்கம் பக்கம் சத்தமே காணோமே என்று பார்த்தேனே? நீ ஒருத்திதானா ? அன்றைக்கு வந்தானே, யாரவன்?''

''அவர்...... எங்க குடும்பத்துக்குத் தெரிந்த சொந்தக்காரர். இங்கே வீடு பார்த்துக் கொடுத்தார்....''

''ஓகோ? நீ இங்கே வேலை செய்கிறாயோ? எந்த ஆபீஸிலோ? பகலெல்லாம் கிடையாதோ?''

என்ன நெஞ்சுரம்? கொஞ்சமும் அஞ்சாமல் அவள் மறுமொழி தந்தாள்.

''இங்கே பக்கத்தில் டியூடோரியல் கல்லூரியில் வேலையம்மா. சாயங்காலத்திலேயிருந்து ராத்திரி ஒன்பது வரை இருக்கும். நான் மேலே படித்துக் கொண்டு சம்பாதிக்க இதுதான் வசதியாக இருக்கிறது.''

நல்ல வசதி! பட்டணம் இப்படிக் கண் முன் அழியுமா? ராஜாங்கம் மாமிக்கு நினைத்துச் சொல்ல வேண்டிய தொந்தரவு கிடையாது. நினைப்பும் சொல்லும் ஒன்றாகையால் கற்பனை பிரளயமாக வந்தது.

''நீ பேஷாக வேலை செய்யம்மா. சின்னஞ் சிறிசு. எனக்குத் தெரிந்ததை என்னால் சொல்லாமலிருக்க முடியவில்லை. நீ வந்திருக்கிற போர்ஷன் ஏதோ புதுக் கட்டடமாயிருக்கிறதே என்று மலைத்துப் போகாதே. பெயின்டை அடித்து, சுண்ணாம்பை அடித்து, வாடகையை, நூறில் இருந்து நூற்றிருபதாக்கி யிருக்கிறார்கள். இந்த இடத்திலே முன்னே உன்னைப் போல்தான் கிளியாய் ஒரு பெண்ணும், கிழவியும் குடி வந்தார்கள். பாவம், அந்தப் பச்சைக் கிளி, பூங்கொம்பை விட்டு வந்தாற்போல், கிழவியின் பசப்பை நம்பியோ, எப்படியோ சினிமா ஆசையிலே ஓடி வந்திருக்கிறது. கிழவியின் எண்ணம் தெரிஞ்சு போச்சு. கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன் என்று ஒருத்தன் சொன்னானாம். கிழவி சம்மதிக்க வில்லை. ஒரு நாள், பட்டப் பகலில், எதைச் சாப்பிட்டதோ என்னவோ, இந்த வாசற்படியில் விழுந்து கிடந்தது. பச்சைக் கிளி — எனக்குச் சொல்லவே சங்கடமாயிருக்கிறதடி பெண்ணே — அவன் பாரு, இப்போது இந்தப் பக்கத்தில்தான் அலைகிறானாம். நீ சின்னஞ் சிறிசு. இரவில் தனியாக இருக்கிறேன் என்கிறாய். எனக்கு மனசே கேட்க வில்லை. நீ யாரோ, நான் யாரோ? இல்லாவிட்டால் எனக்கு வேண்டியவர்கள் எத்தனை பேரோ கேட்டார்கள். அது வேண்டாம் என்று சொல்வேனா?......''

''அடாடா.....? அப்படியாம்மா? இதெல்லாம் கேட்கவே எனக்கு பயமாயிருக்கிறதே ?''

''இருட்டில் சந்தில் தனியாக வராமல் யாரையேனும் துணைக்கு அழைத்துக் கொண்டு வரமாட்டாயோ? உன் அப்பா அம்மா தெரிந்தால் சம்மதிப்பார்களா? ''

''....எனக்கே ஏதோ மாதிரி இருக்கிறதம்மா. நிச்சயமாக இங்கு நான் நீடிக்க மாட்டேன். இந்த வேலையை விட்டு விட்டுப் போய் விடுவேன்.''

''நானும் அதைத்தான் சொல்கிறேன். இந்தப் பட்டணக் கரையில், தன்னந் தனியாக உன்னைப் போல் ஓர் அழகிய பெண் இந்த வேலைக்குப் போய் வருகிறாள் என்றால் கவடில்லாமல் நினைப் பார்களா? பனை மரத்தின் கீழிருந்து நீ பால் குடித்தாலும் நம்பாதம்மா உலகம். உன் அப்பா அம்மா சந்தோஷப் படுவார்கள். வேலையை விட்டு விட்டு ஊரோடு போய்ச் சேர். குடியும் குடித்தனமுமாக இருந்தால்தான் பெண்ணுக்கு அழகு. உலகத்துக்கும் நல்லது....''

நன்றாக உறைக்க வேண்டும் என்று அம்மாள் அவளுக்கு இதோபதேசம் செய்து வைத்தாள்.

ரஞ்சனியைக் காப்பி அடுப்பைப் பற்ற வைக்கக் கூறி விட்டு, ஒரு வெற்றிப் பூரிப்புடன் அம்மாள் வாயிலுக்கு வந்தாள். பூமாவை இரண்டு மூன்று நாட்களாகவே காணவில்லை.

கல்லூரி, ஆபீசுகள், பள்ளிக்கூடங்களின் இடை நேரக் கலகலப்பின் நிலைகளாகத் தெருக்களில் சிதறிய ஆரவாரமும் ஓய்ந்து விட்டது. ஊமை வெய்யிலில், நீண்ட தெருவும் குறுக்குச் சந்துகளும் பகல் மயக்கம் கொண்டாடின.

பார்த்துக் கொண்டே இருக்கையில் ஏதோ ஒரு வீட்டுக்குள்ளிருந்து பூமா கையில் பை சகிதம் வெளிப்பட்டு வந்தாள்.

கண்களிலே கலக்கம்; நடையிலே சோர்வு. பேச்சு மட்டும் ஒரு செயற்கைப் பரபரப்புடன் வந்தது.

''அந்தக் குடித்தனக்காரர்கள் யார் தெரியுமா, மாமி?''

''உனக்கு உடம்புக்கென்னடி? பேயைக் கண்டு வந்தாற்போல் படபடக்கிறாயே?''

பூமா பதிலே சொல்லாமல் உள்ளே வந்து உட்கார்ந்தாள்.

காப்பியைக் குடித்த பின்னரே அவள் படபடப்பு அடங்கியது.

''என்ன வேலையடி இது, விட்டுத் தொலையேன்? வெய்யிலில்லை, மழை இல்லை என்று அலைந்து கொண்டு?''

''என்ன செய்கிறது மாமி? பேய்க்கு வாழ்க்கைப்பட்டால் புளிய மரத்தில் ஏற வேண்டியிருக்கிறது. அந்தப் பின் போர்ஷன் யாரென்று விசாரித்தீர்களா?''

''அந்தக் கண்றாவியை ஏன் கேட்கிறாய்? பெற்றவர்களை விட்டு எப்படியோ ஓடி வந்தாற்போல்தான் இருக்கிறது. கல்யாணமே ஆகலியாம். அதைத் துரத்தி விட்டு உனக்கு அந்த இடத்தை வாங்கித் தரவில்லை என்றால் நீ என்னுடன் பேச வேண்டாம்'' என்று பொரிந்தாள் அம்மாள்.

''அப்படியெல்லாம் மட்டும் அவசரப் படாதீர்கள் மாமி. எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ? சந்தேகப் படும்படி நாமும் நடந்து கொள்வது சரியில்லை.''

''சந்தேகம் என்ன இவள் நம்மைப் பார்த்துப் படுவது?.....'' என்றாள் ராஜாங்கத்தம்மாள் ரோஷத்துடன்.

''ஓ, அதில்லை மாமி, இப்ப... நீங்க வீட்டுக்காரர்களுக்குத் தெரியாமல் — கன்டிஷனை மீறி எனக்கு உங்களுக்குள் ஓர் அறையை வாடகைக்கு விட்டிருக்கிறீர்கள். இதெல்லாம் தெரிந்தால் ஆபத்துத்தானே? அப்புறம் வீட்டுக்காரன் உங்கள் பேரிலேயே பாயலாம். வாடகையைத் தூக்கவோ உங்களைக் காலி செய்யச் சொல்லலாம். எனக்கு ஆபத்தாச்சே?......''

''உனக்கு ஓர் ஆபத்தும் வராது. இதற்கென்ன பயம்? ஒன்றொன்று கண்ணைத் திறந்து கொண்டே பசப்பி நடிக்கின்றன. மானமாக அலைந்து நாலு காசுக்குப் பாடு படுகிறாய். என்றும் உனக்கு ஒரு நாளும் கேடு வராது போ!''

"உங்களை மலையாக நம்பி யிருக்கிறேன், மாமி.....! ஃபிளாஸ்க் கேட்டீர்களா...?"

"ஓ, கேட்டேனே? இருந்தால் கொடுத்து விட்டுப் போ. பணத்தை வாங்கித் தருகிறேன்."

"தீபாவளி வருகிறது. டெரிலின் சட்டை வேண்டுமென்றால் சொல்லுங்கள் மாமி. முன்பின் தெரியாதவர்களிடம் மட்டும் கேட்டு விடாதீர்கள். பின்னும் அவமானமாகப் போகும்... இந்தாருங்கள் அறைச் சாவி. உங்களிடமே இருக்கட்டும்."

"நீ அவமானப்படுவது வேண்டிக் கிடக்கவில்லை!" என்று தோள் பட்டையில் இடித்துக் கொண்டாள் மாமி.

அன்றிரவு மணி எட்டரை. பிசுபிசுவென்று வெளியே தூற்றல் விழுந்து கொண்டிருந்தது. சமையலறையில் ஆறு பெண்களுக்கும், கணவருக்கும் அமுது படைக்கும் வைபவம் நிகழ்ந்து கொண்டிருந்ததைப் பாராமலே கணிக்க முடிந்தது.

"அம்மா! அடுத்த வீட்டம்மா! அடுத்த வீட்டம்மோ.......?"

வாயிற் கதவு தபதபவென்று இடிபட்டது.

குரல் யார்? பின்புறத்துப் பெண் போல் இருக்கிறதே?

அம்மாளின் கைக் கரண்டி கீழே நழுவியது. ஓடிச் சென்று வாயிற் கதவைத் திறந்தாள்.

தெரு விளக்கு ஒளியும் அவிந்து இருந்தாலும், அவள் முகத்தின் இருளையும் பீதியையும் குரல் வெளியாக்கின.

"கதவை நன்றாகத் திறங்கள் அம்மா! ஐ......ய்யோ..... எனக்குப் பயம்..... ....மாக .....பயம்...அம்மா...."

அந்தக் குரலில் ராஜாங்கத்தம்மாளே நடுநடுங்கிப் போனாள். கதவை நன்றாகத் திறக்கையில் கை நடுங்கியது.

"ஐய்யோ.... கல்யாணம் கட்டிக் கிறேன்னு சொன்னான். பா..றா... போனவ...... நான் செத்திட்டேன் மாமி. நான் செத்துப் போனேன்..... எனக்குப் பயமாக இருக்கு. இங்கே ஒரு நாள் தங்கிட்டுப் போறேன் மாமி...."

ராஜாங்கத்தம்மாள் சப்தநாடியும் ஒடுங்கினாற் போல் பேச்சற்று நின்றாள். நிஜமாகவே உயிர் துறந்தவள் எவளேனும் பேயாக இங்கே அலைகிறாளா? அட கண்ணறாவியே? கண்ணும் முகமும் சரியாகவே இல்லையே? தெருவில் போகும் சனியனை இப்படி விலை கொடுத்து வாங்கு வார்களோ?

"இங்கே கொஞ்சம் வந்து பாருங்களேன்?" என்று அம்மாள் எழுப்பிய ஓலம் கேட்டு அலர்ந்து போன ராஜாங்கம் ஓடோடி வந்தார். "ஸார், ப்ளீஸ், உங்களை என் தகப்பனார் போல் நினைத்திருக்கிறேன். அங்கே நான் போக மாட்டேன். என்னை.....ஐய்யோ.... பய.... பயமாயிருக்கிறது ஸார்..... நான் தாய் தகப்பன் பேச்சைக் கேட்காமல் இங்கே வந்தது தப்புத்தான். இன்று ஒரு நாள் இங்கே தங்க இடம் கொடுங்கள் ஸார்! காலையில் முதல் வண்டிக்கு ஊருக்குப் போய் விடுவேன்." அந்தப் பெண் கெஞ்சினாள் கண்ணீருடன்.

ராஜாங்கம் வாய் திறக்குமுன் அம்மாள் முந்திக் கொண்டாள்.

## 'குட்டை' குழப்பினர்!



மாப்பிள்ளைன்னு ரொம்ப ஓசத்தியோ?

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

"இடமா? இங்கே உன்னைக் கூட்டி நான் வைத்துக் கொள்வேனா? போ, வெளியே!...." என்று கர்ஜித்தாள்.

"போகச் சொல்லுங்கள் என்கிறேன். ரஞ்சனி, மாலா, ஒருத்தரும் இங்கே வராதீர்களடி!" பின் கதவைப் படாரென்று சாத்தி விட்டு, அம்மாள் அவளைப் பிடித்துத் தள்ளாத குறையாகக் கையை ஓங்கினாள்.

"ஸார்! ஸார்! பார்த்துக் கொண்டே இருக்கிறீர்களே? அம்மா, உங்கள் மகள் போல், காலில் விழுந்து கும்பிடுகிறேன்."

"சீ.... எடு தடியை! எனக்கு நீ வேறு மகளா? என்ன நீங்கள் மரம் போல் நிற்கிறீர்கள்? வெளியே விரட்டிக் கதவைச் சாத்துங்கள். அம்பிகே! சர்வேசுவரி! நான் ஒரு பாவமுமறியாமல் இருக்கையில் இப்படியா சோதனை வரும்?......" அம்மாள் பிரலாபித்தாள். அந்தப் பெண்ணோ கெஞ்சினாள்.

"ஓர் இரவு, பாவம் பயந்து கெஞ்சுகிறது" என்று அவருக்கு மனசு இளகினாலும் இலகுவில் அம்மாளின் விருப்பத்துக்கு மாறாக நடக்க முடியுமா?

"பேய் பிடித்த பெண்ணொருத்திக்கு வீட்டிலே இடமா? அவள் பகுதியிலேயே தள்ளிக் கதவைச் சாத்துங்கள்" என்று நெருக்கினாள் அந்தக் குடும்பத் தலைவி.

தனக்குப் பேய் பிடிக்கவில்லை என்று அந்தப் பெண் பிறகு சத்தியம் செய்தாள். பேய் சந்தில் எதிர்ப்பட்டதாகவும் பயந்து ஓடி வந்ததாகவும் அவள் ராஜாங்கம் தம்பதிக்கு உறைக்கச்செய்ய, அழுது கெஞ்சி, புலம்பி மன்றாட வேண்டியிருந்தது.

இறுதியில் அம்மாள் அந்தக் கூடத்து அறைச் சாவியை எடுத்து வந்து திறந்தாள். உள்ளே அவளைத் தள்ளி விட்டுப் பூட்டினாள். பூமாவின் சாமான் அறையது. பொழுது விடிந்ததும் வெளியேற்றிவிட வேண்டும். காலைச் சுற்றிய பாம்பு கடிக்காமல் தொலைய வேண்டுமே? அம்பிகே! ஆறு பெண் குழந்தைகளை வைத்துக் கொண்டிருக்கிறேனே?

இரவு முழுதும் அம்மாள் வாயில் உயிரை வைத்துக் கொண்டு விழித்திருந்தாள். காலை மணி நான்கடித்ததோ இல்லையோ, அறைக் கதவைத் திறந்து விட்டு, "போ, வெளியே. விடிந்து போயாச்சு. இனி இந்தப் பக்கம் தலை நீட்டாமல் அம்மாவோ, அப்பாவோ, போய்ச் சேர்!" என்று சொற்களைக் கடித்து உமிழ்ந்தாள்.

ஆனால் அவள் பேய் பிடித்த சுவடு கூட இல்லாமல் பேசினாள்.

"மிகவும் நன்றி அம்மா. அவரைக் கொஞ்சம் எழுப்புகிறீர்களா?" என்றாள் அந்தத் தேன் குரலில்.

"இவரைப் பாரேன்?.... அவர் எதற்காக? ம், இறங்கு!" என்று அதட்டினாள். திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே அவள் இறங்கிப் போனாள்.

பத்து நிமிஷங்கள்கூட ஆகவில்லை.

அந்த இருள் பிரியா நேரத்தில் ஜீப் வண்டி வந்தது: போலீஸ் நுழைந்தது. அந்த மாயக்காரியும், அவளுடன் முன்பு வந்த இளைஞனும் இருந்தனர். இன்ஸ்பெக்டர் எழுந்த வீட்டுத் தலைவர் அயர்ந்து போனார்.

துணிகள், கடிகாரங்கள், டிரான்ஸிஸ்டர்......

"மோசம் வந்ததே? என்படி? கள்ளக் கடத்தல் சாமானா இங்கே இருந்தன? இப்படி என்று ஒரு வார்த்தை சொன்னாயா?" என்று மனைவியை இடித்தார் ராஜாங்கம்.

அம்மாள் மலங்க விழித்தாலும் நா பின் வாங்க வில்லை.

"நான் கண்டேனா? ஐம்பது ரூபாய் வாடகை என்று சொன்னபோதே ஆண் பிள்ளையாக லட்சணமாக நீங்கள் இதெல்லாம் கேட்க வேண்டாமா? கவனிக்க வேண்டாமா? ஐயோ, சம்சாரி, வருவாய் போதாமல் திண்டாடுகிறான். ஏதோ வியாபாரம் என்று இரங்கி இடம் தந்தேன். நான் உலகம் கண்டேனா? அடுப்பங்கரைப் பெண் பிள்ளை. நீங்கள் கவனிக்க வேண்டாமா?..... அம்மா, பெண்ணே, உன் பேரை இன்னமும் சொல்ல வில்லையே, எனக்கு நிச்சயமாக இப்படி என்று தெரிந்தால் அந்தப் பசப்புக்காரியைப் படி ஏற்றுவேனா? – இங்கேதான் மூன்றும் கிராஸ் தெரு. நான் வீடு காட்டச் சொல்றேன். புருஷன் பெண்சாதி எல்லாம் வீண். குடும்பப் பெண்ணா அவள்?......"

"நிறுத்துங்களம்மா உங்கள் கூச்சலே. நாங்கள் கேட்கும் கேள்விக்கு மட்டும் பதில் சொல்லலாம்" என்று அதட்டியது ஒரு குரல்.

அந்த மின்னற் கொடியாள், அந்த இளைஞனை நோக்கிப் பூப்பூவாக நகை உதிர்த்தாள்.

கடமை, கண்ணியம், நேர்மை, வறுமை, சூது, மோசம், ஏமாற்றம், கூடமில்லாத் தன்மை, எல்லாமே ஒன்றுக்கொன்று இடம் பெயர்ந்து குழம்பி நிற்கும் காலத்தைக் கோலம் செய்வது போலவே, வானில் ஒளி குழம்பப் பொழுது விடிந்து கொண்டிருந்தது.


ஜனரஞ்சகம் பெற்ற
முதல் மின் விளக்கு
பெங்கால்
பெங்கால் எலக்ட்ரிகல்ஸ் கம்பெனி
பெங்களூர் - 3 — — சென்னை - 17
சென்னை, கேரளா மற்றும் மைசூர் இராஜ்யங்களுக்கு பூரண விநியோகஸ்தர்கள்

எமது தீபாவளி வாழ்த்துக்கள்

புனித நீராடி, புத்தாடைப் புனைந்து, புதுப் பொலிவுடன் விளங்க, நாம் மங்கல தீபங்களை ஏற்றிடுவோம்.



திண்டுக்கல்

அங்கு விலாஸ்

M.V. முத்தையா பிள்ளை (FIRM)

வாசனைப் புகையிலை

தந்தி: "அங்குவிலாஸ்" REGD. NOS: 12700 149348 போன்: 71.

M.S. MANI

# காக்கும் கரங்கள்

ஏ.எஸ்.மணி

சிறுமி சீதா தயங்கித் தயங்கித் தளர்ந்து போய் அந்த வீட்டினுள் வந்தாள். மரகதம் மாமி தளர்ந்து வரும் சிறுமி சீதாவைக் கண்டதும் அவளை அணைத்துக் கொண்டு ''நேற்று இரவும் ஏதாவது விபரீதம் நிகழ்ந்ததா?'' என்று கேட்டாள்.

''மாமி! நான் என்ன சொல்வேன்? என் அப்பா அம்மாவை இராத்திரி முழுதும் அடி அடியென்று அடித்துக் கொன்றுவிட்டார். இரவு முழுவதும் என் அம்மா அழுது கொண்டேயிருந்தாள்'' என்றாள் சீதா விசித்து விசித்து அழுதபடியே.

''ஐயோ, பாவம்! இப்படியும் ஓர் அரக்கர் இருப்பாரா? இந்தா, காப்பி தருகிறேன், சாப்பிடு!'' என்று பரிதாபப்பட்டு அவளுக்குக் காப்பி கலந்து வந்து கொடுத்தாள் மரகதம்.

ஐந்தாறு வீடுகள் தள்ளிக் குடியிருக்கும் சீதாவிடம் மரகதத்துக்கு ஓர் அலாதி அன்பு. சீதாவின் குடும்பத்தில் நிலவிய கலவரத்தினால் அந்தச் சிறுமி படும் சிரமங்களைக் கண்டு அவளிடம் அளவற்ற அநுதாபம் பிறந்தது.

''மாமி! உங்கள் ஆதரவான வார்த்தைகள்தான் எனக்கு நிம்மதி அளித்து வருகின்றன. இல்லாவிட்டால்.....!''

''நீ இன்றிரவு உன் வீட்டில் போய்த் தங்க வேண்டாம். என் வீட்டிலேயே இருந்துவிடு.''

''ஐயோ, மாமி! வேண்டாம், வேண்டாம். அப்புறம் நான் இங்கு தங்கி நடு இரவில் அப்பா, அம்மாவை ஏதாவது செய்துவிட்டால்...?''

''சரி! உன் இஷ்டம். கஷ்டப்பட வேண்டும் என்று உன் தலையில் எழுதியிருப்பதை மாற்ற முடியுமா?'' என்று கூறிவிட்டாள் மரகதம்.

இச்சமயத்தில் சீதாவின் தாயார் சுந்தரி அவளைத் தேடி வந்து விட்டாள். ''சீதா! சீதா! சீக்கிரம் வா. உன் அப்பா உன்னைக் காணுமல்...''

''வாருங்கள், மாமி! உங்கள் சீதா நல்ல பெண். உங்களைப் பற்றி நிறைய சீதாவிடமிருந்து தெரிந்து கொண்டிருக்கிறேன். நீங்களும் உங்கள் பெண்ணும் படும் கஷ்டமெல்லாம்...''

''ஐயையோ! அவள் சொல்வதை நம்பாதீர்கள். அவளுக்கே கற்பனை அதிகம். இல்லாததையும் பொல்லாததையும் கதை கட்டிச் சொல்லி வேடிக்கை பார்க்கிறாள் அவள். அதை நம்பி விடாதீர்கள்.''

''அப்படியானால் அவள் அப்பா உங்களைக் கொடுமைப்படுத்துவதும் இரவில் நடக்கும் அந்தப் பயங்கரங்களும்....''

''எல்லாம் அவள் கற்பனையில் எழுந்தவைதான். உண்மையல்ல'' என்றாள் சுந்தரி. சீதா வெட்கத்தினால் தலை கவிழ்ந்து கொண்டாள். அவளது விபரீதக் கற்பனைகள் மரகதம் மாமியை அயர வைத்தன.

சுந்தரி சீதாவை அழைத்துக்கொண்டு வெளியே வந்தாள். வயதான ஓர் அம்மாள், ''ஐயோ பாவம்! இந்தாம்மா, சீதா! உனக்குத் தீபாவளிப் பட்டாசும், பாவாடையும் வாங்கியிருக்கேன். இந்த அநாதைப் பொண்ணு அவள் சொந்தக்காரர்களிடம் எத்தனையெல்லாம் கஷ்டப் படறது!'' என்று கூறி ஒரு பொட்டலத்தைக் கொடுத்தாள்.

''சீதா அநாதையா? யார் சொன்னது?''

''அவள்தான் கதைகதையாய் என்னிடம் சொல்லியிருக்கிறாள். அந்தப் பொண்ணு கண்ணீரும் கம்பலையுமா வந்து நின்னு சொல்கிற கதையைக் கேட்டால் யார் மனசுதான் இளகாது!'' என்றாள் அந்த வயதான அம்மாள்.

''மாமி! என் பெண் சீதாவுக்குக் கற்பனை அதிகம். அதையெல்லாம் நம்பாதீர்கள். அவள் தாயார் நான்தான். அவள் தகப்பனார் நல்ல வேலையில் இருக்கிறார். இப்படிச் சிரமப்பட்டு அவளுக்கு எல்லாம் நீங்கள் வாங்கித் தந்திருக்க வேண்டாம்!'' என்று கூறிச் சுந்தரி சீதாவை வீட்டுக்கு வேகமாக இழுத்துச் சென்றாள். எல்லோர் முன்னிலையிலும் தன் குடும்பத்தை அவமானப்படுத்தி விட்ட சீதாவின் மேலுள்ள கோபம் பொங்கிப் பொங்கி விசுவரூபமெடுத்தது. 'இப்படியும் ஒரு பெண்ணைப் பெற்றேனே!' என்ற கோபத்தில் என்ன செய்கிறோம் என்று தெரியாமல் அடுப்பில் காய்ந்து கொண்டிருந்த கரண்டியினால் சுடச்சுடச் சீதாவின் தொடையில் ஓர் இழுப்பு இழுத்து விட்டாள் சுந்தரி. சிறுமி சீதா வலி பொறுக்க முடியாமல் 'ஐயோ முறையோ' வென்று கூவினாள்.

''அம்மா! இனிமேல் அப்படியெல்லாம் பொய் சொல்ல மாட்டேன், அம்மா! இனிமேல் இல்லாததும் பொல்லாததும் சொல்ல மாட்டேன்!''

சுந்தரி திக்பிரமை பிடித்துப் போய் அமர்ந்துவிட்டாள். சீதா அலறியடித்துப் போய்க் கதவைத் திறந்துகொண்டு மரகதம் மாமி வீட்டுக்கு ஓடினாள். ''மாமி! எனக்கு அம்மா சூட்டுக்கோல் போட்டுட்டா!'' என்று அவளிடம் சென்று அலறியபோது மரகதம் மாமி அதைக் கேட்கத் தயாராயில்லை. கதவைப் படீரென்று சாத்தித் தாளிட்டு, ''அம்மா சீதா! உன்னுடைய பொய் புனைகருட்டுக் கதைகளைக் கேட்க நான் தயாராயில்லை. நீ வீட்டுக்குப் போய்வா அம்மா! எனக்குத் தலைக்கு மேலே காரியம் இருக்கு!'' என்று சொல்லி அனுப்பி விட்டாள். உண்மையாகவே அவள் துயரப்பட்டு, அந்தத் துயரத்தைத் தீர்க்கும் அன்புக்கு ஏங்கியபோது தனக்கு அன்பு தாளிடப்பட்டதைக் கண்டதும் சீதாவுக்கு அளவுகடந்த துக்கம் கரை புரண்டது. அதற்குமேல் அவள் அங்கு நிற்கவில்லை. தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்த சீதாவை அந்த வயதான அம்மாள் கவனித்து விட்டாள்.

''என்னடியம்மா! இன்னும் என்ன புதுக் கற்பனை ஜோடிச்சுண்டு வந்திருக்கே, சொல்லு? பெரிய சாகஸக்காரி போலிருக்கு. உனக்கு ஒத்தாசை செய்யப்போய் என் முகத்தில் கரி பூசி அனுப்பிட்டா உங்கம்மா!'' என்றாள் அந்த வயதான அம்மாள்.

சூட்டுக்கோலினால் ஏற்பட்ட காயத்தை விட இந்தச் சுடு சொற்கள் சீதாவின் நெஞ்சைக் காக்கப் பிழிந்தன. அழுது அழுது கண்ணீர் சிந்தியபடியே நேற்று வாராந்துத் தன் வீட்டு வாசற்படியிலே வந்து அமர்ந்தாள் சீதா. இரு வலிய கரங்கள் – சூட்டுக்கோலிட்ட அதே கரங்கள் - அவள் கண்ணில் வழிந்த கண்ணீரைத் துடைத்து அவள் நெற்றியில் பிராயச்சித்தமாக இரு சொட்டுக் கண்ணீரை வடித்து அவளுக்கு ஆறுதல் அளிக்க முனைந்தன. அடித்த கைகள் தான் அரவணைக்கவும் இப்பொழுது முன்வந்ததைக் கண்டு சிறுமி சீதாவின் நெஞ்சு ஆறுதலடைந்தது. இந்தக் காக்கும் கரங்களை ஏந்திக் கொண்டதும் சிறுமி சீதாவுக்குத் துக்கம் குறைந்தது.



நீங்கள் அப்படிச் சொல்லமாட்டீர்கள்...
ஆனால் அவள் சருமத்தில் களங்கமுள்ளது!

நீங்கள் அப்படி எண்ணமாட்டீர்கள்..
ஆனால் இப்பொழுது அக்குறை நீங்கிவிட்டது!

அதைப்பற்றி நீங்கள் அறிந்திருக்க நியாயமில்லை. அத்தனை நுட்பமாக, துல்லியமாக அதை மறைத்திருக்கிறது, இலேசான, லாவண்யமான லாக்டோ-காலமைன்! குறை எதுவாயினும் சாமர்த்தியமாக மறைக்கவல்ல மறுமழுப்பான இப்பவுடர் தளம்... உங்கள் மேனியெழிலுக்கு மேன்மை அளிக்கிறது.

## லாக்டோ-காலமைன் மறைப்பதோடு, குறை நீங்கவும் உதவுகிறது!

ஆம், லாக்டோ-காலமைனின் சாதனைதான், துரிதமாய் வேலை செய்யும், உயர்தர காலமைனிலிருந்து விசேஷமாய்த் தயாரிக்கப்பட்ட இப்பவுடர் மற்றெந்த தளங்களையும்விடச் சிறப்பாய் உங்கள் சருமத்துக்குப் பணிபுரிகிறது...குறைகளை மறைப்பதுடன் அவை நீங்கவும் உதவுகிறது. சடுதியில், இதமுடன் தொல்லைகளைத் தீர்க்கிறது லாக்டோ-காலமைன்...நீங்கள் என்னும் விரும்பும் தெளிவான, ஒளி வீசும் மேனியெழிலை அது உங்களுக்கு வழங்குகிறது.

சருமக் கோளாறுகள், வெயில், அனல்காற்று ஆகியவற்றால் கன்றும் சருமம், சிசுக்களுக்கு வரும் அரிப்பு ஆகியவற்றுக்கும் அனுகுணமானது லாக்டோ-காலமைன்.

லாக்டோ-காலமைன் வரிசையில் மேலும் இடைப்பவை: லோஷன், க்ரீம், டால்கம் எங்கும் கிடைக்கிறது.




லாக்டோ-காலமைன்—
உங்கள் ஒப்பற்ற
எழிலின் அடித்தளம்.

க்ருக்ஸ் இண்டர்ஸ்ரான் லிமிடெட் பம்பாய்-18.




இதென்ன புது'மாதிரியான தலைப்பு என்கிறீர்களா? ஏன் ஒரு சிலர் திறமையைப் பற்றி வேறு சிலர் விமரிசனம் செய்யும்போது இவ்வகையில் சொல்வதைக் கேட்டிருக்கிறோம். எவ்வளவோ விளக்கங்கள். சொன்னால்தான் மேற்சொன்ன சொற்றொடரின் பொருள் புரியும்.

தனக்குள் தான் மகா கெட்டிக்காரன் என்று எண்ணித் தனது திறமையையே நம்பி ஒருவன் ஒரு திட்டத்தைச் சமைக்கிறான். அதைச் செயல்படுத்தத் தன்னைப் போலவே திறமைசாலிகளான நண்பர் சுற்றத்தார் ஆகியோரின் உதவியையும் பெறுகிறான். கடைசியில் திட்டம் நிறைவேறிய பிறகு தான் தனது அசட்டுத்தனம் தெரிகிறது. இப்படிப் பட்ட அப்பாவிகளைத்தான் 'அசட்டுச் சமத்து' என்பது வழக்கம்.

புரியவில்லையா? இதோ நமது வரதக் குட்டியின் விவாக வரலாற்றைக் கேட்டால் நன்றாகப் புரிந்து விடும்....

ஃ ஃ ஃ

வரதக்குட்டி ஸ்ரீ வைஷ்ணவப் பிராமண குலத்தில் சிஷ்டாசார ஸம்பன்னர்களான குடும்பத்தில் நான்கு சகோதரர், இரு சகோதரிகளிடையில் பெற்றோரின் கடைசிக் குட்டியாகப் பிறந்தவன். தகப்பனார் ஏதோ கொஞ்ச நிலபுலன்களோடு வைதிக விருத்தியில் கஷ்ட ஜீவனம் செய்து காலத்தைக் கழித்தாராயினும் வறுமையில் செம்மை என்னும் இலக்கணத்துக்கு எடுத்துக்காட்டானவர் என்று நற்கீர்த்தி பெற்றிருந்தார். ஆதியில் கஷ்டப்பட்டதும், பெண்களுக்குக் கல்யாணங்கள் செய்து அவர்களை நீங்க வைத்ததும் அந்தப் 'பரு குடும்பி'யின் ஏழைமையை மிகவும் அதிகப்படுத்தின. எப்படியோ ஓரளவு படிப்பும் அந்தப் பிள்ளைக்கு முடித்து மூன்று பிள்ளைகளும் ஒவ்வொருவராகச் சம்பாதிக்கத் தலைப்பட்டார்கள். இனி கொஞ்சம் சுகப்படலாம் என்ற நிலை வந்தும் வராமலுமிருக்கும்போது அவர் பூவுலகில் வந்த காரியம் பூர்த்தியாயிற்றென்ற நிலை ஏற்பட்டது. கடைசியாகப் பிள்ளைகளை அழைத்துக் கடைக்குட்டியான வரதக்குட்டியை எப்படியாவது ஒரு பி. ஏ.வாக்கிவிடும்படி பணித்துவிட்டுக் கண்ணை மூடினார்.

வரதக்குட்டி பி.ஏ. ஆனான். ஏதோ ஓர் இடக்கான ஆபீஸில் வேலையும் ஆயிற்று. பிறகு...? கல்யாணப் பேச்சுத்தானே! ஆமாம். கல்யாண மார்க்கெட்டும் திறந்தது. ஆனி முடிந்தது. கல்யாண மார்க்கெட்டும் மூடியாயிற்று. இப்படிப் பலப் பல சீசன்கள் கழிந்தன. கல்யாணந்தானாகவில்லை.

வரதக்குட்டி வடார்க்காடு ஜில்லாவில் பிறந்தவன். தலைமுறை தலைமுறையாகக் கல்யாண விஷயத்தில் வடார்க்காடு, செங்கல்பட்டு ஜில்லாக்களை விட்டு வெளியே கொள்ளவோ, கொடுக்கவோ செய்தறியாத கூபமண்டூகக் கும்பலைச் சேர்ந்தவன்.

பல வருஷங்களாகக் கல்யாண மார்க்கெட்டில் பவனி வந்து கொண்டிருந்ததால் மேற்சொன்ன ஜில்லாக்களில் வசித்து வந்த எல்லோருக்குமே வரதக்குட்டி ஒரு வரன் இருக்கிறான் என்ற தகவல் நன்றாய்த் தெரிந்த விஷயமாயிற்று. அவன் ஜாதகத்தை வாங்கிப் பார்க்காத பெண்ணைப் பெற்ற தகப்பனே இந்த இரண்டு ஜில்லாக்களில் இல்லை என்றாயிற்று.

வரதக் குட்டிக்குக் கல்யாணமே ஆகாதோ என்ற கவலை ஏற்பட்டது. ஆபீஸில் இவனையொத்த நண்பர்களெல்லாம் கல்யாணம் செய்துகொண்டு குழந்தை குட்டிகளுடன் குடும்ப வாழ்வு நடத்தி வந்தனர். அண்ணன்மாருடனும், தாயார், வீணாப்போன ஒரு தமக்கை ஆகியவருடனும் ஒண்டிக் கட்டையான வரதக்குட்டி ஒண்டிப் பிழைத்து வந்தான்! பாவம்! வீட்டில்





தெருத் திண்ணையில்தான் வாழ்வு. அவிபக்தமான ஏக குடும்பம். குடும்பத்தில் உள்ளவருக்குள் 'என்ன ஒற்றுமை! என்ன ஒற்றுமை!' என்று புகழ்வோரும் உண்டு. வரதக்குட்டியின் சக உத்தியோகஸ்தர்களோ பலவிதத்திலும் அவனைக் கேலியாகப் பேசி நையாண்டி செய்வார்கள்.

இதையெல்லாம் சகிக்க முடியாதவனாய் வரதக்குட்டி நாளடைவில் ஓர் உம்மணாம் மூஞ்சி ஆகிவிட்டான். யாருடனும் பேசுவது கிடையாது. குளி, சாப்பாடு, உடை, கேளி இவைகளில் ஓர் அசிரத்தை. மனிதன் நடந்து சென்றாலே ஒரு நிழல் செல்வது போல் இருக்கும். 'அரைப் பைத்தியமோ?' என்றும் சிலர் கருதுவர். இவ்வளவுக்கும் கோளாறு எங்கிருந்தது?

அப்போதுதான் எங்கிருந்தோ வந்தார் எங்களாழ்வான் அய்யங்கார். அவருக்கும் பூர்வம் இந்தப் பக்கம்தானாம். ஏதோ சமீப காலத்தில் மூன்று நான்கு தலைமுறைகள் முன்தான் திருக்குடந்தையில் போய்த் தங்கினர்களாம்; விஷயத்தைச் சுருக்கமாகச் சொல்லி வரதக்குட்டியின் ஜாதகத்தைக் கேட்டார் அவர்.

வரதக்குட்டியின் வீட்டார் பெண்ணின் ஜாதகத்தை முதலில் கேட்டபோது எங்களாழ்வான் அய்யங்கார் குதித்தெழுந்தார்.

''ஓஹோ! பெண்ணைக் கொடுக்கப் போகிறேன் என்று தீர்மானித்துவிட்டீர்களோ? நடக்காதய்யா. பிள்ளை ஜாதகத்தை எடுத்துப் போய் நானே பெண் ஜாதகத்துடன் ஒத்திட்டுப் பார்ப்பேன். பொருத்தமிருந்தால் பிறகு இந்த விஷயமாக உங்களிடம் பேசுவேன். இல்லாவிட்டால் இந்த வீட்டை நான் திரும்பியும் பார்க்க மாட்டேன். புரிஞ்சுதோ?'' என்று சொல்லிக் கொண்டே எழுந்து போய் விட்டார்.

விஷயத்தைக் கேள்விப்பட்ட வரதக்குட்டியின் நண்பர்கள் இந்த இடத்தையும் வழக்கம்போல் நழுவ விட்டால் பிறகு கலியாண விஷயத்தை மறக்க வேண்டியதுதான் என்ற வகையில் வரதக்குட்டிக்கு உபதேசபரமாக ஏதோ ஓதிவைத்தனர். வரதக்குட்டிக்கும் இதற்குள் மனத்தில் ஒருவிதமான முடிவு ஏற்பட்டிருந்தது.

மறுநாள் ஸ்ரீமான் அய்யங்கார் வந்தார். என்ன சொல்லப் போகிறார் என்று வரதக்குட்டியின் வீட்டார் யாவரும் ஆவல் சொட்டும் முகத்துடன் இருப்பதைக் கண்ட அய்யங்கார் தம்முள் ஒரு தீர்மானத்துக்கு வந்தவராக ஓர் உறுமலுக்கப்புறம் கனைத்துவிட்டுப் பேசலானார்.

''என்னய்யா! என்னம்மா! ஜாதகத்தில் ஏகப்பட்ட கோளாறுகள்! ஏழாம் வீட்டை எத்தனை பாபிகள் பார்க்கிறார்கள்! இத்தனை பாபிகளும் ஒரு கல்யாணத்தை நடக்க விடுவார்களா? பாருங்கள் இதோ அங்காரகன், இதோ சனி, இதோ ராகு'' என்று குதித்துக் குதித்துப் பேசக்குப் பேச ஸ்வரத்தை உயர்த்திக் கொண்டே வந்தவர் —''இதுமட்டும் சரியான உண்மையான ஜாதகமாயிருந்தால் இந்த இடத்தில் கல்யாணப் பேச்சை எடுப்பதில் அர்த்தமேயில்லை. நல்ல காரியத்தை நடக்கவொட்டாமல் குட்டிச்சுவராக்க இத்தனை பாபிகளா?.... ஏதுக்கடா இத்தனை தூரம் வந்தோம் என்றுகூட எனக்குத்தோன்றுகிறது'' என்று இந்தத் தோரணையில் பெருங் குரலில் கூச்சலிட்டுப் பேசியதைக் கேட்டுத் தெருவில் போய்க் கொண்டிருந்தவர்களும் அக்கம் பக்கத்து வீட்டாரும் கும்பல் கூடி விட்டனர். ஸ்ரீமான் அய்யங்காருக்கு உத்ஸாகம் ஏறியது. தமது திட்டம் வெற்றி பெறுவதற்கான அறிகுறிகளைக் கண்டு குரலின் கடுமையும் ஏகத்தாளமாக உயர்ந்தது.

குழுமியிருந்தவர்கள் எல்லாம் வாய் அடைத்து மௌனமாயினர். வேடிக்கை பார்க்கக் குழுமியவரில் ஒரு சிறிய கேலிச் சிரிப்பு. வரதக்குட்டிக்கு வெட்கம் பிடுங்கித் தின்ன முகம் முழங்கால் வரையில் தொங்கிவிட்டது. பிள்ளையோ கடைக்குட்டி. வேறு கல்யாணம் கார்த்திகை என்பது போன்ற இக்கும் பிக்குகள் கிடையாது. ஊரில் ஏதோ நிலம் புலம் இருக்கிறதென்கிறீர்கள். அது என்ன பெறுமோ?



என்ன விளையுமோ? நாலு பிள்ளைக்குப் பாகம் போட்டால் என்ன வரும்? பிறகு அம்மா ஒரு கைம்பெண், அக்கா ஒரு கைம்பெண். இவர்களை எந்தப் பிள்ளையின் தலையில் கட்டுவது? அதெல்லாம் போகட்டும். பி. ஏ. படித்த பையன். வெறும் பி. ஏ.யைக் கொண்டு என்னய்யா செய்வது? அதுவும் போகட்டும். முப்பது வயதாகிறதேய்யா பிள்ளையாண்டானுக்கு. இவன் இன்னும் நித்திய பிரம்மச்சாரியாகவே இருக்கிறான் என்று எப்படி நம்புவது?...'' என்று ஓர் அணுகுண்டைப் போட்டார் அய்யங்கார்.

''ஆனால்...''என்று ஒரளவு குரலைத் தாழ்த்தி, கனிவுங்கூட இருப்பதுபோல் ஓரிழை தொனியையும் கூட்டி, 'இந்தப் பிள்ளையாண்டான் முகத்தைப் பார்த்தால் ஓர் அனுதாபம் தோன்றுகிறது. ஜாதகத்தில் குரு சுத்தமாக இருக்கிறார். அதனால் ஏதோ நல்லவர், பெரியவர், தெரிந்தவர், அனுபவஸ்தர்களின் அறிவுக்கு மரியாதை கொடுப்பான். அவர்கள் சொல்லைக் கேட்டு நற்பயனடைவான் என்று நம்ப இடமிருக்கிறது. இந்த ஒரே காரணத்துக்காக என் குழந்தையைக் கன்னிகாதானம் பண்ணிக் கொடுக்கலாம் என்ற எண்ணம் எழுந்தது. மனத்தில் நினைத்த நேரம் சுகனம் சரியாயிற்று. 'சுபஸ்ய சீக்கிரம்' என்பார்கள். இன்றே லக்னப் பத்திரிகை எழுதி மாற்றிக் கொள்வோம். இன்றைக்கு எட்டாம் நாள் வெள்ளிக்கிழமை ரிஷப லக்னத்தில் திருக்குடந்தையில் எனது குடிசையில் குழந்தை கோதை நாயகியைக் கன்னிகாதானம் செய்து கொடுக்கிறேன். எல்லோரும் வந்திருந்து கல்யாணத்தைச் செய்து கொண்டு சுபமாகத் திரும்பி வாருங்கள். பத்திரிகை கொடுக்கும்போது உங்கள் ரயில் செலவுக்காக மட்டும் ஒரு நூறோ இருநூறோ கையில் உள்ளதைக் கொடுத்து விட்டுப் போகிறேன். மற்றதெல்லாம் திருக்குடந்தை வந்த பிறகு பார்த்துக் கொள்ளலாம்'' என்று 'ஒன் வே டிராபிக்' என்ற வகையில் முடிவு கட்டி விட்டார் அய்யங்கார். அதன் பிறகு அவரிடம் பேச யாருக்கும் தைரியம் பிறக்கவில்லை.

ஃ ஃ ஃ

வரதக்குட்டியும் அவனைச் சேர்ந்தவரும் கலியாணத்துக்காகக் கும்பகோணம் போய்ச் சேர்ந்தார்கள். ரயிலடிக்கு யாரோ ஒரு பண்ணையாளை அனுப்பியிருந்தார் ஸ்ரீமான் அய்யங்கார். பண்ணையாள் வந்திறங்கிய சம்பந்திகளை நான்கைந்து வாடகை வண்டியில் அழைத்து வந்து அவர்களுக்காக ஏற்படுத்தியிருந்த விடுதியில் இறக்கினான். அய்யங்கார் அங்கு எங்குமே தென்படவில்லை. திகைத்துப்போய் நின்றவர்கள் வண்டி வாடகையைக் கொடுத்து வண்டிக்காரர்களை அனுப்பி வைத்தனர். ஒரு கால் மணிக்கெல்லாம் ஸ்ரீமான் அய்யங்கார் எங்கிருந்தோ திடுதிப்பென்று வந்து குதித்தார். தான் ஸ்டேஷனுக்குக் காருடன் வந்திருந்ததாகவும் ஆனால் அவர்கள் தமக்காகக் காத்திருக்காமல் வாடகை வண்டியில் வந்து தம்மை அவமானப்படுத்தி விட்டதாகவும் இரைந்தார். இந்த இக்கட்டான நிலையில் ஒரு நண்பர் புகுந்து ஐயங்காரின் கோபத்தைச் சமனப்படுத்தினார்.

''விட்டுத் தள்ளுங்கள். உங்கள் அந்தஸ்தும், செல்வாக்கும் அவர்களுக்கு இனி போகப் போகத்தானே தெரியும்?'' என்றார் அந்த நண்பர்.

'சரி' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தபடியே சென்றார் ஸ்ரீமான் அய்யங்கார்.

அன்று மாலைவரையில் வந்தவர்களை விசாரிக்கப் பண்ணையாளும் அந்த நண்பரும்தான். ஏதோ சாமக்கிரியைகள் வந்தன. ஒருவாறு எல்லோரும் சமைத்துச் சாப்பிட்டனர்.

மாலையில் ஜானவாஸம். அய்யங்கார் ஸ்வாமி இன்னும் கோபத்திலேயே இருந்தார். நண்பர் முன்னின்று செய்தபடி ஜானவாஸம் நடந்தது. பெண் வீட்டுக்கு வந்து சேர்ந்தான் பிள்ளை. அப்போதுதான் எல்லோரும் முதன் முறையாகப் பெண்ணைப் பார்த்தார்கள்; பெண்ணின் தாயார் அன்று பகல் இரண்டொரு முறை சம்பந்திகள் இறங்கியிருந்த ஜாகைக்குச் சென்றாள். ஆனால் அதிகம் எதுவும் பேசாமல் ஏதோ பட்டும் படாமலும் பேசிவிட்டு வந்தாள்.

" ஷண்முகம் பிராண்டு "




REGISTERED TRADE MARK

டெலிபோன் நெ. 23094 தந்தி: "SUITCASE"

## எமது மனமார்ந்த தீபாவளி நல் வாழ்த்துக்கள்!

"ஷண்முகம் பிராண்டு" ஸ்டீல் டிரங்க் ஒர்க்ஸ் ஸ்தாபனத்தார் சென்ற 37 ஆண்டுகளாகச் சிறிய முறையில் சேவையளிக்க வாய்ப்பளித்த அன்பர்கள், ஆதரவாளர்கள், வாடிக்கையாளர்கள், வியாபாரிகள் மற்றும் பொதுமக்கள் யாவருக்கும் இத் தீபாவளி நன்னாளில் எமது மனமார்ந்த வாழ்த்துக்கள்!

உயர்தரமான எஃகுத் தகடுகளினால் பல வருஷம் அநுபவம் வாய்ந்த தொழில் விற்பன்னர்களால் எங்கள் சொந்த தொழிற்சாலையில் உருவாக்கப்பட்டுப் பல வர்ணங்களில் ஸ்பிரே செய்யப்பட்ட ஸ்டீல் டிரங்குகள்-டேபிள் பிக்லிங் கேஷ் பாக்ஸ்-கோல்டு லேன் கேஷ் பாக்ஸ் - சூட் கேஸ்கள்-பேன்ஸி கேஷ் பாக்ஸ் - ஜுவல் பாக்ஸ் யாவும் தயாராகக் கிடைக்கும்.

ஆர்டர்களின்பேரில் ஸ்பெஷல் ரகங்களையும் தயாரித்து அளிக்கின்றோம்.

தங்கள் தொடர்ந்த ஆதரவை மேன்மேலும் கோரும்,

C. ஞானசுந்திர நாயகர், உரிமையாளர்

# ஷண்முகம் பிராண்டு ஸ்டீல் டிரங்க் ஒர்க்ஸ்

341, எஸ்பிளனேட், சென்னை-1 ஷோரூம்: 1/14, பேக்கர் தெரு, சென்னை-1

பாக்டரி: 25, கச்சாலீஸ்வரர் தோட்டத் தெரு, மதராஸ்-1 போன்: 23969

பிராஞ்சு: 22, பொற்றாமரை வடகரை, கும்பகோணம் (தஞ்சை ஜில்லா)




எங்கள் அபிமானிகளுக்கும் ஆதரவாளர்களுக்கும் மனமார்ந்த

## தீபாவளி வாழ்த்துக்கள்!

★

குடிசைத் தொழில் முறையில் நடக்கும் எங்கள் தொழிற்சாலை நாளுக்குநாள் நன்கு அபிவிருத்தி அடைந்து வருவதுடன், நல்ல தேர்ச்சி பெற்ற தொழிலாளர்களைக் கொண்டு நாள் ஒன்றுக்குச் சராசரி 5 டன் வீதம் தயாரிக்கிறோம்.

★

தினசரி லட்சக்கணக்கான மக்கள் எங்களது சோப்பை உபயோகித்து வருகிறார்கள்.

தயாரிப்பவர்: **N. S. பண்டாரியா பிள்ளை**

பவர் ஸீட் சோப் பாக்டரி · கும்பகோணம்

பெண்ணோ அப்படி ஒன்றும் மோசமில்லை. ஆனால் ரம்பையுமில்லை. ஞானவான ஆசீர்வாதங்கள் நடந்தன. ஏதாவது தட்டில் பணமிருக்குமோ என்று எதிர்பார்த்தவர்கள் ஏமாந்தனர். ஒருவர் முகத்தை ஒருவர் பல்வேறு கோணங்களில் முறைத்துப் பார்த்துக்கொண்டார்கள்.

வரதக்குட்டியின் குழுவினரிலும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகப் பேசிக்கொண்டனர். ஆனால் வரதக்குட்டியோ வாய் திறவாமல் இருந்ததிலிருந்து எப்படியாவது கல்யாணம் என்று நடந்து தானும் ஊருக்குப் போனால் போதும் என்ற எண்ணத்தில் இருப்பவனென்று மற்றவர்கள் தெரிந்து கொண்டனர்.

கல்யாணமும் ஆயிற்று; கன்னிகா தானமும் ஆயிற்று. ஆனால் கனக ஸம்பன்னம்.... இத்யாதி ஒன்றையும் காணோம். வரதக்குட்டியினரின் சார்பினருக்கு ஏற்பட்ட ஏமாற்றம் கொஞ்ச நஞ்சமல்ல. வரதக்குட்டியின் அத்திம்பேர் துணிந்து பேசினார்.

''இதுதானா கல்யாணம்? ஆயிரமாயிரமா வரதட்சிணை, ஆயிரமாயிரமா சீர் செனத்தி செய்யறதா வந்தவர்களைத் தட்டி இவர்கள் ஏதோ மயப்புக் காட்டுகிறார்களே என்று எண்ணினால் யானை குட்டி போடப் போகிறது என்று எதிர்பார்த்தாலுமே, அதுபோலாயிற்றே விஷயம்!'' என்றார்.

அய்யங்கார் ஸ்வாமி தொண்டையைக் கனைத்துக் கொண்டு ஆரம்பித்தார்: ''அதைப் பற்றிக் கேட்க நீர் யாரையா? கலியாணமாயிற்று. இனி எது வேண்டுமானாலும் கேட்கும் உரிமை மாப்பிள்ளைக்கு. அவர் கேட்கட்டும். ஆயிரமென்ன? – கேவலம், என் பண்ணையாள் வீட்டிலும் போதாத பேச்சு – பதினாயிரமானாலும் அவர் இஷ்டம்போல் எடுத்துக் கொள்ளலாம். இனி அவர் கேட்பது நான் கொடுப்பது என்றில்லை ஐயா. அவர் விரும்பியதை அவரே எடுத்துக் கொள்வது என்பதுதான். இது உமக்கு மட்டுமல்ல. உங்கள் குடும்பம் முழுவதற்குமே நான் சொல்லும் பதில். எல்லோரும் புரிந்துகொள்ளுங்கள்'' என்று முடித்தார்.

கல்யாணமானவுடன் பெண்ணையும் மாப்பிள்ளையையும் நண்பரொருவருடன் சேர்த்துக் கோயிலுக்கு அனுப்பிவைத்தார். அவர்கள் திரும்புவதற்குள்... பிள்ளை வீட்டுக்காரர் அவர்கள் விடுதிக்குச் சென்று விட்டனர். பந்தலில் இருந்த சீர் வரிசைகள் ஸ்ரீமான் அய்யங்காரால் பத்திரப்படுத்தப் பட்டன. கோயிலிலிருந்து வரதக்குட்டி தம்பதிகள் வந்ததும் அவர்களுடன் ஸ்ரீமான் அய்யங்கார் சாப்பிட உட்கார்ந்து விட்டார்.

வரதக்குட்டிக்கு ஒரே பிரமிப்பு. யாரோ சிலர் தமக்குள் பேசிக்கொண்டதிலிருந்து தன் மனுஷ்யாளெல்லாம் சாப்பிட்டு விட்டுத் தமது ஜாகைக்குச் சென்றுவிட்டனர் என்பது போன்ற ஓர் எண்ணம் வரதக்குட்டியின் மனத்தில் தோன்றியது. பிறகு தன் ஜாகைக்குச் சென்ற பிறகுதான் தான் நினைத்தது தவறு என்பது தெரிந்தது.

இந்த நிலையில் வரதக்குட்டிக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. மாமனார் வீட்டுக்கு ஓடினான். விஷயத்தைச் சொன்னான்.



''ரயில்வே ஸ்டேஷனில் 'வாருங்கள்' என்று என்னை வரவேற்க விட்டார்களா? ஏதோ தங்கள் சொந்த ஊரில் சொந்த வீட்டுக்குப் போவது போலல்லவா, வந்து இறங்கினார்கள்? அதே தோரணையில் எல்லா வசதிகளையும் செய்து கொள்ளட்டுமே. நான் தடுக்கப் போகிறேனா? இன்னும் கால் மணி நேரத்தில் பாரும் மாப்பிள்ளை! சமைத்தது ஜாடாவும் காலியாகி விடும். இந்த வீட்டுப் பரிஜனங்கள் கட்டுக்கடங்காதவை. போகப் போக நீங்களே புரிந்து கொள்வீர்கள்'' என்று முடித்தார்.

வரதக்குட்டி தனது ஜாகைக்கு ஓடினான். என்னென்னவோ சொல்லிப் பார்த்தான். சாப்பாட்டுக்கு அழைக்காமல் எப்படிச் சாப்பிட வருவது? என்று தம்மைச் சார்ந்தவர்கள் சொன்னார்கள். இவர்கள் சொல்வதும் நியாயமாகப்பட்டது. ஸ்ரீமான் அய்யங்கார் சொல்வதும் நியாயமென்று தோன்றியது. செய்வது என்னவென்று தெரியாமல் திகைத்து விட்டான். அப்படியும் யாரோ ஒன்றிரண்டு பேர்கள் சென்று சாப்பிட்டு விட்டு வந்தனர். கலியாண வீட்டில் ஒரே குழப்பம். எதற்காகவோ பிள்ளை வீட்டாரெல்லாம் வரதக்குட்டியிடம் கோபப்பட்டார்கள். ஸ்ரீமான் அய்யங்காரோ, ''மாப்பிள்ளை! நீங்கள் இப்படி ஒரே வழவழ மழமழாவாயிருக்கக் கூடாது. எதையும் அடிச்சுப் பேச வேண்டும். இல்லாவிட்டால் தானே சரியாகட்டும் என்று விட்டு விட வேண்டும்'' என்று உபதேசம் செய்தார்.



அப்படியும் இப்படியுமாகப் பிள்ளை வீட்டார் அன்று மாலையே ஊருக்குத் திரும்பினர், கல்யாணமாகித் திரும்புவோரின் அறிகுறியே இல்லாமல்!

* * *

ஊருக்கு வந்து மாதம் ஒன்றாயிற்று. இரண்டாயிற்று. சம்பந்திகளிடையில் யாதொரு கடிதப் போக்குவரத்தும் இல்லை. ஊரில் உள்ளவர்களெல்லாம் 'வரதக்குட்டி நித்யபிரம்மச்சாரி, அன்று கலியாணமாகாத பிரம்மச்சாரி இன்று கலியாணமாகியும் பிரம்மச்சாரி' என்று பேசத் தொடங்கினர். கல்யாணம் கேட்க வந்தவர்களுக்குச் சீர் செனத்திகளைக் கொறு வைத்துக் காண்பிக்க வேணுமே. அதற்கு வாய்ப்பில்லாத காரணத்தால் வரதக்குட்டியின் தாயார் உடன் பிறந்தவர் யாவரும் எவ்வளவு அவமானப்பட்டுக் கூனிக் குறுகிப் போயினர் என்று சொல்ல முடியாது. பணமோ பணம் என்றும் சீரோ சீர் என்றும் பேராசைப்பட்ட இவர்களுக்குத் தெய்வமாகப் பார்த்து இப்படி ஒரு தண்டனையைக் கொடுத்திருக்கிறது என்றும் பேசிக்கொண்டனர்.

பல பேர்கள் ஏச்சுக்களைச் சகிக்க முடியாமல் தவித்தான் வரதக்குட்டி. தன் மனைவியைக் கொண்டு வந்து விடும்படி மாமனாருக்குக் கடிதம் எழுதினான். ஒன்று, இரண்டு, மூன்று! ஒன்றுக்காவது பதில் இல்லை. கடைசியாகச் சிநேகிதர்கள் உத்தலின்பேரில் தான் ஒரு தரம் நேரில் கும்பகோணம் போய்த் தன் மனைவியை அனுப்பி வைக்கும்படி மாமனாரைக் கேட்டான்.

''உங்கள் வீடு, உங்கள் வீடு என்கிறீரே உமக்கு ஏது வீடு? அண்ணா, மதனி என்று அவர்களை நம்பி, நாய்ப் பிழைப்பு பிழைத்து வரும் நீர் எப்படியய்யா ஒரு மனைவியை வைத்துக் கொண்டு குப்பை கொட்டப் போகிறீர்? நீர் தின்னும் எச்சில் சோற்றுக்குப் பெண்டாட்டி ஒரு விருந்தாளியா? அல்லது உங்கள் அம்மா அக்கா மதனிகளுக்கு வேலை செய்ய என் மகளை ஒரு வேலைக்காரியாக அமர்த்த யோசனையா? அவர்கள் எல்லோரையும் வைத்துப் படைக்க என் மகளுக்கு அந்தஸ்து இருக்கிறது. ஆனால் அப்படிச் செய்ய உத்தேசமில்லை. இதோ பாரும் மாப்பிள்ளை! உமக்கு என்று ஒரு குடியும் குடித்தனமும் ஏற்பாடு செய்து கொண்டு நீரும் ஒரு மனுஷனாக வாழ விரும்பினால்... நீரும் உமது நண்பர்கள் மற்றும் தூர உறவினர்கள் என்பவரை உமது வீட்டுக்கு வரப் போக வாய்ப்பு அளித்து ஒரு மனிதனாக நாலு பேர்கள் முன்னிலையில் கௌரவமாக வாழ விரும்பினால் அதற்கு ஒரே வழிதான் இருக்கிறது. பேசாமல் ஒரு வீட்டைப் பார்த்து வாடகைக்கு அமர்த்தி ஏதோ குடித்தனத்துக்கு மிகவும் அவசியமான தட்டுமுட்டுச் சாமான்களை வாங்கி முன்னேற்பாடுகளைச் செய்யும். என் மகளை ஒரு நிமிஷமும் தாமதியாமல் நானே கொண்டு வந்து விடவேண்டிய கிரமப்படி முறை தவறாமல் விட்டு வருகிறேன். இதற்கெல்லாம் முன்கூட்டிச் சிறு தொகை வேண்டுமானால் தருகிறேன். ஐம்பதல்ல, நூறு ரூபாயானாலும் பரவா

யில்லே" என்று சொல்லி நூறு ரூபாயைக் கையில் திணித்து அனுப்பி விட்டார்.

ஊர் திரும்பிய வரதக்குட்டி என்ன செய்வதென்று தெரியாமல் பிரமைபிடித்தவனாகத் திரிந்தான். மெல்ல மெல்ல விஷயத்தை அறிந்த வரதக்குட்டியின் அம்மாவும், அண்ணா, மதனிமார்களும் ஒன்றாயிருந்த குடும்பம் பிளவுபடுவதற்காக வருந்தினாலும் வரதக்குட்டியாவது கொஞ்சம் சுகப்படட்டுமென்று நிர்மானித்தார்கள். வீட்டைப் பார்த்து, வாடகை அட்வான்ஸைக் கொடுத்துக் குடித்தனத்துக்கு வேண்டிய பாத்திரம், படி செட்டுகளை யெல்லாம் கொண்டு வைத்து ஒருவிதமாக ஏற்பாடு செய்து தகவலை ஸ்ரீமான் அய்யங்காருக்குத் தெரியப்படுத்தும்படி வரதக்குட்டியிடம் சொன்னார்கள். வரதக்குட்டியும் எழுதினான். ஸ்ரீமான் அய்யங்காரும் ஒரு நல்ல நாளைக் குறிப்பிட்டு அன்று ஸௌபாக்கியவதி கோதைநாயகியுடன் தாம் வருவதாகத் தெரியப்படுத்தினார்.

குறிப்பிட்ட நாளில் அவ்விதமே வரவும் செய்தார். ஜட்காவிலிருந்து ஸ்ரீமான் அய்யங்கார் இறங்கினார். தொடர்ந்து கோதைநாயகியும் ஒரு கைப்பெட்டியுடன் இறங்கினாள். வரதக்குட்டியின் மதனிமார்கள் மஞ்சள் நீர் சுற்றி வரவேற்றனர்.

அய்யங்கார் சொன்னார்: "ஏ ஜட்கா! மாப்பிள்ளை வாடகை கிடகை எதையாவது கொடுத்தால் சரியென்று நகர்ந்து விடாதே. இதே நடையாகக் கடைத்தெருவுக்கும் போய்வர வேண்டும். தெரிந்ததா சேதி?" என்றார்.

ஸௌ. கோதைநாயகி இதற்குள் வீட்டினுள் போய்விட்டாள். போகும்போது வரதக்குட்டி மேல் ஒரு கண் வீச்சல், அதைத் தொடர்ந்து கண்ணால் ஒரு வெட்டு.

வரதக்குட்டிக்குத் திடீரென்று ஆகாயத்தில் பறப்பது போல் தோன்றியது. சிந்திக்கும் சக்தியே சிறிது நேரம் இல்லை. "எதற்காக மாமா? வந்ததும் வராததுமாக? நீங்கள் உள்ளே போய்க் கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொண்டு பிறகு சாப்பிட்டுவிட்டுக் கடைத் தெருவுக்குப் போகலாம். தெருக் கோடியில் நூறு ஜட்காக்கள் காத்துக் கொண்டிருக்கின்றன" என்று சொல்லி ஜட்காக்காரனுக்கு ஏதோ சமாதானம் சொல்லி வாடகையைத் தானே கொடுத்து அனுப்பினான். இதனை அசட்டுச் சமர்த்து என்றுதானே சொல்ல வேண்டும்?

"உம் அன்புக்குக் கட்டுப்படாமல் யாரால் தப்ப முடிகிறது?" என்று சொல்லிக் கொண்டே ஸ்ரீமான் அய்யங்கார் உள்ளே போனார்.

அன்று சாப்பாடானதும் ஆபீசுக்கு நேரமாகிவிட்டதாக மிகவும் அவசர அவசரமாகப் பறந்து கொண்டிருந்தான் வரதக்குட்டி. அப்போது ஸ்ரீமான் அய்யங்கார் "மாப்பிள்ளையிடம் சொன்னேயோ கோதை?" என்றார். வரதக்குட்டி நின்று என்ன என்று விசாரித்தான்.

"ரொம்ப அவசரமான வேலை. பண்ணையாள் நகராது. கலெக்டர் முன் கேஸ். அதனால் இன்று சாயங்கால வண்டிக்கே நான் திரும்பிப் போகிறேன். ஒருகால் நீங்கள் திரும்பி வருவதற்கு நேரமாகுமானால்... நான் இப்போதே சொல்லிக் கொண்டதாக வைத்துக்கொள்ளுங்கள். கலெக்டர் கேஸ் முடிந்தால் மறுநாளே இங்கு வருகிறேன். இந்த முறை இரண்டு நாள் தங்க இயலாததைப் பொருட்படுத்த வேண்டாம். அவ்வளவுதான்" என்றார்.

வரதக்குட்டி ஏதோ பேச வாயெடுத்த போது, "சரி சரி, ஆபீஸுக்கு நேரமான இந்த வேளையில் எதற்கு உபசாரமெல்லாம்? முடிந்தால் கொஞ்சம் முன்னதாகப் புறப்பட்டு வாருங்கள். இல்லாவிட்டால் நானென்ன, இரண்டு நாட்களில் திரும்பப் போகிறவன்தானே? வேலைக்கு நாழியாகிறது. அதைப் பாரும். இந்தக் காலத்தில் உத்தியோகம் கிடைப்பதே குதிரைக் கொம்பு. அதைச் சரிவர நிர்வகிப்பதில் சிரத்தைக் குறைவு ஏற்படக் கூடாது பாருங்கள்" என்று கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறையாக அனுப்பி வைத்தார். சொன்ன வண்ணம் செய்யும் பெருமாளென அவ்விதமே ஸ்ரீமான் அய்யங்காரும் அன்று மாலை வண்டிக்கே கும்பகோணத்துக்குத் திரும்பிவிட்டார்.

அன்று வரதக்குட்டிக்கு வீட்டுக்கு வர வழக்கத்தை விட அதிக நேரமாகி விட்டது. வீடு வந்ததும், தன் மதனிகள் அம்மா முதலானோர் தமது பழைய இடத்துக்கு இரவோடு இரவாகப் போகத் தயாராக இருப்பதைப் பார்த்தான். தான் வீட்டில் இல்லாதபோது விசேஷ சம்பவம் ஏற்பட்டு அதன் காரணமாகத்தான் இவர்கள் இப்படிப் பிரயாணமாவது என்று சந்தேகித்தான் வரதக்குட்டி. ஆனாலும் என்ன? ஏது என்று விசாரித்து ஒரு குழப்பத்தை உண்டாக்க விரும்பவில்லை. மௌனியானான். அவர்களும் தங்கள் இல்லம் திரும்பினர்.

இப்படியாக வரதக்குட்டி கோதைநாயகி தம்பதியின் தனிக் குடித்தனம் தொடங்கியது. கும்பகோணம் சென்ற ஸ்ரீமான் அய்யங்கார் கேஸ் விஷயமாகவோ வேறு எந்த விஷயமாகவோ கடிதம் எழுதவேயில்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் தீபாவளி வந்தது. தலை தீபாவளிக்கு அழைப்பு இல்லை. ஆயினும் ஊரார், உற்றார் முன் கௌரவத்தை விட்டுக் கொடுக்க மனமில்லாத வரதக்குட்டி கோதைநாயகியையும் அழைத்துக் கொண்டு தானாகவே வேட்டகம் சென்று வருவதெனத் தீர்மானித்து அவ்விதமே ஸ்ரீமான் அய்யங்காருக்கும் எழுதினான். முதலில் லீவு கிடையாது என்றும் சொஸைட்டியில் கடன் கிடையாது என்றும் தெரிந்தவுடன் லீவு கிடைக்காததால் வர முடியாது என்று மாமனாருக்கு எழுதினான். ஆனால் மறுநாளே லீவும் கிடைத்தது; கடனும் கொடுத்தார்கள். இதற்குள் தாமே புறப்பட்டு வருவதாக மாமனாரிடமிருந்து ஒரு தந்தி வந்தது. அதன் பின்னாலேயே மாமனார் மாமியார் இருவரும் இங்கே வந்து விட்டனர்.

வந்த மாமனார் சொன்னார்: "இனிமேல் நீங்கள் வேறு, நாங்கள் வேறு என்று இல்லை, மாப்பிள்ளை! எங்களுக்கு இருப்பதெல்லாம் இந்தக் கோதை ஒன்னே ஒன்னு, கண்ணே கண்ணு தான். இவளையும் பிறந்தது முதல் நாங்கள் விட்டுப் பிரிந்தது கிடையாது. அவள் இங்கும் நாங்கள் அங்குமாய் எதற்குத் தனி வாசம் என்று இனி உள்ள நாளை அவளுடனிருந்தே கழித்து விடலாமென்ற முடிவுடன் நானும் உங்கள் மாமியும் வந்துவிட்டோம். இனிமேல் நீங்கள் வேறு நாங்கள் வேறு என்று எதற்கு? ஏதோ உங்கள் வருவாயில் எட்டின விதம் கூழோ கஞ்சியோ உங்களுடன் பகிர்ந்து கொண்டு பாக்கியுள்ள கொஞ்ச நாளையும் நிம்மதியாகக் கழிக்கத் திட்டமிட்டிருக்கிறோம். உங்களுக்கும் கோதைக்கும் நீங்கள் என்ன துணிமணிகள் வாங்கி வைத்திருக்கிறீர்களோ தெரியாது. அது உங்கள் இஷ்டம் போல் நீங்களே செய்து கொண்டது. நான் செய்வது நல்லார் செய்யார்கள். தீபாவளியன்று ஒரு புது நூல் கட்டிக் கொள்வது நம்முன் அனாதி கால வழக்கம். எனக்கும் அவளுக்கும் கூட ஒரு நூல் புதிதாக வாங்கி வந்து விடுங்கள்" என்றார் அய்யங்கார்.

'அட ராமா!' என்று வரதக்குட்டி இடி கேட்ட அரவம் போல் திகைத்துப் போனான். இப்போது மாமனாருக்கு வேஷ்டிகள், மாமியாருக்குப் புடவை இவைகளை எங்கேயாவது ஜவுளிக் கடையில் கடன் சொல்லி வாங்கித் தர வேண்டுமென்று தன் நண்பன் நாணுக்குட்டியை நச்சரித்துக் கடைத் தெருவுக்கு அழைத்து வந்திருக்கிறான். ஆபீசில் லீவும் சொஸைட்டியில் கடனும் வாங்கி மாமனாருக்குத் தலைதீபாவளி கொண்டாடும் வரதக்குட்டியைக் கண்டு வருத்தப் படாதவர்கள் கிடையாது.

ஐயோ பாவம், இந்த அப்பாவி ஏன் இந்த இடக்கான சம்பந்தத்தில் சிக்கினான்? அதற்கு முன்பு வந்த அநேக வரன்களை வரதக்ஷிணைப் பேரம் காரணமாகத் தட்டிக் கழித்து வந்த காரணம்தான். அது ஏன் அப்படி வருஷவாரி வந்த வரன்களைத் தட்டிக் கழித்தான்? அவன் ஓர் அசட்டுச் சமர்த்து! அதனால்தான்!

**"ஆயிரம் ரூபா சம்பளம் வாங்கும் எங்க வீட்டுக்காரரே தீனி கிடைக்காமல் திண்டாடிக்கிட்டிருக்காரே! உனக்கேது இவ்வளவு தீனி?"**

**"இன்னும்மா! எல்லோ தீனி வோணும் பிளாக்லே? அ... ஆம்... என் மாப்ளே கோவாபரேடிலே வேலே செய்யுது. எல்லோ முட்டை வோணும்னாலும் கொண்டாரும்!"**

81-E8-11-TAM-A

## "பெரியோர்களே, உங்களுக்குத் தீபாவளி நல்வாழ்த்துக்கள்."

எஸ்ட்ரெலாவின் பணிகளைப்பற்றிக் கூற விரும்புகிறேன 25 ஆண்டுகளுக்கு முன்பு சிறிதாக இருந்தது எஸ்ட்ரெலா, திட்டங்களுடன். அவை நிறைவேறின. வளர்ந்த எஸ்ட்ரெலா இன்று பெரிய கம்பெனியாகி விட்டது - புதிய திட்டங்களுடன்! விரைவில் அவையும் நிறைவேறும். ட்ரை செல்களையும் பாட்டரிகளையும் தயாரிப்பதில் பிரான்சிலேயே முதன்மையான லாமில் லெக்லான்சே அல்லவா அவர்களுடன் கூட்டு சேர்ந்துள்ளனர்? இதன்மூலம் உற்பத்திப் பெருக்கம், தர மேம்பாடு, விரிவான வகை வேறுபாடு ஆகியவை

VER JUBILEE CELEBR

எஸ்ட்ரெலாவுக்கு
வெள்ளி விழா

112
ESTRELA
YOUR GUIDE
IN DARKNESS
ESTRELA BATTERIES LTD.
BOMBAY 19

கைகூடும். அயல்நாட்டுச் செலாவணி இலட்சக்கணக்கில் மிச்சமாகும். ஏனெனில் உள்நாட்டுக் கச்சாப்பொருள்கள் மேலும் நன்கு பயன்படுத்தப்படும். அன்பர்களே! உங்களுக்கும் லாபமுண்டு: சர்வதேசத் தர விதிப்புகளுக்கு ஏற்ப பல்வேறு வகையான செல்கள் சிக்கனமான விலைகளில் கிட்டும்.




**பத்திரிகைகளிலே**

25 ஆண்டுகளைக் கண்டுள்ள எஸ்ட்ரெலாவின் வளர்ச்சி, கருத்தும் வளமையும் நிரம்பிய அற்புத வளர்ச்சியாகும். உற்பத்தியை மும்மடங்காக்கியுள்ளனர். ஐந்தாண்டுகளிலே 10 கோடி செல்கள் என்ற இலக்கை எட்டத் திட்டமிட்டுள்ளனர்.

**எஸ்ட்ரெலா** — 25 ஆண்டுகளாக இருளில் உதவும் நண்பன்



# எங்களூர் — எக்ஸ்பிரஸ்

சுக்கு புக்கு சுக்கு புக்கு ரயில் வண்டி
ஜோராப் போகும் மெயில் வண்டி

நின்னு நின்னு நகராது
  நிமிஷம் லேட்டாப் போகாது
தண்ணிக்கு வாயைத் திறக்காது
  டன்கணக்கா கரி முழுங்காது

கண்ணிலே கரியைத் தூவாது
  கத்திக் காதைத் தொளைக்காது
புண்ணு ஒடம்பைக் குலுக்காது
  புழுங்கல் அரிசியா அவிக்காது

பாதையை விட்டு வெலகாது
  பாலத்தில் ஏறிக் குதிக்காது
மோதி மூக்கை ஒடைக்காது
  முறுக்கா நொறுக்கித் தள்ளாது

ஆணு பொண்ணு கெடையாது
  அரை டிக்கெட்டுங் கெடையாது
மூணுங் கிளாசும் கெடையாது – புளி
  மூட்டைப் பெட்டியுங் கெடையாது

பிச்சைக்காரன் வர மாட்டான்
  பிக்பாக்கெட் கை விடமாட்டான்
கொச்சைத் தமிழில் லெக்சரடிச்சிக்
  கொல்லும் டாக்டரும் வரமாட்டார்

எல்லாரும் ஏறும் ரயில்வண்டி
  எங்கும் போகும் ரயில்வண்டி
உல்லாசமாய்க் குஞ்சுகளெல்லாம்
  ஓட்டும் மெட்ராஸ் மெயில் வண்டி

குட்டிக் காலால் ஓடிவரும்
  கொஞ்சுங் குரலால் ஊதிவரும்
தட்டித் தடுக்கி விழுந்தாலும்
  தானுய் எழுந்து கிளம்பிவிடும்

திரும்பித் திரும்பிச் சுழன்றுவரும்
  தில்லி வரைக்கும் போயிவரும்
விரும்புற எடத்தில் நின்னுவிடும்
  விசிலைக் கேட்டால் பறந்துவிடும்

காசும் பணமுந் தரவேண்டாம்
  கௌண்டரில் தூங்கி விழவேண்டாம்
ஆசைப்பட்டவர் ஏறுங்கோ
  அவரவர் காலைச் சொழட்டுங்கோ.

சுரபி

# காட்டு யானை

ராஜி

ஒரு பணக்கார யானை தனது மனைவியுடனும் தனது ஒரே மகனுடனும் ஒரு பெரிய காட்டில் வசித்து வந்தது. யானைக்கு நிரம்பப் பணம் இருந்தும் தனது சொந்தக் காரியங்களுக்குக்கூடப் பணத்தைச் செலவு செய்ய மனம் வராது.

''இந்த வருஷமாவது எனக்குப் பட்டுப் புடவையும் குழந்தைக்கு நல்ல பட்டுச் சொக்காயும் துணியும் வாங்க வேண்டும்'' என்று மனைவி யானை கெஞ்சிக் கேட்டுக் கொண்டது.

''அதெல்லாம் முடியாது. சேமித்து வைத்திருக்கும் பணத்தை நான் தொட முடியாது. வேணுமானால் ஏதாவது ஒரு வியாபாரத்தை ஆரம்பித்து அதில் வரும் லாபத்தை வைத்துக் கொண்டு, இந்தத் தீபாவளிக்கு ஏதாவது துணி வாங்கலாம்'' என்று யானை கூறிவிட்டது. ஆகவே வேறு வழியின்றி மனைவி யானை, ''சரியான யோசனை. அப்படியே செய்யலாம்'' என்றது. ''என்ன வியாபாரம் செய்யலாம்? அதையும் சொல்லு'' என்று தன் மனைவியைத் தூண்டியது.

உடனே யானையின் மனைவி ''காட்டில் எல்லாக் கடைகளும் வந்திருக்கின்றன. பழங்கள் விற்கும் கடைகள்தான் வரவில்லை'' என்று கூறியதும் அந்த யோசனையை யானை ஆமோதித்தது. ''இப்போதே கடையை ஏற்படுத்தலாம். தீபாவளி இன்னும் ஒரு மாதம் இருக்கிறது. நமது பையன் கஜபதியையே கடையைப் பார்த்துக் கொள்ளச் சொல்லலாம். அனாவசியமாகச் சம்பளத்துக்கு வேறு ஆளை எதற்காகப் போட வேண்டும்?'' என்று மனைவி சொன்ன வார்த்தையைக் கேட்டு யானை சந்தோஷமடைந்தது. ''அப்படியே செய்யலாம். இந்த ஊரிலேயே பழங்களை வாங்கி விற்க எனக்குப் பிடிக்கவில்லை. ஒவ்வொரு காட்டுக்கும் போய் எங்கு பழம் உற்பத்தியாகிறதோ, அங்கிருந்தே பழங்களை விதம் விதமாக வாங்கி அனுப்புகிறேன். நீ தினந்தோறும் பழங்களை விற்றுக் கிடைக்கும் பணத்தைச் சேகரித்து வை. நான் ஊரிலிருந்து திரும்பியதும் தீபாவளிக்கு வேண்டியதை வாங்கிக் கொள்ளலாம்'' என்று கூறி மனைவியிடம் விடைபெற்றுக் கொண்டு ஊர் ஊராகச் சென்று பழங்களை வாங்கி அனுப்பச் சென்றது.

காட்டில் யானையாரின் பழக் கடையைப் பார்க்க எல்லா மிருகங்களும் கூட்டம் கூட்டமாக வந்தன. காட்டில் எளிதில் கிடைக்காத ஆப்பிள், ஆரஞ்சுப் பழங்கள், மாம்பழத் தினுசுகள், வாழைப் பழத் தினுசுகள் எல்லாம் தினந்தோறும் புதிதாகக் கடைக்கு வந்தன. அந்தப் பழங்களை யானையின் மனைவி தன் மகன் கஜபதியும் மற்ற மிருகங்களும் பார்க்கும்படியாக மிகவும் அழகாக அடுக்கியது. பாவம், கஜபதி!! காலை முதல் மாலை வரையில் பழக் கடையிலேயே உட்கார்ந்திருந்தது. காலையில் அடுக்கு அடுக்காக இருந்த பழங்கள் மாலை ஆவதற்குள் காலியாகிவிடும். மறு நாள் புதிய பழங்கள் வரும் வரையில் யானையின்

மனைவியும் கஜபதியும் காத்துக் கொண்டிருக்கும். காட்டில் இருக்கும் மிருகங்கள் யானையின் கடைப் பழங்களைப் பற்றியும், அவை மாலை முடிவதற்குள் விற்பனை ஆவதையும் நினைத்து ஆச்சரியப்பட்டன. ''சாதாரணமாகச் சின்னக் கடையாக ஆரம்பித்து இவ்வளவு பிரமாதமாக யானைகள் பெயர் சம்பாதித்துக்கொண்டனவே! காடு முழுவதும் யானையின் பழக்கடையைப் பற்றித்தானே பேச்சாயிருக்கிறது!'' என்று மிருகங்களெல்லாம் கூடிப் பேசிக்கொண்டன.

யானையின் பழக் கடை காடு முழுவதும் மிகவும் பிரசித்தியடைந்து விட்டது. அடர்ந்த காட்டுக்குள் புகுந்து கிடைத்த பழங்களைத் தின்றுவந்த மிருகங்களுக்கு எல்லாப் பழங்களும் நிறைந்த ஒரு கடையைப் பார்த்ததும் ஆனந்தம் தாங்கவில்லை. கிளி, பழந்தின்னி வௌவால் மற்றும் குருவிகள் போன்ற பறவைகளுக்கெல்லாம் யானையின் பழக் கடைக்குச் சென்று பல தினுசுப் பழங்களையும் வாங்கித் தின்ன ஆசையாயிருந்தது. குரங்குகள், ஒட்டைச்சிவிங்கிகள், முயல்கள், காட்டுப் பசுக்கள் ஆகியவை கூட்டம் கூட்டமாக அந்தக் கடைக்கு விஜயம் செய்தன. ஆனால் ஒரு மிருகத்துக்காவது பழம் கிடைக்க வேண்டுமே! ஊஹூம். கிடையாது. எப்பொழுது போனாலும் கடை மூடியே கிடக்கும் மர்மம் எந்த மிருகத்துக்கும் விளங்கவில்லை. கடை திறந்ததும் திறக்காததுமாக அத்தனை பழங்களையும் மொத்தமாக யாராவது வாங்கிக்கொண்டு போய்விடுகிறார்களோ! ஒரே அதிசயம்தான்!

தீபாவளி நெருங்கும் சமயத்தில் ஊர் ஊராகச் சுற்றிய பணக்கார யானை காட்டுக்குத் திரும்பியது. அப்பொழுது மாலை வேளை. அதன் மாம்பழக் கடை பூட்டப்பட்டிருந்தது. ''இது என்ன இது? தீபாவளி சமயம் கடையை அதற்குள் மூடுவானேன்? இனிமேல்தானே நல்ல வியாபாரம் ஆகும்? நான் விலை உயர்ந்த பழங்களை வாங்கி அனுப்பி என்ன பிரயோசனம்?'' என்று சற்றுக் கோபத்துடன் சொல்லிக்கொண்டே வீட்டை நோக்கி வேகமாகப் போயிற்று.

அந்தச் சமயத்தில் ஒரு கரடி குறுக்கிட்டு, ''ஐயா, யானையாரே! உங்களுக்கு நல்ல அதிர்ஷ்டம். காலையில் நீர் அனுப்பும் பழங்கள் உடனேயே விற்பனை ஆகிவிடுகின்றன. நானும் பார்க்கிறேன், ரொம்ப நாட்களாக உங்கள் கடையில் ஒரு பழமாவது வாங்கிவிட வேண்டுமென்று. முடியவில்லை!'' என்றது.

''என்னது! கடைக்குக் கூடை கூடையாகப் பழங்கள் அனுப்பிக் கொண்டேயிருக்கிறேன். உனக்கு ஒரு பழம் கிடைக்கவில்லையென்றால் ஆச்சரியமாயிருக்கிறதே! நீ என்னைக் கேலி பண்ணுகிறாயோ?'' என்று யானை கோபத்தோடு கேட்டது.

''நான் உங்களைப் போய்க் கேலி பண்ணுவேனா? உங்கள் பையன் கடையை ரொம்ப சீக்கிரம் மூடிவிடுகிறான். வியாபாரம் சீக்கிரம் ஆகிவிடுகிறது. அதைத்தான் சொல்ல வந்தேன்!'' என்றது கரடி.

அதைக் கேட்ட பணக்கார யானை சந்தோஷம் கொண்டது. தனது மனைவியை மகிழ்ச்சியுடன் கூப்பிட்டுக் கொண்டே உள்ளே சென்றது. ''பழக்கடையில் நல்ல வியாபாரமாயிற்று என்று கேள்விப்பட்டேன். இப்பொழுது முதலும் லாபமுமாக எவ்வளவு சேர்த்து வைத்திருக்கிறாய்?'' என்று கேட்டது.

யானையின் மனைவி திகைப்புடன், ''பணமா, ஏது பணம்?'' என்று சொல்லி முடிப்பதற்குள் யானை ''அதோ பார், யாரோ நம் வீட்டைத் தேடிக்கொண்டு அவசரமாக வருகிறார்'' என்றது.

''யாரோவாவது? நம் கஜபதிதான் வருகிறான். நீங்கள் ஊருக்குப் போகும்போது அவன் மிகவும் இளைத்திருந்தான். குழந்தைக்கு ஏதாவது டானிக் வாங்கித் தாருங்கள் என்றால் நீங்கள் பணம் செலவழியும் என்று காதில் போட்டுக் கொள்ளாமல் இருந்தீர்கள். நீங்கள் அவனை அடையாளம் கண்டு பிடிக்க முடியாமல் அவன் உடம்பு நன்றாகி விட்டது. பழக் கடையே அவனுக்காகத்தான் வைக்கப்பட்டது. நீங்கள் தினுசு தினுசாக விலை உயர்ந்த பழங்கள் வாங்கி அனுப்பினீர்களே, அவை யாவும் அவன் வயிற்றுக்குள்தான் சென்றன. பணத்தை வைத்துக்கொண்டு என்ன செய்வது? நம்ம பையன்தானே நமக்கு முக்கியம். அதனால்தான் முன் யோசனையுடன் கடைக்கு வேறு ஆள் போடாமல் கஜபதியையே இருக்கச் சொன்னேன்'' என்று மனைவி சொன்னவுடன் யானை சற்று அதிர்ச்சி யடைந்தபோதிலும் தான் செய்த தவற்றை உணர்ந்தது. தனது மகன் கஜபதியின் உடம்பு நன்றாக ஆகிவிட்டதை நினைத்துச் சந்தோஷம் அடைந்தது. தன் மனைவி கேட்டுக் கொண்டபடி வேண்டிய புதுத் துணிகளை வாங்கித் தீபாவளியை விமரிசையாகக் கொண்டாடியது.



# டிவிஎஸ் வழங்கும்
# மோட்டார் உறுப்புகள்

MICO Fuel Injection Unit
மைக்கோ-
ப்யூயல் இஞ்செக்ஷன் யூனிட்

டிவிஎஸ் வினியோகிக்கும் நம்பகமான
இதர மோட்டார் உறுப்புகள்

**Standard**
Battery
ஸ்டாண்டர்டு பேட்டரி


Tie Rod Ends
QHR
டை ராடு எண்டுகள்



ட்ரான்கோ வால்வுகள்



Horns
ஹெல்லா ஹாரன்கள்



Timing Chains
ரோலான்
டைமிங் செயின்கள்

டி. வி. சுந்தரம் அய்யங்கார் &
ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்

மதுரை - திருச்சி - திருநெல்வேலி
புதுக்கோட்டை - சேலம்
கோயமுத்தூர் - திருவனந்தபுரம்



# தரத்தில் சிறந்தவை

டிவிஎஸ் வினியோகிக்கும் மோட்டார் உறுப்புகள் பரிசோதனை செய்யப்பெற்று, தேர்ந்த பிறகுதான் விற்கப்படுபவை. இந்த உண்மையை பஸ், லாரி, கார் சொந்தக்காரர்கள் நன்கு அறிவர். ஆகையால் தான் டிவிஎஸ் வினியோகிக்கும் உறுப்புகளையே அனைவரும் வாங்குகிறார்கள்.











| | | | |
|---|---|---|---|
| FERODO Brake Linings<br>பெரோடோ பிரேக் லைனிங்குகள் | Springs and Leaves<br>கானரா ஸ்பிரிங்குகள், லீவுகள் | DOUBLE ... PARTS<br>டபிள் லேப் பிரஸிஷன் பார்ட்டுகள் | WIL Commercial Wheels<br>WIL<br>கமர்ஷியல் வீல்கள் |
| KAP AUTO PARTS<br>KAP ஆட்டோ பார்ட்டுகள் | Fenner Fan Belts<br>பென்னர் பான் பெல்டுகள் | FRITZ Filter Elements<br>ப்ரிட்ஸ்<br>பில்டர் எலிமெண்டுகள் | allite Bulbs<br>அல்லைட் பல்புகள் |

**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்**
மதராஸ்-பெங்களூர்
செகந்திராபாத்
(டெக்கான்)

**மதராஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிமிடெட்**
மதராஸ்
பெங்களூர்

# தமாஷா வெடிகள்




பாய்ஸ் அடென்ஷன்!


ஆஸ் யூ வேர்!


???


அப்பா இருக்காரா?


இல்லே நான் தான் இருக்கேன்


நான் சொல்ற சமாசாரத்தை அப்பாவிடம் தெரிவிக்க முடியுமா?


சரி, மாமா!


அப்ப பென்சிலையும் பேப்பரையும் எடுத்துக்கோ!


பென்சிலில் மூக்கு இல்லையே!


சீவிக்கோ!...


சீவிண்டாச்சு!...


எழுதிக்கோ!...


அடடா! எனக்கு எழுதத் தெரியாதே மாமா!

சாமா




குழாய்க்காரய்யா காசு போடுங்கோ




எனக்குக் குடிக்கத் தண்ணி வேணும்...!


நீ எலி வளர்க்கிறயாமே! அதைப் பார்த்துவிட்டுப் போகலாம்னு வந்தேன்!

மேலேயுள்ள பன்னிரண்டு படங்களைப் போலவே கீழேயும் பன்னிரண்டு படங்கள் இருக்கின்றன இல்லையா? ஆனால் பார்ப்பதற்கு அதேபோல் இருந்தாலும் கீழேயுள்ள படங்கள் ஒவ்வொன்றிலும் ஏதோ ஒரு வித்தியாசம் இருக்கிறது. அது என்ன என்பதைக் கண்டுபிடியுங்கள், பார்க்கலாம். விடையைப் பார்க்காமல் நீங்களாகவே கண்டுபிடிப்பதுதான் திறமை!

விடைகள்: 1. ஆந்தையுள்ள மரத்து இலைகளின் எண்ணிக்கை. 2. பறவையின் வாலில் வெட்டு. 3. சூரியனின் 'கண்ணின் கீழ் உள்ள கோடு. 4. மீனின் உடல் புள்ளி. 5. நத்தைக் கூட்டுக் கோட்டின் சுழல் இடது வலது. 6. கறுப்பு முக்கோணம் மேல் கீழாக. 7. பூனையின் நாக்கு. 8. ஆமையின் வால். 9. குழந்தை உள்ளங்கைக் கோடு. 10. கோழியின் வால் இறகுகளின் எண்ணிக்கை. 11. மனிதனின் வலப்பார்வை, இடப்பார்வை, 12. பூவின் வலப்பக்க இலை நரம்புகளின் எண்ணிக்கை.

ஜப்பானில் நடைபெறும் 'ஒலிம்பிக்' விளையாட்டுக்குப் போக விருப்பமா உங்களுக்கு? அப்படியானால் இதோ சுலபமாக ஜப்பான் செல்ல ஒரு வழி! இங்குள்ள பதினொரு கட்டங்களுக்கும் பதினொரு கேள்விகளும் அதற்கு இரண்டு விடைகளும் தரப்பட்டுள்ளன. இதில் ஒன்றுதான் சரியான விடை. சரியான விடை உங்களை அடுத்த கட்டத்துக்குத் தவறில்லாமல் அழைத்துப் போகும். தவறான விடை உங்களை ஜப்பானுக்குப் போகவிடாமல் இழுத்தடித்துக் கொண்டிருக்கும். ஒரு கட்டத்துக்கு ஒரு தடவைதான் விஜயம் செய்யவேணும். மறுமுறை அதே இடத்துக்கு வருவீர்களானால் உங்கள் விடையில் ஏதோ தவறு என்று பொருள்.

| | |
|---|---|
| 1. ஜப்பானில் ஒலிம்பிக் நடப்பது | அ. முதல் முறை<br>ஆ. இரண்டாம் முறை |
| 2. 12—5+8—3½+2½ | அ. 12<br>ஆ. 9½ |
| 3. இந்தியாவுக்கு வந்த முதல் சீன யாத்திரிகர் | அ. பாஹியான்<br>ஆ. ஹியூன் ஸாங் |
| 4. பெனிஸிலின் கண்டு பிடித்தவர் | அ. பிளமிங்<br>ஆ. ஜென்னர் |
| 5. தாஜ்மஹாலைக் கட்டியது | அ. நூர்ஜஹான்<br>ஆ. ஷாஜஹான் |
| 6. சக்கு எத்தனை இறக்கைகள்? | அ. இரண்டு<br>ஆ. நான்கு |
| 7. ஐ. நா. கட்டடம் உள்ள நாடு | அ. நியூயார்க் [கோ<br>ஆ. சான்பிரான்ஸிஸ் |
| 8. குலோத்துங்கன் மீது உலாப் பாடியவர் | அ. ஒட்டக்கூத்தர்<br>ஆ. கம்பர் |
| 9. தமிழில் பஞ்சம் என்று எழுத | அ. கருப்பு<br>ஆ. கறுப்பு |
| 10. வெளஜியால் விரல் துண்டாடப்பட்டவர் | அ. அப்ஸல்கான்<br>ஆ. ஷாயிஸ்தகான் |
| 11. கொன்றைவேந்தன் நீதி நூல் ஆசிரியர் | அ. ஔவையார் [டியர்<br>ஆ. அதிவீரராம பாண் |

# சரித்திரம் சொல்லும் தலைப்பாகைகள்

ரகமி


















குழந்தைகளான உங்களுக்கெல்லாம் சரித்திரப் பாடம் என்றால் சர்க்கரை மிட்டாய் சாப்பிடுவது போல என்று தெரியும். சரித்திரப் பாடப் புத்தகங்களில் சரித்திரகால வீரபுருஷர்களின் படங்களை யெல்லாம் பார்த்திருப்பீர்கள். அவர்களில் தலைப்பாகை அணிந்தவர்களின் படங்கள் எத்தனையோ இருக்குமே. இங்கு சரித்திரப் புகழ் பெற்ற பதினாறு பேர்களுடைய தலைப்பாகைகள் மட்டும் வரைந்து காட்டப்பட்டுள்ளன. இந்தத் தலைப்பாகைகளே இவர்கள் யார் என்பதைச் சொல்லும். அப்படிப் பிரசித்தமான பாகைகள் இவை. இந்தத் தலையணிகளுக்கு உரியவர்கள் யார் யார் என்பதைச் சொல்லுங்கள் பார்க்கலாம். கொஞ்சம் சிந்தித்தால் சிரமமே இல்லை. புரிந்துகொள்ள முடியாதவர்கள் புத்தகத்தைத் திருப்பிப் பாருங்கள்.

விடை: 1. ஹைதர் அலி 2. ராஜா ராம் மோகன் ராய் 3. பேகம் மும்தாஜ் 4. அவுரங்கசீப் 5. அக்பர் 6. பால கங்காதர திலகர் 7. திப்பு சுல்தான் 8. பாரதியார் 9. நாதர்ஷா 10. கிருஷ்ண தேவராயர் 11. சிவாஜி 12. நூர்ஜஹான் 13. ஹைதராபாத் நிஜாம் 14. ஷாஜஹான். 15. திருவாங்கூர் மகாராஜா 16. ஜஹாங்கீர்.

# அசலும் நகலும்

**—மாயாவி—**

கடிதத்தைப் படித்ததும் கந்தசாமி, ''தாயே! அங்காளம்மா! இதுவும் உன் சோதனையா?'' என்று வாய் விட்டுப் புலம்பியவராய், தலையில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்து விட்டார்.

தந்தையின் புலம்பல் கேட்டு வீட்டினுள்ளே வேலையாயிருந்த அவர் மகள் அங்கம்மாள் கூடத்துக்கு ஓடி வந்து, ''என்னப்பா? என்ன காயிதம் இது?'' என்று கவலையோடு கேட்டாள்.

''உன் அத்தான் வேலு எழுதியிருக்கிறானம்மா. இந்தா படிச்சுப் பாரு'' என்று கடிதத்தை மகளிடம் கொடுத்த கந்தசாமி, ''ஏன்தான் உன் பேருடைய அம்மன் என்னை இப்படிப் பலத்த சோதனை செய்யுறாளோ!'' என்று மீண்டும் புலம்பினார்.

தந்தை கொடுத்த கடிதத்தை வாய் விட்டே படித்தாள் அங்கம்மாள். அவளை மணக்க இருந்த வேலு அதில் எழுதியிருந்தான்:

''அன்புள்ள மாமா அவர்களுக்கு,

வேலு வணக்கத்துடன் எழுதிக் கொள்வது: இப்பவும், இங்கே நான் சுகம். அங்கே நீங்களும், அங்கம்மாளும் சுகமென்று நினைக்கிறேன். நிற்க.

என் கலியாண விஷயமாக நான் முன்பு கூறிய நிபந்தனையிலிருந்து சிறிது மாறுபட வேண்டியவனாக இருக்கிறேன். பரமசிவ மச்சான் ஜெயிலுக்குப் போனதிலிருந்து நீங்கள் பிழைப்புக்கே திண்டாடிக் கொண்டு இருப்பதாகக் கூறியதையொட்டி, 'பொன்னை வைக்கிற இடத்தில் பூவையாவது வைத்து, அங்கம்மாளை எனக்குக் கட்டிக் கொடுங்கள், போதும்' என்று சொன்னேன். ஆனால் இப்போது நீங்கள் அப்படிச் சொன்னது பொய்யென்றும் உண்மையில் நீங்கள் ஓரளவு வசதியோடுதான் இருக்கிறீர்கள் என்றும் தெரிய வந்திருப்பதால், குறைந்தது ஒரு பதினைந்து பவுனுக்காவது நகை போடாவிட்டால் அங்கம்மாளை நான் மணந்துகொள்ள இயலாது என்று தெரிவித்துக் கொள்ள வேண்டியவனும் இருக்கிறேன். இங்கே திருவாளர் செவந்திக்குமார முதலியார் அவர்கள் இரண்டாயிரம், மூவாயிரம் பெறுமானமுள்ள நகைகளுடன் தமது மகளை எனக்குக் கட்டித் தரக் காத்திருப்பது உங்களுக்குத் தெரியும். இருந்தாலும் உறவு முறை விட்டுப் போகக் கூடாதென்று உங்களுக்கு இந்தச் சலுகையைக் கொடுத்திருக்கிறேன். என் பிரியப்படி செய்வதாக உங்கள் கடிதம் இன்னும் ஒரு வாரத்துக்குள் வராவிட்டால், நான் செவந்திக் குமார முதலியாரைப் பரிசம் போடவரும்படி சொல்லிவிட வேண்டியிருக்கும் என்பதை இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

மற்றவை உங்கள் பதில் பார்த்து.

இப்படிக்கு
உங்கள் அன்புக்குரிய
**வேலுச்சாமி.**''

''ஐயைய்யோ! இப்போ என்னப்பா செய்யப் போறீங்க?'' என்று கடிதத்தைப் படித்து முடித்ததும் கலங்கினாள் அங்கம்மாள்.

''செய்யறது இருக்கட்டும் அம்மா, நாம இங்கே சோத்துக்கே தாளம்

போட்டுக்கிட்டு இருக்கிறபோது யாரு அவள்கிட்டே போயி இந்த மாதிரியெல்லாம் கெளப்பி விட்டிருக்கிறாங்க?''

''அந்த வீரவநல்லூர் செம்பவள அத்தையாகத்தான் இருக்கும் அப்பா. அவுங்க நாலு நாளைக்கு முன்னே வீராசாமி மாமா வீட்டுக்குத் துட்டிக்கு வந்திருந்தபோது, நம்ம வீட்டுக்கும் வந்திருந்தாங்க. அப்போ நடந்த ஒரு சங்கதிதான் இதுக்கெல்லாம் காரணம்.''

''என்னம்மா நடந்தது அப்போ?''

''போன வெள்ளிக்கிழமை யாரோ ஓர் ஆள் வந்து அங்காளம்மனுக்குப் பதினஞ்சு பதினாறு பவுனில் ஒரு தங்கச் சங்கிலி போட்டுட்டுப் போனாங்க இல்லே...?''

''ஆமாம்; புளியங்குடி ஆள் அவரு. மிளகுவத்தல் வியாபாரம் செய்யறவரு. போன வருஷம் அந்த வியாபாரத்தில் ரொம்ப நஷ்டம் ஆயிடுச்சாம். 'இந்த வருஷமாவது நல்ல லாபம் கிடைக்கட்டும்; ஒனக்குத் தங்கத்தில் சங்கிலி செய்து போடறேன்'னு இங்கே சரக்குப் பிடிக்க வந்திருந்தபோது, 'அங்காளம்மன் கண்கண்ட தெய்வம்; அவளை வேண்டிக் கிடுங்க'ன்னு நம்ம ஊர்க்காரர் யாரோ சொன்னபடி வேண்டிக்கிட்டாராம்.. இந்த வருஷம் கொள்ளை கொள்ளையா லாபம் வந்திச்சு; வேண்டிக்கிட்டபடி சங்கிலி செய்து வந்து அம்மனுக்குச் சாத்திட்டுப் போனாரு...''

''அவரு செஞ்சுகிட்டு வந்து அம்மனுக்குப் போட்ட சங்கிலி, எனக்கு வாங்கிட்டு வந்திருக்கிற கில்ட் சங்கிலி போலவே இருக்குதுன்னு அன்னைக்கு நீங்க சொல்லலியா?''

''ஆமாம்; சொன்னேன். நீ அதைப் பார்க்கணும்னு சொன்னே; பெரியவளான பொண்ணு வீட்டுக்கு வெளியே போகக் கூடாதென்னு, அம்மன் சங்கிலியை நீ பார்க்கிறதுக்காகக் கொண்டு வந்து கொடுத்திட்டுச் சாயங்காலம் திரும்பி வாங்கிட்டுப் போனேன்...''

''அம்மன் தங்கச் சங்கிலியையும், எனக்கு நீங்க வாங்கிக்கிட்டு வந்த கில்ட் சங்கிலியையும் நான் ஒண்ணு வச்சுப் பார்த்துக் கிட்டிருந்தபோதுதான் செம்பவள அத்தை இங்கே வந்தாங்க. 'இது ஏது ஒரே அச்சுக்கு ரெண்டு சங்கிலி?' அப்படீன்னு கேட்டாங்க. நான் விஷயத்தைச் சொல்லி, அசல் தங்கத்துக்கும் போலித் தங்கத்துக்கும் ஏதாச்சும் வித்தியாசம் தெரியுதா பாருங்க'ன்னு சிரிச்சேன். அப்போ அவுங்க, 'ஒங்க அப்பா கிட்டச் சொல்லி ரெண்டாம் மனுசங்களுக்குத் தெரியாமல் சங்கிலியை மாத்திடச் சொல்லு. தங்கச் சங்கிலி அம்மன் கழுத்தில் கிடந்தா என்ன, ஒன் கழுத்தில் கிடந்தா என்ன? நீயும் அங்கம்மா தான்; அவளும் அங்கம்மாதானே?'ன்னு சொல்லிச் சிரிச்சாங்க. அவங்கதான் அத்தான்கிட்ட போயி வத்தி வச்சிருப்பாங்க. அத்தைக்கு ஒருத்தருக்கு ஒருத்தர் மூட்டி விடறதுதானே வேலே?''

''அப்படியா சேதி? செம்பவளம் மூட்டி விட்டாலும் விட்டிருப்பா. ஆனா அதுக்காக இந்தப் புள்ளே இப்படிக் காகிதம் எழுதிடறதா?''

''வீட்டுக்கு வரப்போற பொண்ணு பொன்னோட வரணும் என்கிற ஆசை அவருக்கும் இருக்காதாப்பா?''

''ஆனா, பொன்னுக்கு நான் எங்கே போவேன் அங்கு? அதிலேயும் ஒண்ணா, ரெண்டா? பதினஞ்சு பவுனுக்கில்லே நகை போடணும்னு எழுதியிருக்கான்.''

''ஒங்களால போட முடியும்னு தானே அப்பா அப்படி எழுதியிருக்கிறாங்க அத்தான்?''

''போட முடியுமா? எப்படி அம்மா? அப்போ நீகூட நான் பொய் சொல்லிக் கிட்டிருக்கேன்னுதான் நினைக்கிறியா?''

''நீங்க பொய் பேசுறீங்கன்னு சொல்லலே. செய்ய வழி இருக்கும்போது செய்தா என்னன்னு கேக்கறேன்.''

''செய்ய வழியா? என்ன வழி அங்கு?''

''அந்த அத்தை சொன்ன கணக்கிலே செய்ய முடியாதா?''



"என்ன! அம்மன் நகையைத் திருடவா சொல்றே?"

"நீங்க திருடப் போறதில்லையே; சங்கிலியை மாத்தத்தானே போறீங்க?"

"சீ! என்ன அற்பப் புத்தி! எத்தினி பாவமான எண்ணம்! ஒங்க அண்ணன் தான் திருடி ஜெயிலில் இருக்கிறான்னு, நீ என்னையும் ஜெயிலுக்கு அனுப்பிடுவே போலிருக்கே!"

"அப்போ, அத்தானை நான் இழந்திட வேண்டியதுதானா அப்பா?" என்று கேட்டபோது அங்கம்மாளின் கண்களில் கண்ணீர் ததும்பியது.

"அப்படி விட்டிடுவேனா? நாளைப் பொழுது விடிய வீரவநல்லூருக்குப் புறப்பட்டுப் போறேன். ஒனக்காக வாங்கியிருக்கிற கில்ட் சங்கிலியையும் கொண்டிட்டுப் போறேன். 'நீ தங்க நகை போடணும்னு சொன்னியானா அம்மன் சங்கிலியைத் திருடித்தான் போடணும். அம்மன் நகையைத் திருடினால் அவள் என்னை அழிக்கிறதோட, அதைப் பூட்டிக்கிட்டு வர என் மகளையும், அதை எத்துக்கிட்ட ஒன்னையும் அழிச்சிடுவா'ன்னு வேலுவுக்கு எடுத்துச் சொல்லிச் சமாதானப்படுத்திடறேன். அவன் விவரம் தெரிஞ்ச பிள்ளை. விஷயத்தைச் சொன்னால் சரின்னு ஒத்துக்கிடுவான்."

"அவர் ஒத்துக்கிடுவார்ன்னு எனக்குத் தோணலே அப்பா."

"ஒத்துக்கிடலேன்னா அப்புறம் நாம செய்ய என்ன இருக்குது? அதுக்காக அம்மன் பொருளையா களவாடறது? அவ்வளவுதான் நாம கொடுத்து வச்சதுன்னு விட்டுட வேண்டியதுதான்."

"ஐயோ, அப்பா! அத்தான் இல்லேன்னு நானும் இல்லே அப்பா. அவங்க முறைப் பொண்ணான என்னை விட்டுட்டு இன்னொருத்தியைக் கட்டிக்கிட்டாங்கன்னு நீங்க ஒங்க மகளை உயிரோடு பார்க்க முடியாது!" என்று பெரிதாக அழுதாள் அங்கம்மாள்.

மகளின் கண்ணீரோ, கதறலோ கந்தசாமியின் மன உறுதியைக் கலைக்கவில்லை. அவள் என்ன சாதாரணக் கோரிக்கையையா வெளியிட்டிருந்தாள்? அதை நினைக்க நினைக்க அவருடைய உடல் உள்ளம் எல்லாம் ஒருங்கே நடுங்கின. 'அறியாப் பெண்! ஏதோ ஆசையில் உளறுகிறது' என்று அவர் அதை ஒதுக்கிவிட முயன்றார். இருந்தாலும் கூட, தன் மகளின் மனத்திலும் இத்தகைய திருட்டுப் புத்தி புகுந்து விட்டதை நினைத்தபோது அவருக்கு ஆற்றாமை வந்தது. 'தாயில்லாக் குழந்தை; அதை நாம் அதிகமாகக் கண்டிக்கக் கூடாது' என்று அவர் தம்மை அடக்கிக் கொண்டார். அதோடு எந்தத் தேவியின் நகையை அவள் அபகரிக்கச் சொன்னாளோ, அந்த அங்காளம்மன் துணை நின்று அந்தத் திருட்டுக்கு வித்திட்ட இக்கட்டிலிருந்து தம்மைக் காப்பாற்றுவாள் என்ற மன உறுதியும் அவருக்கு இருந்தது. ஆம்; கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக, எவ்வித பிரதிப் பயனையும் எதிர்பாராமல் அந்த அன்னைக்கு முக்காலமும் பூசை செய்து வருபவர் அல்லவா அவர்?

தந்தைக்கும் மகளுக்கும் நடந்த இந்த உரையாடலிலிருந்தே வாசகர்கள் கந்தசாமியின் கதையை ஓரளவு புரிந்து கொண்டிருப்பார்கள். கோவையாகச் சொல்வதென்றால் அவர் கதையின் சுருக்கம் இதுதான்: கந்தசாமி வடகரையில் ஓர் ஏழை நெசவாளி. தாரம் இழந்தவர். ஒரு மகனும், ஒரு மகளுமே அவருடைய சந்ததிகள். மகன்தான் மூத்தவன். பரமசிவம் என்று பெயர். அவன் தறுதலையாகத் தலையெடுத்துக் குலத் தொழிலான நெசவுத் தொழிலை மேற்கொண்டு இரண்டு ஆண்டுகளுக்கு முன் ஒரு திருட்டு வழக்கில் பிடிபட்டு, பதினெட்டு மாதம் கடுங்காவல் தண்டனை அனுபவித்துக் கொண்டிருந்தான். மகள் அங்கம்மாள் நல்ல அழகி; குணசாலி; பருவப் பெண்; திருமணத்துக்காகக் காத்திருப்பவள். கந்தசாமியின் சகோதரி ஒருத்தி, வடகரையிலிருந்து ஐம்பது மைல்களுக்கு அப்பாலிருந்த வீரவநல்லூர் என்ற ஊரில் வாழ்க்கைப்பட்டிருந்தாள். அவளும், அவள் கணவரும் சில வருஷங்களுக்கு முன்பே காலமாகி விட்டனர். ஆனால், அவர்களுடைய ஒரே மகன் வேலுச்சாமி, வீரவநல்லூரில் நாலு தறி வைத்துத் தொழில் செய்து ஓரளவு செயலாக இருந்தான். முறை மாப்பிள்ளையான அவன் தன் மாமன் மகள் அங்கம்மாளை மணந்து கொள்வதாக வாக்களித்திருந்தான். மாமனின் நிலையறிந்து, விசேஷமாக ஏதும் கோராமல், அங்கம்மாளை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருந்த அவன் மனத்தில் பொன்னாசையை மூட்டி விட்டாள் அவ்வூர்க்காரியான செம்பவளம் என்ற மூதாட்டி.

கந்தசாமி தெய்வபக்தி மிக்கவர் என்பதோடு மட்டுமல்ல; வடகரை நெசவாளிகளின் குலதெய்வமான அங்காளம்மனின் கோவில் பூசாரியாகவும் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக எவ்வித ஊதியமும் இன்றித் தொண்டு செய்து வந்தார். அங்காளம்மன் கோவில் பூசாரியாகப் பணியாற்றுகிறவர்கள் மிக மிக நேர்மையானவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் உள்ளத்திலோ, உடலிலோ எப்போதாவது ஏதாவது களங்கம் ஏற்பட்டால், அது எவ்வளவு இரகசியமானதாக இருந்தாலும் காட்டிக் கொடுத்து விடுவாள் அங்காளம்மாள். ஆம், ஆண்டுதோறும் சிவராத்திரியை யொட்டி அங்காளம்மனுக்குக் கோலாகலமாகத் திருவிழா நடக்கும். திருவிழாவின் கடைசி நாளான சிவராத்திரியன்று இரவு அம்மன் ஊரின் முக்கியமான வீதிகள் வழியே உலா வருவாள். உலா முடிந்து சப்பரம் கோவில் திரும்பும் போது கிட்டத்தட்ட காலை நான்கு மணி ஆகிவிடும். கோவில் முகப்பில் ஒரு பெரிய குழி வெட்டி, அதில் காய்ந்த விறகுகளை அடுக்கி, உலா புறப்படு முன்பே அதைப் பற்ற விட்டு விட்டுப் போய் விடுவார்கள். உலா முடிந்து திரும்பியதும், நான்கு அடிச் சதுக்கமும் அதே அளவு ஆழமும் உள்ள அந்தக் குழியில் தீ கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருக்கும். கோவில் பூசாரியாக விளங்குபவர் இந்த விழா ஒன்பது நாளும், தலையில் பட்டும், கையில் காப்பும் கட்டிக் கொண்டு விரதம் இருப்பார். அம்மனின் வீதி உலா கோவிலுக்குத் திரும்பியதும் அவர், கையில் அன்னத் தட்டுடன் அந்தத் தீக்குழியில் நடந்து வந்து நடுவில் நின்றுகொண்டு மூன்று கவளம் சோற்றை உருண்டையாக உருட்டி அம்மனுக்குக் காட்டி, அந்த அக்னியில் போட்டு விட்டுத் திரும்பி வருவார். பல தொலை தூரத்துக்கு மக்கள் விலகி நிற்க வேண்டிய அளவுக்கு வெப்பத்தை உமிழும் அந்தத் தீக்குழியில் அவர் இரண்டு-மூன்று நிமிஷ நேரம் நின்றுவிட்டுப் பூப் படுக்கையின் மீது நடந்து விட்டு வருவதுபோல் திரும்பி வருவார். கடவுள் இல்லை என்று கட்சி கட்டித் திரியும் இந்தக் காலத்தில் கூட இறைவனின் இருப்பை உணர்த்தும் இந்த நிகழ்ச்சி நடந்து கொண்டு தான் இருக்கிறது.

இவ்வாறு இருபத்தைந்து முறை தமது களங்கமற்ற தன்மைக்குச் சான்று தந்த கந்தசாமியை, அவர் பூசித்து வந்த தெய்வத்திடமே கன்னக்கோல் சாற்றும்படி போதித்தால், போதித்தது அந்தத் தெய்வமாகவே இருந்தாலும், இணங்கி விடுவாரா?

சொன்னபடியே, மறுநாள் காலையில் வீரவநல்லூருக்குப் புறப்பட்டுவிட்டார் கந்தசாமி. பூஜை வேலைகளை வேறொருவரைக் கவனித்துக் கொள்ளச் சொல்லி விட்டு மகளுக்குப் பரிசம் போடவென்று வாங்கியிருந்த கில்ட் சங்கிலியை எடுத்துக்கொண்டு கிளம்பினார். வடகரையிலிருந்து ஒன்பது மைல் தூரத்திலுள்ள தென்காசிக்கு வந்து ரயில் பிடித்து வீரவநல்லூருக்குச் செல்ல வேண்டும். வீரவநல்லூருக்குப் போக நேரத்தில் மூன்று ரயில்கள் உண்டு. ஒன்று காலையில் போகிறது; மற்றொன்று பிற்பகல் இரண்டு மணிக்கும், மூன்றாவது ரயில் மாலை ஐந்தரை மணிக்கும் தென்காசியிலிருந்து புறப்படுகின்றன. கந்தசாமி நடுப் பகல் ரயிலைப் பிடிக்கவே வந்தார். ஆனால் இன்ஜினில் ஏதோ தகராறு ஏற்பட்டு விடவே தென்காசியிலிருந்து கிளம்பிய அந்த ரயில் இரண்டு ஸ்டேஷன்களுக்கு அப்பால் இருந்த மேட்டூர் என்ற ஸ்டேஷனில் நின்று விட்டது. அதில் வந்த பிரயாணிகள் எல்லோரும் மாலை ஐந்தரை மணிக்குத் தென்காசியிலிருந்து புறப்படும் ரயிலில் பிரயாணத்தைத் தொடர வேண்டியதாயிற்று. இந்த ரயில் வீரவநல்லூரை வந்தடைந்தபோது இரவு ஏழரை மணி ஆகிவிட்டது. ஸ்டேஷனிலிருந்து ஒன்றரை மைல் தூரத்திலிருந்த மருமகனின் வீட்டை நோக்கி நடந்தார் கந்தசாமி.

அப்போது முன் நிலவுக் காலமாதலால் தெரு விளக்குகள் எரியவில்லை. ஆனால் அன்று பார்த்து வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்ததால் நிலவு வெளிச்சமுமின்றி வழியெல்லாம் இருண்டு கிடந்தது. தவிர, அவர் சென்று கொண்டிருந்த ரஸ்தா அப்போது ஜன நடமாட்டமின்றி வெறிச்சோடி கிடந்தது. வழியில் சிறிய கால்வாய்ப் பாலம். அந்தப் பாலத்தின் ஓரத்தில் யாரோ ஓர் ஆள் உட்கார்ந்திருந்ததைக் கண்டார் கந்தசாமி. அவர் பாலத்தை நெருங்கிக்கொண்டிருந்தபோது ஓரத்தில் அமர்ந்திருந்த ஆள் பளிச்சென்று அவர் முகத்தில் டார்ச் விளக்கை அடித்தான். "ஐயோவ்! யார் இது? மனுசன் இருட்டிலே கண்ணுந் தெரியாம வந்துக்கிட்



# எழிலோவியமான பிரிண்டுகள்

பிரிண்டுகளிலே நாகரீகத்தின் உச்சம். கண்கொள்ளா வியப்பு, பூரிப்பு, கற்பனைகடந்த வனப்பு: அவைதாம் எங்கள் வாயில்கள், சின்ட்ஸுகள், பாப்லின்கள், மற்றும் பிறவகைகள். நவீன பாணிகளும், பழம்பெரும் பாணிகளுமாக, பல்வேறு வண்ண வகைகளிலே கொள்ளை கொள்ளும் உங்களை. சல்வார் கமீஸ் உடுப்பாக,நல்லாடையாக, சேலையாக, ஒளிதவழும் விளையாட்டுடையாக, உங்களை நாகரீக எழிலோவியமாக்கக் காத்திருப்பவை. உங்கள் உள்ளம் விரும்பும் வனப்போடு உருப்பெற்ற நெசவு.

**சாயாஜி மில்ஸ் நம்பர் 1, பரோடா**

அஹமதாபாத்,சாயாஜி மில்ஸ் லிமிடெட்டின் ஒரு பிரிவு ● சப்பலட்சுமி மில்ஸ் லிட்.,கேம்பே.

BI-BP-15

டிருக்கிறேன்; இப்படி முகத்திலே போயி காத்த விளக்கை அடிக்கிறீங்களே!'' என்று அவர் கூறிக் கொண்டிருக்கையிலேயே அந்த ஆள் பாய்ந்து வந்து அவர் கையில் பிடித்திருந்த சாக்குப் பையை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டு ஓரே ஓட்டமாக ஓடிவிட்டான்.

''திருடன்! திருடன்! பையைப் பிடுங்கிக்கிட்டு ஓடறான். பிடியுங்க'' என்று கத்தியவாறு அவனைப் பின்தொடர்ந்து ஓடினார் கந்தசாமி. அந்தச் சமயத்தில், ஸ்டேஷனிலிருந்து நாலைந்து பேர் கையில் விளக்குடன் திருடனுக்கு எதிரே வரவே, அவன் சாலை மரங்களுக்கிடையே புகுந்து குறுக்காக ஓடி எங்கோ மறைந்துவிட்டான். கந்தசாமி திருடன் திரும்பி ஓடிய இடத்துக்கு வந்தபோது, அவர் காலில் ஏதோ இடறியது. கையில் எடுத்துப் பார்த்தார். அது திருடன் அவரிடமிருந்து பறித்துச் சென்ற பைதான். இதற்குள் விளக்குடன் வந்துகொண்டிருந்தவர்களும் அவர் நின்ற இடத்துக்கு வந்து விட்டனர். அவர்கள் கொண்டு வந்திருந்த விளக்கின் வெளிச்சத்தில் பையைப் பரிசோதித்துப் பார்த்தார். தாம் ரோஸ் நிற வர்ணக் காகிதத்தில் சுருட்டி அதனுள் இட்டிருந்த இமிடேஷன் சங்கிலி, ஒரு பழுக்கிழிந்த மணிபர்ஸில் வைத்திருந்த இரண்டேகால் ரூபாய், ஒரு வேஷ்டி, ஒரு துண்டு ஆகிய யாவும் அப்படியே இருந்தன. எதிரே ஆட்கள் வந்துகொண்டிருந்ததைக் கண்டு அரண்டு திருடன் பையைப் போட்டு விட்டு ஓடிவிட்டான் என்று அவர் புரிந்துகொண்டார். 'எல்லாம் அந்த அங்காளம்மன் அருள். இல்லாட்டி, இந்தக் கில்ட் சங்கிலிகூட இல்லாம இல்லே வேறு கிட்டப் போயி நிக்க வேண்டி இருந்திருக்கும்?' என்று எண்ணிக்கொண்டு அந்த ஆட்களுடன் நடந்தார் அவர்.

அங்காளம்மனின் அருள் இதில்மட்டும்தான் கிட்டியதென்பதில்லை. அவ்வூருக்கு வந்த முக்கியமான விஷயமும் அவருக்குச் சாதகமாக முடிய அந்த அம்மன் அருள்பாலித்தாள். அது என்னவோ, அவர் தம் உண்மையான நிலை, அம்மனின் தங்கச் சங்கிலியைத் திருடி மகளுக்குப் பரிசம் போட்டால் ஏற்படும் விபரீதங்கள் ஆகியவற்றை விளக்கியபோது வேறு அவர் கொண்டு வந்திருந்த கில்ட் சங்கிலியையே பரிசமாக ஏற்றுக் கொண்டு விட்டான். மறுநாள் காலையிலேயே திருமணத்துக்கு நாளும் நிச்சயித்துவிட்டு அன்றிரவு வடகரை திரும்பினார் கந்தசாமி.

மகளிடம் இந்தச் சந்தோஷச் செய்தியைத் தெரிவிக்கும் ஆர்வத்துடன் வீட்டில் நுழைந்த அவருக்கு அவள் ஓர் அதிர்ச்சி தரும் செய்தியுடன் காத்திருந்தாள்.

அவர் வீரவநல்லூர் சென்ற அன்று வெயிலுக்கு முன் தென்காசி ஸ்டேஷனை அடைந்துவிட வேண்டுமென்று அதிகாலை ஐந்து மணிக்கே ஊரிலிருந்து புறப்பட்டு விட்டார். அவர் போய்ச் சிறிது நேரம் ஆன பின் வாசல் தெளித்துக் கோலமிட வெளியே வந்த அங்கம்மாள் தெருக் கோடியில் அங்காளம்மன் கோயில் முன் கூட்டம் கூடி நிற்பதைக் கண்ணுற்று, அண்டை வீட்டு அம்மாளிடம் என்ன விஷயமென்று விசாரித்தாள். ''ராவு எந்தக் களவாணிப் பயலோ கோயில் பூட்டை ஒடைச்சு உள்ளே போயி, அம்மன் நகைகள் வைச்சிருந்த பெட்டியை ஒடைச்சு, அதிலிருந்து வாசுதேவ நல்லூர்க்காரர் அம்மனுக்குச் செய்து போட்ட தங்கச் சங்கிலியை மட்டும் திருடிக்கிட்டுப் போயிட்டானும்'' என்று அறிவித்தாள் அந்த அம்மாள்.

இந்தச் செய்தியைத் தந்தையிடம் கூறிய அங்கம்மாள், ''அப்பா! அம்மன் சங்கிலியைத் தொட மாட்டேன்னு சொன்னீங்களே, இப்போ அது அம்மனுக்கும் இல்லாம, எனக்கும் இல்லாம ஆயிடிச்ச பார்த்தீங்களா!'' என்றாள்.

''அம்மன் சொத்தைத் திருடி எந்தப் பயலும் வாழ்ந்ததில்லே அங்கு. எவன் இதைத் திருடினானோ, அவன் எங்கே ஒளிஞ்சுக்கிட்டிருந்தாலும் அங்காளம்மன் அழிக்காம விடமாட்டா'' என்று சொன்னார் கந்தசாமி.

பிறகு அவர், வேறு கில்ட் சங்கிலியையே பரிசமாகப் பெற்றுக்கொண்டு அவளை மணக்க இணங்கி விட்டதையும், கலியாணத்துக்கு நாள்கூடப் பார்த்து விட்டதையும் மகளிடம் கூறியபோது, அங்கம்மாளுக்கு ஒரு பக்கம் மகிழ்ச்சி ஏற்பட்டதென்றாலும், உள்ளத்தின் அந்தரங்கத்தில், 'ஒருவேளை அப்பாவே இந்தச் சங்கிலியைத் திருடிக்கொண்டு போய்க் கொடுத்துக் காரியத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு வந்திருப்பாரோ?' என்ற சந்தேகமும் படர்ந்தது. அந்தச் சந்தேகம், திருமணத்தன்று தன் கழுத்தில் பூட்டப்பட்ட சங்கிலியை அவள் இரகசியமாகப் பரிசோதித்துப் பார்த்தபோது உறுதியாயிற்று. ஆம்! அன்றொரு நாள் அவள் அம்மனின் தங்கச் சங்கிலியையும், தன் கில்ட் சங்கிலியையும், அங்கம் அங்கமாக ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டு வந்தபோது தங்கச் சங்கிலியின் முகப்பில் செதுக்கப்பட்டிருந்த அன்னத்தின் சித்திரத்தில் ஒரு சிறு மாறுபாட்டைக் கண்டுபிடித்திருந்தாள். அந்த அன்னத்தின் மூக்கில் மூன்று கோடுகள் இருந்தன. கில்ட் சங்கிலியிலிருந்த அன்னத்தின் மூக்கிலோ இரண்டே கோடுகள்தான் இருந்தன. இப்போது தனக்குப் பூட்டப்பட்டிருந்த சங்கிலியிலுள்ள அன்னத்தில் மூன்று கோடுகள் இருந்ததைக் கண்டதும், தந்தை தன்னிடம் அம்மன் சங்கிலியைத் தொடமாட்டேன் என்று மறுத்த போதிலும் அதையேதான் திருடி வந்து பரிசம் போட்டிருக்கிறார் என்பது அவளுக்கு உறுதியாகிவிட்டது. 'எப்படியோ தங்கச் சங்கிலி நமக்குக் கிடைத்துவிட்டது. அப்பா இதை நம்மிடமே மறைத்து விட்டதால், நாமும் இது தெரிந்ததாகக் காட்டிக் கொள்ள வேண்டாம்' என்று இருந்து விட்டாள். ஆனால் அவள் அதை வெளியே சொல்லாவிட்டால் என்ன? வேறொரு விதத்தில் திருட்டு வெளிப்பட்டுவிட்டது.

வீரவநல்லூரில் மாப்பிள்ளை வீட்டில் நடந்த அங்கம்மாளின் திருமணத்துக்கு வடகரையிலிருந்து கந்தசாமியின் உறவினர் சிலர் வந்திருந்தனர். திருமண நிகழ்ச்சியின்போது அங்கம்மாளுக்கு அணிவிக்கப்பட்ட பரிசச் சங்கிலியைப் பார்த்ததும் அவர்கள் திடுக்கிட்டனர். 'அது அம்மனின் சங்கிலியே; கந்தசாமி





நாதோ ரோதனை!





தான் அதைத் திருடி வந்து பரிசம் போட்டிருக்கிறார். தம்மீது சந்தேகம் ஏற்படாதிருக்க, கோவில் சாவியை இன்னொருவரிடம் கொடுத்துவிட்டு, பூட்டை உடைத்து அம்மன் சங்கிலியை எடுத்துக் கொண்டு மறுநாள் எவரும் எழுந்திருக்கு முன்பே ஊரை விட்டுக் கிளம்பி இங்கே வந்து விட்டார்!' என்று அவர்கள் சந்தேகித்துவிட்டனர். திருமண நிகழ்ச்சியெல்லாம் முடிந்து மறுநாள் காலையில் அனைவரும் ஊருக்குக் கிளம்பு முன் ஒருவர் மெதுவாக இந்த விஷயத்தைக் கிளப்பினர்.

''ஐயைய்யோ! இது தங்கச் சங்கிலி இல்லீங்க; கில்ட் சங்கிலி. மருமகன் வேணுவை வேணும்னு கேட்டுப் பாருங்களேன். களவு போன அம்மன் சங்கிலி அச்சாக்கு இருக்கிறதினாலே உங்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டிருக்குது'' என்றார் கந்தசாமி.

''ஆமாங்க, மாமா கில்ட் சங்கிலின்னு சொல்லித்தான் பரிசம் போட்டாங்க'' என்று ஒத்துப் பாடினான் வேணு.

''எதுக்கும் மாத்து உரைச்சுப் பார்த்திட்டா நல்லதுங்க. இல்லாட்டி ஊர்ச் சனங்க வீணா ஒங்க மேலே சந்தேகப்படுவாங்க'' என்றார் இந்த விஷயத்தைக் கிளப்பியவர்.

''ஓ! பார்த்திடுவோமே. வேணு! தங்க வேலை செய்யற ஆசாரி ஒருத்தரைக் கூட்டிக்கிட்டு வாங்க'' என்று கூறினார் கந்தசாமி.

ஆசாரி வந்தார்; மாற்று உரைத்துப் பார்த்தார். ''சுத்தமான தங்கந்தானுங்க!'' என்றார்.

கந்தசாமி திடுக்கிட்டார். மற்றொரு தங்க நகையை வாங்கி அதையும் அதே கல்லில் மாற்று உரைத்துப் பார்த்தார். தாம் பரிசம் போட்டது தங்கச் சங்கிலிதான் என்று அவருக்கும் நிச்சயமாயிற்று. எப்படிக் கில்ட் சங்கிலி தங்கச் சங்கிலியாக மாறியது? ஒருவேளை தம் மகனே இவ்வேலையைச் செய்திருப்பானோ? ராத்திரி நேரத்தில் வீட்டின் பின்கட்டுக்குப் போவதென்றால் கூட அப்பாவைத் துணைக்கு அழைக்கும் அவனாவது நடு இரவில் தெருக் கோடியில் உள்ள கோவிலுக்குப் போய் நகையைத் திருடுவதாவது! அது சாத்தியமே இல்லை. தவிர, அந்தப் பெரிய பூட்டையும், கோவிலுக்குள்ளேயிருந்த நகைப் பெட்டியோடு பொருத்தப்பட்டிருக்கும் விசைப் பூட்டையும் உடைத்துத் திறக்கும் சாமர்த்தியம் தம் மகனுக்கு ஏது?

இந்நிலையில் கந்தசாமியால் இந்த மர்மமான மாற்றத்துக்கு ஒரே காரணம்தான் காண முடிந்தது. என் மகனின் மனத்தில் அம்மன் சங்கிலியைத் திருடவேண்டும் என்ற கெட்ட எண்ணம் பிறந்ததே; அதற்காக அந்த அம்மனே இப்படி ஒரு விளையாட்டு விளையாடி எங்களைச் சங்கடத்துக்கு உள்ளாக்கியிருக்கிறாள்!

''சரிங்க; இந்த விவகாரத்தை ஏன் அசலூரில் பேசிக்கிடணும்? ஊருக்கு வாங்க, பேசிக்கிடலாம்'' என்று இறுதியாகக் கூறினார் இந்தப் பிரச்னையைக் கிளப்பியவர். ஊருக்கு வந்ததும் விஷயம் தேசவாளர் சமூகப் பஞ்சாயத்தின் முன் கொண்டு வரப்பட்டது.

பஞ்சாயத்தார் முன் கந்தசாமி ஒரே பதில்தான் கூறினார்: ''நான் அம்மன் சங்கிலியைத் திருடலே. நான் திருடியிருந்தால் இன்னும் பத்து நாட்களில் அம்மன் திருவிழா வருது; தீ மிதிச்சு அமிர்ப்பாகம் கொடுக்கப் போறேன்; தேவி என்னை அந்தத் தீயாலேயே பொசுக்கிடட்டும்!''

''இது ஆபத்தான பரீட்சை ஐயா. வேண்டாம். உண்மையை ஒத்துக்கிடுங்க'' என்று பஞ்சாயத்தார் கந்தசாமியிடம் பலவாறு வேண்டிக் கொண்டனர்.

ஆனால் அவர் தாம் சொன்னதையே மீண்டும் மீண்டும் சொன்னார்.

''சரி, வீணா உயிரைப் பலி கொடுக்கப் போறீங்க'' என்று பஞ்சாயத்தார் இறுதியாகக் கூறி, இதன் முடிவைத் தெய்வத்திடமே விட்டுவிட்டனர்.

திருவிழா வந்தது. தீமிதி அமிர்ப்பாகம் நடந்தது. வழக்கம் போல் பூப்பாவாடை மீது நடந்து விட்டு வருவது போல் அமிர்ப்பாகம் கொடுத்துத் திரும்பிய கந்தசாமியைக் கண்டபோது அந்தச் சமூகத்து மக்கள், ''மனுசன் இருபத்தஞ்சு வருஷமா அம்மனுக்குத் தொண்டு செய்திருக்கிறார் இல்லே; அதுக்காக ஆத்தா அங்கம்மா கூட அவரை மன்னிச்சிட்டா!'' என்றுதான் கூறினார்களேயன்றி, அவர் அந்தத் திருட்டைச் செய்யவில்லை என்று ஒப்புக் கொள்ளவில்லை.

ஊரையே வியப்பிலும், குழப்பத்திலும் ஆழ்த்திய இந்த மர்மம் அதிக நாள் மர்மமாகவே இருந்துவிடவில்லை. திருவிழா முடிந்த மறுநாள் அவ்வூர் நாட்டாண்மைக்கு மதுரையிலிருந்து வந்த ஒரு கடிதம் இந்த மர்மத்தைத் துலக்கியது. அந்தக் கடிதம், திருடித் தண்டனை அடைந்த கந்தசாமியின் மகன் பரமசிவத்திடமிருந்து வந்திருந்தது.

''ஐயா, வணக்கம்.

என் தண்டனைக் காலம் முடிந்து ஒரு மாதத்துக்கு முன் ஒரு நாள் ஊருக்கு வந்தேன். பகலில் தெரு வழியே வர வெட்கி, இருட்டிய பிறகு மெதுவாக வீட்டுக்குள் நுழைந்தேன். முன்னறைக்கு வந்ததும், என் தங்கை அங்கம்மாளுக்கும், அப்பாவுக்கும் இடையே எதற்காகவோ விவாதம் நடப்பதைக் கண்டு அங்கேயே மறைவாக நின்று அதைக் கேட்டேன். மாப்பிள்ளை வேணு, தங்க நகை பரிசம் போட வேண்டுமென்று கேட்டிருப்பதால், ஒரே அச்சாக இருக்கும் தனக்கென்று வாங்கியுள்ள கில்ட் சங்கிலியை அம்மனுக்குப் பூட்டிவிட்டு அம்மனின் தங்கச் சங்கிலியை எடுத்து வந்து பரிசம் போட்டு விடுமாறு அங்கம்மாள் சொன்னாள். அப்பா அதை மறுத்து விட்டார். இந்தக் கில்ட் நகையோடு போய் வேணுவிடம் விஷயத்தைச் சொல்கிறேன்; அவன் சம்மதித்து உன்னை மணந்து கொண்டால், மணந்து கொள்ளட்டும்; இல்லா விட்டால் போகட்டும் என்று முடிவாகச் சொல்லிவிட்டார்.

இது வரையில் என் சுகம், என் சௌகரியத்துக்காகவே திருடி வந்த நான், இப்போது குடும்ப நலனுக்காக, என் தங்கைக்கு வாழ்வளிப்பதற்காகத் திருடத் துணிந்தேன். ஆம் ஐயா! என் தங்கை வேணு மீது எத்தனை ஆசை வைத்திருந்தாள் என்பதும், அவனை அடைய முடியாமல் போய் விட்டால் அவள் நிச்சயம் உயிர் துறந்து விடுவாள் என்பதும் எனக்குத் தெரியும். அம்மனின் தங்கச் சங்கிலியை, அன்றிரவே கோவில் பூட்டை உடைத்துத் திருடினேன். இரவோடு இரவாகத் தென்காசிக்கு நடந்து அதிகாலை ரயிலைப் பிடித்துவீரவநல்லூருக்குச்சென்றேன். என் தந்தை பிற்பகல் ரயிலில்தான் வருவார் என்று எனக்குத் தெரியும். முகமூடி அணிந்து அவரை வழிப்பறி செய்து, கில்ட் நகைக்குப் பதிலாகத் தங்க நகையை மாற்றி விடுவது; வேணு அதைக் கில்ட் நகை என்று நம்பி அதையே வாங்கிக் கொண்டு அங்கம்மாளை மணந்துகொள்ள இசைகிறானா என்று பார்ப்பது; இசையாவிட்டால், இரவு அவனைத் தனியே சந்தித்து அது தங்க நகை என்ற உண்மையை வெளியிடுவது; அப்பாவுக்குத் தெரிந்தால் அதைத் திருப்பிக் கொண்டு போய்க் கோவிலில் வைத்து விடுவார்; ஆதலால்தான் நான் இவ்வளவும் செய்ய நேரிட்டது என்று விளக்கி அவனை அதை ஏற்றுக் கொள்ளச் செய்வது எனத் திட்டமிட்டிருந்தேன். என் வழிப்பறிக்கும், நகை மாற்றத்துக்கும், அப்பா இரவு நேரத்தில் வீரவநல்லூர் வந்தது வசதியாகப் போயிற்று. அவர் எந்தக் காகிதத்தில் கில்ட் நகையைச் சுருட்டி எடுத்து வந்தாரோ, அதே காகிதத்தில் தங்க நகையைச் சுருட்டி வைத்து, பையைக் கீழே போட்டு விட்டுப் போய் விட்டேன். அதோடு, வேணு அதைக் கில்ட் நகையாகவே ஏற்றுக் கொண்டு கலியாணத்துக்கு இசைந்து விட்டது என் அடுத்த வேலைக்குத் தேவையில்லாமல் ஆக்கி விட்டது. 'சரி! இந்தத் தடவை ஊருக்கு வந்ததற்கு ஓர் உபயோகமான திருட்டைச் செய்தோம்' என்ற மன நிறைவுடன் என் தொழில் கேந்திரமான மதுரைக்குத் திரும்பி வந்து, மீண்டும் தொழிலில் ஈடுபட்டேன். ஆனால் நேற்று ஒரு திடுக்கிடும் செய்தியை நம் ஊரிலிருந்து வந்த எங்கள் கோஷ்டி ஆள் ஒருவன் மூலம் அறிந்தேன். நான் சிறிதும் எதிர்பார்த்திராத வகையில் அது தங்க நகை என்பது வெளியாகி, என் தந்தை மீது அக்குற்றம் சார்ந்து, தாம் நிரபராதி என்பதை நிரூபிக்க அவர் தீ மிதிக்கப் போவதாகக் கேள்விப்பட்டேன். இதைக் கேள்விப்பட்டது முதல் என் உடல் முழுதும் தீயில் வெந்து கொண்டிருப்பது போன்ற காந்தலோடு தவிக்கிறேன். இதை நெடு நேரம் என்னால் தாங்கிக் கொண்டிருக்க முடியாது. ஆதலால், அப்பா தீ மிதித்துத் தமது குற்றமற்ற தன்மையை நிரூபிக்கப் போகும் அதே தருணத்தில் குற்றவாளியாகிய நான் என் உடலில் மண்ணெண்ணெயை ஊற்றித் தீப்பற்ற வைத்துக் கொள்ளப் போகிறேன். அதற்கிடையே இந்தத் திருட்டின் மர்மத்தை நம் ஊரார் அறிந்து கொள்வதற்காக இந்தக் கடிதத்தைத் தங்களுக்கு எழுதி அனுப்பியிருக்கிறேன்.

இப்படிக்கு,

க. பரமசிவம்''

# ஏதோ ஒரு



தேமதி தவழ் வான வெளியினில் — என்
சிந்தை கலந்து மயங்கியதும்
சாதி மல்லிகை முகையவிழ்த்தே — ஒரு
சாகஸ மாகி மணந்ததுவும்
கோதி முடித்த குழற்காட்டில் — ஒரு
குமரி முகமதி நகைத்ததுவும்
ஏதோ ஒரு ஞாபகமாகி — என்
இதயம் நிறைய வியாபகமாகிப்
பாதி முறிந்த முள்ளெனவே — கண்
பார்வை முறிந்து சொல்லாகி
வீதி நிறைந்த பொருளெல்லாம் — பல
வெளி வராத கவிதைகளாய்
ஆதி நினைவின் சாயல்களாய் — சொல்
அடுத்த நினைவின் மாயைகளாய்
ஏதோ ஒரு ஞாபகமாகி — என்
இதயம் நிறைந்த வியாபகமாகிப்
பூதம் கண்ட சிறுபயல்போல் — புவி
பொருந்தும் அதிசயம் அவையெல்லாம்
— நான்
பாதி கண்டு மருண்டதல்லால் — இன்னும் ஒரு
பாடல் கண்டு முடிக்கவில்லை.

சித்திரை நிலவொளிச் செறிப்பினையும்
தென்றல் குலவிடும் நயத்தினையும்
முத்திரை புலவிடும் நடமகள் — இள
மோகவெறி நிகழ் கூத்தினையும்
சித்திர மாகி நிறைந்த — நம்
தென்கடற் குமரி வனப்பினையும்
சத்திர வாசலில் தடுமாறும் — ஒரு
தரித்திர நாயகக் குருடனையும்
அத்தி மரக்கிளை மேலிருந்தே — குரல்
அகவி மகிழும் குயிலினையும்
பொத்தல் மரக்குகை ஆந்தையையும் — இப்
பூமி நிறைய நிகழ்ந்திடும்
சத்திய மவற்றின் பிரதிநிதிபோல் — பெருந்
தாடி யசையும் ஒருசாமியையும்
எத்தனையோ பல மக்களையும் — நான்
என் கண்களிரண்டும் துணைக்கொண்டு
பத்திரமாகக் கண்டதல்லால் இன்னும்
- நான் ஒரு
பாடல் கண்டு முடிக்கவில்லை.

சோதி மலரும் அடிவானம் — அது
சொர்ணத் தீவின் படியோரம்
மாதர் சிரிக்கும் புன்சிரிப்பு — அது
மலர்மகள் வாழும் குடியிருப்பு
காதல் பிறக்கும் இளநெஞ்சம் — அது
காவியம் நடக்கும் மலர்மஞ்சம்
கீத மிசைக்கும்பல பாடல் — புவி
கேட்டு நடக்கும் அறிவுரைகள்
வீதியில் கிடக்கும் யாசகர்கள் — வாய்
வீரம் பேசிடும் பேச்சாளர்
சோதனை செய்யும் தெய்வங்கள் — சிறு
சோற்றுக் கலையும் பையன்கள்

# ஞாபகம்

மணிவண்ணன்



மீத மிருக்கும் துன்பங்கள் — இந்த
 மேதினி பழகிய இன்பங்கள்
சாதல் பிறப்பு தரித்திரம் செல்வம் — உயர்
 சாத்திரம் மதம் எல்லாம்

ஏதோ ஒரு ஞாபகமாகி — என்
 இதயம் நிறைந்த வியாபகமாகி — நான்
பாதி கண்டு மருண்டதல்லால்—இன்னும் ஒரு
 பாடல் கண்டு முடிக்கவில்லை.

மோதியலையும் முகிற்காட்டில்
 மூண்டு சரிந்த புன்சிரிப்பாய்ச்
சோதி மலரும் பிறையிறையும்
 சொலித்து மினுக்கும் மீன்கணமும்

தாதுகு செண்பக மணமாடும்
 தண்கால் இளநடைத் தென்றலும்
வீதி பயிலும் நள்ளிரவில்
 வெளிவாசல் கதவடைத்துச்

சாதி மல்லிகை கமகமக்கச்
 சவ்வாது கஸ்தூரி மணமணக்கக்
காதல் பயிற்றும் இளம் பெண்ணும்
 கற்பனை குயிற்றும் கவிப்பாட்டும்

வேதப் பொருள்தரும் வித்தகமும்
 வீரர் போர்ப்படை மிகுதிறனும்
நாதக் கனிபிழிந்து நமக்களிக்கும்
 நவரச மாகும் யாழொலியும்

பாதச் சரம்குலுங்கப் பதம்பிடிக்கும்
 பரதமகள் நாகரிகப் பார்வைகளும்
மீதம் புவியுள்ள மேல்கீழும்
 வேறு பலவிதமாம் விந்தைகளும்

ஏதோ ஒரு ஞாபகமாகி — என்
 இதயம் நிறைந்த வியாபகமாகி — நான்
பாதி கண்டு மருண்டதல்லால் — இன்னும் ஒரு
 பாடல் கண்டு முடிக்கவில்லை.

வாகாகத் தரையோடும் வாகனங்கள்
 வழிதேயக் கால்தேய நடப்பவர்கள்
ஆகாய விமானங்க ளவையன்றி
 அதிவிரைவா யோடோடிப்

போகாத தூரமெல்லாம் போகின்ற
 பூதலத்துச் சாதனைகள் பலப்பலவும்
சாகாமல் பிழைக்கின்ற மருத்துவமும்
 சரித்திரத்தை நிறுத்திவைக்கும்பலவியப்பும்

ஆகாத காரியங்கள் ஆவதுவும்
 அரசியலும் அறிவியலும் பொருளியலும்
வேகாத வெய்யிலிலே கமைநிறைய
 மேல்கொண்டு கைவண்டி இழுப்பதுவும்

பாகாய் உருகிப் பண்பாடு பேசுகின்ற
 பலபெரியோர் சொல்லளவுத் தத்துவமும்
ஓகோ பெரிதென்று வியக்கின்ற
 உலகத்தார் சாதனைகள் பற்பலவும்

மாகாதல் மண்ணின்மேல் நிகழ்கின்ற
 மதிநுட்ப அதிநுட்பச் செயல்களெல்லாம்
ஏதோ ஒரு ஞாபகமாகி — என்
 இதயம் நிறைய வியாபகமாகி — நான்
பாதிகண்டு மருண்டதல்லால் — இன்னும் ஒரு
 பாடல் கண்டு முடிக்கவில்லை.

**அயொடெக்ஸ்***
இதமளிக்கிறது

- சுளுக்குகள்
- பிடிப்புகள்
- வீக்கங்கள்
- சிராய்ப்புகள்
- தசை வலிகள்

பட்ட உடன்
வலி பறக்க
**'அயொடெக்ஸ்'**
தேயுங்கள்




*ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க்

SK&F

# தாத்தாவும் பேரனும்

**தி. ஜானகிராமன்**

எதிரிகள் காவல் காக்க, தட்டுத் தடுமாறி நடந்து வந்தார் கிழவர்.

தோற்றுப் போனவர். அது மட்டுமில்லை. மேலெல்லாம் போர்க்களத்து மண்ணும் குருதியும் பூசித் தெறித்துக் கிடந்தன. அருகே வர வர அந்த முக வாட்டமும் நடையின் தள்ளாட்டமும் விடூடபனுக்கு ஒரு கழிவிரக்கத்தைக் கூட உண்டாக்கி விட்டன. அவன் கண்ணில் ததும்பிய புன்னகை, கேலி எல்லாம் மேகத்தில் பரவின ஒளி போல மறைவது தெரியாமல் மறைந்தன. உட்கார்ந்திருந்தவன் எழுந்தே விட்டான். கிழவர் அருகே வந்துவிட்டார். எழத் தோன்றிய விடூடபனுக்கு விழுந்து வணங்க மட்டும் மனம் வரவில்லை.

''நமஸ்காரம் தாத்தா!'' என்று வாயால் மட்டும் சொன்னான்.

மகாநாமர் அதை ஏற்றுக் கொள்வது போல் புன்முறுவல் பூத்தார். புன்னகையில் பாசம் இல்லாவிட்டாலும் கோபம் இருக்குமோ என்று துருவித் துருவிப் பார்த்தான் பேரன். ஒன்றும் தெரியவில்லை. கோபம் துயரம் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. நீண்ட ஆத்ம சர்ச்சையால் விளைந்த அமைதியா, புத்தியில்லாத ஜடசித்தத்தில் மிதக்கும் அமைதியா என்று புரியாமல் குழம்பினான் விடூடபன்.

எப்படியாவது இருக்கட்டும். வயதில் பெரியவர். அம்மாவைப் பெற்றெடுத்த தாத்தா. நிற்க வைத்துப் பேசுவானேன்! உட்காரட்டும் என்று போர்க்கள உபயோகத்துக்காகவே கொண்டு வந்திருந்த ஓர் ஆசனத்தைப் போடச் சொல்லி, ''தாத்தா! உட்காருங்கள்'' என்றான் அவன். மகாநாமர் உட்கார்ந்து கொண்டார். கையில் ரத்தக் கறைகள். உடலில் புழுதி. இரண்டும் படிந்த ஆடை.

ஏதாவது பேசினால்தான் கோபம் வரும். அவர் ஏதாவது சொல்லுவார். நாமும் சொல்ல நினைத்ததைச் சொல்லலாம். இல்லாவிட்டால் இந்தப் பாழும் மரியாதை மனசிலேயே எல்லாவற்றையும் அமுக்கிச் சாக அடித்து விடும்.

''தாத்தா! என்னை உங்களுக்கு அடையாளம் தெரிகிறதா?''

புன்னகையே பதிலாக வந்தது.

''உங்களுக்கு எத்தனையோ பேரன்கள், பேத்திகள். பட்டமகிஷி — படாத மகிஷிகள் வேறு. ! க்ஷத்திரிய மனைவிகள், க்ஷத்திரிய வாசனையே இல்லாத மனைவிகள். இத்தனை பேர்டமும் உங்களுக்குக் குழந்தை குட்டிகள். அந்தக் குழந்தை குட்டிகளுக்கு எத்தனையோ குழந்தை குட்டிகள். அதனால் என்னை ஞாபக மிருக்கிறதா,





அடையாளம் தெரிகிறதா என்று கேட்டேன்'' என்றான் விடூடபன்.

இருவர் மறுபடியும் புன்னகைதான் புரிந்தார்; பேசவில்லை.

''உங்கள் புன்னகையின் அர்த்தம் புரியவில்லை. நீங்கள் என்னை அடையாளம் கண்டு கொண்டீர்களா என்று இன்னமும் எனக்குப் புரியவில்லை. எங்கள் கொடியைப் பார்த்துத் தெரிந்து கொண்டிருக்கலாம், இது கோசல நாட்டுப் படை யென்று. கோசல நாட்டு ராஜாவாக இருந்தாரே பிரசேனஜித், அவருடைய மகன் விடூடபன்—''

அவன் எதிர்பார்த்தபடியே மகாநாமரின் புருவம் சற்றுச் சுளித்தது.

''கோசல நாட்டு ராஜாவாக இருந்தாரே என்று சொல்வது புரியவில்லையா உங்களுக்கு? ஆமாம் தாத்தா, என் அப்பா செத்துப் போய்விட்டார்—உங்கள் மாப்பிள்ளை—''

''என்ன?''

''ஆமாம். ஒரு மாதம்கூட ஆகவில்லை. நான் உங்களுக்குச் செய்தி அனுப்பவில்லை. அனுப்பினால் நீங்கள் வருவீர்கள். என் சபதம், ஆசையெல்லாம் கரைந்து விடுமோ என்ற பயம். சொல்லாமலேயே இருந்து விட்டேன். உங்களைக் கட்டி இழுத்து வந்து நேரேயே சொல்லி விடலாம் என்கிற எண்ணம்தான்.''

சூன்யத்தைப் பார்த்துக் கொண்டு வாயடைத்து வெறித்து உட்கார்ந்திருந்தார் மகாநாமர்.

''என் அப்பா கோசல ராஜா குளிரில் விறைத்துச் செத்துப் போய் விட்டார். ஒரு நாள் வேட்டையாடப் போனவர் வெகு தூரம் போய் விட்டார் போலிருக்கிறது. திரும்பி வரவில்லை. கோட்டைக் கதவுகளைத் தாழிடச் சொல்லி விட்டேன். ராஜாவை பலம், பராக்கிரமம் எல்லாம் இருந்தால் பயமும் அதிகம்தானே. அதனால்தான் அந்த மாதிரி உத்தரவிட்டேன். நடுநிசியில் அப்பா திரும்பி வந்திருக்கிறார். கோட்டை திறக்கிற கவிடை யில்லை. பனி வேறு; குளிர் வேறு. விறைத்துச் செத்துப் போய் விட்டார்.''



''ஒரு க்ஷத்திரிய வீரனுக்கா இந்த மரணம் ?''

''க்ஷத்திரியரோ, வைசியரோ—எவன் கர்மம் எவனை விடும்?.... யாரோ இறந்து விட்டார் என்று சொல்லும் போது ஜாதியைப் பற்றியே பேசுகிறீர்களே தாத்தா. மகா ஞானியாகி, நிர்வாண நிலை அடைந்த அர்ஹதர், சித்தார்த்தர், புத்தர் உங்களுடைய அண்ணன் புதல்வர். இந்த உறவுகூடவா உங்கள் இருட்டு அழுக்கை யெல்லாம் போக்கவில்லை ? நீங்களே இப்படியிருக்கும் போது, வீரனைக் கண்டு யமனு பயந்து ஓடிப் போவான்? அவனவன் கர்மம் விடாது. அதனால்தான் என் அப்பா அப்படிக் குளிரில் விறைத்து இறந்து போனார். ஆனால் நான்தான் வேணும் என்றே அப்படிக் கதவைச் சாத்தி அவரைக் குளிரில் விறைக்கச் செய்து மரணத்திடம் அர்ப்பணம் செய்ததாகப் பேசிக் கொள்கிறார்கள் மூடஜனங்கள். அப்போது சொல்லவில்லை. இப்போது சொல்கிறார்கள். அவர் ராஜாவாக இருக்கிற வரையில் என்னைக் கபிலவாஸ்துவின் மீது படையெடுக்க விட்டிருக்க மாட்டாராம். அதற்காகப் பயந்துதான் நான் அவரை அப்படி இறக்கச் செய்து விட்டேனாம். மனித புத்தி எவ்வளவு பேதமை நிறைந்தது என்பதற்கு இந்த அபவாதமே சான்று.''

''எனக்கு வயதாகி விட்டது. நான் இறந்து விட்டால் உன் சபதத்தை நிறைவேற்றிக் கொள்ள முடியாதல்லவா ? உன் சபதத்தைவிட உன் தகப்பனுரின் உயிர் பெரிதல்ல உனக்கு என்று மற்றவர்கள் நினைத்தார்களோ என்னவோ?''

''பேஷ், பேஷ்! தாத்தாவுக்கு என் சபதம் ஞாபகம் இருக்கிறாற் போல் இருக்கிறதே. உங்களுக்கு ஞாபகம் இருக்கிறது என்ற செய்தியே எனக்கு வெற்றிதான்'' என்று சிரித்தான் விடூடபன்.

விடூடபனுக்கு அந்தக் காட்சியை நினைத்தபொழுது ஓர் ஏளனம் உதட்டில் தவழ்ந்தது.

எல்லா அரசர்களையும் போல் சித்தார்த்தரின் கருணை வலையில் வீழ்ந்தவன்தான் கோசல மன்னன் பிரசேனஜித்தும். கருணை வள்ளலுக்கு எதைக் கொடுக்கலாம் என்று துடித்தான். ஆனால் தானத்துக்கெல்லாம் பெரிய தானமான ஞானதானத்தை உலகுக்குத் தந்து அமைகின்ற வள்ளல், பூமியாளும் மன்னனிடம் கைநீட்டிப் பெற என்ன இருக்கிறது ? ''பரஞானத்தை நோக்கி ஓடும் வெள்ளத்தில் சேர்ந்து விட்ட தங்கள் பிக்ஷுக்களுக்கு உணவளிக்கும் பேற்றையாவது எனக்கு அளியுங்கள்'' என்று சித்தார்த்தரை வேண்டினான். ''நீ கேட்பது மகத்தான புண்ணியம்'' என்று இசைந்தார்.

ஆனால் அந்தப் புண்ணியம் நீடித்துக் கிட்டவில்லை. முதல் நாள் வந்த பிக்ஷுக்களுக்குத் தானே நின்றிருந்து உபசரித்து அன்னமளித்தான் பிரசேனஜித். மறு நாளும் மறு நாளும் நின்றான். அரசின் அலுவல்கள் எங்கெங்கோ அவனை இழுத்துச் சென்றன. பிக்ஷுகளை நேராகக் கவனிக்க இயலவில்லை. ஒரு வாரம் இரண்டு வாரம் ஆயிற்று. அரண்மனைச் சிப்பந்திகள் அலுத்துக் கொண்டார்கள். அசட்டை செய்தார்கள். பிக்ஷுகளை இலை முன் காக்க வைத்தார்கள்: உள்ளே காக்க வைத்தார்கள். வாசலில் காக்க வைத்தார்கள். வாசலில் வந்தவர்களை, ''இங்கேயே இருங்கள். உள்ளே வரச் சொல்லலாமா என்று கேட்டு வருகிறேன்'' என்று ஒரு நாள் வாசல் காப்பவன் சொல்லத் தொடங்கினான். வந்த பிக்ஷுகள் அத்தனை பேரும் திரும்பிச் சென்று விட்டார்கள்.

பிரசேனஜித் புத்தரிடம் வேகமாக ஓடி வந்தான்.

''அரண்மனைச் சிப்பந்திகளிடம் எவ்வளவு அறிவை எதிர்பார்க்க முடியும் ? பிக்ஷுகள் சற்று இருந்து பிக்ஷை ஏற்று வந்திருக்கலாகாதா?'' என்று குறை குமையப் பொருமினான்.

''காத்திருக்கலாம். பழக்கமில்லாத இடத்தில் எவ்வளவு நேரம் காத்துச் சிறுமைப்படுவார்கள் அவர்கள்? அவர்கள் அப்படி முற்றிய ஞானிகளும் அல்லவே. இப்பொழுதுதானே அடியெடுத்து வைத்திருக்கிறார்கள்?''

''ஸ்வாமி! சாக்கிய ராஜாக்களின் அரண்மனையில் தங்கள் பிக்ஷுகள் இதையெல்லாம் பாராட்டவில்லையே? சொந்த வீட்டில் போவது போல் போய்ச் சாப்பிட்டு வந்து விடுகிறார்களே.''

''நீ சொன்னது சரி. இந்தச் சித்தார்த்தன் சாக்கிய குலத்தில் பிறந்தவன் என்ற ஒரே காரணத்துக்காக இந்தச் சித்தார்த்தனின் பிக்ஷுக்களையும் சாக்கியஅரசர்கள் தங்கள் சுற்றத்தார்களாகவே பாவித்து நடத்து கொள்கிறார்கள். அந்த ஸ்வாதினம், அன்பு எல்லாம்தான் பிக்ஷுகளுக்குச் சுதந்திரம் அளித்திருக்கின்றன. இஷ்டப்படி அங்கு போகிறார்கள்;வருகிறார்கள்.''

தன்னுடைய அசட்டையைப் பூசி மெழுக நினைத்த பிரசேனஜித் அப்போது தனக்குள்ளேயே கேட்டுக் கொண்டான். ''நானும் சாக்கிய ராஜாக்களுக்கு உறவினனாக ஆகி விட்டால்?'' வெளிப்படையாக அதைச் சொல்லவில்லை அவன். அர்ஹதரை வணங்கிவிட்டுத் திரும்பி விட்டான்.

மறு நாள் சாக்கிய குலத்துக்குத் திருமணத்துக்குப் பெண் கேட்டுத் தூதனுப்பினான். மகாநாமர் உறவினர்

கலைக் கலந்தார். "மகாராஜா! பிரசேனஜித் மன்னர்தான். ஆனால் சுத்தமான மாற்று க்ஷத்திரியனல்ல. அவனுக்குப் பெண்ணைக் கொடுத்து நம் குல உயர்வை எப்படி இறக்கிக் கொள்ள முடியும்?" என்றார்கள் அவர்கள்.

மகாநாமர் குழம்பினார். "இவன் வேண்டுகோளை மறுக்கவும் முடியாது. கோசல நாட்டின் படை பலம் சாதாரணமல்ல. மறுத்தால், சாக்கிய குலத்தையே அழித்துப் போட்டு விடக் கூடிய பலம் அவனிடம் இருக்கிறது. அந்த மாதிரி குணம் உள்ளவன்தான் அவன்."

"ஸ்வாமி! உங்கள் பட்டமகிஷியின் பெண்ணையா கேட்கிறான் அவன்? இல்லையே. உங்கள் பெண்களில் ஒருத்தியைத்தானே மணம் செய்துகொள்ள விரும்புகிறான். உங்களுக்கு எத்தனையோ மனைவிகள். அவர்களுக்குப் பிறந்த பெண்கள் பலர். வாஸவையின் அறிவையும் அழகையும் கண்டு உங்கள் க்ஷத்திரிய மனைவிகளின் பெண்களெல்லாம் பொறாமைப்படுகிறார்கள். தர்ப்பை நுனியைப் போன்ற கூரிய புத்தி, நாணலைப் போன்ற நெடிய, துவளும் அழகு. அவள் க்ஷத்திரியப் பெண் இல்லை என்றால் பிராமணன் கூட அதை நம்பத் தயங்குவான். இந்த இக்கட்டைத் தீர்க்க இந்த வாஸவையைக் கொடுப்பதுதான் வழி. பிரசேனஜித்தின் கோரிக்கை, நம் குல உயர்வு எல்லாம் காப்பாற்றப்பட்டு விடும். பலமான கோசல நாட்டின் நட்பும் உபரியான லாபம்" என்று மகாநாமரின் உறவினன் வழிகாட்டினான்.

அந்த வழியிலேயே நடந்தார் மகாநாமர். அவருடைய அபிமான மங்கை ஒருத்தியின் மகள் வாஸவை என்பதைச் சொல்லாமலேயே பிரசேனஜித்தை மருமகனாக்கிக் கொண்டார்.

"அம்மா! என் சிநேகிதர்கள் எல்லாரும் தாத்தா வீட்டுக்குப் போய் வருகிறார்கள். ஏன் என்னை மட்டும் அனுப்பவில்லை நீ? நானும் கபில வாஸ்துவுக்குப் போய் வருகிறேனே, ஒரு தடவை" என்று நச்சரித்துக் கொண்டேயிருந்தான் விடூடபன்.

"ஓ! அனுப்புகிறேனே" என்றாள் வாஸவை.

'தாசி மகளுக்குப் பிறந்த பேரனாயிற்றே! உன்னை யார் அங்கே வரவேற்றுச் சீராடக் காத்திருக்கிறார்கள்?' என்று மனத்துக்குள் தேம்பினாள்.

குழந்தை ஏங்கிக் கொண்டேயிருந்தான். புதிது புதிதாக, பதில் கூற முடியாத கேள்விகளாகக் கேட்கத் தொடங்கி விட்டான். கடைசியில் தந்தைக்குக் கடிதம் ஒன்று எழுதினாள் வாஸவை. "உங்கள் பேரனுக்குத் தாத்தாவைப் பார்க்க வேண்டுமாம். மற்ற அரசகுமாரர்களைப் பார்த்து, அவனுக்கும் தாத்தா வீட்டைக் காண வேண்டும் என்று ஆசை. ஒரே ஒரு முறையாவது தருவித்துச் சிறிது காலம் வைத்துச் சீக்கிரம் அனுப்பி விடுங்கள். கோசல நாட்டு அரண்மனையில் நான் க்ஷத்திரியப் பெண்ணாக உலவுகிறேன். உங்கள் பேரனும் சுத்த க்ஷத்திரியனாகத்தான் உலவுகிறான். சிறு குழந்தையின் உள்ளத்தை நினைத்து இதைத் தாங்கள் நினைவில் வைத்துக் கொள்ளுமாறு வேண்டுகிறேன்."

கடிதம் சென்றது. பேரனுக்கு அழைப்பும் வந்து விட்டது. விடூடபன் ரதமேறிக் கிளம்பினான்.

கபிலவாஸ்துவின் அரண்மனையில் எல்லோரும் அவனை வியப்புடன் பார்த்தார்கள். தாத்தா வந்து கட்டிக் கொண்டார். தன்னைவிட வயதில் பெரியவர்களை யெல்லாம் விழுந்து விழுந்து வணங்கினான் விடூடபன். பிறகு சுற்றிலும் பார்த்தான்.

"என்ன பார்க்கிறாய், குழந்தாய்?" என்று கேட்டார் மகாநாமர்.

"இங்கு என்னைவிட வயதில் சிறியவர்களே கிடையாதா? நான் எல்லோருக்கும் நமஸ்காரம் செய்கிறேனே ஒழிய, எனக்கு ஒருவரும் செய்யக் காணோமே? கோசலத்தில் என் தம்பிமார்கள் எனக்கு நமஸ்காரம் செய்வதுண்டே. இங்கு என்னைவிடச் சிறியவர்களே, இல்லையா?" என்றான் விடூடபன்.

"இருக்கிறார்கள். நீ வரும் சமயத்தில் இல்லை. எல்லாரும் உல்லாசமாக



வனபோஜனம் செய்யச் சென்றிருக்கிறார்கள். வசந்த காலம் அல்லவா? உல்லாசமாக வனந்தரங்களுக்குப் போய் இருக்கிறார்கள். ஒரு மாதத்தில் திரும்பி வந்து விடுவார்கள்."

"நானும் போய் அவர்களைப் பார்க்கிறேனே" என்றான் விடூடபன்.

"போனால் போகிறது. அரண்மனையில் இருக்கிறது. பிறகு அவர்களோடு போய்ச் சேர்ந்து கொள்கிறது."

ஆனால் அது நடக்கவில்லை. அன்றிரவு எல்லாரும் சேர்ந்து உட்கார்ந்து உணவருந்தினார்கள். பையன் பசியாற, மனதாரச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். கூட இருந்தவர்கள் வேடிக்கையும் கேலியுமாகப் பேசிக் கொண்டே சாப்பிட்டார்கள். மகாநாமரும் வேடிக்கையாகச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார். அவர்களுக்கெல்லாம் பசியே கிடையாதா? இப்படியே சிரித்து விளையாடிக் கொண்டிருந்தால் எப்போது சாப்பிடுவது, எப்போது முடிப்பது? உணவுப் பண்டங்களைத் தொடுகிறார்கள். கையில் எடுத்து வைத்துக் கொள்கிறார்கள். வாயில் போட்டுக் கொள்வதற்குள் பேச்சு, சிரிப்பு. இப்படியே சாப்பாடு முடிந்தது. எல்லோரும் சிரித்தே, பேசியே வயிற்றை நிரப்பிக் கொண்டு விட்டார்கள்போலிருக்கிறது. பாத்திரங்களில் உணவு அப்படி அப்படியே இருந்தது.

சாப்பாடான பிறகு தோட்டத்துக்குப் போனான் விடூடபன். கூட வந்த தாத்தா கோசல ராஜ்யம், அரண்மனை யெல்லாம் பற்றி விசாரித்தார். படிப்பு, பயிற்சி பற்றி விசாரித்தார். வில் வித்தை, அஸ்திர சஸ்திரப் பயிற்சிகளைப் பற்றிக் கேட்டார். சோலையும் நட்சத்திரங்களும் இரவின் நிசப்தமும் போதையூட்டின. தாத்தா போன பிறகுகூட அவன் அங்கேயே உட்கார்ந்திருந்தான். வேலைக்காரன் ஒருவன் மட்டும் மெய்க்காவலாக நின்று கொண்டிருந்தான்.

திரும்பி உள்ளே வரும் பொழுது, சாப்பிட்ட இடத்தின் வழியே வந்தார்கள். சாப்பிட்ட இடம் எல்லாம் சுத்தி செய்து சுருக்காகப் பளபளத்தது. அது என்ன? அந்தப் பலகை மட்டும் அப்படியே இருக்கிறது! அவன் உட்கார்ந்த பலகை மட்டும் அப்படியே இருந்தது. "மாமி, மாமி" என்று கூப்பிட்டான் கூட வந்த காவலன்.

"ஏன்?"

"என்ன பண்ணிட்டிருக்கே?"

"பலகை யெல்லாம் அலம்பிண்டிருக்கேன், பால் போட்டு."

"இந்தப் பலகையை எடுத்துப் போகவில்லையா?"

"நீதான் அலம்பேன்."

"என்னது!"

"ஆமா. தாசி மகன் உட்கார்ந்த பலகையைக் கூட நான்தான் எடுக்கணுமா? ராஜகுமாரங்க உட்கார்ந்த பலகைங்களைத்தான் இந்தக் கை சுத்தி பண்ணும்" என்று உள்ளேயிருந்து பதில் வந்தது. அதைக் கேட்டதும் கேட்காததுமாகச் சரேலென்று உள்ளே பாய்ந்தான் விடூடபன். ஒரு நிசப்தம். ஓர் அசட்டு மௌனம்.

விடூடபனுக்கு உடம்பு எரிந்தது; பறந்தது. எதையோ நொறுக்கி விடுவது போல் கையிரண்டையும் இறுக மூடிக் கொண்டான் — விரல் எலும்புகளை நொறுக்கி விடுவது போல. தாத்தாவிடம் சென்றான்.

"வா, குழந்தாய்!"

"இன்னும் சாப்பிடவில்லையா, தாத்தா?" என்றான் பையன்.

"உன்னோடுதான் உட்கார்ந்து சாப்பிட்டேனே!"

"அதில்லை. நிஜச் சாப்பாடு?"

"என்ன சொல்கிறாய்?"

"அது பொய்ச் சாப்பாடல்லவா? சாப்பிடுவது போல் பாவனை செய்தால் பசியாறி விடுமா? அதுதான் நிஜச் சாப்பாடு சாப்பிட்டீர்களா என்று கேட்டேன்" என்றான் விடூடபன்.

"நீ என்ன சொல்கிறாய் என்றே புரியவில்லையே!"

"புரியவில்லையா? சாப்பாட்டறையில் பலகைகளைக் கழுவி வைக்கிற பணிமகளைக் கேட்டால் புரிந்து விடுமே?" என்றான் விடூடபன். அவன் உதடு நடுங்கிற்று. கன்னச் சதை கோணிற்று. குரல் கம்மி அழுவது போல் நடுங்கிற்று. சோக அழுகையல்ல. கோப அழுகை.

உடல் பரந்தது. நூறு ஆட்களின் பலம் அவன் உடலில் ஏறுவது போல் அவனைப் பார்த்துத் திகைத்தார் மகாநாமர்.

"குழந்தாய், சற்று இரு. சாப்பாட்டறையில் நானே போய் விசாரித்து வருகிறேன்" என்று எழுந்தார் அவர்.

"தாத்தா!" என்று பெரிய குரலில் அதட்டினான் விடூடபன். முள் போட்டு இழுத்தது போல் நின்றார் மகாநாமர்.

"என்னைப் பார்த்துப் பேசுங்கள். என் அம்மா வாஸவை உங்கள் புதல்வி தானே?"

"ஆம்!" என்ற பாவனையில் தலையாட்டினார் அவர்.

"அவள் தாயார் க்ஷத்திரிய மங்கை தானே?"

"................."

"சொல்லுங்கள்."

".............. ......"

"அப்படியானால் பலகை கழுவுகிறவள் சொன்னதுதான் உண்மையா? அவள் க்ஷத்திரியப் பெண் இல்லை என்று அவள் சூசனையாகச் சொன்னது உண்மையா?"

"........ ............."

"சொல்லுங்கள். மகாராஜாக்கள் க்ஷத்திரியரல்லாதவர்களை மணப்பது அநீதியல்ல. வாஸவையின் தாயார் க்ஷத்திரியப் பெண்ணல்லவே!"

அந்த இளம் குரலில் தெறித்த ஆண்மையையும் அதிகாரத்தையும் கேட்ட மகாநாமர் ஏதோ மின்னலைத் திடீரென்று பார்த்ததுபோல் செயலோய்ந்து நின்றார்.

"தாத்தா!"

மகாநாமர் 'இல்லை' யென்று தலையசைத்தார்.

விடூடபனுக்குத் தன் தாயின் தயக்கம், சாப்பிடுகிறவர்களின் போலிச் சாப்பாடு, போலிப் பேச்சு, போலி உற்சாகம் எல்லாம் கண் முன் வந்தன.

"அதனால்தான் நீங்கள் பொய்ச் சாப்பாடு சாப்பிட்டீர்கள். இல்லையா?"

"..............."

"பதில் வேண்டாம், தாத்தா! நான் இந்த ராஜ்யத்தை விட்டுக் காலையில் போய் விடுவேன். மறுபடியும் எப்பொழுதோ வருவேன். ஆனால் நீங்கள் கூப்பிட்டு வரமாட்டேன். நானாக வருவேன். படையோடு வருவேன். உங்களை முறியடிப்பேன். உங்களைக் கட்டிப் போட்டு அடித்து, என்னோடு உட்கார்ந்து சாப்பிடும்படி செய்யப் போகிறேன்" என்று கத்தி விட்டு விரைந்தான்.

திடீரென்று புன்னகை மறைந்து விடூடபன் முகத்தில் அம்பு பட்ட வேதனை படர்ந்தது. க்ஷத்திரிய மனைவியின் மகளல்ல, தாசி குலம் என்று தெரிந்தவுடன் அம்மாளை என்ன பாடு படுத்தி வைத்தார் அப்பா! அவளுக்கிருந்த கௌரவம், அந்தஸ்து எல்லாவற்றையும் அழித்து, அவள் மனத்தைப் புண்படுத்தி, புழுவாகத் துடிக்க வைத்து.... சீ.... ஈனர் குலம் என்று சொல்லி எத்தனை கேவலமான, எத்தனை இருளான பள்ளங்களில் எல்லாம் விழ முடிகிறது மனிதனால்!

விடூடபனின் கையிரண்டும் கோபத்தில் மீண்டும் மூடிக் கொண்டன. தகப்பனாரின் வெறி, மக்களிடையே இருந்த அந்த வெறி எல்லாவற்றையும் நொறுக்குவதுபோல கையிரண்டும் மூடி இறுகின...

அன்றும் அர்ஹதர்தான் காப்பாற்றினார். பிரசேனஜித்தின் அறியாமையைக்



"மறுபடியும் எண்ணெய் கொண்டு போறியா? எண்ணெயைத் தேய்க்கணும்... தண்ணீரில் குளிக்கணும். மாப்பிள்ளைக்கு எல்லாம் தலைகீழ்ப் பாடமா இருக்கே. எண்ணெயில் குளிக்கத் தண்ணீரைத் தேய்க்கச் சொல்லப் போகிறார் போலிருக்கு!"

கண்டு இரங்கினார். 'இது என்னப்பா காரியம்! வாஸவை க்ஷத்திரியப் பெண் இல்லை என்று என்னால் நம்ப முடியவில்லையே. பட்டமகிஷிக்குப் பிறந்தால் என்ன, வெறும் மகிஷிக்குப் பிறந்தால் என்ன, மகாநாமரின் பெண்தானே அவள். அவளோடு இவ்வளவு இழைவாக, இப்படி இரண்டறக் கலந்துவிட்டு, திடீரென்று அவள் குலம் நினைத்துக் கோபம் வருவதென்றால், நீ செய்தது அன்பாகத் தோன்றவில்லையே. அன்பில்லாதது மட்டும் இல்லை. எத்தனை அறியாமை! எத்தனை பாபம்! உன்னை நம்பி வந்த ஒரு பெண்ணின் நம்பிக்கையை, மென்மையைக் கூடக் காக்க முடியாத இந்த இயல்பை க்ஷத்திரிய வீரம் என்று சொல்கிறாய்?" என்று நயமும் உரமுமாகக் கலந்து பிரசேனஜித்தின் கண்ணைத் திறந்தார் ததாகதர். அம்மாளின் கண்ணீரும் நின்றது.

விடூடபன் உதட்டில் மீண்டும் புன்னகை பிறந்தது. ரத்தக் கறையும் புழுதியுமாக உட்கார்ந்திருந்த தாத்தாவைப் பார்த்தான்.

"தாத்தா! சிரிக்கிறேனே என்று பார்க்கிறீர்களா! என் கண்ணுக்கு முன்னால் ஒரு படம் எழுந்தது. அதைக் கண்டதும் சிரிப்பாக வருகிறது. ஒரு தபஸ்வி உட்கார்ந்திருக்கிறார். அவரைக் காண ஒரு வேடன் வருகிறான். கனி கொண்டு வருகிறான். "அப்பா! என்னைத் தொடாதே! வாயைத் திறக்கிறேன். அந்தக் கனியை மட்டும் பிழிந்து வாயில் போட்டு விடு" என்று வாயைத் திறக்கிறார். அந்த மாதிரி, ஒரு ராஜாவிடம் அழகான ஒரு பெண் வருகிறாள். கணவன் மனைவியாக ஆகிறார்கள் இருவரும். ஆனால் ராஜா மட்டும் இன்னும் அவள் தொட்ட எந்தப் பண்டத்தையும் சாப்பிட மாட்டார்" என்று சொல்லிச் சிரித்தான் விடூடபன்.

"தாத்தா! காசியில் பரம அக்னிஹோத்ரிகளாக விளங்கும் வேதியர்கள் தான் இப்படிக் குலம் பிறவி எல்லாம் பாராட்டுகிறார்கள் என்று நினைத்தேன். க்ஷத்திரியர்கள் அதைவிட ஒரு படி மேலே இருக்கிறார்களே ஒழிய, குறையவில்லை. கிரிவிரஜத்தில் நூற்றுக்கணக்காக யாகம் செய்த வேதியர்களை மிஞ்சிவிட்டீர்கள்."

"விடூடபா! நான் தோற்றுப் போய் உன் முன் கொண்டு வந்து நிறுத்தப்பட்டிருக்கிறேன். ஏன் வீணாக என்னோடு பேசிக் காலத்தை வீணாக்குகிறாய்? என்ன செய்வதாக உத்தேசம்?"

"உங்களைத் தண்டிக்கப் போகிறேன்."

"தண்டி. சீக்கிரம் செய்."

"சீக்கிரம் செய்து விடுகிறேன். எனக்கும் பசியாகத்தான் இருக்கிறது...... யாரங்கே! தாத்தாவுக்கும் எனக்கும் சாப்பாடு கொண்டு வைக்கச் சொல்லுங்கள். தாத்தா என்னோடு சேர்ந்து சாப்பிடப் போகிறார். இப்பொழுது.... தாத்தா, இந்தத் தண்டனைதான் உங்களுக்கு. உங்கள் பேரனோடு இன்று சேர்ந்து உட்கார்ந்து சாப்பிட வேண்டும் நீங்கள். சம்மதம்தானே!"

"அதற்கென்ன!..... ஆனால் இப்படியேவா உன் தாத்தாவைச் சாப்பாட்டுக்கு அழைக்கிறாய்? இந்த ரத்தக் கறைப் புழுதியோடா! போர்க்களத்திலிருந்து நேராக போஜன கனமா! குளித்து விட்டு, உடம்பை நன்கு சுத்தம் செய்து கொண்டு சாப்பிடுவோம்."

"அதை வேண்டாம் என்று சொல்லவில்லை. வாருங்கள். நானும் ஸ்நானம் செய்து விட்டு வருகிறேன்."

எல்லோரும் நகரில் புகுந்து அரண்மனைக்குச் சென்றார்கள். விடூடபன் குளித்து விட்டு, பிரார்த்தனைகள் செய்தான். புத்தாடை உடுத்திச் சாப்பாட்டுக்குத் தயாரானான்.

"தாத்தாவை அழைத்து வாருங்கள்!"

"தாத்தா திரும்பி வர மாட்டார் போலிருக்கிறது" என்றார் அமைச்சர்.

"என்னது!"

"ஆமாம். அரண்மனைக் குளத்தில் குளிக்கப் போனார். தாடி நீளம் அவருக்கு. தாடியாலேயே முழங்காலையும் முகத்தையும் சேர்த்துப் பிணைத்துக் கொண்டாராம். இறுக முடிந்து குளத்தில் உருண்டு விட்டாராம். விழுந்தவர் இன்னும் நீர் மட்டத்துக்கு வரவில்லை."

"ஹும்" என்று எழுந்தான் விடூடபன்.

தடாகக்கரைக்கு விரைந்தனர் எல்லோரும். மகாராஜாவை விழுங்கின தடாகம் வயிறு புடைக்கத் தின்றவன் போல உறங்கிக் கொண்டிருந்தது.

"எல்லோரும் மரணத்துக்குப் பயப்படுவார்கள். தாத்தா சாப்பாட்டுக்கே பயந்து விட்டார். அவர் சுத்தமான க்ஷத்திரியர். சுத்த க்ஷத்திரியர்கள் தோற்றுப் போகலாம். தற்கொலை செய்து கொள்ளலாம். எந்தப் பெண்களையும் தீண்டிக் கலைக்கலாம். அவர்கள் தொட்டதை மாத்திரம் சாப்பிடக் கூடாது. என்ன அழகான தர்மம்! அவரது மகிமைகளைப் பற்றி அர்ஹதரிடம் சொல்ல வேண்டும்" என்று கூறிக் கொண்டே நகர்ந்தான் விடூடபன்.




## துக்காராம்

வாழ்க்கையில் ஏற்படும் இன்னல்களை யெல்லாம் இன்பமாகக் கொண்டு துன்பமே காணாத வாழ்க்கையாக வாழ்வது எல்லோருக்கும் கைவந்த கலையல்ல. இந்தக் கலை துக்காராமுக்குக் கைவந்திருந்தது. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்ற மூத்தோர் வாக்கினுக்கு ஒப்ப வாழ்ந்த அவர் வாழ்க்கையிலே ஒரு சோதனைச் சம்பவம் நிகழ்ந்தது.

தாய் தந்தையரின் சொற்படி இரு மனைவிகளை மணந்து கொண்ட அவரை உலகம் நேர்க் கண் கொண்டு பார்க்கவில்லை. அவரது கடவுள் பக்தியெல்லாம் வெறும் வேஷம் என்று எண்ணியது. விசுவாமித்திரரின் தவத்தைக் கலைக்கத் தேவர்கள் மேனகையை அனுப்பியது போல் துக்காராமைச் சோதிக்க இளமை எழில் கொழிக்கும் ஒரு யுவதி அனுப்பப்பட்டாள். அவள் துக்காராமைத் தனிமையில் சந்தித்துத் தன் மோக வலையை வீசினாள்.

ஆனால் துக்காராம் விசுவாமித்திரர் ஆகவில்லை. 'தாயே!' என்று கூறி அம்மங்கையின் காலடிகளில் விழுந்தார். ஈரேழு பதினாலு உலகத்துக்கும் அன்னையாகத் திகழும் ஆண்டவனது திருவுருவத்தை அவள் மேனியில் கண்டார். 'அம்மா! நீ என் தாயாக இருந்தால், நான் எவ்வளவு அழகான பிள்ளையாக இருந்திருப்பேன், தெரியுமா? அன்னையே! உங்கள் மேனியில் கொழிக்கும் இந்த எழிலைப் போலவே நீங்களும் தாய்மையாக இருந்து என்னைக் காத்தருளுங்கள்!'' என்று கரம் கூப்பி வேண்டினார்.

எழில் மங்கை வெட்கினாள். இத்தகைய தூய உள்ளம் கொண்ட புதல்வனைப் பெறும் பாக்கியம் தனக்குக் கிட்டாதா என்று தவம் செய்யும் நோக்கத்துடன் தலை குனிந்த வண்ணம் அங்கிருந்து ஏகினாள்.




## ஏகநாதர்

அந்தப் பாலகனுக்கு வயது பதினொன்று — பன்னிரண்டு இருக்கும். அவனுக்குக் குருவாக அமைந்தவர் தேவகட்டைச் சேர்ந்த ஜனார்த்தன சுவாமி என்பவர். அவர் பாரமார்த் திகத் துறையில் மட்டும் அல்லாது லௌகிகத்திலும் தேர்ந் தவர். பாலகனையும் தம்மைப் போலச் செய்ய விரும்பம் கொண்ட அவர் தமது கணக்கு வழக்கைக் கவனிக்கும் பொறுப்பை அவனுக்கு அளித் தார்.

ஒருநாள் கணக்கில் ஒரே ஒரு தம்பிடி அடித்தது. அவன் தவற் றைக் கண்டு பிடிக்கும் பொழுது இரவின் மூன்றாவது ஜாமம் கழிந்து விட்டது. ''கிடைத்து விட்டது!'' என்று மகிழ்ச்சியில் அவன் உரக்கக் கூவவும், ''என்ன கிடைத்து விட்டது?'' என்று கேட்டுக் கொண்டே ஜனார்த்தன ஸ்வாமி உள்ளே நுழையவும் சரியாயிருந்தது.

''கணக்கில் ஒரு தம்பிடி காணாமல் போயிருந்தது. அது கிடைத்து விட்டது!'' என்று பதில் அளித்தான் அவன்.

''கணக்கில் ஒரு காசு கெட் டுப்போனது கிடைத்ததும் உனக்கு இத்தனை மகிழ்ச்சி ஏற் பட்டதே! வாழ்க்கையில் நீ ஒரு பெரிய பொருளைக் கெட்டுப் போக்கி விருக்கிறாயே! அது கிடைத்து விட்டால் எத்தனை மகிழ்ச்சி கொள்வாய்? இந்த ஒரு தம்பிடியைக் கண்டு பிடிக்க நீ கருத்தைச் செலவிட் டது போலவே, ஆண்டவனைத் தேடிக் கண்டுபிடிப்பதிலும் மனத்தைச் செலவிட்டால், ஆண்டவன் கட்டாயம் கிடைப் பான்!'' என்றார் பெரியவர்.

அவரது அந்த உபதேசத்தை உடும்பாகப் பிடித்துக் கொண்டு ஆண்டவனது சாக்ஷாத்காரம் பெற்றதோடு மட்டுமின்றி, மராட்டி இலக்கியத்திலே பக்தி வளத்தைக் கொழிக்கச் செய்த பெருமையில் அந்தப் பால கனுக்கு — ஆம்—ஏகநாதருக்குப் பெரும் பங்கு உண்டு.




## ஞானேசுவரர்

பக்தியின் விளை நிலம் தென்னாடு. இது பாரத தேசம் முழுதும் ஒப்புக்கொண்ட உண்மை. பக்தியைப் போற்றி வளர்த்த பெருமை மகாராஷ்டிர தேசத்துக்கும் மிக மிக உண்டு.

தென்னாட்டைப் போலவே, எத்தனையோ பக்த கவிகள் தோன்றி மகாராஷ்டிர இலக்கியத்தை வளம் மிக்கதாக ஆக்கியுள்ளார்கள். அவர்களில் ஒருவர்தான் ஞானேசுவரர். சிறு பிராயத்திலே அவரது அறிவுச் சிறப்பினைக் கண்டு பொறுக்காத சிலர் பரிகாசமாக, "உனக்கென்ன அறிவு இருக்கிறது. ஞானதேவன் என்று பெயர் வைத்துக்கொள்வதற்கு? இந்த எருமைக்கும் உன் பெயர்தான். நீயும் இந்த எருமையும் ஒன்றுதானே?" என்று கேட்டனர்.

அப்பொழுது பச்சிளம் பாலகனான ஞான தேவன், "இவ்வெருமையின் உள் இருக்கும் ஆத்மாவும் என் ஆத்மாவும் ஒன்றேதான். உலகத்திலுள்ள உயிரினங்கள் அனைத்தும் ஒரே பரம்பொருளின் அம்சமே!" என்று கூறினான்.

அப்பொழுதும் அறிவிலிகளான அநேகருக்கு அறிவு வரவில்லை. "நீ வேதம் ஓதுகிறாயே! அதுபோல இந்த எருமையும் வேதம் ஓதுமா?" என்றுமேலும் கிண்டலாகக் கேட்டார்கள்.

"என் ஆத்மாவும் அதன் ஆத்மாவும் ஒன்றாக இருக்கும் பொழுது, எருமை ஏன் வேதம் ஓதாது?" என்றார்.

அடுத்த கணம் அதிசயத்திலும் அதிசயம் நிகழ்ந்தது. எருமை உரத்த குரலில் வேதம் ஓதியது; புருஷ சூக்தத்தை ஸ்வரம் தவறாமல் கணீரென்று ஒப்பித்தது.

அதைக் கண்ணுற்ற அனைவரும் அயர்ந்து விட்டனர். பாலகனான ஞானதேவர் அவர்களது கண்களுக்கெதிரே உருப்பெற்று வந்த அகண்டாகாரமான ஆண்டவனாகவே தோற்றம் அளித்தார்.




## சமர்த்த ராமதாஸர்

மகாராஷ்டிரத்திலே மணமகனையும் மணமகளையும் திருமண வேதியில் திரையிட்டு உட்கார வைத்துப் புரோகிதர்கள் 'மங்களாஷ்டகம்' கூறுவர். அதன் கடைசி அடி 'சுப மங்கள் சாவதான்' என்பதாகும். அதைக் கேட்க ஆசையாயிருப்பதாகக் கூறி, 'கல்யாணமே செய்துகொள்ள முடியாது' என்றிருந்த தன் மகனை எப்படியோ சம்மதிக்க வைத்து விட்டாள் ஒரு தாயார்.

மண மேடையில் மகனும் மருமகளும் திரை மறைவில் உட்கார்ந்திருக்கும் பொழுது புரோகிதர்கள் மங்களாஷ்டகம் பாடினர். 'சுப மங்கள் சாவதான்' என்னும் சொல் தாயாரின் செவிகளிலே தேனாக இனித்தது. இன்னும் சிறிது நேரத்தில் தன் மகனை மண மகனாகக் காணப் போகிறோம் என்ற மகிழ்ச்சியில் மிதந்தாள்.

சமர்த்த ராமதாஸரின்-ஆம், இதுதான் அந்தப் பையனின் பிற்காலத்துப் 'பெயர்', — காதுகளிலோ, 'சாவதான்' என்னும் சொல் 'ஜாக்கிரதை' என்னும் பொருள்பட உறைத்தது. ஒவ்வொரு தடவையும் 'சாவதான்' என்று கூறும்பொழுதும் அவர் துணுக்குற்றார். திருமணப் பந்தத்தில் மாட்டிக் கொள்ளக் கூடாது என்று சொல்வதாக எண்ணினார். ஆனால் தாயாருக்குக் கொடுத்த வாக்கு...? தாயாருக்கு என்ன வாக்குக் கொடுத்திருந்தார்? காது குளிர 'சுபமங்கல சாவதான்' என்னும் சொல்லை அவள் கேட்க ஆசைப்பட்டாள்! அதைத் தான் கேட்கும்படி செய்தாகி விட்டதே! அதைக் கேட்ட மகிழ்ச்சியோடு அதோ அவள் நிற்கிறாளே! இப்படி எண்ணியவர் விருட்டென்று எழுந்தார். விவாக மண்டபத்தை விட்டு வெளியேறினார். ஆனால் மராட்டி இலக்கியத்தையும் வாழ்வையும் முழுதாக ஆக்கிரமித்துக் கொண்டு மக்கள் மனத்திலே உறைந்து விட்டார்.




பஸ் டிரைவர் கண்ணுச்சாமிக்குத் தன் சம்சாரத்தின் புன்சிரிப்புத்தான் ஜீவபுஷ்டி லேகியம்! அதற்காக அவன் எவ்வளவு வேண்டுமானாலும் செலவழிப்பான். ஆனால், புன்சிரிப்பை விலைக்கு வாங்க முடியுமா?

புதுக்கோட்டைக்குச் செல்லும் பஸ், வழியில் கீரனூரை எட்டிப் பிடித்ததும் கண்ணுச்சாமி அதை ரஸ்தா ஓரத்தில் உள்ள ஒரு பெட்டிக் கடையின் எதிரில் நிறுத்திவிட்டு இன்ஜினோடு சேர்ந்து ஒரு பெருமூச்சு விட்டான்.

அவனுடைய வாழ்க்கையின் இந்த தொகையில் ஐம்பது வருஷங்களைக் கழித்தாயிற்று. அதில் கணிசமான பாகம் முப்பது வருஷங்கள் பஸ் டிரைவிங் சர்வீஸ்தான்! அந்த சர்வீஸுக்குள் அவன் எத்தனையோ விதமான பஸ் பிரயாணிகளின் முகங்களையும், அவர்களைப் பற்றிய சரித்திர சூக்ஷ்மங்களையும், அநுபவங்களையும் தன் மனத்துக்குள் சேகரித்து வைத்திருக்கிறான். பஸ்ஸை ஓட்டும் 'டிரிப்' அவனுக்கு வந்துவிட்டால் பஸ்ஸே அவனுடைய ஆளுகைக்கு உட்பட்ட உலகமாகவும், அதிலுள்ள பிரயாணிகளெல்லாம் அவன் கையில் ஒப்படைக்கப்பட்ட ஜீவன்களாகவும் மாறி விடுவது வழக்கம்.

'டூட்டி' முடிந்து தன் வீட்டுக்குப் போனதும் பிரயாணிகளைப் பற்றிய செய்திகள், தமாஷ்கள், தன்னுடைய சூக்ஷ்மங்கள் முதலானவற்றை யெல்லாம் தன் மனைவி பொன்னம்மாளிடம் சொல்லி அவளுடைய முகத்தில் சிரிப்பை வரவழைக்க முயல்வான். ஆனால் கடந்த மூன்று வருஷங்களாகப் பொன்னம்மாவின் முகத்தில் உண்மையான சிரிப்புத் தோன்றவேயில்லை.

கண்ணுச்சாமி தன் டிரைவிங் ஆசனத்தில் உட்கார்ந்தபடியே பின்னுக்குத் திரும்பித் தன்னுடைய பிரயாணிகள் மீது கண்ணோட்டம் செலுத்தினான்.

மறுபொழுது விடிந்தால் தீபாவளியாகையால் பஸ்ஸில் அவ்வளவாகக் கூட்டம் இல்லை. சில பிரயாணிகள்தாம்! அவர்களும் தீபாவளிப் பண்டிகை கொண்டாடுவதற்காக அவசர அவசரமாகப் போகிறவர்கள்தான். புதுப் புடவை, துணி மணிகளின் மூட்டைகளும், பட்டாசுக் கட்டுக்களும், பட்சண டப்பாக்களும் பெரும்பாலானவர்களிடம் காட்சி யளித்தன.

கீரனூர் ஸ்டாப்பில் பஸ் பிரயாணிகள் சோடா, கலர் சாப்பிடவோ, வெற்றிலை பாக்கு பழங்கள் வாங்கவோ சக பிரயாணிகளைப் பற்றிக் கோள் சொல்லவோ, தனிமையில் சிறிது காற்றாடவோ, ஒவ்வொருவராகப் பஸ்ஸிலிருந்து இறங்கிப் போய்க் கொண்டிருந்தார்கள். ஆனால் டிரைவர் ஸீட்டுக்குப் பின்னால் ஒரு ஸீட்டில் ஆணும் பெண்ணுமாக இளம் காதல் சிட்டுகள் போல் உட்கார்ந்திருந்த இருவர் மட்டும் எழுந்திருக்கவேயில்லை.

பஸ் டிரைவர் தன் பார்வையைத் திருப்பிக் கொண்டான். அவன் கண் எதிரில் உள்ள பெரிய கண்ணாடியில் காதல் ஜோடிகளின் அன்பு முகங்களும் அங்க அசைவுகளும் நன்றாகவே பிரதிபலித்தன.

அவ்விருவருக்குள்ளும் ஏதோ ஒரு பரபரப்பு! அந்தப் பரபரப்பிலும் வாலிபன் தன் காதல் கண்களால் பெண்ணின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். பார்வையிலே சலிப்பில்லாத ரஸனை! அதையொட்டி அதரங்களிலே ஒரு புன்சிரிப்பு!

"சரஸா!" என்று அந்த வாலிபன் மெல்லக் குரல் கொடுத்தான்.

"ம்..."

சரஸா ஏதோ நினைவுப்படலத்தின் அழுத்தத்திலிருந்து கண் விழித்துக் கொள்பவள் போல் தன் முகத்தை உயர்த்திப் பார்த்தாள். கண்களைக் கண்கள் சந்தித்தன. அப்போது சரஸாவின் கண்களிலே ஓர் ஆனந்தம், ஏக்கம், பரிதாபம், ஏதோ ஒரு பயம் எல்லாம் கலந்திருந்தன.

"நான் பக்கத்திலே இருக்கேன். அது உனக்கு ஞாபகம் இருக்கிறதோ?"

சரஸாவின் மலர்ந்தும், மலராதது மான மொக்கு இதழ்களிலே ஒரு புன்சிரிப்புத் தவழ்ந்து வாலிபனின் முகத்திலும் எதிரொலித்துச் சரிந்தது.

அதைக் கண்டதும் கண்ணுச்சாமிக்குத் தன் ஜீவ புஷ்டி லேகியத்தின் ஞாபகம் —அதாவது சம்சாரத்தின் புன்சிரிப்பு— வந்து நுழைந்தது. மூன்று வருஷங்களுக்கு முன் பொன்னம்மா எவ்வளவு ஜோராகப் புன்சிரிப்புக் கோப்பாள்! அது தன் கன்னத்திலோ, நெற்றிப் பொட்டிலோ தீவிட்டுப் புது டானிக்கைப் போல் கிளர்ப்பு ஊட்டுமே!

"சரஸா! நான் போய் உனக்கு ஒரு ஐஸ்க்ரீம் வாங்கி வரட்டுமா?" என்று வாலிபனின் குரல் குழைந்தது.

"இல்லே! வேண்டாம்..." என்று சரஸா மெல்லத் தலையாட்டி மிருதுவான குரலில் சொன்னாள். அந்தக் குரலில் ஒரு கவர்ச்சியும் தவிப்பும் இழைந்தன. வாலிபனை ஒரு நிமிஷம் கூடப் பிரிந்திருக்க முடியாது என்கிற தவிப்புத்தான் அது! அவனோடு ஒட்டிக் கொள்ள வேண்டுமென்ற உள்ளூற ஆசை இருந்தாலும் பெண்மையின் இயல்பினால் அவன் மீது பட்டும் படாததுமாகவே உட்கார்ந்திருந்தாள். வெகுளிப் பெண்தான். இருந்தாலும் வெட்கம் இராதா என்ன?

சரஸாவுக்குப் பதினேழு அல்லது பதினெட்டு வயதுதான் இருக்கும். வெகுளிப் பெண் என்று காட்டும் கள்ளங்கபடமற்ற குழந்தைத்தனமான முகத்தோடு வெள்ளரிப் பிஞ்சு மாதிரி மெல்லிய தோற்றம். அதோடு இளமையின் புதுக் குறுத்து! அதன் அழகே அலாதிதான்!

அவளுடைய அழகுக்கு வாலிபனும் குறைந்தவனல்ல. இன்னும் சொல்லப் போனால் சரஸாவை விட நல்ல சிவப்பு! மூக்கும் விழியும் மனசிலே ஆழமாகப் பதிந்து விடும்.

இருவரும் பொருத்தமான ஜோடிகள் தான்! அந்த நினைப்பிலே டிரைவர் கண்ணுச்சாமிக்கு ஒரு தனி உற்சாகம்! அதையொட்டி அவர்கள் மீது இனம் புரியாத ஒரு பாசம்!

"என்ன...?" — சரஸாவின் குரல் தான். அதிலே ஏதோ ஒரு தயக்கம்.

"உம் அம்மா ஞாபகமா, சரஸா?"

"ம்... இப்போ அம்மா இருந்தால்.."

"அசடு! அசடு! அம்மாவையும் நம்மோடு அழைத்து வர முடியுமோ?"

சரஸாவின் ரோஜா நிற முகத்தில் ஏதோ ஒரு சலனம். பெரிய விழிகளில் ஏதோ ஒரு மருட்சி! வாலிபனின் ஆவலுக்கு எதிர் முனை போலவே அந்த

மருட்சி சரஸாவின் விழியோரங்களில் தத்தளித்தது.

டிரைவர் கண்ணுச்சாமி ஏதோ சந்தேகத்தோடு மீண்டும் ஒரு முறை சரஸாவைக் கவனித்துப் பார்த்தான்.

சரஸாவின் கழுத்தில் புது மஞ்சள் கயிறு மினுமினுத்தது.

புதுசாகக் கல்யாணமானவர்கள் போலும்! இன்னும் சாந்தி முகூர்த்தம் கூட நடந்திராது. அதுதான் சரஸாவின் கண்களில் அந்தமருட்சி! ஏதோ இனம் புரியாத பயம்!

''சரஸா! புதுக்கோட்டையிலே உனக்கு ஓவல்டின் கிடைக்கும். சாக்லெட் டின் கூட வாங்கலாம்!'' என்று வாலிபன் பரிவோடு சொன்னபோது அவளுடைய குரல் ஏனோ தழுதழுத்தது.

''இனிமேல் எனக்கு அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம்.''

ஓவலும் சாக்லெட்டும் சாப்பிடும் வழக்கமுள்ள சரஸா பெரிய பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணாகத் தான் இருக்க வேண்டும்! அவளுடைய மெல்லிய தோற்றத்தில் கூட ராஜ களையின் கம்பீரமும், பணத்தின் ஊட்டமும் தெரிந்தன.

ஆனால் –

கழுத்தில் உள்ள மஞ்சள் கயிற்றையும் காதுகளில் மங்கலச் சின்னமாக ஒட்டிக் கொண்டிருக்கும் சின்னஞ் சிறு தங்கத் தோடுகளையும் தவிர வைர நகைகள் எதுவும் தட்டுப்படவில்லை. கைகளில் கூடக் கவரிங் வளையல்கள்தான். சாமான்கள்கூட அதிகமில்லை. இரண்டே சிறு தோல்பெட்டிகள்; அவற்றில் ஒன்று புதிது; மற்றொன்று பழையது. புதிய தோல்பெட்டியின் மீது தாம்பத்திய உரிமையை நிலைநாட்டும் சாஸனம்போல் 'சரஸ்வதி விசுவம்' என்று ஒரு காகிதத்தில் பெயர் எழுதி ஒட்டப்பட்டிருந்தது.

சரஸாவின் கண்கள் ஏனோ கலங்கின.

விசுவம் அதே புன்முறுவலுடன் சரஸாவின் கையை மிருதுவாகப் பற்றினான். அந்தப் பிடியில் சரஸாவுக்கு ஓர் ஆதரவு; மனசுக்கும் ஓர் ஆறுதல். அவன் விரல்களோடு தன் விரல்களைப் பின்னி இறுக்கிப் பிடித்துக் கொண்டாள்.

அப்போது விசுவம் உணர்ச்சிவசமாகி, ''சரஸா!'' என்று பொங்கினான். சுற்றிலும் பஸ் பிரயாணிகள் மட்டும் இல்லாவிட்டால்–?

அதற்குமேல் கற்பனை செய்ய டிரைவர் கூட – அந்த அரைக் கிழவன் கூட வெட்கப்பட்டு நெளிந்தான். ஆனாலும் மனசிலே அளவு கடந்த குதூகலம். தன் வயதிலே முப்பது வருஷங்கள் குறைந்துவிட்ட மாதிரி!

அதன் பிறகு புது மணத் தம்பதிகளிடையே மௌனம். கருத்துக்களை ஆட்கொள்ளும் ஆழ்ந்த மௌனம்.

பஸ், கீரனூரை விட்டுக் கிளம்பி அடுத்த ஊரில் நின்றது. பெரும்பாலான பிரயாணிகள் இறங்கி விட்டார்கள். புதுமணத் தம்பதிகள் இருந்த ஸீட்டில் அவர்கள் மட்டும்தான்! கண்டக்டர் கூட வெகு தூரத்தில் பஸ்ஸின் ஒரு மூலையில் யோக நித்திரை புரிந்துகொண்டிருந்தான். கல்யாணமானவன். இரவின் கண் விழிப்புக்களை இப்படித்தானே இடைவேளைகளில் நிரவல் செய்ய வேண்டியிருக்கிறது?

விசுவம் இன்னும் சரஸாவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். கண்களிலே அதே ஆவல்; உதடுகளிலே அதே புன்சிரிப்பு. அவனுக்கு அந்த வெகுளிப் பெண்தான் உலகம். சரஸாவுக்கும் தன் கணவனின் நெஞ்சகம் தான் புக்ககம் என்று இருக்கும். ஆனால் ஆனால்... சரஸாவின் கருவிழிகளிலே பழைய மருட்சியோடு ஏதோ ஒரு பீதியும் ஏக்கமும் பெரிதாகித் தத்தளிக்கிறதே!

அதைப் பற்றி விசாரிக்க வேண்டும் போலிருந்தது கண்ணுச்சாமிக்கு! அவனோ வெறும் பஸ் டிரைவர். தன் தொழிலைப் பார்த்துக் கொண்டு போவதற்கு மேலாக பஸ் பிரயாணிகளின் சொந்த விஷயங்களில் அத்துமீறித் தலையிட்டு அவர்களின் மனத் தவிப்புக்களைப் பற்றி விளக்கம் கேட்க முடியுமா?

சரஸாவைப் பார்க்கும்போதெல்லாம் கண்ணுச்சாமியின் மனத்தில் தன் மகள் சகுந்தலாதான் வந்து நின்றாள். அவள் பிறக்கும் முன்னால் கண்ணுச்சாமி பயந்தான். தலைப்பிரசவத்தில் சம்சாரம் பறி போய் விடுவாளோ என்று நடுங்கினான். கடைசியில் ஆஸ்பத்திரி ஆபரேஷன் உதவியது. ஆனால் சகுந்தலை பிறந்த பிறகு பொன்னம்மாள் அழுதாள். அவளுக்கு இனிமேல் குழந்தை பிறக்கக் கூடாதென்று டாக்டர்கள் ஏகமனதாகச் சொல்லி அதற்கான ஆபரேஷனை, அதாவது கர்ப்பத்துக்கு நிரந்தரமான மூடுவிழாவை வெற்றிகரமாக நடத்திவிட்டார்கள். பொன்னம்மாளின் அழுகை இரண்டு நாட்கள்வரை ஓயவில்லை. கடைசியில் கணவனின் ஆறுதல் வார்த்தைகளாலும் அன்பின் கதகதப்பாலும் ஓரளவு ஓய்ந்தாள். அதன் பிறகு தன் வாழ்க்கைக்கே ஒரே குழந்தை, தன் தாய்மைக்கே ஒரே பற்றுக்கோல் என்பதால் சகுந்தலாவைக் கருவேப்பிலைக் கன்றைப் போல் செல்லமாக வளர்த்தான். ஏழாவது வகுப்பு வரை மகளைப் படிக்க வைத்தான். வீட்டில் மிகவும் காற்றோட்டமுள்ள மாடியறை முழுவதையும் சகுந்தலாவுக்கென்றே தனி உலகமாக ஒதுக்கிக் கொடுத்தான்.. அதன் பிறகு –

சரஸாவின் மெல்லிய பேச்சுக் குரல் கேட்டது.

''ஏன்னா, இதோ பாருங்களேன்... நாம இப்படிச் செய்யறது சரிதானா?'' என்று கேட்டுவிட்டுச் சரஸா இலேசாக வாய்க்குள்ளேயே விம்மினாள்.

''சரிதான் என்று தீவிரமாக யோசிச்சுத் தீர்மானம் பண்ணிண்டுதான் இந்த முடிவுக்கு வந்து விட்டோம்! இனிமேல் அதை நெனச்சு வருத்தப்படுவானேன்?''

''உங்களைக் கல்யாணம் செய்திண்டதாலே வருத்தப்படலே! ஆனா அப்பா அம்மாவை நெனச்சாத்தான்...''

''அவாளும் நம்ப மனசைப் போல் நெனச்சிருந்தால் அவா ஆசீர்வாதத்தோடே ஜாம் ஜாம்னு மேள தாளத்தோடு கல்யாணம் நடத்தியிருக்கலாம். தலை தீபாவளியையும் அவாள் வீட்டிலேயே கொண்டாடியிருக்கலாம்; அவ்வளவுதான்; அவா அவா பாக்கியம்!''

''அம்மாவைக் கூட ஒரு வழிக்குக் கொண்டு வந்துடலாம்! ஆனா அப்பாவை நெனச்சாத்தான் எனக்கு பயம்மா இருக்கு...''

''இனி அவாளைப் பற்றி ஏன் நெனைக்கிறே? உன் இஷ்டப்படியே அரச மரத்துப் பிள்ளையார் முன்னாடி ஒரு விக்னமும் இல்லாமே தாலி கட்டிட்டேன். உடனே அவாள் யார் கண்ணிலேயும் படாதே புறப்பட்டும் வந்துவிட்டோம். இனிமேல் என்ன?''

தைரியமளிக்கும் கையைச் சரஸா தன் பிஞ்சு விரல்களால் ஆதரவாக இறுக்கிப் பிடித்துக் கொண்டு விசுவத்தின் தோள் மீது மெல்லத் தன் தலையைச் சாய்த்துக் கொண்டாள். கண்களில் நிறையும் கண்ணீரைக் கண்ணிமைகள் மூடி மறைத்தன.

## 2

**ப**ஸ் புதுக்கோட்டை நகரையடைந்து தன் கடமையை முடித்துக் கொண்டு நின்றது.

பஸ்ஸை விட்டுச் சரஸா கீழே இறங்குவதற்குத் தயங்கினாள்.

''காரைக்குடிக்கு உடனே பஸ் கிடைக்குமா?'' என்று விசுவம் பரபரப்புடன் டிரைவர் கண்ணுச்சாமியிடம் கேட்டான்.

''கடைசி பஸ்ஸு போயிடுச்சு! இனிமேல் காரைக்குடிக்கு பஸ்ஸு காலங் காத்தாலேதான்!'' என்று கூறினான் கண்ணுச்சாமி.

சரஸா மருட்சியுடன் விசுவத்தின் கையைப் பற்றிக் கொண்டு, ''அது வரையில் நாம் எங்கே இருக்கிறது?'' என்று கேட்டாள்.

''எங்காவது ஹோட்டலுக்குப் போய் ஒரு ரூம் எடுத்துப்போம்!''

''ஊஹூம்! இங்கே எங்க சித்தப்பா இன்ஸ்பெக்டரா யிருக்கார்! அவாளெல்லாம் அடிக்கடி ஹோட்டலுக்கு வருவா!'' என்று சரஸா நடுங்கினாள்.

''பின்னே என்ன பண்ணறது சரஸா! நாம எங்கேயாவது தங்கித்தானே ஆகணும்?'' என்று விசுவத்தின் குரலும் இலேசாக நடுங்கியது.

''அதுதான் எனக்கும் புரியலே!'' என்று சரஸா விம்மினாள். தன் மனசுக்குள்ளேயே அமைதியாக அழ ஆரம்பித்தாள்.

அது டிரைவர் கண்ணுச்சாமியின் இருதயத்தை இளக்கியது. பாவம், சின்னஞ் சிறுசுகள். பெற்றோருக்குத் தெரியாமல் ஓடி வந்தவர்கள் என்றாலும் புது மணத்தின் இன்பங்களை அனுபவிக்கச் சகல உரிமைகளும் உள்ள தம்பதிகள்தான்! ஆனால் அதற்காக அவர்கள் பயப்படுகிறார்கள்! தங்களையே தைரியப்படுத்திக் கொண்டு ஒருவருக்கொருவர் அந்தத் தைரியத்தைப் பரிமாறிக்கொள்ள முயலுகிறார்கள். ஆனால் மணநாளின் முதல் இரவைக் கூடத் தனித்திருந்து களிப்பதற்கு இந்த உலகத்தில் அவர்களுக்கு ஓர் இடமும் இல்லை. அதிலும் தலை தீபாவளியை வேறு கொண்டாட வேண்டியவர்கள்...

சரஸா தன் அழுகையின் விம்மல்களைக் கசப்புடன் தன் கைக்குட்டைக்குள் அடக்கிவிட முயன்று கொண்டிருந்தாள். அவள் அருகில் விறைப்பாக நிற்கும் விசுவம் வெட்ட வெளியின் அந்தி இருளை வெறித்து நோக்கிவிட்டுத் திரு

திருவென விழித்தான். அவன் முகத்திலிருந்த உற்சாகக் களையெல்லாம் சரியத் தொடங்கின.

டிரைவர் கண்ணுச்சாமிக்குப் பொறுக்கவில்லை. காதலர்களுக்கு அடைக்கலம் தர வேண்டுமென்று மனசு தூண்டியது. அவன் விசுவத்திடம் வலிய வந்து, "ஒங்களுக்கு இஷ்டமின்னு என் வூட்டுக்கே வந்து சந்தோஷமா தங்கியிருங்க. அங்கே ஒரு மாடியறை காலியாகத்தான் கெடக்குது!" என்று சொல்லிவிட்டான். அதற்குமேல் தன் சம்சாரத்தின் அப்ரூவலைப் பற்றிக்கூட அவன் சிந்திக்க விரும்பவில்லை.

"உங்கள் வீட்டுக்கா?" என்று சரளா குழம்பினாள்.

"ஆமாம்மா! உன்னைப் பார்த்தா எம் பொஞ்சாதி ரொம்பச் சந்தோஷப்படுவாள். ஏனுக்க, ஒன்னைப் போல் ஒரு பொண்ணு எங்களுக்கு இருந்திச்சு... அது....அது...மூணு வருஷங்களுக்கு முன்னாடி போயிடுச்சு!" என்று கண்ணுச்சாமி கூறிய போது அவன் கண்கள் கலங்கின.

வயோதிகத்தின் அந்தக் கண்ணீர் பசுமையான கண்களில் ஒருவித பாசத்தின் பனித் திவலைகளாக மின்னலிட்டன.

"ஐயோ பாவம்!" என்று சரளா பரிதாபப்பட்டாள்.

விசுவம் புது உற்சாகம் பெற்றவனாக, "உங்கள் மாடியறைக்கு வாடகை வேணும்னாலும் கொடுத்திடறோம்!" என்றான்.

"அதெல்லாம் வேண்டாங்க! எம் பொண்ணு போன கவட்டோட எம் பொஞ்சாதிக்கு வாழ்வே இருண்டு போயிடுச்சு. இப்ப நீங்க வந்து தங்கினால் என் வூட்டுக்கே உசிரு வந்திடும்!"

சரளாவின் முகத்தில் குதூகலம் பொங்கியது. "வாங்கோ, போகலாம்!" என்று நிர்ப்பயமாகக் கூப்பிட்ட அவள், "அந்த அம்மாவை நான் பார்க்கணும்!" என்றாள் மெல்ல.

"இந்தப் பெண்களின் போக்கே விசித்திரம்தான்! அவர்கள் மனசைப் புரிந்து கொள்ளவே முடியாது!" என்றான் விசுவம்.

"ஆமாம்! ஆமாம்!" என்று கண்ணுச்சாமி ஆமோதித்தான்.

## 3

புது மணத் தம்பதிகளை அழைத்துக்கொண்டு புறப்பட்ட கண்ணுச்சாமிக்குத் தன் வீட்டை நெருங்க நெருங்க நெஞ்சில் ஏதோ குமட்டியது. பழைய நினைவுதான்! மூன்று வருஷங்களுக்கு முன்பு, அவனது ஜாதகத்தில் சனி திசை நடக்கும் போது, அருமை மகள் சகுந்தலா அத்துமீறி ஒரு கிளீனர் பயலைக் காதலித்தாள். தகப்பனின் தடை உத்தரவுகள், தாயாரின் கண்ணீர் மாலைகள், புத்திமதிகள், கட்டுப்பாடுகள் அனைத்தையும் தாண்டி வீட்டிலிருந்து சிறிது பணத்தையும் எடுத்துக் கொண்டு அந்தப் பயலோடு சென்னை ஸ்தலத்துக்கு ஓடிப் போய் விட்டாள். அவன் வரை அன்றே மகள் செத்து விட்டாள். ஆனால் தாயுள்ளம் அப்படி நினைக்கவில்லை. தீபாவளிப் பண்டிகை சமயமாகையால் தன் பெண்ணையும் மாப்பிள்ளையையும் அழைத்து வந்தால்தான் அந்த வருஷம் தன் வீட்டில் தீபாவளி என்று பொன்னம்மா அடம் பிடித்தாள். அவர்களுக்காகப் புடவை, ரவிக்கை, ஜரிகை வேஷ்டி எல்லாம்கூட வாங்கி வைத்தாள். அவ்வளவையும் கண்ணுச்சாமி குத்துக்கல்லாட்டம் பார்த்துக்கொண்டிருந்தானே தவிர கிளீனர் பயலை மாப்பிள்ளையாக அழைத்து வந்து தலை தீபாவளி கொண்டாட அவனது கௌரவமும் விருப்பமும் இடம் கொடுக்கவில்லை. தீபாவளிக்கு முதல் நாள் பத்திரிகைகளில் ஒரு பரபரப்பான செய்தியும் சகுந்தலாவின் புகைப் படமும் பிரசுரமாகியிருந்தன. "ஓட்டல் அறைக்குள் காதலரின் பிணங்கள்! கட்டித் தழுவிய படியே செத்துக் கிடந்தார்கள்!" என்று பத்திரிகைகள் கொட்டை எழுத்துக்களில் டமாரம் அடித்து ருசிகரமாகச் சரம கவிதைகள் பாடின. அதைத் தொடர்ந்து போலீசாரின்





புலன் விசாரணை கண்ணுச்சாமியின் குடியிருப்பை இழவு வீடாகவும், பொன்னம்மாவின் தாயுள்ளத்தை நடைப் பிணமாகவும் ஆக்கி விட்டது. மகன் சம்பந்தப்பட்ட சின்னங்களையெல்லாம் மாடியறையிலேயே அடக்கம் செய்து அந்த அறையைச் சமாதிக் கிடங்காகப் பூட்டி வைத்து அதன் சாவியையும் பொன்னம்மா தன்னிடமே பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டாள். அதன் பிறகு அந்த மாடியறைக் கதவு மூன்று வருஷங்களாகத் திறக்கப்படவேயில்லை! பொன்னம்மாவின் மனக் கதவையும் கண்ணுச்சாமியால் திறக்க முடியவில்லை! மகனின் சாவோடு பெண்சாதியின் உள்ளமும் செத்துவிட்டது. இனி அந்த உள்ளத்தைத் தொடவே முடியாது. தன் வாழ்க்கையை ரம்மியமாக்கிய சம்சாரத்தின் சிரிப்பு, சரசம், சந்தோஷம் எல்லாம் போயே போய்விட்டன. அவற்றைத் திரும்ப வரவழைக்க முடியாமல் கண்ணுச்சாமி தோல்வி அடையும்போது சில சமயங்களில் தனிமையான இடங்களுக்குப் பின்வாங்கி ஓடிச் சூன்ய வெளிகளைப் பார்த்துக் குழந்தை போல் விம்மி விம்மி அழுவான். அவனுக்கு பஸ் டிரிப்பு முடிந்து வீட்டுக்குத் திரும்பி வந்தால் ஏதோ ஓர் ஆவி உலகத்துக்குள் நுழைவது போலவும் தானும் பேச்சு மூச்சற்ற ஓர் ஆவியாக மாறிவிடுவது போலவும் இருக்கும்! 'கடவுளே! இதற்கு ஒரு விமோசனம் இல்லையா?' என்று அவன் பொருமுவான்.

4

கண்ணுச்சாமி தன் வீட்டுத் தெருக் கதவைத் தட்டினான்.

அவனுக்குப் பின்னால் சரஸாவும், விசுவும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டே நின்றார்கள். புதுமண தம்பதிகளுக்கு இரவில் தங்குவதற்கு ஓர் இடம் கிடைத்து விட்டது. அந்த ஆவல் நெருநெருப்பிலும் குஷியிலும் மற்றவர்களைப் பற்றிக் கவலைப்பட மாட்டார்கள். தங்களைத் தாண்டி எதையும் பார்க்க மாட்டார்கள். அதனால் இருவரும் அனாதியான இரண்டு புன்முறுவல் கொத்துக்கள் போலவே நின்றுகொண்டிருந்தார்கள்.

தெருக்கதவு திறப்பதற்குச் சிறிது நேரமாயிற்று. உள்ளே சமையலறையில் பொன்னம்மா தன் நித்தியக் கடமையை இயந்திரம் போல் செய்துகொண்டிருக்கிறாள் என்பதற்கு அறிகுறியாகச் சோற்றுக் கரண்டியுடன் வந்து கதவைத் திறந்தாள். கணவனுக்குச் சோறு வடிப்பதற்காகத்தான் தன் உடலில் உயிரை வைத்துக்கொண்டிருக்கிறாள் என்பதுதான் அதன் உட்பொருள்!

இன்று அவள் கண்ணெதிரே ஒரு புதுப் பிரகாசம் தென்படவே, கனவுகள் கழிந்த காலமாக அமிழ்ந்து கிடக்கும் கண்ணிமைகளை உயரத் தூக்கி வெளியே நிகழ்காலத்தை ஊடுருவிப் பார்த்தாள்.

வாசற்படியில் கண்ணுச்சாமிக்குப் பின்னால் அடைக்கலப் புறாக்களைப் போல் நிற்கும் இளஞ்சோடியை அவள் வெறித்து நோக்கினாள். பிறகு தன் கணவனை உற்றுப் பார்த்தாள்.

கண்ணுச்சாமி தலை குனிந்தபடி, "அவுங்க புதுசாக் கண்ணாலமானவங்க. பஸ்ஸிலே வந்தாங்க. ராவுலே தங்குறதுக்கு இடம் கெடைக்கலே!" என்று அறிமுகப்படுத்தினான்.

பொன்னம்மா பதிலேதும் சொல்லாமல் சரஸாவையே குறுகுறுவெனச் சில கணங்கள் ஏற இறங்கப் பார்த்தாள். பிறகு, "சோறு பொங்கிடும்!" என்று பிரஸ்தாபனையுடன் விர்ரென்று உள்ளே போய்ச் சமையலறைக்குள் மறைந்தாள்.

கண்ணுச்சாமி தலையைச் சொறிந்தான். புதுமணத் தம்பதிகளை "வாங்க! வாங்க!" என்று வாய் நிறையக் கூப்பிட்டு உள்ளே அழைத்துச் சென்றான். சின்னஞ் சிறு கூடத்தின் ஒரு மூலையில் சுவர் மாடத்தின் சிம்னி விளக்கின் வெளிச்சம் அதிகமாகப் படும் இடத்தில் ஒரு ஜாதிக்காய்ப் பெட்டி கிடந்தது. அதுதான் அவனுடைய ஜீவனோபாயச் சாமான்களின் கழிசடைகளும் குடும்பத்தின் சேமிப்புப் பண்டங்களும் வருஷக் கணக்காக வளர்ந்து வரும் கருவூலம்! அதன் மீது தம்பதிகளை உட்கார்ந்து கொள்ளும்படி கண்ணுச்சாமி ஜாடை காட்டினான். பிறகு அவன் சமையலறைக்குள் புகுந்து, அங்குமிங்கும் நடை பயின்று விட்டுத் தன் சம்சாரத்திடம் விண்ணப்பத்தை ஆரம்பித்தான்.

"இந்தா பொன்னம்மா! அதுகள் பாவம், சின்னஞ் சிறுசுகள்! இன்னைக்குக் காத்தாலேதான் கண்ணாலமாச்சாம்! நாளைப் பொழுது விடிஞ்சால் தீபாவளிங்கிறதைக் கூட மறந்திட்டு பஸ்ஸுலே வந்திருச்சுக! ஹோட்டல்லே தங்கிறதுக்கு அந்தப் பொண்ணு பயப்படுது! அதனாலேதான் இங்கே கூட்டிக்கிட்டு வந்தேன்.... நம்ப வூட்டுலேதான் மாடியறை காலியாக் கெடக்கே... வாடகை கூடக் கொடுத்திடறதாக அந்தப் பிள்ளையாண்டான் சொல்லிச்சு!"

பொன்னம்மா அப்போதும் பேசவில்லை. நிமிர்ந்து தன் கணவனை ஒரு முறை நன்றாகப் பார்த்துவிட்டு மாடியறைச் சாவியைத் தேடி எடுத்தாள்.

கண்ணுச்சாமி பொசுக்கென்று சமையலறையை விட்டு வெளியேறிக் கூடத்தினுள் சரண் புகுந்தான்.

ஜாதிக்காய்ப் பெட்டி மீது குசுகுசுவென்று ஏதோ பேசிக் கொண்டு உட்கார்ந்திருந்த இளந் தம்பதிகள் சட்டென்று பேச்சை நிறுத்தினார்கள். ஆனால் ஒருவர் முகத்தைப் பார்த்து ஒருவர் புன்முறுவல் கொள்வதை மட்டும் நிறுத்தவில்லை. அவர்களுடைய கவலைகள் பயங்களெல்லாம் எங்கோ பறந்தோடிவிட்டன. அவற்றுக்குப் பதிலாக இப்போது எதிர்காலக் கனவுகளும், பூரண மகிழ்ச்சியும், இரவின் உத்சாகக் குறுகுறுப்பும்தான் அம் முகங்களில் குடியேறி இருந்தன.

அதுபோல் கண்ணுச்சாமியும் பொன்னம்மாவும் கூட ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு நேரம் போவது தெரியாமல் மகிழ்ந்திருந்த காலமும் ஒன்று உண்டு! அப்போதெல்லாம், பொன்னம்மா தன் கடைவிழியோரங்களில் ஆனந்தக் கண்ணீர் ததும்பக் கண்ணுச்சாமியைப் பார்த்து இப்படித்தான் புன்முறுவல் பூப்பாள்! இப்போது அந்தப் புன்முறுவலெல்லாம் வறண்டு ஒடுங்கி விட்டன! எல்லாம் மூன்றே வருஷங்களுக்குள்!— மகள் சகுந்தலா மாண்டுவிட்ட தேதியிலிருந்து!

ம்: இப்போது புது விருந்தாளிகளாக வீட்டுக்கு வந்திருக்கும் புது மணமக்களைப் பார்க்கும்போது பொன்னம்மாவின் உள்ளத்தில் எத்தகைய உணர்ச்சிகள் எழும்பும்...?

பொன்னம்மா தன் மூலஸ்தானமான சமையலறையிலிருந்து ஒரு துடைப்பத்துடன் புறப்பட்டு வந்தாள். ஏதோ கனவில் உலவுவது போலவே யந்திர கதியில் அங்கும் இங்கும் நடமாடினாள். அவளுக்கு என்ன கொடுமை செய்து விட்டோமென்று கண்ணுச்சாமி தன்னைச் சபித்துக் கொண்டான்.

மேலே மாடியறையை, மூன்று வருஷங்களாகப் பூட்டிக் கிடக்கும் அந்த அறையைப் பொன்னம்மா திறக்கும் சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து அறையின் தூசி ஒட்டடைகளையெல்லாம் துடைத்துச் சுத்தப்படுத்துவது, மெத்தையை விரித்துத் தலையணைகளைத் தட்டிப் போடுவது முதலானவைகளெல்லாம் பொன்னுச்சாமியின் ஞானச் செவிகளுக்கு எட்டின. அவனுக்கு 'ஓ' வென்று அழ வேண்டும் போலிருந்தது. ஓடிப் போன சொந்த மகளைத் தலை தீபாவளிக்கு அழைத்து வராமல் சாவுக்குக் கௌரவத் தீனியாகக் கொடுத்த கணவன் இப்போது யாரோ பஸ்ஸில் ஓடி வந்திருந்தவர்களுக்குத் தன் மகளின் மெத்தையையே விரிக்கச் சொன்னால் ஒரு தாயுள்ளம் என்ன பாடுபடும்?

அந்தத் தாய் சிறிது நேரத்தில் மாடிப் படிக்கட்டு வழியாக இறங்கி வந்தாள். அவளுடைய வெளுத்த முகத்தில் இப்போது ஒரு புன்முறுவல் நாய்க் குடை போல் முளைத்திருந்தது. அந்தப் புன்முறுவலே அவளுடைய கண்களில் அதி பயங்கரமாகவும் தோன்றியது. அவளைக் கண்ணுச்சாமி ஒரு தடவை ஏறிட்டுப் பார்த்தான். உடனே தன் பார்வையைத் திருப்பிக் கொண்டான்.

புதுமணத் தம்பதிகளைப் பொன்னம்மா தான் மாடியறைக்கு அழைத்துச் சென்றாள். அரை மணி நேரம் கழித்து அவள் மட்டும் தனியாக இறங்கி வந்தாள்.

மாடியறைக் கதவு சாத்தப்படும் சத்தமும், இளம் தம்பதிகளின் மெல்லிய சிரிப்புக்களும் கேட்டன. சிறிது நேரத்தில் அச்சிரிப்புகளும் ஏதோ ஒரு லயிப்பில் அடங்கிப் பூரண அமைதி நிலவியது !

## 5

கூடத்தில், ஜாதிக்காய்ப் பெட்டி அருகில், கண்ணுச்சாமி தனக்கென விரிக்கப்பட்டிருந்த மெத்தையில் படுத்திருந்தான். அவனுக்கு எப்போதும் இரண்டு தலையணைகள் தேவை ! இப்போது இரண்டு தலையணைகளையும் தள்ளிப் போட்டு விட்டுத் தன் கையையே தனக்குத் தலையணையாக வைத்துக் கொண்டு படுத்திருந்தான்.

கூடத்தின் சிம்னி விளக்கைப் பொன்னம்மா ஊதியணைத்து விட்டுக் கண்ணுச்சாமியின் அருகில், தனக்கென உரிய கோரைப் பாயை விரித்து அதில் தனியாகப் படுத்துக் கொண்டாள்.

இருளோடு சேர்ந்து நிசப்தம் அதிகக் கனமாக வெகு நேரம் நிலவியது.

கண்ணுச்சாமியின் தலை மாட்டில் வைக்கப்பட்டிருக்கும் அலாரம் கடிகாரம், அதாவது மறு நாள் 'டூட்டி'க்கு அவனை வாடிக்கையாக எழுப்பும் யந்திரக் கோழி, 'டிக் டிக்' என்ற ஒலியை இருளின் நிசப்தத்தில் அதிகமாகப் பெருக்கிக் கொண்டிருந்தது.









ஐம்பத்தெழு நிமிஷங்கள் கழிந்தன.

எங்கோ ஒரு பெண் கல கலவென்று சிரிக்கும் ஒலி! அது கன்னுச்சாமியின் நெஞ்சிலிருந்து கிளம்பும் கடந்த கால பிரமையாகத்தான் இருக்கும்!

ஏனெனில், அறையினுள் யந்திரக் கோழியின் 'டிக் டிக்' என்ற கால அறிவிப்பு ஒலிகளையும், வயோதிகத்தின் தளர்ந்த மூச்சுக்களையும் தவிர வேறு எந்த விதச் சத்தமுமே இல்லை!

கன்னுச்சாமி தன் இமைகளை இறுக்கி மூடிக் கொண்டு, உடல் அசதியின் பாரத்தால் நித்திரா தேவியின் அணைப்புக்கு வசமானான். ஆனால் அது அரைகுறையான தூக்கந்தான்.

திடீரென்று ஏதோ அழுகைச் சத்தம் கேட்டுக் கன்னுச்சாமி கண் விழித்துக் கொண்டான். பக்கத்தில் கோரைப் பாயில் சற்றுத் தள்ளிப் புரண்டு படுத்திருந்த பொன்னம்மாதான் மெல்லிய குரலில் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தாள். கணவன் அயர்ந்து உறங்குகிறான் என்று அவள் நினைத்திருப்பாள்! மின்னி விளக்கின் வெளிச்சம் மஞ்சள் நீராக அவள் உடம்பெங்கும் குளிப்பாட்டியது.

மனைவியின் நடு நிசி அழுகையை அமர்த்துவதற்குத் திராணியில்லாமல் கன்னுச்சாமி தன் படுக்கையிலே அசைவற்றுக் கண் மூடியபடி கிடந்தான்.

வாழ்க்கையில் எத்தனையோ கஷ்டங்கள் வந்த போதும், வறுமையால் பட்டினி கிடந்த காலங்களிலும் கூடப் பொன்னம்மா சாமானியத்தில் அழமாட்டாள். தன் புன்முறுவல்களிலேயே எல்லாத் துயரங்களையும் துடைத்து நிலைமைகளைச் சமாளித்துச் சரிக்கட்டி விடுவாள். அவள் அபூர்வமாக அழுத சமயங்களை விரல் விட்டே எண்ணி விடலாம்.

சரஸாவை அழைத்து வந்ததால்தான் பொன்னம்மா தன் பெண்ணை நினைத்துக் கொண்டு இப்படிக் குமுறிக் குமுறி அழுகிறாள்! ஓடிப்போன சொந்தப் பெண்ணை அழைத்து வந்து தலை தீபாவளி கொண்டாட மனையில் இடம் கொடாத புருஷன், அதே போன்ற ஒரு தீபாவளித் தினத்தன்று யாரோ பஸ்ஸில் ஓடி வந்த புது மணத் தம்பதிகளைத் தன் வீட்டுக்கு அழைத்து வந்து தன் மகளின் மாடியறையிலே மெத்தை விரிக்கச் சொன்னால், கண்ணீர் வெடிக்கத்தானே செய்யும்? கன்னுச்சாமி தன் தர்ம சிந்தையை நொந்து கொண்டான். பொழுது விடிந்ததும் அப்புது மணத் தம்பதிகளைக் கிளப்பி வெளியே விரட்டிவிட வேண்டியதுதான் என்றும் தீர்மானம் பண்ணினான்.

சிறிது நேரத்தில் பொன்னம்மாவின் அழுகை அடங்கி நின்றுவிட்டது. அதற்கு மேல் அழுவதற்கு அவளது மெல்லிய உடலில் பலம் இல்லை போதும்!

கன்னுச்சாமி குறட்டை விட்டான். பல் ஒடிய அசதியிலே பிணம் போல் தூங்கும் அவன் இனிமேல் அலாரம் கடிகாரம் அலறினால்தான் எழுந்திருப்பான்!

6

பொழுது விடிவதற்கு முன்பே சாமக் கோழி போல் அலாரம் கடிகாரம் அலறியது.

கன்னுச்சாமி தன் படுக்கையிலிருந்து துள்ளி யெழுந்தான். பக்கத்துப் பாயில்

**"யோவ்! பாரய்யா நீ! பெட்ரோல் பங்குக்குப் பக்கத்திலே பட்டாசுக் கடை வெச்சிருக்கிரே?"**

**"அதனால் பரவாயில்லேங்க: அவர் கடை பட்டாசுகளைப் பெட்ரோல் ஊத்தித்தான் கொளுத்தணும்!"**

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

வழக்கமாகத் தென்படும் பொன்னம்மாவைக் காணோம்!

சமையலறையில் ஏதோ சத்தம் கேட்டது. அங்கே பொன்னம்மாதான் அடுப்பை மூட்டிக் கொண்டிருந்தாள்.

கன்னுச்சாமியின் குரல் கரகரத்தது. அவன் ஒரு கனைப்பின் மூலம் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "பொன்னம்மா! அதுங்க ரெண்டும் மாடியிலே யிருந்து இன்னும் எழுந்திரிக்க வல்லே! நான் போயி கதவைத் தட்டி அதுகளைக் கிளப்பிடறேன்!" என்றான்.

"நீங்க போக வேணும்! நானே போயி அவுங்களை எழுப்பிட்டேன். அவுங்க ரெண்டு பேரும் நம்ம கிணற்றடியில் குளிச்சிட்டு இப்பத்தான் மாடிக்குப் போயிருக்காங்க!" என்று பொன்னம்மா வாய் திறந்து பேசினாள். அவள் கண்களில் உறைந்திருந்த சூனியம், விரக்தி, அசமந்தப் பார்வை எல்லாம் மறைந்து இப்போது அதிசயமான ஒரு பார்வை குடியேறியிருந்தது.

அது என்ன பார்வை என்பது கன்னுச்சாமிக்குப் பிடிபடவில்லை. அவன் குழம்பியவாறு, "அதுகளை உடனே அனுப்பிச்சடறேன்!" என்று தன் கருதியிலேயே நின்றான்.

"இல்லே, வேணும்! பொண்ணும் மாப்புள்ளையும் இன்னும் ரெண்டு நாளைக்கு நம்ப ஊட்டிலேயே இருக்கட்டும். அப்பாலே தகவல் குடுத்து மாப்புள்ளை ஊட்டுக்கே பொண்ணை அனுப்பி வைப்போம்!"

"அதுகள் தாய்தோப்பன் திரும்ப ஏத்துக்கிடுவாங்களா?"

"அதுதான் நம்மோட பொறுப்பு! அவுங்க வந்தா நான் எல்லாத்தையும் பேசிச் சரிக்கட்டிப்புடுவேன்!" என்று உறுதியாகக் கூறிய பொன்னம்மா, "எப் பேர்ப்பட்டவங்க ஊட்டிலேயும் தாய் மனசு ஒண்ணுதான் இருக்கும். அது ஒரு பொண்ணைப் பெத்தவளுக்குத்தான் தெரியும்!" என்று அழுத்திக் கூறினாள்.

கன்னுச்சாமி அதைக் கேட்டு அடங்கி ஒடுங்கி விட்டான்.

மேலே மாடியறைக் கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து மாடிப் படிக்கட்டில் காலடி ஓசைகள்! புது மணத் தம்பதிகள்தான் சொர்க்கலோகத்திலிருந்து மெல்ல நடைமுறை உலகத்துக்கு இறங்கி வந்துகொண்டிருந்தார்கள்.

விகவத்துக்குப் பின்னால் சரஸா ஒளிந்து ஒண்டிக் கொண்டு நாணப் புன்முறுவலுடன் வந்தாள். அவளது கண்கள் சிவந்து போயிருந்தன. கண்ணிமைகளும் சோர்ந்து கருவிழிகள் தள்ளாடின. அது போல் விகவத்தின் கண்ணிமைகளும் சோர்ந்து இறங்கிக் கறுத்து அவற்றினுள் கண்கள் இரண்டும் ஜில்லென்று சிவந்திருந்தன. ஆனால் அந்தச் சோர்விலும் அலாதியான ஒரு திருப்தி புதுக் களை கட்டியிருந்தது.

சரஸவுக்கு வெட்கம் தாங்கவேயில்லை. அதனால்தான் விகவத்துக்குப் பின்னால் பதுங்கிப் பதுங்கி வந்தாள்.

கன்னுச்சாமிக்கோ வியப்பால் அகல விரிந்த கண்கள் மூடவேயில்லை.

சரஸா புதுப் புடவை உடுத்தி அதன் முந்தானையை இழுத்து நன்றாகப் போர்த்திக் கொண்டிருந்தாள். அவளுடைய வளையல் ஒலிகளோடு போட்டியிட்டுக் கொண்டு விகவத்தின் ஜரிகை வேஷ்டி மினுமினுத்தது. அவையெல்லாம் பொன்னம்மா தன் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் மூன்று வருஷங்களுக்கு முன்பு வாங்கி வைத்திருந்தவைதான்!

அந்த அலங்காரத்தை யெல்லாம் பொன்னம்மா கண் கொள்ளாமல் பார்த்தபடி மெய்ம்மறந்து நின்றாள்.

விகவத்தின் முகத்திலிருந்து சரஸாவின் புன்முறுவலுடன் பார்வை சிறிது நகர்ந்து பொன்னம்மாவின் மீது லயித்தது. உடனே சரஸாவின் கண்களில் நீர் நிறைந்து ததும்பியது.

"சக்க! அந்த அம்மாவை நமஸ்காரம் பண்ணிக்கோ!" என்றான் விகவம்.

ஆனந்தக் கண்ணீர் விழியோரங்களில் நர்த்தனமாடச் சரஸா குடுகுடுவென்று பொன்னம்மாவை நோக்கித் தாவியோடினாள். ஆனால் அவள் கீழே விழுந்து கும்பிடுவதற்குள் அவளைப் பொன்னம்மா தூக்கிப் பிடித்துத் தன் நெஞ்சார அணைத்துக் கொண்டாள். அந்த ஓர் அணைப்பே பொன்னம்மாவின் ஆயுள் முழுவதற்கும் போதும் போல் இருந்தது.

இரு பெண்களின் கண்களும் சந்தித்தன. அந்தப் பார்வையில் கன்னுச்சாமிக்குப் புலப்படாத ஏதோ ஒன்று பரிவர்த்தனை ஆயிற்று. அவர்களுக்குள் எவ்வளவோ நடந்திருக்கிறது என்றும் தோன்றியது.

பொன்னம்மா சிரித்தாள்! மூன்று வருஷங்களாக எந்தச் சிரிப்புக்காகக் கன்னுச்சாமி தவம் கிடந்தானோ, அந்தச் சிரிப்பு பொன்னம்மாவின் முகத்தில் பிறந்து விட்டது!




# மபத்லால் க்ரூப்

## தீபாவளி வாழ்த்துக்கள்

*Aiyars MG. 574 TM*

# திருவாளர் கோட்டை விட்டனர்!

"மாப்பிள்ளே!...இதோ பாருங்க! ஒரு டெர்ரின் ஷர்ட்டுக்குப் பதிலாக இரண்டு டெர்ரின் ஷர்ட்டுகளாகவே வாங்கி விட்டேன்! பிடித்திருக்கின்றனவா?" என்று இரண்டு அட்டைப் பெட்டிகளைப் பீரோவிலிருந்து எடுத்து நீட்டினார் மாமனார் நாகசாமி.

மாப்பிள்ளை சபேசன் நாசூக்காக அவைகளைத் திறந்து பார்த்துவிட்டு மேஜை மீது வைத்தான். அவனுடைய மௌனமே அவனுடைய திருப்தியை வெளிக்காட்டியது.

மாமனாரும் மாப்பிள்ளையும் மாடி அறையில் தனியாகத்தான் பேசிக் கொண்டிருந்தார்கள். நாகசாமி கதவருகில் போய் வெளியே எட்டிப் பார்த்து யாரும் வராந்தாவில் நின்று ஒட்டுக் கேட்கவில்லை என்று நிச்சயித்துக்கொண்டு உள்ளே வந்தார். தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

"மாப்பிள்ளே!" என்றார் நாகசாமி கெஞ்சலாக.

"என்ன?" என்று அழுத்தலாகக் கேட்டான் சபேசன்.

"உங்களாலே ஒரு சின்ன உதவி நடக்கணும்."

"என்ன?...இந்தத் துணிகளுக்கான விலையை நானே கொடுக்கணுமோ?"

"அடாடா! அப்படிச் சொல்றவன் நானு? இது வேறே விஷயம்."

"சொல்லுங்களேன்! பிரமாத சஸ்பென்ஸ் கொடுக்கிறீர்களே!"

நாகசாமி நெருங்கி வந்து சபேசன் காதில் ஏதோ ரகசியமாகச் சொன்னார். சபேசன் முகத்தில் எந்த விதமான உணர்ச்சியும் தோன்றவில்லை. ஆனால் தலையை மாத்திரம் மறுக்கும் தோரணையில் ஆட்டினான்.

"மாப்பிள்ளே! அப்படிச் சொல்லக் கூடாது! நான் என் நிலைமையை விளக்கி விட்டேன்! நீங்கள் செய்யும் உதவி எனக்கு..." நாகசாமி சொல்ல முடியாமல் தவித்தார்.

சபேசன் பதில் ஒன்றும் சொல்லவில்லை. விடுவிடென்று கீழே இறங்கிப் போய் விட்டான். நாகசாமியின் வேண்டுகோளை அவன் ஏற்றுக் கொண்டானா, மறுத்து விட்டானா என்று அவருக்கே தெரியவில்லை.

பகல் சாப்பாடு சம்பிரமமாக ஆயிற்று. பிறகு சபேசன் எங்கோ வெளியே போய் வந்தான். காப்பி சாப்பிட்டு விட்டு வாசல் பக்கம் வந்தவன் தெருவில் போய்க் கொண்டிருந்த ஜட்கா வண்டி ஒன்றைக் கை தட்டிக் கூப்பிட்டு நிறுத்தினான். உள்ளே வந்து தன் சூட்கேசைக் கையில் எடுத்துக் கொண்டான்.

அதற்குள் வீட்டில் கசமுசவென்று ஆகிவிட்டது. சபேசனின் மனைவி சரோஜா நாகசாமியிடம் ஓடி வந்தாள். "அப்பா! அப்பா! உங்க மாப்பிள்ளைக்கு ஏதோ கோபம் போலிருக்கிறது! ஊருக்குக் கிளம்பிவிட்டார். நீங்க போய்ச் சமாதானம் பண்ணுங்க அப்பா! நானும் கிழமையா இப்படி..."

"போனால் போகட்டும் போ! என்னால் போய் யாரையும் தாங்கிக் கொண்டிருக்க முடியாது. மாப்பிள்ளை என்றால் மாமனார் சரணாகதியாகவே கிடக்க வேண்டும் என்ற சட்டம் இருக்கிறதா? என்னால் யார் காலிலும் போய் விழ முடியாது" என்று சீறினார் நாகசாமி. சரோஜா கணவனிடம் மீண்டும் வந்தாள்.



"சரோ! நான் நினைத்தால் நினைத்ததுதான்! நீ வேண்டுமானாலும் என்னுடன் கிளம்பு! ஆட்சேபணையில்லே. ஆனால் என்னால் இங்கிருக்க முடியாது. நிச்சயம்." சபேசன் சூட்கேசுடன் வண்டியை நோக்கிக் கிளம்பினான்.

சரோஜாவும் கையில் அகப்பட்ட துணிகளை ஒரு பையில் திணித்துக் கொண்டு அவனைத் தொடர்ந்தாள். நாகசாமி வாசல் திண்ணைக்கு வந்தார். ஆனால் வாயைத் திறக்கவில்லை. அவர் கவனமெல்லாம் எதிர் வீட்டு வாசலிலும் தெருவிலும்தான் பதிந்திருந்தது. கோபித்துக் கொண்டு போகும் மாப்பிள்ளையைப் பார்க்க அக்கம்பக்கத்தினர் தயாராக நின்றார்கள். நாகசாமியின் மனைவி என்ன நச்சரித்தும் நாகசாமி மௌனச் சாமியாராக இருந்தார்.

வண்டிக்காரன் குதிரையை விரட்டினான். வண்டி பறந்தது. அப்போதுதான் நாகசாமியின் உடலும் பறந்தது. உள்ளே வந்தவர் பின்கட்டு வழியாகச் சைக்கிளைத் தூக்கிக் கொண்டு ஸ்டேஷனுக்கு ஓடினார். அவர் போய்ச் சேர்ந்தபோது சபேசன் டிக்கெட்டே வாங்கி விட்டான்.

"மாப்பிள்ளே! மாப்பிள்ளே! இது என்ன? நம்ப ஏற்பாடு வண்டி அமர்த்தி வாசலில் கூட்டம் கூடும் வரைதானே? நீங்கள் டிக்கெட் வாங்கி விட்டீர்களே?" என்று பதறினார் நாகசாமி. சரோஜா ஒன்றும் புரியாமல் விழித்தாள்.

"மாமனார் சார்! உங்க ஏற்பாட்டுக்கு நான் ஒத்துக் கொண்டது உண்மைதான். ஆனால் எதிர்பாராத விதமாக அதில் ஒரு சிறு திருத்தம் செய்துகொள்ள வேண்டி நேர்ந்தது. அதற்கு நீங்கள் பொறுப்பில்லே! அதனால் உங்கள் வெற்றியின் அளவு அதிகமாகிறதே! கவனித்தீர்களா?" என்றான் சபேசன் சிரித்துக் கொண்டே.

"என்ன ஏற்பாடு? என்ன கூப்பாடு? எனக்கு ஒன்றுமே விளங்கலே! அப்பா நடந்து கொள்றது விசித்திரமாக இருக்கே!" என்று கலங்கினாள் சரோஜா.

"உங்க அப்பாவோட மேலதிகாரி எதிர் வீட்டில் குடியிருக்கிறாராமே! அவர் எப்போ பார்த்தாலும் உங்கள் அப்பாவைப் பயந்தாங்குள்ளி, கோழை என்று சொல்லிப் பிரமோஷன் கிடைக்காமல் தடுக்கிறாராம். அவருக்குப் புரியும்படி தாம் மாப்பிள்ளை கோபத்துக்கே அஞ்சாத ஆசாமி என்று காட்டிக் கொள்ள ஒரு நாடகமாடினார் மாமனார் சார்! உங்க அதிகாரி நான் கிளம்புவதைப் பார்த்தாரா? உங்களுக்குப் பரம சந்தோஷமா?"

"நீங்கள் இப்போது திரும்பி வந்தால்தானே நாடகம் பூர்த்தியாகும்? வீட்டுக்குத்திரும்புங்கள்! மாப்பிள்ளே! ப்ளீஸ்! ப்ளீஸ்!" என்று காலில் விழாக் குறையாகக் கெஞ்சினார் நாகசாமி.

"ரைட்! டிக்கட்டை ரீபண்ட் பண்ணிப் பணம் வாங்கி வருகிறேன்" என்று கிளம்பினான் சபேசன்.

"மிஸ்டர் நாகசாமியா? எனக்குத் தெரியும் நீர் ஒரு தொடைநடுங்கி, பயந்தாங்குள்ளி என்று! ஜம்பமாக வீட்டு வாசலில் மௌனம் சாதித்து விட்டு, இங்கே வந்து மாப்பிள்ளை காலில் விழுகிறீரா?" என்று கேட்டுக் கொண்டே அந்தப் பக்கம் வந்தார் நாகசாமியின் எதிர் வீட்டு அதிகாரி.

பாவி! அவரும் இந்தச் சமயம் பார்த்தா உறவினர்களை எதிர் பார்த்து ஸ்டேஷனுக்கு வந்து சேர வேண்டும்?

கோமதி சுவாமிநாதன்





---



ஆந்திரப்பிரதேசத்து
மயில் தீபம்
(18ம் நூற்றாண்டு)
பூனாவிலுள்ள ராஜா கேல்கர்
மியூசியம் உதவியது



# வாழ்வில் ஒரு திருப்பம்

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

வழக்கத்தைவிட அன்று வெகு சீக்கிரமாகவே எழுந்து விட்டான் சுந்தர். காலை நேரத்து இளம் காற்று திரையை அசைக்க ஜன்னல் வழியே கதிர்கள் பாய்ந்து கண் கூசும்வரை அவன் எழுந்திருக்க மாட்டான். காப்பியைக் கையில் வைத்துக் கொண்டு ஜானகி வந்து தலைமயிரைக் கோதி மெல்ல எழுப்பும்வரை அசையவும் மனம் இருக்காது.

அன்று அவள் வந்தபோது சுந்தர் நிலைக் கண்ணாடியின் முன் நின்றுகொண்டு முக க்ஷவரம் செய்து கொண்டிருந்தான். காப்பியைப் பக்கத்தில் வைத்து விட்டுச் சற்று அசையாமல் நின்றாள் ஜானகி. அவன் பதில் சொல்ல மாட்டான் அந்தச் சமயத்தில். அன்று ஒரு புதிய சங்கடமும் சேர்ந்திருந்தது. விரல்களின் பதற்றத்தில், சரியாகத் தூங்காத கண்களின் சிவப்பில் அது தெரிந்தது.

ஜானகி பக்கத்தில் முக்காலியில் உட்கார்ந்து கொண்டாள், தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு. அன்று அவளுக்குச் சரியான வேலையிருக்கும். அதை நினைக்கும்போதே உடலில் ஓர் அயர்ச்சி. கனவு மயக்கமாகக் கண்களில் கவிந்து நின்ற சோர்வு. கண்ணாடியில் அவள் முகத்தைப் பார்த்த சுந்தர் ஒருமுறை சிரித்துக் கொண்டான். அவன் கன்னத்தில் சிறு வெட்டு காட்சியளித்தது.

''எங்கே இப்படி அஜாக்கிரதையாக –'' என்று எழுந்து அருகே வந்தாள் ஜானகி. சுந்தர் கன்னத்தை ஒற்றிக் கொண்டான். அவளுக்கும் தெரியும். அவன் சொல்லத் தேவையில்லை. அவனிடமிருந்த அந்தப் பரபரப்பு, அதில் நிலைகொள்ளாத மனம். அதன் அடையாளமாக விழுந்தது தான் அந்தக் கீறல். ஜானகி ஒரு முறை விரல்களைக் குவித்து விட்டுக் கொண்டாள், என்ன சொல்வதென்று தெரியாமல்.

"அது இருக்கட்டும்..... இன்றைக்கு எங்கள் டைரக்டர் வருகிறார். உனக்கு ஞாபகம் இருக்கிறதா?"

"நேற்று சாயங்காலம்தானே சொன்னீர்கள்? விடியற்காலையில் எழுந்து இப்படி நீங்கள் கண்ணாடியின் முன்னால் நிற்பதிலேயே தெரியவில்லையா?"

அவனும் சிரிக்க முடியவில்லை. வேறு நிலையில், வேறு சமயத்தில் அவன் ரசித்திருக்கக் கூடும் அந்தப் பேச்சை. ஆனால் அவனுக்குக் கவனம் வேறு எதிலும் ஓடாது அன்றைக்கு; பரீட்சைக்குப் போகிற பள்ளிக்கூடப் பையன் மாதிரி.

"எல்லா ஏற்பாடுகளையும் கவனித்துக் கொள். அவர் திருப்தியாகத் திரும்பி ஊருக்குப் போக வேண்டும். அதுதான் முக்கியம்."

அவள் நிமிர்ந்து பார்த்தாள். அந்தக் குரலில் கவலை தோய்ந்திருந்தது. அன்று முழுதும், மறு நாள் ரயிலில் ஏற்றி விடும் வரை அவன் அப்படித்தான் இருப்பான். அவளுக்கு மனத்தில் ஒருவித பச்சாத்தாப உணர்ச்சி எழுந்தது. அவன் கவலைக்காக மட்டும் அல்ல அது. தன்னை அவன் இன்னொருவரிடம் கட்டுப்படுத்திக் கொள்ளும் அந்த நிலைக்காகத்தான். அவன் குளித்து விட்டு வருமுன் சிற்றுண்டியை எடுத்து வைக்க உள்ளே போனாள்.

உடையணிந்து கொண்டு கடிகாரத்தைக் கட்டியபடி நிமிர்ந்தான் சுந்தர். அவன் பார்வை தோள்புறம் வந்து நின்றவளின் புறம் திரும்பியது. அவள் ஏதோ சொல்லப்போவதை எதிர்பார்த்து நின்றது அவன் முகம்.

"டைரக்டர் நாகராஜ் இங்கே என் வேலையைப் பார்ப்பதற்காக இன்று வருகிறார். இது சிறிய வேலை. அதுவும் முடியப் போகிற நிலையில் இருக்கிறது. அவர் வந்து பார்த்துச் சொல்ல எதுவும் இல்லை. என்னை ஒரு மதிப்புப் போடத்தான் வருகிறார் அவர். நான் அவரிடம் ஓர் அபிப்பிராயத்தை அழுத்தமாக ஏற்படுத்திக் கொண்டாக வேண்டும். கட்டாயமாக......"

சுருங்கிய அவன் நெற்றியைப் பார்த்ததும் அவன் கையை அவள் இறுகப் பற்றிக் கொண்டாள். "எல்லாம் சரியாக நடக்கும். ஏன் கவலைப்படுகிறீர்கள்? நானும் பார்த்துக் கொள்கிறேன்" என்று குழந்தைக்குத் தைரியமும் உற்சாகமும் ஊட்டும் தாயைப் போல மீண்டும் மீண்டும் சொன்னாள் ஜானகி. கைக்குட்டையினால் அவன் நெற்றியை ஒற்றினாள்.

"சரி. நான் வரட்டுமா? ரயில் ஏழரை மணிக்கு. பத்து நிமிஷங்களில் இங்கே வந்து விடுவோம்."

படிகளை நாலெட்டாகத் தாண்டி ஜீப்பில் ஏறி உட்கார்ந்து கொண்டான். ஜானகி அது புறப்பட்டுச் சென்ற திசையைப் பார்த்தபடி நின்றாள். ஸ்டேஷன் இரண்டு மைல் தூரம் இருக்கும். அவர்கள் வீடு சற்று உயரமான மேட்டில் இருந்தது. பெட்டியில் அடுக்கினாற்போல் சிறு கடைகள். அவைகளின் நடுவே பாம்பாய் வளைந்து செல்லும் சாலை. தூரத்தில் ஜீப் போய்க் கொண்டிருந்தது. அசையும் புள்ளியாகத் தெரிந்தது.

குளிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டாள். அவர்கள் வந்து குளித்தானதும் வெளியே போகப் போவதாகச் சுந்தர் சொல்லியிருந்தான். சிற்றுண்டியும் தேநீரும் தயார் செய்திருந்தாள். அவருக்குத் தேநீர்தான் பிடிக்கும் என்பது சுந்தர் அறிந்து கொண்ட இரகசியம். எல்லாவற்றையும் ஒரு முறை சரி பார்த்து விட்டு உடையை மாற்றிக் கொள்ளப் போனாள்.

அவள் வெளியே வருவதற்கும் ஜீப் வாசலில் வந்து நிற்பதற்கும் சரியாக இருந்தது. சிரித்துப் பேசியபடி இறங்கிய அவரைக் கதவருகே நின்றபடி கவனித்தாள் ஜானகி. வழுக்கை விழுந்த முன் தலை. உரத்துச் சிரித்தபடி, கைகளைப் பின்னால் கட்டிக் கொண்டு, கால்களை ஊன்றி நிமிரும் பாவனையில் சற்று உயர முயலும் தோற்றம். பார்த்தவுடன் எடை போட முடியாத அழுத்தமான சுபாவம் போலத் தோன்றியது. கண்களின் கூர்மை அவளைத் தயங்க வைத்தது.

"என் மனைவி—"

அவள் கைகூப்பி நிமிருவதற்குமுன் அவர் கைகூப்பிச் சிரித்துக் கொண்டார். கையைக் கால் சராயில் விட்டுக்கொண்டு ஒரு முறை சுற்றிப் பார்த்தார்.

முன்புறம் அறைக்கு வந்ததும் ஜானகி கதவைத் திறந்து வைத்துவிட்டு ஒதுங்கிக் கொண்டாள். "இந்த அறை தங்கள் உபயோகத்துக்கு. கொஞ்சம் இளைப்பாறி விட்டு — "

"நான் இளைப்பாற இங்கே வரவில்லை......" என்று உரக்கச் சிரித்தார் அவர். அவனும் கூடவே சிரித்துக் கொண்டான்; அசட்டுச் சிரிப்பு!

"அப்படியானால் குளித்து விட்டுச் சிற்றுண்டி அருந்தியானதும் வேலையைப் பார்க்கப் புறப்படலாமா?"

"ஓ! அப்படியே செய்வோம்" என்று கட்டிலில் உட்கார்ந்து பூட்ஸைக் கழற்ற ஆரம்பித்தார். சுந்தர் ரேடியோவை மெதுவாகத் திருப்பி வைத்து விட்டுச் செய்தித் தாளை அவர் அருகே கொண்டு வந்து வைத்தான். அவரைத் தனிமையில் விடுவதே போல அவன் ஒதுங்கிக் கொண்டான்.

அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள் ஜானகி. அவள் உணர்ச்சிகள் அழுந்திக் குழம்பின. சுந்தரின் முகத்தில் எத்தனை ஆயாசம்? பேசிக் குரலில், செயற்கையான சிரிப்பில், வலுவாக வரவழைத்துக் கொண்ட சுறுசுறுப்பில், அவன் மறைத்துக் கொள்ள முயன்ற பரபரப்பு? தன்னை அப்படிப் பின்னுக்குத் தள்ளிக் கொண்டு தன் இயல்பான சுபாவத்தை அடக்கிக் கொண்டு, வெளியில் அடைபட்டதைப் போல அவன் நின்றதைக் கண்டதும் அவள் மனம் பொருமத்தான் செய்தது.

அவர் குளிக்கப் போய் விட்டார். அவன் நாற்காலியில் உட்கார்ந்துகொண்டான். மின் விசிறியை அவன்புறம் திருப்பிவிட்டாள் ஜானகி. அவன் உடல் ஒரு கணம் கூசிச் சிலிர்த்தது. அதை அனுபவிக்கத் தயங்கியதைப் போல். டைரக்டர் அருகே இல்லை என்பதை அவன் மறந்திருக்க வேண்டும். அவளால் சிரிக்க முடியவில்லை. பச்சாத்தாபம்தான் பொங்கி எழுந்தது. எதற்கோ பயந்து பயந்து, தனக்குள்ளே புழுங்கிக் கொண்டு......

புடவைத் தலைப்பைத் திரித்துத் திருகியபடி கேட்டாள் ஜானகி. "நீங்கள் எப்போது திரும்புவீர்கள் ?"

"ஐந்து மணி ஆகிவிடும். சாப்பாடு வொர்க்ஸ்பாட்டிலேதான்."

அவன் பக்கம் கண்ணெடுத்துக் கூடப் பார்க்க வில்லை. கால் மாறிக் கால் ஆட்டியபடி உட்கார்ந்திருந்தான். மனத்துக்குள் அன்று செய்ய வேண்டியவைகளைப் பற்றி என்னென்ன திட்டங்களோ?

இருவரும் சாப்பிட உட்கார்ந்தார்கள். அவர் பேசிக் கொண்டே சாப்பிட்டார். நல்ல பசியாக இருக்கலாம். சுந்தருக்குத்தான் எதுவும் இறங்கவில்லை. அவர் சிரிப்புக்கும் குரலுக்கும் பின்னால் அவன் அடங்கி விட்டதைப் போல் அவன் பசியும்கூட அடங்கி விட்டதோ? தேநீர் வைத்ததும் கோப்பையை எடுத்து மள மளவென்று அருந்தத் தொடங்கினான் சுந்தர். அவனுக்குத் தேநீர் என்றுமே பிடிக்காது. விருப்பு வெறுப்புகளுக்குக் கூட அங்கே சுதந்திரம் இல்லை. நாற்காலியில் சாய்ந்து கொண்டு அநுபவித்துத் தேநீரை உறிஞ்சிக் கொண்டிருந்தார் நாகராஜ்.

அவர்கள் கிளம்பிப் போய் விட்டார்கள். அவள் அப்படியே தரையில் உட்கார்ந்து கொண்டாள். ஐந்து மணி வரை எல்லாம் அவளுக்கு மட்டும்தான். இஷ்டப்பட்டபோது, தேவையானதைச் சமைத்துக் கொள்ளலாம். வெய்யில் கன்னென்று காலில் அடித்தது. அந்த வெம்மையும் ஓர் இதமாகத்தான் இருந்தது. விரல் அசைக்க மனமில்லை.

மணமாவதற்கு முன்பே சுந்தரை அவளுக்குத் தெரியும். படிப்பை நடுவில் நிறுத்தி விட்டு அவள் கலியாணத்தைப் பற்றித் தந்தை யோசித்துக் கொண்டிருந்த சமயம். சுந்தர் அவர்களுக்கு ஒரு வகையில் உறவும்கூட. சிறு வயதிலேயே தாயை இழந்து விட்டான். தந்தையும்

## அழுகையின் அழகு !



"ஆயிரம் ஆயிரமா தீபாவளிக்குச் செலவு பண்ணியும் உங்க அப்பா சிரிச்ச முகத்தோடு இருக்காரே? ஆச்சரியம்தான்!"

"உங்களுக்குத் தெரியாதா? அவருக்குப் பாச்ச வாயுங்க. அழுதாலும் சிரிச்சமாதிரி தான் இருக்கும்!"

# பின்னி துணிகளுக்கு முகமூடி தேவையில்லை...
## தரமிக்கவை, வெளிப்பூச்சற்றவை பின்னி துணிகள்

**'ஸ்டார்ச்' கிடையாது:** சலவை செய்தவுடன் மறைந்து போகும் 'ஸ்டார்ச்' போன்ற பகட்டுள்ள வெளிப் பூச்சுகள் பின்னி துணிகளில் சேர்க்கப்படுவதில்லை.

**அளவுக்குமீறி வெளுக்கப்பட்டவையல்ல:** மிகையான வெண்மைத் தோற்றமளிக்கும் ரசாயனப்பொருள்கள் துணிகளின் பலத்தைப் பாதிக்கின்றன. மிதமாக 'ப்ளீச்' செய்து, உறுதிகுன்றாமல் தயாரிக்கப்படும் காரணத்தினாலேயே பின்னி துணிகள் உயர்தரத்திற்கு உலகப் புகழ் அடைந்துள்ளன.

**கெட்டிச் சாயம்:** உலகில் சிறந்த கெட்டிச் சாயப்பொருள்கள், அனுபவமிக்க ரசாயன ஆராய்ச்சியாளர்களின் கண்காணிப்பு — இவையே பின்னி துணிகளின் கெட்டிச் சாயத்திற்கு சிறந்த உத்திரவாதமாகும்.



## பின்னி – துணி உலகில் புகழ்பெற்ற பெயர்

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட், பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்
பின்னி & கம்பெனி லிமிடெட், மதராஸ், ஏஜண்டுகள் [unclear reading: word after "மதராஸ்,"]



காற்றோடு போன  கசங்கிய காகிதம்!

**ஒரு துண்டு காகிதம்!** எழுதியிருந்ததைப் படித்தாயிற்று, எறிந்து விட்டான் பள்ளிச் சிறுவன்! அவன் வாழ்வை வளம்படுத்த தன்னையே தியாகம் செய்த இந்தக் காகிதத்தின் பிறப்பிடம் டாண்டேலி.

தி வெஸ்ட் கோஸ்ட் பேப்பர் மில்ஸ் தொழிற்சாலை டாண்டேலியில் இருக்கிறது. மேனாடுகளில் பயிற்சி பெற்ற தொழில் நிபுணர்கள், நவீன விஞ்ஞான முறைகளைக் கையாண்டு, எழுதுவதற்கும், அச்சடிப்பதற்கும், பாக் செய்வதற்கும் ஏற்ற காகித வகைகளை இங்கு உற்பத்தி செய்கிறார்கள், காகிதங்களின் தரம் ஒரே சீராக இருப்பதை கண்காணிப்பதற்காகவே ஒரு தனி ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி பிரிவு டாண்டேலியில் இடைவிடாமல் இயங்கி வருகிறது.

**தி வெஸ்ட் கோஸ்ட் பேப்பர் மில்ஸ் லிமிடெட்.** ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1

shilpi WC-20 TAM

சரியாக எந்த உத்தியோகத்திலும் நிலை கொள்ளாமல் இருந்து விட்டார்.

உடனே கலியாணத்துக்கு இசைய வில்லை சுந்தர். "ஒரு நல்ல உத்தியோகம் கிடைக்க வேண்டும். வாழ்க்கையில் பிடிப்பு ஏற்பட வேண்டும். அப்புறம் தான் மற்றவைகள் எல்லாம்."

"இப்போது நீ ஓர் உத்தியோகத்தில் இருக்கிறாயே?" என்று வற்புறுத்திக் கேட்டார் அவள் தந்தை.

"இதிலேயே உயர்வு கிடைக்க வாய்ப்பு இருக்கிறது. இன்னும் கொஞ்ச நாட்கள். இரண்டு வருஷங்கள். உங்கள் பெண்ணும் கஷ்டம் இல்லாமல் இருக்க வேண்டும். அதற்குத்தான் சொல்லு றேன். அப்புறம் உங்கள் இஷ்டம்."

நேற்றுப் போல இருந்தது. கதவின் மறைவில் நின்று அந்தப் பேச்சைக் கேட் டுக் கொண்டிருந்தது; அவர்கள் எழுந்து உள்ளே வரும் காலடிச் சத்தம் கேட்டதும் முகம் சிவக்க உள்ளே ஓடியதும்தான்.

மேலும் இரண்டு வருஷங்கள். அவள் மீண்டும் படித்துக் கொண்டிருந்தாள். அதன் முடிவில் அவர்கள் திருமணம். அந்த இரண்டு வருஷங்களும் அவள் எத்தனையோ தடவைகள் எண்ணிய துண்டு. இப்போதும் கூடத் தான். அவனுக்காக அவனு டைய திட்டமா அது? அல்லது அவனுடைய வாழ்க்கைத் திட் டத்தில் அவளுக்குப் பிற்பட்ட இடம்தானா? எவ்வளவு தூரம் அவன் அந்தரங்கத்தை அவள் பகிர்ந்துகொள்ள உரிமை இருந் தது? அவனுடைய வெற்றி யிலும் முன்னேற்றத்திலும் அவள் பங்கு என்ன? எவ்வளவு தூரம் அவள் துணையையும் எதிர்பார்த்தான் அவன்?

அப்போதும்கூட அது தெளிய வில்லை. காலை முதல் தெரியும் அவன் தடுமாற்றத்தில், அவ ரைக் கவர முயலும் அவன் தீவிரமான முயற்சியில், அவள் பின்தங்கி விட்டாற்போல் ஒரு தோற்றம். தன்னையே குறைத்துக் கொள்ள முயலும் அவன் செய்கை களில் அவள் உணர்ச்சிகளைப் பொருட் படுத்தாதது போன்ற ஓர் அலட்சியம். திடீரென்று ஒரு வெறுப்பு பொங்கி வந்தது. புதிதாக அவர்களிடையே அன்று வந்து சேர்ந்தவர்மீது......

கண்ணாடியின் முன் அமர்ந்து கூந் தலைக் கோதி விட்டுக் கொண்டிருந்தாள். நீண்ட அவள் கூந்தலை அவன் கையில் அள்ளிக் கொண்டு விடும் ஞாபகம். சாப் பாட்டு வேளை. எங்கே இருந்தார்களோ அப்போது? அவன் சரியாகச் சாப்பிட முடியுமோ என்னவோ அன்றைக்கு? அவளுக்கு உணவு இறங்க வில்லை. தட்டை அப்படியே வைத்து விட்டு எழுந்து விட்டாள்.

மணி ஐந்து. வாசற்புறம் தோட்டத் தின் நடுவே ஒரு குட்டை மேஜையைப் போட்டு வெள்ளைத் துணியை விரித் திருந்தாள். சுற்றிலும் பிரம்பு நாற் காலிகள். முகம் கழுவி உடை மாற்றிக் கொண்டு அவர்கள் இருவரும் வந்து உட்கார்ந்து கொண்டார்கள். கண் ணாடித் தம்ளர்களில் பழ ரசம் கலந்து தட்டில் வைத்து எடுத்துக் கொண்டு வந்தாள் ஜானகி. புழுக்கத்தினிடையே சில்லென்ற காற்று தவழ்ந்தது போன்ற அவள் உபசாரப் புன்னகை. சுந்தருக்குப் பெருமையாக இருந்திருக்கக் கூடும். ஆனால் அநுபவிக்க இயலவில்லை.

"நீயும் உட்காரலாம்...." என்று நாற்காலியைக் காட்டினார் நாகராஜ். அவளும் உட்கார்ந்து கொண்டாள்.

"மாலை வேளைகளில் உனக்கு எப் படிப் பொழுது போகிறது?" என்று சுந்தரைக் கேட்டார். எப்படிப் பொழுது போகும்? சில நாட்கள் இருவருமாக உலாவப் போவார்கள். இல்லாவிட் டால் அன்று போல் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பார்கள்.

"வேலையே சரியாக இருக்கும் ஸார்! திரும்பவே நேரமாகி விடும்—"



அவர் அதைப் பாராட்டுவார் என்று அப்படிச் சொன்னானா சுந்தர்? அவளுக்கு உள்ளூற ஒரு வெறுப்பு கழித்து நின்றது.

"மாலை நேரத்தில் வேலையைப் பற்றி நினைக்கக் கூடாது. விளையாடப் போக வேண்டும். இல்லை, உலாவப் போகலாம். என்ன சொல்லுகிறாய் நீ?" என்று அவள் பக்கம் திரும்பினார். அவளுக்கு எதுவும் சொல்லச் சங்கடமாக இருந்தது.

"உனக்குத் தெரியுமா? டைரக்டர் நன்றாக டென்னிஸ் ஆடுவார். பரிசுகள் கூட வாங்கி யிருக்கிறார். அவரைப் பார்க்கும் போது எனக்கும்கூட டென் னிஸ் ஆடப் பழகிக் கொள்ள வேண்டு மென்று ஓர் ஆசை" என்று அவசரமாக முந்திக் கொண்டான் சுந்தர்.

"ஒவ்வொருவருடைய டேஸ்ட் ஒவ் வொரு விதம்" என்று அமைதியாகச் சிரித்துக் கொண்டார் அவர். அவளுக்கு மனத்துக்குள் அடக்க முடியாத குமுறல். தன்னை அவன் ஏன் அப்படித் தாழ்த்திக் கொள்ள வேண்டும்? எதை அடைய ஆசைப்படுகிறான் அவன்? என்ன பலவீன மான முயற்சி அது? "சொல்லுங்கள். 'நான் என்றைக்கும் டென்னிஸ் ஆடிய தில்லை. ஆடவும் போவதில்லை' என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லுங்கள்" என்று வாய் விட்டுச் சொல்ல வேண்டும் போல் அவளுக்கு ஒரு துடிப்பு. சிரமப் பட்டு அதை அடக்கிக் கொண்டாள்.

எதற்காக அப்படிக் குழைய வேண் டும் அவன்? அவனைப் பற்றி நல்ல அபிப் பிராயம் கொள்ள அவன் வேலை செய்த தைப் பார்த்தால் போதாதா? அவ னுடைய காரியாலயத்தில் அவனைப் பற்றிய குறிப்புகள் இருக்காதா? போதாதா அவை? பொய் சொல்லுமா அவை? நாற்காலியின் பிடியில் கிறிய கைநகங்களையே பார்த்தபடி உட்கார்ந் திருந்தாள். பொருமிக் கொட்டும் குழந்தையைப் போலப் பேசாமல் தனக் குள்ளே குமுறிக் கொள்ளும் எண் ணங்கள். புருவங்கள் நெரிந்தன. குவிந்த இதழ்களைப் போலப் பிதுங்கும் அத ரங்கள். உதட்டைக் கடித்து அடக்கிக் கொள்ள முயலும் தவிப்பு. அந்தப் புல்லின் பசு மைக்கு, குளிர்ந்த காற்றுக்கு, ஒரு கணம் மனம் ஏங்கிற்று.

"இன்று காலையிலேயே சாப் பாடு சரி இல்லை. சாப்பிட லாமா?" என்று கேட்டு எழுந் தான் சுந்தர்.

"போகலாம். அதற்கு முன் உன் மிஸஸுக்குக் கொஞ்சம் அவகாசம் கொடுக்க வேண் டாமா?" என்று அவளைப் பார்த்துச் சிரித்தார் நாகராஜ்.

"நான் போய் இதோ தயார் செய்கிறேன்" என எழுந்தாள் அவள் விடுதலையானாற் போல.

"அவசரமில்லை" என்று பின் னால் குரல் கேட்டது. அது அவன் குரலாக இருந்திருக்கக் கூடாதா? அந்தச் சுவாதீனத்தை அவன் எடுத்துக் கொண்டிருந்திருக்கக் கூடாதா?

அநுபவித்துச் சாப்பிட்டார் நாக ராஜ். பிடித்தவைகளைக் கேட்டு வாங்கிக் கொள்ளத் தயங்க வில்லை. அவளுக்கு ஒரு விதத்தில் திருப்தி அது. சுந்தருக்கும் கூட. ஆனால் அதன் பின் நின்ற அவன் வேண்டுகோள்? அவளுக்கு அந்தத் திருப்தியின் மதிப்பு என்ன? அது வேறு விதம். பேச்சுசுவாரமாக இருந்தது. அவர் பேசியவரை. அதில் கொஞ்சம் உற்சாகம் கண்டதைப்போல் சுந்தரின் தத்தளிப்பும் கூடக் குறைந்தாற் போலத் தெரிந்தது.

அன்று அவள் எவ்வளவோ அக்கறை யோடு சமைத்திருந்தாள். சாதாரண மாக அவள் அதை உற்சாகத்தோடு அநுபவித்திருந்திருப்பாள். ஆனால் அன்று அவள் உணர்ச்சிகள் மங்கிக் கிடந்தன. புதிய மனிதர் வந்து சேர்ந்து விட்டதனால் அல்ல அது. புதுமையான சூழ்நிலைதான் அவளைத் திகைக்க வைத்தது.

கோப்பையில் பாயசம் பரிமாறிக் கொண்டிருந்தவள் நிமிர்ந்தாள். அவ ருடைய புன்னகை அவள் மனத்தில் குறுகுறுப்பை எழுப்பியது.

"மிஸ்டர் சுந்தர்! உண்மையிலேயே அதிருஷ்டசாலி நீங்கள்."

அவன் சட்டென்று தலை நிமிர்ந்து பார்த்தான்; அப்போதுதான் விழித்துக் கொண்டவனைப் போல.

"இதைப் போல் நான் சாப்பிட்டு வெகு நாட்களாயிற்று."

அவன் முகத்தில் பெருமிதமும் ஏமாற்றமும் குழம்பின. தன் வேலையைப் பற்றி, எதிர்காலத்தைப் பற்றி அவர் ஒரு சொல் குறிப்பிட்டிருந்தால் அவன் எவ்வளவு மகிழ்ந்து போயிருப்பான்? அவளுக்குத் தெரிந்தது அவருக்குத் தெரியாமல் இருந்திருக்குமா? தெரிந்து தான் பேசாமல் இருந்தாரா? ஜானகி எவ்வளவோ தடவைகள் அதைப் போல் சுந்தர் அழைத்து வரும் நண்பர்களோடு உட்கார்ந்து பேசியிருக்கிறாள். சில சமயங்களில் அது வேடிக்கையான பொழுது போக்காகக் கூட இருக்கும். அன்று ஏனோ மூட்டம் போட்டதைப் போல் அவர்களிடையே ஒரு மறுப்பு சூழ்ந்து கொண்டிருந்தது.

"உன்னிடம் ஒன்று கேட்க விரும்புகிறேன். ஹைதராபாத்துக்கு அருகே ஒரு பெரிய கண்டிராக்ட் வருகிறது. இருக்க வேண்டிய இடம் கொஞ்சம் அசௌகரியமானது. வசதிகள் எதுவும் இல்லை. தாற்காலிகமான குவாட்டர்ஸ் தான். கொஞ்சம் மலேரியாவும் இருக்கும். இரண்டு மூன்று வருஷங்கள் வேலை இருக்கும். சிறு வயசாய் நன்றாய் வேலை செய்யக் கூடியவனும் ஓர் அதிகாரியை உயர்வு கொடுத்து அனுப்பலாமென்று உத்தேசம். உன் அபிப்பிராயம் என்ன?"

அவன் அது வரை அதற்காகவா காத்துக் கொண்டிருந்தான்? அந்தக் கேள்விக்கு அவன் பதில் எப்போது தயாராயிற்று? அவள் கொஞ்சம் யோசிப்பாளு, அதில் இருக்கக் கூடிய இடைஞ்சல்களைப் பற்றி? தன் குடும்பத்தைப் பற்றி? அவளைப் பற்றி?



"நீங்கள் தீர்மானம் செய்கிறபடி ஸார்—"

அவன் நெற்றியில் வியர்வை அரும்பிற்று. முகத்தில் ஒரு திடமான களை கட்டியிருந்தது. பதவி உயர்வைப் பற்றி எண்ணமா? அவரைச் சரிப்படுத்திவிட்ட எண்ணமா? அவள் இழக்கக் கூடியது என்ன ? அதைப் பற்றிய எண்ணம் இருந்ததா அவன் மனத்தில். அவள் முகம் சட்டென்று விழுந்தது. மனத்தில் என்னென்னவோ எழும்பிக் குழம்பிற்று. அவர் சிரிப்பொலி கேட்டது.

"இந்தத் தீர்மானம் நீ செய்ய வேண்டியது — நீங்கள் செய்ய வேண்டியது— யோசித்து அப்புறம் சொல்லு."

"எங்களுக்குப் பிடித்திருக்குமென்று தான் தோன்றுகிறது. அசௌகரியங்களைக் கவனிப்பதற்கில்லை. இல்லையா?" என்று அவள் பக்கம் திரும்பினான் சுந்தர்; அவள் சம்மதத்தை எதிர்பார்த்து முடிவு கட்டி விட்டதைப் போல. அவளுக்குப் பேசத் தோன்றவில்லை. தலையைக் குனிந்து கொண்டாள். வேறு எதை அவன் எதிர்பார்த்திருக்க முடியும் ? வாழ்க்கைத் திட்டத்தில், பதவிகளின் உயர்வில், ஏணியில் படி ஏறிப் போவதைப் போலப் போகும்போது மேலே மட்டுதான் கவனிக்க முடியும். மற்ற எதையும் பார்ப்பதற்கில்லை; அவசியமும் இல்லை. அவள் என்ன சொல்ல முடியும்?

தலையை மட்டும் அசைத்தாள்.

உள்ளுக்குள் ஏதோ பொங்கி இழுத்தது. 'முன்பின் அறியாத சூழ்நிலை. வசதிகள் ஏதுமில்லாத காடு. உடல் ஆரோக்கியத்துக்குங்கூடப் பாதுகாப்பில்லாத இடம். அவளை ஓயாமல் வருத்தப் போகும் தனிமை. அதிக சம்பளத்தில் பதவி உயர்வில், வேலையில் தன்னை இழந்து விடப் போகும் சுந்தர்...'

தலையைச் சுற்றியது. அவள் ஏதோ பேச வந்தது தெரிந்தது. வார்த்தைகள் காதில் விழவில்லை. அவள் தடுமாற்றம் அவனுக்குத் தெரிந்திருக்க வேண்டும். எழுந்து வந்து அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

"என்ன? உனக்கு என்ன ஜானகி திடீரென்று—"

"ஒன்று....மி....ல்....லை....."

சமாளிக்க முடியவில்லை. கால் பிடி நழுவிற்று. அவன் மெதுவாக அறைக்குள் அழைத்துக் கொண்டு போனான். கட்டிலில் சரிந்து விழுந்தாள். அயர்ச்சியில் கண் மூடிற்று.

"ஜானகி! ஜானகி! என்னைப் பார்."

வெகு தூரத்திலிருந்து வருவது போன்ற குரலாய்க் காதில் விழுந்தது. கண்ணிமையைப் புரட்டித் திறக்க முடியாத அசதி.

"கொஞ்சம் தண்ணீர் குடிக்கிறாயா?"

அவள் கண்ணைத் திறந்தாள். பேசி விடுவதுதான் தேவலை. அவன் தெரிந்து கொள்வதே நல்லது. அதற்கு அது சமயமில்லை. ஆனால் அப்புறம் சமயம் நேராதல்லவா?

"கவலைப்படாதீர்கள். ஒன்றுமில்லை... இந்த மாதிரி சமயத்தில் வரக் கூடிய மயக்கம்தான்." தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

"பயப்படாதே." அவள் கன்னத்தின் மேல் அவன் கையை வைத்தான். நெருங்கிய அவன் கண்கள் புன்னகை புரிந்தன. இருவர் முகமும் அணைந்தாற் போல் நெருங்கி எதிர்நோக்குகையில், பரிவு இருவரையும் வலையாகப் பின்னிற்று; கூட்டில் சேரும் பறவைகளைப் போல. சற்று நேரம் சும்மா இருந்தான். சொன்னதை வாங்கிக்கொண்டு, வாங்கிக் கொண்டதைப் புரிந்து கொள்ளும் நேரம். அவளுக்கு விம்மல் வெடித்து வந்தது. சொல்ல முடியாமல் ஏதோ ஒரு துயரம் அவளை வாட்டியது.

"எதற்கு? எதற்கு அழுகிறாய், ஜானகி ?"

அவள் தோள்மேல் முகத்தைப் பதித்துக் கொண்டாள். அழுகை அவன் ஆதரவில் மறையும் என்று நினைப்பதைப் போல. ஏனோ அவளுக்கே அதற்கு விளக்கம் தெரியவில்லை.

"இப்போது உங்களுக்கு நான் தடையாக வந்து விட்டேன்......"

"என்ன சொல்லுகிறாய்?"

"இந்தச் சமயத்தில் நீங்கள் இதை எதிர்பார்க்க வில்லை. உங்கள் திட்டத்தில் குழந்தைக்கு இடம் இல்லை."

அவனுக்கு என்ன சொல்வதென்று தெரிய வில்லை. முதுகில் தட்டிக் கொடுத்தான். முகம் பரிவில் இளகிற்று. ஏதோ சொல்ல வேண்டுமென்று நினைத்தவன் நிறுத்திக் கொண்டான்.

"எனக்காக எதையும் நிறுத்தாதீர்கள். அவ்வளவுதான்....."

"கவலைப்படாதே. உனக்கு அப்புறம் தான் எல்லாம்—"

அவன் குரலில் உறுதி படர்ந்தது. அவனை அன்று அப்படிக் காண்பது அவளுக்குப் புதுமையாக இருந்தது. அந்த நிமிஷங்கள் அவர்கள் வாழ்க்கையில் ஒரு திருப்பம். அசைவில்லாத பனிப் பாறையின் அடியில் தெளிவாய் நழுவும் நீரைப் போல் அவன் இயல்பு அவளுக்குத் தெரியும் தோற்றம். அதுதான் அவன் உண்மையான தோற்றம்.

"நீங்கள் போய் அவரைக் கவனியுங்கள்."

அவன் சிரித்துக் கொண்டே எழுந்து வெளியே போனான். அவள் கண்களை மூடிக் கொண்டாள். அறையில் நிறைந்து கமழும் ஊதுவத்தி மணம். கண்ணிதழ்களை மூட வைக்கும் இதமான அதன் வாசனை. எங்கும் வியாபிக்கும் அதன் சுகந்தம். தன்னை எரித்துச் சாம்பலாக உதிர்த்துக் கொண்டுதானே அது அந்த மணத்தைக் காற்றில் பரப்புகிறது?

அவளால் சுந்தரைப் புரிந்து கொள்ள முடியவில்லை. வேடிக்கையாக இருக்கலாம். ஆனால் அவள் அன்று காண்பது அவளுக்கு விடுபடாத புதிர்தான். அவன் அறிந்த, தலை நிமிர்ந்த, தன்னம்பிக்கை மிகுந்த, துடிப்பு நிறைந்த இளைஞன் அல்ல அவன் அன்று. தன்னை, தன் உணர்ச்சிகளை, விருப்பு வெறுப்புக்களையுங்கூட அடிமையாக்கிக் கொண்டுவிளைய வரும் வாலிபனுகி விட்டான் அவன். திடீரென்று அவன் மெருகு குறைவதாகத் தெரிந்தது அவளுக்கு. தன் சுய கௌரவத்தையும் தன் மதிப்பையும் அவன் அப்படி நழுவவிடத் துணிந்து விட்

டதை எண்ணிய போது அவள் உடல் கூசியது. ஆனால் அவள் சற்று முன்பு கண்ட சுந்தர்? அவன் குரலில் தெரிந்த உறுதி? அந்தப் பார்வையில் அவளுக்குப் புதிதாய்க் காண்பதுபோலத் தோன்றிய நிமிடம்? எது உண்மை?

அவர்கள் உள்ளே வந்தார்கள். அவள் நாணிக் கொண்டே மெதுவாக எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

''நீ போகாமல் ஓய்வு எடுத்துக் கொள்ளம்மா. என் பெண் மாதிரி நீ. எனக்கு உன் வயதில் ஒரு மகள் இருக்கிறாள். தெரியுமா உனக்கு?''

ஏதோ ஒரு வெட்கத்தில் உதட்டோரங்களில் ஒளி படர்ந்தது. விளக்கை அணைத்து விட்டு அவர்கள் இருவரும் வெளியே போய் விட்டார்கள். விடிவிளக்கு மாத்திரம் இருளில் துளிர்த்து, தனியாய் அசைவற்று ஒளி சிந்தி நின்றது. அவள் சற்று நிமிர்ந்து உட்கார்ந்தாள். வெளியே அவர்கள் பேசுவது கேட்டது. அவன் குரல் அவளை வெளி உணர்வுக்கு இழுத்தது. தன்னை உதறிக் கொண்டு பழைய நிலையில் அவர்களுடன் போய் உட்கார்ந்து கொள்ளத் தோன்றும் துடிப்பு. அவள் எதிரே அவர்கள் அப்படிப் பேச மாட்டார்களோ என்னவோ?

''எனக்கு அந்த பிரமோஷன் வேண்டாம் ஸார்.''

''ஏன்? என்ன விஷயம்?''

என்னவென்று சொல்வான் அவன்? தனக்கென்று அவன் கோட்டை எதுவும் கட்டிக் கொள்ள உத்தேசம் இல்லை என்றா? தன் எதிர்காலத்துக்கு முன் தன் குடும்பத்தின் பாதுகாப்பை நினைக்கப் போவதாகவா? எதற்காகவும் தன் மதிப்பை இழக்க நினைக்கப் போவதில்லை என்றா?

''எனக்கு இப்போது என்னுடைய பொறுப்புக்கள் இருக்கின்றன ஸார்.''

''உன் சம்பளம் ஒன்றரைப்பங்கு அதிகமாகும்!''

''தெரியும்.''

''இதைப் போல இரண்டு பங்கு பெரிய வேலை அது....''

''இருக்கலாம்.''

''மேலும் பதவியில் உயர வாய்ப்பு இருக்கிறது.''

''தெரியும். ஆனால் உத்தியோகப் பொறுப்பைத் தவிர எனக்கு வேறு ஒன்றும் இருக்கிறது ஸார். என் கடமை, நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். நான் சொல்லத் தேவையில்லை. என் குடும்பம்..... அவளை நான் இந்த நிலைமையில் தனியே விடுவதற்கு இல்லை....''

அவர் சிரிக்கும் சத்தம் கேட்டது. அவளுக்கு நெஞ்சில் மலர்ந்த விரிப்பு. அந்தக் குரல் மலர்ந்த பன்னீரின் மணமாய் மனத்தில் நிறைந்தது. சிறகுகளின் மேல் பறப்பது போல இருந்தது. சுந்தர் பேசும் தொனியே வேறாகக் கேட்டது. தன்னை உணர்ந்த நிலையில் அவன் நிமிர்ந்து பேசினான். யாருக்கும் பணியும் உத்தேசம் இல்லை அதில். தன்னை ஒரு மனிதனாய் அழுத்திக் காட்டிக்கொள்ளும் நிலை அது. அவன் தன் மதிப்பு இழக்காத, சந்தர்ப்பங்களுக்கு விட்டுக் கொடுத்து விடாத ஒரு மனிதனாகி விட்டானே! அது போதும்.

நாற்காலியைப் பின்னுக்கு இழுத்துத் தள்ளி எழுந்திருக்கும் சத்தம் கேட்டது. படுத்துக் கொள்ளப் போகும் நேரம் ஆகிவிட்டது. இருவரும் பேசிக்கொண்டே வாசற்புற அறைக்குப் போனார்கள். குரல் மெல்ல மெல்லத் தேய்ந்து அடங்கி விட்டது.

அவள் கவிழ்ந்து படுத்துக் கொண்டாள்; நெஞ்சத் துடிப்பை அடக்க முயலுவது போல. அச்சமயத்தில் கூந்தலில் நெருக்கிக் கட்டிய மல்லிகைச் சரம் கலைந்து விழுந்து முகத்தில் சரிந்து விளையாடியது. அவன் வருவான் சிறிது நேரத்தில். அந்தக் காலடிச் சத்தத்தை எதிர்பார்த்து நெஞ்சு உயர்ந்து நின்றது. கண்கள் மூடி யிருந்தாலும்.

கதவைத் திறந்து மூடும் சத்தம் கேட்டது.

சுந்தர் மெல்ல நடந்து அவள் அருகே வரும் ஒலி. நெற்றியின் மேல் அவன் மூச்சுக் காற்று. அவள் தூங்குவதை அவன் கவனிப்பது தெரிவது போல. கன்ன மிருதுவில் அந்த உணர்ச்சி. அவள் உடல் சிலிர்த்து அடங்கிற்று. பக்கத்தில் அவன் பெருமூச்சு விட்டுத் தூங்க முற்படுவது தெரிந்தது. அவனுடைய அன்றைய முயற்சி வீண் போகவில்லை. இறுதி வெற்றி அவனுக்குத்தான். அதில் அவன் எதையும் இழக்கவில்லை. அவளுடைய கனிவு நிறைந்த பாராட்டுதலையும்கூட.

அந்த இணைப்பின் நெருக்கம் நெஞ்சைத் தொட்டது. உணர்ச்சி எழுந்து அலை பொங்கிற்று. சுழன்று நழுவினாற் போல் உள்ளம் தவித்தது. அவள் தோளில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவன் கைகள் அவள் கழுத்தைச் சுற்றி இறுகின.





# தமிழகத்தில் திருவிழா

சிறு ஊராக இருந்தாலும் அங்கே கோயில் மட்டும் வானளாவி நிற்கும். மற்ற எல்லாக் கட்டடங்களையும் விடக் கோயில் கோபுரத்தை உயர்வாகக் கட்டுவது தமிழ் நாட்டில் தொன்று தொட்டு இருந்து வரும் பண்பாடு. வீதி உலா புறப்படும்போது ஆண்டவனின் திருஉருவத்தை வண்ண வண்ண மலர்களால் கலையழகுடன் அலங்கரிப்பார்கள்.

தஞ்சை ஜில்லா இந்த அலங்காரக் கலைக்குப் பெயர்போனது. மாயூரத்தில் துலா உத்ஸவத்தில் பஞ்சமூர்த்திகளின் பவனி கண்கொள்ளாக் காட்சி.

தமிழர்கள் தங்கள் தங்கள் இஷ்ட தெய்வங்களைச் சிறப்பாகப் பூஜித்த போதிலும் முருக வழிபாடு ஒருவிதத்தில் தனித் தன்மை வாய்ந்தது. எப்படியெனில், அவரவர்களுக்கு விருப்பமான ஆகாராதிகளை உண்டாலும் அனைவரும் பொதுவாக அரிசிச் சோறு சாப்பிடுவது போல் முருக வழிபாடு மட்டிலும் வேடுவர் முதல் வேந்தன் வரை அனைவருக்கும் உகந்ததாக இருப்பதை அறிஞர்கள் கட்டிக் காட்டுவார்கள். ஆறுமுகனை வழிபடுவதிலேதான் எத்தனை விதங்கள்? பிரார்த்தனை செய்து கொண்டு காவடி எடுத்துச் செல்வோருக்குத் தொலைதூரம் நடந்து போகச் சக்தியையும் அந்தப் பக்தியே அளித்து விடுகிறதல்லவா?





தமிழர்கள் தெய்வ பக்தியில் சிறந்தவர்கள். நம் நாட்டில் உள்ள ஆலயங்களைப்போல் உலகில் வேறு எங்கும் காணுதல் அரிது. தமிழர்களுடைய வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் தெய்வீகம் பிரதிபலிக்கும். அவர்கள் உற்சாகமாக ஆடிப்பாடி மகிழ்வது கூட வெறும் கேளிக்கை என்ற முறையில் மட்டுமல்ல; உற்சவக் காலங்களிலும் இறைவனுக்குகந்த விசேஷ தினங்களிலும் தங்கள் ஆட்டபாட்டத்தையும் ஆண்டவனுக்கே அர்ப்பணித்து இன்புற்றார்கள். தெய்வீகத்தின் அடிப்படையிலே கலைகளை வளர்த்துப் பெருமை கண்டவர்கள் தமிழ் நாட்டினர்.







யான பயிர்ச்சி இருக்கிறது என்பது புலனாகும். அறுவடையானதும் நல்ல விளைச்சலைத் தந்த கதிரவனை வாழ்த்தி வணங்கி நன்றி செலுத்துவது தமிழர்களின் வழக்கம். பொங்கல் திருநாளில் அறுவடையான நெல்லைச் சூரியனுக்கு முதல் காணிக்கையாகச் செலுத்திப் பெண்கள் கும்மி, கோலாட்டம் அடித்து மகிழ்வார்கள். வேல் பிடித்து வெறியாடும் பூசாரியை வேலன் என்றே அழைத்தார்கள் தமிழ் மக்கள். பக்தி மேலிட்டால் ஓர் ஆவேச நிலையை அடைந்து ஆடும்போது சாமியே அவனுள் புகுந்துவிட்டது என்பார்கள். இறைவனுடன் ஒன்றுபட்ட ஓர் ஐக்கிய

மயிலை கபாலீசுவரர் கோயில் என்றதுமே அறுபத்து மூவர் திருவிழாக் கோலாகலம் நினைவில் எழும். அச்சமயம் பக்தகோடிகள் சுற்று வட்டாரத்தில் அங்குலம் அங்குலமாகத் தானே நகர முடியும். கரகமாடுவதும் ஓர் அருமையான கலைதான். அனுயாசமாகச் சுழல்வதாகப் பார்ப்பவர்களுக்குத் தோன்றினாலும் சற்று யோசித்தால் அதன் பின்னால் அவர்களுக்கு எத்தனை அளவுக்குக் கடுமை





தமிழகத்தில் காணலாம். புனித நதிகளில் புண்ணிய காலங்களில் நீராடுதல் என்பது நம் உடலோடு ஒன்றிவிட்ட ஒரு பழக்கம். ஐப்பசி மாதத்தில் காவேரி நீராடினால் இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்றமுண்டு என்பது தமிழர்களின் முடிவு.





பாவத்தின் சிறப்பை உணர்த்துவதற்காக ஒரே ஒரு வேல் முதல் நூற்றுக்கணக்கான வேல்கள் வரையில் வைத்துக் கொண்டு ஆடும் பலவித வேலாட்டங்களைத்

பொய்க்கால் குதிரை, பொம்மலாட்டம், புலி யாட்டம், பகல்வேஷம் என்று மக்களை மகிழ்விக்கப் பலப்பல வகைகளில் கலைஞர்கள் ஈடுபடுவார்கள். கோயிலுடைய தமிழ கத்தின் திருவிழாக் கோலாகலங்களையே வண்ணப் படங்களாக வழங்கி யிருக்கிறார்கள் தென்னாட்டின் புகழ் பெற்ற புகைப்படக் கலைஞர்கள்.



முடவனுக்கும் மோட்சம் கொடுக்கும் கடை முழுக்கு பற்றி அறியாத தமிழர் இருக்க முடியாது. மாயூரத்தில் கடை முழுக்கின்போது லட்சோப லட்சம் மக்கள் ஒன்று கூடும்போது அது கண்கொள்ளாக் காட்சி. மக்கள் கூடினால் கலைஞர்களுக்குக் கொண்டாட்டம்தானே?



வண்ணப் புகைப்படங்கள் :
டி. ஐ. சந்திரபோஸ் (2, 3, 4, 5, 6, 9, 10, 11, 12)
என். ராமகிருஷ்ணன் (1, 7, 8)

# நிச்சயமாகத் தெரியுமா?

சினிமா படத்தை நன்கு ரசித்துக் கொண்டிருக்கிறீர்கள் அல்லவா? ஆனால் பக்கத்திலுள்ளவர்களும் அம்மாதிரி ரசிக்க விடுகிறீர்களா என்பது நிச்சயமாகத் தெரியுமா?

வியர்வை நாற்றம் வெறுப்பூட்டுவதாக இருக்கும். அதுவும் ஏர்-கண்டிஷன்ட் தியேட்டரில் அதிகமாக எடுத்துக் காட்டும். வியப்பூட்டும் **ஜி-11*** கலந்த **சிந்தால்** டாய்லட் சோப்பை வழக்கமாக உபயோகிப்பது துர்நாற்றம் உண்டாக்கும் கிருமிகளை பயனுள்ள வகையில், ஆனால் இலேசாக, அழிக்கிறது.

**சிந்தால்** உங்களை எல்லோரும் விரும்புமாறு செய்கிறது தவிர, அந்த நம்பிக்கையையும் அளிக்கிறது.



சிந்தால் சோப் கொண்டு நீராடி, துர்நாற்றத்தைப் போக்கும், இனிய மணங்கமழும் இதமான **ஜி-11** கலந்த **சிந்தால்** டாய்லட் பவுடரைத் தூவி, சருமப் பாதுகாப்பை உறுதிப்படுத்துங்கள்.

* எல். ஜிவாடன் அன்டு கம்பெனியின் ட்ரேட்மார்க்

* விவரமான "ஜி-11 என்பது என்ன?" என்ற இலவச புத்தகத்திற்கு **கோத்ரெஜ்**, பம்பாய்-12 என்ற விலாசத்துக்கு எழுதுங்கள்.




Godrej **கோத்ரெஜ்** சோப்புகளில் முதன்மையான பெயர்

CT-12A TAM

எங்கள் சிந்தால் சோப்பு வாங்குவோர்களுக்கு ஒரு விசேஷ சலுகை! சோப்பின் உறையில் அடங்கியுள்ள சலுகை கூப்பன் உங்களுக்கு ஒவ்வொரு சிந்தால் டாய்லட் பவுடர் டின்னின் விலையில் 30 பைஸா சலுகை அளிக்கும்



HIMALAYAN
FINEST
GOLDEN DUST TEA
LIPTON'S
FINEST
GOLDEN DUST TEA

# பிரேம விரதம்



அந்தப் பெரிய கூடத்து அறையின் வலது பக்கச் சுவரைத் திரும்பிப் பார்ப்பதில்லை என்று வைராக்கியம் பூண்டவன் போல், வெகு நேரமாக இடது பக்கச் சுவரையே வெறித்துப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் சேதுராமன்.

அவன் அப்படிப் பார்ப்பதற்கு அந்தச் சுவரில் அழகான படங்களோ, வேறு கலைப் பொருட்களோ எதுவுமில்லை. ஒரு சன்னலோ, கதவோ, மாடப்புரையோ கூட அங்கு இல்லை. பன்னிரண்டு அடி உயரத்துக்கு வெறும் வெள்ளைச் சுவராகவே அது ஓங்கி நின்றிருந்தது.

இதற்கு மாறாக வலது பக்கச் சுவரில் நிரைச் சீலைகளுடன் கூடிய இரண்டு பெரிய சன்னல்கள். அவற்றின் இருபுறமும் இரண்டு கண்ணாடி அலமாரிகள். ஒன்று புத்தக அலமாரி, மற்றொன்று அழகும், விலைமதிப்பும் வாய்ந்த அபூர்வ கலைப்பொருட்கள் சேகரித்து வைக்கப் பெற்ற அலமாரி. இடையே உள்ள சுவர்ப் பகுதியில் கைக்கு எட்டும் உயரத்தில் ஒரு போட்டோ படம். இவை தவிர, மாலைக் காற்றின் வேக வீச்சால் சன்னல்திரைகள் படபடத்து விலகிக் காணும்போதெல்லாம் அந்தச் சன்னல்களுக்கு வெளியே தெரியும் விசாலமான சாலையில் ரசிக்கத் தக்க காட்சிகள் எத்தனை எத்தனையோ!

இவ்வளவையும் பார்க்கப் பிரியப்படாதவன் போல்—அல்லது இவற்றில் ஏதோ ஒன்றை மட்டும் பார்க்கக் கூடாது என்ற சங்கல்பத்தில் இவை அனைத்தையுமே பார்க்காமல் இருப்பவன் போல் — அந்த வெறும் சுவரையே வெறித்துப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் அவன்.

இந்த நேரத்தில், இவ்விடத்தில், அவன் இம்மாதிரி உட்கார்ந்திருப்பது புதிதல்ல. நேற்றும் இப்படித்தான்; அதற்கு முந்தின நாளும் இப்படித்தான்; ஏன், கடந்த ஒரு மாத காலமாக இந்நேரத்தில் அவனுடைய நிலையும் போக்கும் இவ்வாறுகவே இருந்து வருகின்றன. ஆனால் இன்றைக்கும், இதற்கு முந்தின நாட்களுக்கும் ஒரு சிறு வித்தியாசம். காரியாலயத்திலிருந்து வீடு வந்து சேர்ந்ததும் முகம் கைகால்களைக் கழுவிக்கொண்டு, வேலைக்காரப் பையன் ஹோட்டலிலிருந்து வாங்கி வந்து வைத்திருக்கும் டிபன் காப்பியை வேண்டா வெறுப்புடன் சாப்பிட்டு விட்டு, வேட்டி பனியனோடு இங்கு வந்து இப்படி உட்கார்ந்து தாள முடியாத ஏதோ ஓர் உபாதையினால் வேதனைப்படுபவன் போல் அவ்வப்போது முகத்தைச் சுளிப்பதும் உடம்பை நெளிப்பதுமாக நேரத்தை வெறுமனே வெறுமனே போக்கிக் கொண்டிருப்பவன், இன்று சற்று முன்னதாகவே வீட்டுக்கு வந்து நன்றாகக் குளித்து விட்டு, சில்க் ஜிப்பாவும் சரிகைக் கரை வேட்டியும் உடுத்துக் கொண்டு, படியப் படியத் தலை வாரி முகத்துக்கு இலேசாகப் பவுடரும் பூசிக் கொண்டு வாலிபப் பொலிவுடன் உட்கார்ந்திருக்கிறான்! அந்த வலது பக்கச் சுவரைப் பார்க்கக் கூடாது என்னும் வைராக்கியத்தில் இடது புறச் சுவர் பக்கமே அவன் திரும்பியிருந்தாலும், இடையிடையே அவனுடைய பார்வை தன் கடிகாரத்தின் மீதும், வாசற் கதவுப் பக்கமாகவும் சென்று மீண்டுகொண்டிருக்கிறது. வழக்கத்துக்கு மாறாக இன்று வேலைக்காரப் பையன் டிபன் காப்பி வாங்காமல், இரண்டு பேர் சாப்பிடும் அளவுக்குச் சாப்பாடே கொண்டு வந்து வைத்திருப்பது 'காரிய'ரில் அப்படியே இருக்கிறது!....

சேதுராமன் தன் கைக் கடிகாரத்தைக் கவனித்தான். மணி ஆறு. எழுந்து போய் வாசலுக்கு வெளியே எட்டிப் பார்த்து விட்டுத் திரும்பி வந்து உட்கார்ந்தான். அவன் கண்ணில் இப்போது மேசை மீது கிடந்த ஒரு கடிதம் தென்பட்டது. ஏற்கனவே அதை அவன் படித்து விட்டதற்கு அறிகுறியாகக் கடிதத்தான், தபால் உறையில் பாதியும் வெளியே பாதியுமாகச் செருகப் பட்டிருந்தது. ஏதோ நினைவாக அந்தக் கடிதத்தை அவன், அப்படியும் இப்படியுமாகத் திருப்பிப் பார்த்து விட்டு, முகத்தில் வெறுப்பும் சலிப்பும் தோன்றத் தனக்குள்ளாகவே படிக்க ஆரம்பித்தான். ஊரிலிருந்து அவன் தந்தை எழுதிய கடிதம் அது :

'சிரஞ்சீவி சேதுராமனுக்கு, அநேக ஆசீர்வாதம்.

'இவ்விடம் யாவரும் க்ஷேமம். உன் க்ஷேமத்துக்கு எழுதவும். ரொம்ப நாட்களாக உனக்குக் கடுதாசியே எழுதவில்லை. இனி மேல் எழுத என்ன இருக்கிறது? உன்னைப் பற்றி இப்போதுதான் என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. இத்தனை வைராக்கிய சாலியாகவும் பிடிசித்தம் படைத்தவனாகவும் நீ இருப்பாய் என்று நான் நினைக்கவே யில்லை. பிரசவ சங்கல்பம் — மயான சிந்தனை — என்றெல்லாம் சொல்கிறார்களே, அம்மாதிரிதான் நீயும் அந்த



விஷயத்தில் பிடிவாதம் காட்டுகிறாய் என்று அப்போது எண்ணினேன். மற்றவர்களும், 'பிள்ளையாண்டான் ஆறு மாச காலத்துக்குத் தான் இப்படிப் பிகு பண்ணிக் கொண்டு திரிவான். அப்புறம் அவனே உங்களுக்குக் கடிதம் எழுதப் போகிறான், பாருங்கள்' என்றார்கள். நானும் அவ்வாறே எதிர்பார்த்தேன். அப்படி எதிர் பார்த்ததும், உன் அத்தை, அக்கா ஆகியோரின் வற்புறுத்தல் பேரிலும் அவ்விஷயமாக உனக்குப் பல கடிதங்கள் எழுதினேன். ஆனால் வருஷம் ஒன்றுக்குமேல் ஆன பின்னும் உன்னுடைய வைராக்கியம் சிறிதளவு கூடத் தளராமல் இருப்பதை அறிந்து என் முந்தைய அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டதோடு அல்லாமல், அவ்விஷயமாக எனது முயற்சிகளையும் அடியோடு கைவிட்டு விட்டேன்.

'முன்னெல்லாம் உன்னைப் பற்றி, 'அப்படி இப்படி' என்று இளப்பமாகப் பேசியவர்கள் இப்போது என்னிடமே வந்து உன் வைராக்கிய வாழ்க்கையைக் குறித்து வாயூறப் பேசி வியப்படைகிறார்கள். அதைக் கேட்க எனக்கும் ஆச்சரியமாயிருக்கிறது. ஒரு வகையில் பெருமையும் படுகிறேன். உண்மையாகவே இந்த விஷயத்தில் நீ என்னை விடப் பல படி உயர்ந்து விட்டாய், மகனே! என்னைக் காட்டிலும் பெரியவனாகி விட்டாய். எவ்வாறெனில், உன் தாயார் என்னைப் பிரிந்து கண்ணை மூடிய போது எனக்கு வயது நாற்பத்தைந்து. நம் உறவினர்கள் என்னை மறுமணம் செய்து

ஜெகசிற்பியன்



"கொக்கரக்கோ என்பது எங்கள் உரிமை.....!"

கொள்ள வற்புறுத்திய போது, 'அவளைப் பார்த்த கண்ணுலும், அவளைத் தீண்டிய கரத்தாலும் இனி வேறொரு பெண்ணைப் பார்க்கவும் மாட்டேன்; தீண்டவும் மாட்டேன்' என்று உறுதியாகச் சொன்னேன். அவள் மீது நான் வைத்திருந்த உண்மையான பிரேமையிஞலேயே அவ்வாறு சங்கல்பம் பூண்டேன் என்ருலும், உன்னுடையவும் உனது சகோதரியுடையவும் எதிர்காலம் பாதிக்கப்பட்டு விடுமோ என்ற பயமும், என் வயதைப் பற்றிய அச்சமும் அதிலே தொக்கி யிருந்தன என்பதை என்னும் மறுக்க முடியாது. இது வெளியுலகத்துக்குத் தெரியாத உண்மை. நானும் இதை அன்றும் இன்றும் யாரிடமும் வெளியிடாமல், முதலில் சொன்ன காரணத்தையே திரும்பத் திரும்பச் சொல்லி வந்தேன்; அதனுல் 'ஏகபத்தினி விரதன்' என்ற புகழ்ச்சிக்கும் உரியவனுனேன். ஆனுல் நீயோ ? உன்னுடையவளை நீ இழக்கும்போது உனக்கு வயது முப்பது தான். உன்னைப் பிரிந்து சென்றவள் உன் தலையிலே பிள்ளைகள் என்ற பாரத்தையும் சுமத்தவில்லை. எனவே, என்னைப் போல் வாலிபம் கடந்த வயதுப் பயம், பிள்ளைகளின் எதிர்காலப் பொறுப்பு ஆகிய எவையுமே இல்லாத நிலையில், உன் மறுமண யோசனையை நிராகரித்து, 'அவளைப் பார்த்த கண்ணுலும் அவளைத் தீண்டிய கரத்தாலும் இனி எந்தப் பெண்ணையும் என் வாழ்நாள் முழுவதும் பார்க்க மாட்டேன்' என்று வைராக்கியம் பூண்டு, அவ்வைராக்கியத்தை, ஓராண்டுக் காலத்துக்கும் அதிகமாகவே கட்டிக் காத்து வருகிருய் என்ருல், அது என்னுடைய வைராக்கியத்தைக் காட்டிலும் பன்மடங்கு உயர்ந்ததுதானே ? நாற்பத்தைந்து வயதில் நான் மேற்கொண்ட அந்தக் கடின சங்கல்பத்தை முப்பது வயதிலேயே ஏற்று விட்ட நீ என்னை விடப் பெரியவன்தானே ? உன் மனத் திடத்தையும் உனது பிரேம விரதத்தையும் நினைக்கும் போது என் உள்ளம் சிலிர்க்கிறது, மகனே!....

'அது சரி; நீ இன்னமும் ஹோட்டலில் தான்சாப்பிடுகிருயா? அது உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது. நீ விரும்பினுல், இங்கிருந்து ஒரு நல்ல சமையல்காரனை அனுப்பிவைக்கிறேன். ஆமாம்; சமையல்காரனைத்தான்!....'—

அதற்கு மேல் படிக்க விரும்பாதவன் போல் கையிலிருந்த கடிதத்தை மேசை மீது எறிந்து விட்டுக் கண்களை இறுக மூடியவாறு நாற்காலியின் தலைப்புச் சட்டத்தில் பிடரியை ஊன்றிக் கொண்டு அப்படியே சாய்ந்தான் சேதுராமன். மோவாய்க்குக் கீழே கூடாரமாகக் குவித்த இரு கரங்களின் மெல்லிய விரல்கள் அவனது உள்ளத்தின் வேதும்பலைப் பிரதிபலிப்பது போல் துடிதுடித்தன.

பதினெட்டு மாதங்களுக்கு முன் ஒரு நாள், கர நெஞ்சமுள்ள எவருமே ஏற்றுக் கொள்ள இயலாத — காய்ந்த மனம் படைத்தவர்கள்கூடக் கனவிலும் எதிர்பார்க்க முடியாத — அந்தப் பச்சைப் பாதகமான காரியத்தைச் செய்து முடித்துக் கொண்டு போய் விட்டான் காலன்.

ஆமாம்; பல்லாண்டுகளுக்கு ஒரு முறை புஷ்பிக்கும் பாரிஜாத மலர் போன்ற கௌரியை — நல்லொழுக்கமும் நற்குணங்களும் ஒருங்கே அமைந்த சேதுராமனுக்காகவே சொர்க்கத்தில் நிர்மாணிக்கப்பட்டுப் பூலோகத்தில் ஒரு சாதாரணக் குடும்பத்தில் பெண்ணுகப் பிறந்து வளர்ந்து பெரியவளாகிப் பின் அவனையே மணாளனுக வரித்துக்கொண்டு, அதிநாகரிகத்தில் மிதக்கும் சென்னைமா நகரில் வந்து ஒரு தனிக் குடித்தனத் தலைவிப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டு, தான் மாலையிட்ட கணவனுக்கு இப்பூவுலகிலேயே சொர்க்கத்தை இறக்கி வந்து காட்டியதோடு அல்லாமல், தன்னைச் சார்ந்தவர்களும் தான் சார்ந்தவர்களும் வியந்து மகிழ்ந்து போற்றிப் புகழும் வகையில் ஒரு பெண்ணுக, ஒரு மனைவியாக, ஒரு குடும்பத் தலைவியாக, இவற்றின் ஒரு முழு முதல் இலக்கண நூலாகவே வாழ்ந்தும், வாழ்க்கையை நடத்தியும் வந்த அந்தக் கௌரியை அவளது இருபத்துநான்காம் வயதில் அவன் இல்லறப் பூங்காவில் அடியெடுத்து வைத்துச் சரியாக ஓராண்டு நிறையும் போது, 'நான்கு மாத கருச் சிதைவுக்குப் பின் ஏற்பட்ட மூன்று நாள் ஜுரம்' என்ற ஒரு நொண்டிக் காரணத்தோடு வந்து அவனுடைய தெய்வ மணம் கமழும் உயிர்ப் பூவை மனுக்கெனப் பறித்துக் கொண்டு ஓடியே போய் விட்டான் தர்மக் கோல் ஏந்திய அந்த அதர்மக் காலன்!

ஒரு சொப்பனம் கலைந்தது. கண்ணைக் கசக்கிக் கொண்டு விழித்தெழுந்து நின்முன் சேதுராமன். இதுவரை கண்டது சொப்பனமா? இனி மேல் காணப் போவதுதான் கனவா ? அவனுக்கு ஒரே திகைப்பு! குழப்பம்!

அவன்தான் அப்படித் திகைத்துக் குழம்பி நின்ருனே தவிர அவனைத் தாங்கி நின்ற உலகம் தெளிவாகவே யிருந்தது.

'ஆனது ஆச்சு, போனது போச்சு; அடுத்த காரியம் என்ன?'

உலகம் கேட்டது. உற்ருர் உறவினர்கள் கேட்டார்கள். அவனுடைய தந்தையே அவனைப் பார்த்துக் கேட்டார் : ''மறுமணம் எப்போது வைத்துக் கொள்ளலாம்?''

இவ்வழக்கமான கேள்விக்குரிய வழக்கமான பதிலையே அவனும் சொன்னுன். ''அவளைப் பார்த்த கண்ணுலும் அவளைத் தீண்டிய கரத்தாலும் இனி என் வாழ்நாள் முழுவதும் வேறொரு பெண்ணைப் பார்க்கவும் மாட்டேன்; தீண்டவும் மாட்டேன்.''

இந்த இருபதாம் நூற்றுண்டில் இம் மாதிரியான 'திருநீலகண்ட நாயனுர்கள்' பலரைப் பார்த்தும் பிறகு சிரித்தும் அநுபவப்பட்டவர்கள், ''இப்போதைக்கு இந்த முடிவைக் கேட்டுக் கொள்கிறோம்; இன்னும் சில மாதங்களுக்குப் பின் சொல்லப் போகிற முடிவையும் கேட்கச் சித்தமாக இருக்கிறோம்'' என்று கூறி விட்டு, ஏதோ ஒரு பெரிய ஹாஸ்ய நாடகத்தைக் காண ஆவலுடன் காத்திருப்பவர்கள் போல் மௌனமாயிருந்தார்கள்.

ஆனுல் சேதுராமனின் விஷயத்தில் தாங்கள் எதிர்பார்த்த அம்மாதிரி 'நாடகம்' — அதற்கென நிர்ணயித்த காலத் தவணைக்குப் பின்னும் — நடைபெறுமல் இருப்பதைக் கண்டு சிலர் வருத்தப்பட்டார்கள். பலர் ஏமாற்றமடைந்தார்கள். பிறகு எல்லோருமாகச் சேர்ந்து ஆச்சரியப்படவும் ஆரம்பித்தார்கள் !

ஆனுல் இவை அனைத்துக்கும் அப்பாற்பட்ட ஓர் எளிய மனிதனுகவே இருந்து வந்தான் சேதுராமன். அவன் வாழ்க்கையை வெறுக்கவில்லை; வாழ்வில் சுசப்படையவும் இல்லை. வாழ்க்கைக்கு அடிப்படையான அர்த்தங்களைக் கற்பித்துக் கொண்டால்தானே அவற்றில் ஏற்படுகிற வீழ்ச்சி தாழ்ச்சிகளையும் மூலை முடுக்குகளையும் கண்டு மிரட்சியுறவோ, மனம் கசிக்கவோ, மாற்றுத் தேடவோ முற்பட நேரிடுகிறது?

மாதங்கள் ஒன்றன்பின் ஒன்ருக ஓட, ஓர் ஆண்டும் நிறைவாகி, அதற்குப் பின் நான்கு மாதங்கள் கடந்து சென்று, அதன் பிறகும் ஒரு மாதம் ஓடி மறையும் தறுவாயில் —

ஆகா! இந்தக் கால கட்டத்தில்தான் சேதுராமன் என்ற ஓர் அர்த்தமற்ற ஜடத்தின் மீது ஏனே எப்படியோ சில அர்த்தங்களின் நிழல்கள் படிய ஆரம்பித்தன. அர்த்தமற்றுப் போயிருந்த அவனுள் சில அர்த்தங்கள் தோன்றின. அதனுல் அவனும் சில அர்த்தங்களைத் தேடித் துருவலானுன். இவையெல்லாம்,— 'ஏனே, எப்படியோ'தான் அவனிடம் அல்லது அவன் மீது ஏற்பட்டன !

தழைத்து வளர்ந்திருந்த ஒரு மரம் ஏதோ ஒரு காரணத்தால் பட்டுப் போகிறது. மீண்டும் அது துளிர்க்காது என்பதும் நிச்சயமாகிறது. அதோடு அதன் கதி தீர்ந்து போகிறதா? பட்டுப் போன



"கொக்கரிப்பது எங்கள் கடமை.....!"

புகைப்படக்கர் : என். ராமகிருஷ்ணு

அம்மரத்தில் இலைகள் துளிர் விடாமல் இருக்கலாம்; ஆனால் காளான்கள் முளைத்துத் தலைதூக்குகின்றனவே! அவையும் ஒரு புதிய தோற்றம், ஒரு புதிய வளர்ச்சி தானே? அந்நிலை அதிலே எப்படிச் சாத்தியமாகிறது?

காலம்! எல்லாம் காலம் செய்யும் கோலம்! எதிலுமே அல்லது எதையுமே செய்யாமல் விட்டு வைப்பதில்லை காலம்! காற்றின் குணத்தையே பலவாறாக மாற்றும் சக்தி படைத்த காலத்துக்குச் சேதுராமன் எம்மாத்திரம்? அவன் காலத்தால் மாற்றப்பட்டான்! அவனையறியாமலே அவனும் மாறி வந்தான்.

தனிமையில் இனிமை கண்ட அவனுக்கு இப்போது அந்தத் தனிமை மெல்ல மெல்லக் கசப்பாகவும் வெறுப்பாகவும் மாற ஆரம்பித்தது. பிறகு உணவில் சலிப்பும், உறக்கத்தில் நிம்மதியின்மையும் தோன்றலாயின. எதைக் கண்டாலும் எரிச்சலான ஒரு பற்றுதல். யாரைக் கண்டாலும் பொறுமையான ஓர் ஏக்கம். அற்பமான பொருட்கள் மீதெல்லாம் அவன் ஆசைப்பட்டான். அநாவசியமான பேச்சுக்களிலும் தேவையற்ற செயல்களிலும் ஈடுபட்டான்.

அவன் இப்போது வாரத்துக்கு ஒரு முறை பீச்சில் உலாவி வரச் சென்றான். சினிமா, நாடகம் என்றும் போகத் தலைப்பட்டான். இந்த நடவடிக்கைகள் அவன் மேற்கொண்ட விரதத்துக்கு எவ்வித ஊறும் செய்யவில்லை என்பது உண்மை தான். ஆனாலும் அவை அவனது மனத்தில் ஏதேதோ பல புதிய மாறுதல்களை உண்டாக்கவே செய்தன. வீட்டை விட்டு வெளியில் அதிகமாகச் செல்வதில்லை; ஆனால் எங்காவது செல்ல வேண்டும் என்ற ஒரு துறுதுறுப்பு. அப்படிச் சென்றாலும் உடனே வீடு திரும்ப வேண்டும் என்ற ஒரு பரபரப்பு. வீட்டுக்கு வந்தாலோ இனம்புரியாத ஓர் ஏக்கம், ஏமாற்றம். மீண்டும் வெளியே சுற்றப் போக வேண்டும் போன்ற தவிப்பு.

தனக்குத் தேவையான காரியங்களைத் தானே செய்து கொள்வதில்கூட அவனுக்குச் சோம்பலும் சலிப்பும் ஏற்பட்டன. ஊதியத்துக்காகவும் உத்தரவுக்குப் பணிந்தும் வேலை செய்ய வருகிறவர்கள் மீது அநாவசியமான அதிருப்தி; குறை காணும் போக்கு.

நாட்கள் சென்றன. அவன் திடீர் திடீரென்று ஏதாவது சில விசித்திரமான காரியங்களைச் செய்ய ஆரம்பித்தான். இன்றும் அப்படித்தான் ஒரு விநோதமான ஆசை கொண்டு அதை நிறைவேற்றிக் கொள்ளும் ஆவலுடன் இதோ உட்கார்ந்திருக்கிறான். இச்சமயம் பார்த்துத்தானா அவன் தந்தையிடமிருந்து கடிதம் வரவேண்டும்.

''உயர்ந்தவனும்!.... பெரியவனும்... என் பிரேம விரதத்தை நினைக்கும் போது உள்ளம் சிலிர்க்கிறதாம்!.... என்னைத் தான் நானே ஏமாற்றிக் கொண்டு அணு அணுவாக வெந்து மடிகிறேன் என்றால், இவர் வேறு ஏமாற்றப் பார்க்கிறாரே.....!''

திடுக்கிட்டு நிமிர்ந்த சேதுராமனின் கண்கள் அங்குமிங்குமாகத் தாவிப் புரண்டன. 'நானா இப்படிப் பேசினேன்? என் வாயிலிருந்தா இந்தச் சொற்கள் வெளிப்பட்டன?'

தன்னையறியாமலே தன் மனத்தில்வெடிப்புற்ற ஒரு பகுதியிலிருந்து தெறித்துச் சிதறிய அந்தச் சொற்களைத் தானே அறியாவண்ணம் வாரிச் சேர்த்து வாயிலிட்டு விழுங்கிவிடவேண்டும் என்ற துடிப்புடன் துள்ளியெழுந்த சேதுராமன், தன் தந்தையின் கடிதத்தை அவசரமாக எடுத்து மேசை டிராயரில் போட்டு மூடுவதற்காக இழுத்தவன், அங்கு இன்னொரு கடிதம் கிடப்பதைக் கண்டு அதை ஆவலுடன் எடுத்துக் கொண்டு, எழுந்த அதே வேகத்தில் தொப்பென்று நாற்காலியில் சாய்ந்தான். அவனுடைய அத்தை ராஜம்மாள், மூன்று மாதங்களுக்கு முன் எழுதிய ஒரு பழைய கடிதம் அது.

'......இக் கடிதாசியில் நான் புதிதாக ஒன்றும் எழுதப் போவதில்லை. எப்போதும் எழுதுகிற விஷயம்தான். எப்போதும் கேட்கிற கேள்விதான். இன்னமும் நீ அதே பிடிவாதத்தில் தான் இருந்து வருகிறாயா? உன் வயதிலும் உனக்குள்ள அந்தஸ்திலுமாக இருக்கும் எந்த ஆண் பிள்ளையும் இந்தக் காலத்தில் உன்னைப் போல் வாழ மாட்டான் — அப்படி வாழ்வது பைத்தியக்காரத்தனம் என்பதால் அல்ல; தவறு என்பதால்!... ஆமாம், சேது! இனிமேலும் நீ இப்படித் துக்கம் கொண்டாடிக் கொண்டு, ஹோட்டல் சாப்பாடும், தனிமை வாழ்க்கையுமாக இருப்பதென்றால் அதற்கு ஊர் உலகம் மட்டுமல்ல, நானும் கூட வேறு விதமான காரணம்தான் கற்பித்துக் கொள்ள வேண்டியிருக்கும். நீயே நன்றாக யோசித்துப் பார்; ஓர் ஆணை ஒரு பெண்ணும் ஒரு பெண்ணை ஓர் ஆணும் திருமணம் என்ற ஏற்பாட்டின்படி வரித்துக் கொள்வதன் காரணம், தத்தமது வாலிப உணர்ச்சிகளின் தேவைக்காகவோ, அன்றாடக் காரியங்களைத் தங்கு தடையின்றிச் செய்வதற்காகவோ, வேறு பல லௌகிக தர்மங்களை நிறைவேற்றுவதற்காகவோ மட்டுமல்ல; ஒவ்வோர் ஆண் பெண்ணிடமும் இயற்கையாகவே சில பலவீனங்களும் தீய சக்திகளும் உள்ளவாதலின், அவை அவ்வப்போது மேலெழும்பி அவனை அல்லது அவளை அழிப்பதோடு அல்லாமல், அவன் அவள் அங்கத்தினராயுள்ள மனித சமுதாயத்தையும் சேர்த்து அழிக்க முற்பட்டுவிடும் என்பதால், அவனை அல்லது அவளை ஒரு கட்டாய தர்மத்தின் பேரிலாவது கட்டி வைக்க வேண்டும் என்ற காரணமும் அடங்கியுள்ளது. எனவே, அத்தகையதொரு கட்டாய தர்மத்துக்கு நீ கட்டுப்பட மறுத்து அதற்கு வேறு காரணம் கூறித் தப்பிச் செல்கிறாய் என்றால், அந்தக் காரணம் உண்மைக்குப் புறம்பானதாக மட்டுமல்ல; அப்புறம்பான போலிக் காரணத்தையே ஒரு போர்வையாகக் கொண்டு உன் அந்தரங்கத்தில் உன்னை நீயே அழித்துக் கொள்வதுடன் மனித சமுதாயத்தின் மீதும் அவ்வழிவு நிழலைப் படர விட்டு அதைக் களங்கப்படுத்த யத்தனிக்கிறாய் என்று தான் நினைக்க வேண்டியிருக்கும்.

மேலும், உன் சிறுபிள்ளைத்தனமான அந்தப் பிடிவாதத்தில் உள்ள ஒரு வேடிக்கை விஷயத்தையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்; இல்லற வாழ்க்கையில் ஈடுபடுகிற எல்லாத் தம்பதிகளுமே அறுபதாம் கல்யாணத்துக்கு ஆசைப்படலாமா? அப்படி ஆசைப்படுவது தவறில்லை யென்றாலும், அந்த ஆசைக்கு உத்தரவாதம் அளிக்க யாரால் முடியும்? அது நம் கையிலா இருக்கிறது?...'

அத்தையின் கடிதத்தை அதோடு மடித்துப் போட்டு விட்டு ஒரு நிம்மதியான பெருமூச்சுடன் நிமிர்ந்தான் சேதுராமன். இப்போது அவன் முகம் இலேசாக மலர்ச்சி கண்டது. மெல்லத் தனக்குள் சிரித்தவாறு, 'எவ்வளவு பெரிய உண்மையை எத்தனை எளிதாகவும் தீர்க்க தரிசனத்தோடும் எழுதி யிருக்கிறாள், அத்தை! இன்றைய என் மனநிலையை மூன்றுமாதங்களுக்கு முன்பேதுல்லியமாகப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறாளே இந்தக் கடிதத்தில்!' என்று முணுமுணுத்த அவன் மனத்தில் மற்றோர் எண்ணமும் குறுக்கோட்டமிட்டது:- 'மூன்று மாதங்களுக்கு முன் இதே கடிதத்தை முதன் முதலாகப் படித்தபோது எவ்வளவு ஆத்திரப்பட்டேன்! எத்தனை அலட்சியமாகத் தூக்கி யெறிந்தேன்! ஆனால் இன்றோ?... இன்று என் அப்பா எழுதியுள்ள இந்தக் கடிதத்தை அன்று படித்திருந்தால் — அவரும் இம்மாதிரி எழுதியிருந்தால் — எவ்வளவு மகிழ்ச்சியும் நிம்மதியும் அடைந்திருப்பேன்!



எத்தனை ஆறுதலும் பெருமையும் கொண்டிருப்பேன்!...'

தலையைத் தாங்கிப் பிடித்த வண்ணம் சிறுபொழுது அசையாமல் உட்கார்ந்திருந்த அவன், " ம்?... அன்றைக்கு அது சரி. இன்றைக்கு இது சரி. அவ்வளவுதான்" என்று சொன்ன அதே சமயம் "உள்ளே வரலாமா?" என்ற ஓர் இனிய குரல் கேட்டுச் சட்டென்று திரும்பினான்.

"தாமதத்துக்கு மன்னியுங்கள்! குறிப்பிட்ட நேரத்துக்கு வந்துவிடவேண்டுமென்றுதான் கிளம்பினேன். வழியில் ஒரு வாயாடிச் சிநேகிதி மடக்கிக் கொண்டுவிட்டாள். அவளிடமிருந்து மீண்டு வரப் பெரும் பாடாகி விட்டது!" என்று கலகலப்பாகக் கூறிக் கொண்டே ஒயிலாக நடந்து உள்ளே வந்தாள் எழிலார்ந்த பெண்ணொருத்தி.

சேதுராமனின் உடலில் திடீரென்று ஒரு பரபரப்பு ஏற்பட்டது. முகத்தில் ஆண்மைப் பொலிவுடன் கூடிய ஓர் அசட்டுக் களை. இந்தத் தோற்றத்துடன் அவனைக் கண்டு எவ்வளவு காலமாகிறது!

"அதனுலென்ன? பரவாயில்லை!" என்று நாணம் கலந்த புன்னகையுடன் சொன்ன சேதுராமன், அதற்குப் பின் சொல்ல எடுத்த ஏதோ வார்த்தையைச் சட்டென்று விழுங்கி விட்டு, "ஆமாம்; பரவாயில்லை..." என்று குழறினான்.

அந்தப் பெண்ணுக்கு இருபத்தைந்து வயசு — ஒன்று கூடுதலாகவோ குறைவாகவோ — இருக்கும். பல்வேறு அழுகளும் வசதியாக வாசம் செய்யத்தக்க நல்ல வாளிப்பான உடற்கட்டு. பொன் விறப் பூச்சான மேனி. படித்த களை. அவள் கல்யாணமானவளா இல்லையா என்பதைக் கண்டுபிடிக்க இயலாத ஒரு மர்மமமான ஆடையணி அலங்காரம். அதாவது, கால் விரலில் மெட்டி இல்லை; நெற்றியில் பெரிய குங்குமத் திலகம்; கழுத்தில் ஒற்றை வடம் பொற்சரடு. அதிலே டாலரும் தொங்கலாம்; அல்லது தாலித் தாயத்தும் தொடுத்திருக்கலாம். ஒன்றும் தெரியவில்லை.

"உட்காரலாமே! அப்படி உட்கார், நளினி!" என்று தன்னை மீறிய வாஞ்சைக் கனிவுடன் கூறியவாறு தன் இருக்கையிலிருந்து பாதியளவு எழுந்து, பக்கத்திலிருந்த ஒரு சோபாவைக் காட்டிவிட்டு உட்கார்ந்தான் சேதுராமன்.

பெண்களுக்கே உரிய தனிச் சாமர்த்தியத்துடன் அந்த அறை முழுவதும் பார்வையைச் செலுத்தி அரைக் கண நேரத்தில் தன் சோதனையை முடித்துக் கொண்டு திரும்பிய அவள் வெகு சகஜமாகப் போய்ச் சோபாவில் உட்கார்ந்து கொண்டு, "இவ்வளவு பெரிய வீட்டில் தனியாக எப்படித்தான் இருக்கிறீர்களோ! ஆச்சரியமாயிருக்கிறது!" என்றாள் தன் அகன்ற விழிகளில் அநுதாபம் பனித்திட.

"இருக்கிறேன். இருந்து கொண்டு தான் இருக்கிறேன்" என்று தலைகுனிந்தவாறு விரக்தி படிந்த குரலில் கரகரத்தான் சேதுராமன்.

நளினியின் முகம் வாடிச் சுருங்கியது. அவனைப் பற்றிய விஷயங்களை யெல்லாம் அறிந்திருந்தும் இப்படி ஓர் அசட்டுத்தனமான கேள்வி கேட்டு விட்டோமே என்று உள்ளூற வருத்தப்படுகிறவள் போல் சற்று நேரம் மௌனமாயிருந்த அவள், "இன்றைக்கு நம் ஆபீஸில் ஒரு வேடிக்கையான சம்பவம் நடந்ததே, உங்களுக்குத் தெரியுமா?" என்றாள் மந்தகாசப் புன்னகையுடன்.

'என்ன?' என்பதுபோல் அவள் பக்கம் திரும்பினான் சேதுராமன்.

"இன்று ஆபீஸிலிருந்து ஒரு மணி நேரம் முன்னதாகப் புறப்பட்ட நீங்கள், என் மேசையருகில் வந்து, என்னை ஏனோ இந்த நேரத்தில் உங்கள் வீட்டுக்கு வருமாறு சொல்லிவிட்டுப் போனீர்கள் அல்லவா?..."

திடுக்கிட்டுத் தலைநிமிர்ந்த சேதுராமன் அவளைப் பரபரப்புடன் ஒரு தடவை ஏறிட்டு நோக்கினான்.

"அப்படி நீங்கள் என்னிடம் வந்து பேசிவிட்டுப் போனது நம் ஆபீஸிலுள்ள அவ்வளவு பேருக்கும் ஏதோ உலக அதி

சமயங்களில் ஒன்றாகவே தோன்றியிருக்க வேண்டும். அரை மணி நேரத்துக்கு அவர்களால் வேறு எந்தக் காரியத்திலுமே ஈடுபட முடியவில்லையென்றால், பார்த்துக் கொள்ளுங்களேன். இம்மாதிரி விஷயங்களில் மனிதர்கள் தம் கற்பனா சக்தியை முடுக்கி விடும்போது அவர்களது முக பாவங்களைப் படம் பிடித்து வைத்தால் அது போன்ற ரசிக்கத்தக்க 'போட்டோ ஆல்பம்' வேறு ஒன்று அமைய முடியாது என்றே நினைக்கிறேன். சிலர் தம் ஆச்சரியத்தையும் ஆவலையும் அடக்கமாட்டாமல் என்னிடமே வந்து விசாரிக்க ஆரம்பித்தார்கள். எனக்கு அது எவ்வகையிலும் சங்கடமாகவோ மானக் குறைவாகவோ தோன்றவில்லை; பெருமையாகத்தான் இருந்தது. எனவே, என்னிடம் கேட்டவர்கள்மட்டுமல்லாது மற்றவர்களும் தெரிந்து கொள்ளட்டும் என்று சற்று உரத்த குரலிலேயே, 'மிஸ்டர் சேதுராமன் இன்று மாலை ஆறு மணிக்குத் தம் இல்லத்தில் என்னை வந்து சந்திக்கச் சொன்னார்; ஏன், எதற்கு என்றெல்லாம் அவர் ஏதும் சொல்லவில்லை' என்றேன். அடேயப்பா! அந்தச் சமயம் என் சகதோழிகளுடையவும், சில வேடிக்கைப்பிரியர்களுடையவும் முகங்களில் பொங்கி வழிந்த பொறாமை உணர்ச்சி இருக்கிறதே: அதை அப்படியே வழித்தெடுத்தால் ஒரு பயங்கர வெடி குண்



டையே தயாரித்து விடலாம், போங்கள்!'' நளினியால் சிரிப்பை அடக்க முடியவில்லை. குலுங்கிக் குலுங்கிச் சிரித்தாள் அவள்.

சற்று முன்வரை சுந்தரப் பொலிவுடன் விளங்கிய சேதுராமனின் முகம் இப்போது பேயறை பட்டாற் போலக் கறுத்துச் சிறுத்தது. தன்னை மீறிய அவமான உணர்ச்சியால் குன்றிக் குறுகித் தவிப்படைந்து திருதிருவென விழித்துக் கொண்டிருந்த அவன் அவளைப்பார்க்கவே அஞ்சித் தலைகுனிந்தான்.

''பைத்தியக்கார உலகம்! பைத்தியக்கார மனிதர்கள்!'' என்று தன் சிரிப்பிலேயே ஆழ்ந்து சொல்லிக் கொண்ட நளினி, சட்டென்று நிமிர்ந்து, ''ஆமாம்; என்னை ஏன்வரச் சொன்னீர்கள்? அதைக் கேட்காமல் வேறு ஏதோ பேசிக் கொண்டிருக்கிறேனே, நான் ஒரு பைத்தியக்காரி!'' என்றாள் ஒய்யார நொடிப்புடன்.

சேதுராமனின் உடல் 'குப்'பென்று வியர்த்துக் கொட்டியது. பேச்சு வராத ஊமை போல் பேந்தப் பேந்த விழித்து, ஓர் அசட்டுச் சிரிப்புடன் நாற்காலியில் ஒருக்களித்துச் சாய்ந்து கொண்டு, ''வந்து... அது...அப்படி ஒன்றும் பெரிய விஷயமல்ல...'' என்று குழறிச் சொன்னவன் உடனே அதைத் திருத்தி, ''இல்லை, அது எனக்குப் பெரிய விஷயம் தான்!'' என்றான். ''உன் மூலம் என்னுடைய ஓர் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளவே உன்னை இங்கு வரச் சொன்னேன்.''

நளினிக்கு இதைக் கேட்டு ஒரே ஆச்சரியமாகி விட்டது. அந்த ஆச்சரியத்தைத் தன் முகத்தில் நன்றாகப் பூசிக் கொண்டு அவனை ஒரு தினுசாகப் பார்த்தாள் அவள்.

அவளுடைய பார்வையின் பொருளைப் புரிந்து கொண்டவன் போல் மேலும் பரிதவித்தான் சேது. ''ஆமாம் நளினி! அது பற்றி ஒன்றுக்கு மேற்பட்ட அர்த்தத்தில் உன் மனம் இறங்கா முன்பே, அது என்ன என்பதை நான் சொல்லி விட வேண்டும். இதோ சொல்கிறேன்..'' என்று ஒருவித அவசரத் துடிப்புடன்படபடத்தஅவன், பக்கத்து அறைப் பக்கம் தன் பார்வையைச் செலுத்தி விட்டுத் திரும்பி, வெட்கமும் வேதனையும் சூழ்ந்த குரலில் சற்று நிதானமாகவே மீண்டும் கூறினான்: ''ஒன்றுமில்லை, நளினி! அது ஓர் அற்பமான ஆசைதான். அம்மாதிரி ஆசையெல்லாம் எனக்கு ஏற்படக்கூடாது தான். ஏனென்றால்அதற்கெல்லாம் நான் அருகதையற்றவன் என்பது விதியால் எப்போதோ தீர்மானிக்கப்பட்டு விட்டது. உனக்குத்தான் என்னைப் பற்றியும் என் வறண்டு போன வாழ்க்கையைப் பற்றியும்தெரியுமே! ஆனாலும் கடந்த சில தினங்களாக அவ்விதிக்கு மீறிய ஆசையொன்றுக்கு நான் எப்படியோ ஆளாகி விட்டிருக்கிறேன் என்பதை நினைக்கநினைக்க எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது, நளினி!...'' — இதே ரீதியில் இன்னும் ஏதோ சொல்ல வாய் எடுத்த



"வரும்போது ரிடர்ன் டிக்கட் வாங்கச் சொல்லி மாப்பிள்ளைக்குப் பணம் அனுப்பிச்சேன். மறந்துட்டாரே...."

"பரவாயில்லேப்பா. போகும்போது மறக்காமல் ரிடர்ன் டிக்கட் வாங்கச் சொல்லிடறேன்!"

---

வன் சட்டென்று திரும்பிப் பக்கத்து அறைப் பக்கம் பார்வையைச் செலுத்தி விட்டு, தன்னை மீறிய ஓர் ஆவலுடன் அவளைப் பட்டும் படாததுமாகப் பார்த்த வாறு தணிந்த குரலில் சொன்னான்:

"நளினி! அந்த என் ஆசையைச் சொன்னால் நீ வாய் விட்டுச் சிரிக்கலாம்; அல்லது அதை நம்பக்கூடச் சிரமப்படலாம். ஆனாலும் சொல்கிறேன், கேள்; கடந்த ஒன்றரை ஆண்டு காலமாக நான் ஹோட்டல் சாப்பாடு சாப்பிட்டு வருகிறேன் என்பது உனக்குத் தெரிந்திருக்கும். அப்படிச் சாப்பிடுவதால் என் உடலுக்கு என்னென்னமோ கோளாறுகளெல்லாம் ஏற்பட்டிருக்கின்றன என்றாலும் அவை குறித்து நான் கவலைப்படுவதில்லை; சலித்துக் கொள்வதுமில்லை. ஆனால், அந்தச் சாப்பாட்டை அங்கேயே பரிமாறிச் சாப்பிட வேண்டியிருக்கிறதே, அதுதான் எனக்குப் பெரிய சலிப்பாகவும் வெறுப்பாகவும் ஆகி விட்டிருக்கிறது. முன்னெல்லாம் ஹோட்டலுக்கேபோய்த் தான் சாப்பிட்டு விட்டு வந்து கொண்டிருந்தேன். பிறகு அந்தப் பழக்கத்தை நிறுத்தி விட்டேன். காரணம், ஹோட்டல் பரிசாரகன் கரண்டியும் தட்டுமாக வந்து என் இலையில் சோற்றைச் சரித்து விடும்போதே எனக்குக் குமட்டல் எடுக்க ஆரம்பித்தது. அதனால் ஒரு வேலைக்காரப் பையன் மூலம் சாப்பாட்டை வீட்டுக்கு எடுத்து வந்து, அவனையே பரிமாறச் சொல்லிச் சாப்பிடலானேன். சில மாதங்களுக்கெல்லாம் அதுவும் சலிப்பாகிவிட்டது. அந்தப் பையனைக் கண்டாலே ஆத்திரம் ஆத்திரமாகப் பற்றிக் கொண்டு வந்தது. அப்புறம் எனக்கு நானே பரிமாறிக் கொண்டு சாப்பிடும் பழக்கத்தை மேற்கொண்டேன். அதிலும் வெகு சீக்கிரமே வெறுப்புத் தட்டிவிட்டது. இப்போதெல்லாம் சாப்பாட்டு நேரம் வந்தால் ஏதோ தண்டனைக்குத் தயாராவது போல் நடுங்க ஆரம்பித்து விட்டிருக்கிறேன். இந்நிலையில்தான், நேற்று திடீரென்று ஓர் ஆசை தோன்றியது. அந்த ஆசை விநாடிக்கு விநாடி என்னைப் பைத்தியக்காரனாகவே ஆக்கி விட்டது! ஆமாம், நளினி! ஒரு பெண்ணின் கையால் பரிமாறிச் சாப்பிட வேண்டும் என்ற ஆசைதான் அது. ஒரே ஒரு நாள், ஒரே ஒரு வேளைக்காவது இந்த ஆசையை நிறைவேற்றிக்கொள்ள வேண்டும் என்று துடியாய்த் துடித்தேன். பல மணி நேரம் இது பற்றி யோசித்து யோசித்து, கடைசியில் உன் மூலம் அந்த ஆவலைப் பூர்த்தி செய்து கொள்வது என்று தீர்மானித்தேன். அதனால்தான் இன்று பிற்பகல் துணிந்து உன்னிடம் வந்தது..." அவனுக்குத் தொண்டை அடைத்துக் கொள்ளவே அதற்கு மேல் பேச முடியாமல் மௌனமானான்.

இந்நேரம்வரை பிரமை பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்த நளினியின் கண்கள் பனித்துப் பளிச்சிட்டன. அவளுக்கு வாய் விட்டு அழவேண்டும் போல் ஆகிவிட்டது. என்ன இருந்தாலும் அவள் ஒரு பெண்ணல்லவா?

தன் உணர்ச்சிகளை வெகு சிரமப்பட்டு அடக்கிக்கொண்டு இனிய புன்னகைபூத்தவாறு "நல்ல மனிதர்தான் போங்கள்! இந்த விஷயத்தை ஏற்கனவே என்னிடம் தெரிவித்திருந்தால் தினமும் இரண்டு வேளைக்கு இல்லா விட்டாலும் ஒரு வேளைக்காவது என் வீட்டிலேயே சமைத்துக் கொண்டு வந்து என் கையாலேயே உங்களுக்குப் பரிமாறியிருப்பேனே! இன்றைக்குக் கூட இப்படி என்று தெரிந்திருந்தால் நல்ல சமையலாகச் செய்து கையோடு எடுத்து வந்திருப்பேன்!" என்றாள் கனிவு நிறைந்த குரலில்.

"வேண்டாம், நளினி! அதுபோன்ற கஷ்டங்களை உனக்கு மட்டுமல்ல வேறு யாருக்குமே கொடுக்க மாட்டேன். அதற்கெல்லாம் நான் கொடுத்து வைக்காதவன்" என்று கசந்த தொனியில் முணுமுணுத்த சேதுராமன், "இன்றைக்கு மட்டும், இன்று ஒரு வேளை மட்டும் இதோ இங்குள்ள ஹோட்டல் சாப்பாட்டை எடுத்து உன் கையால் பரிமாறினால் போதும்! அதுவே எனக்குப் போதும்!" என்று கெஞ்சுவது போல் குழைந்தான்.

அவள் மௌனமாகவே எழுந்து பின் கட்டுக்குப் போய், முகம், கைகால்களைச் சுத்தி செய்து கொண்டு வந்தாள்.

நளினி தன் முன்றானையை எடுத்துச் செருகிக் கொண்டு இலையை அவனெதிரே விரித்தாள். பிறகு காரியரைத் திறந்து கிண்ணங்களிலிருந்த குழம்பு, கறிவகைகளைக் கொஞ்சம் கொஞ்சம் எடுத்துச் சுவைத்துப் பார்த்தாள். "பரவாயில்லை! எல்லாம் நன்றாகவே இருக்கின்றன!" என்று புன்சிரிப்புடன் கூறியவாறு பரிமாற ஆரம்பித்தாள்.

சேதுராமனின் கண்கள் தன் எதிரிலிருந்த இலையையும் அதில் உணவு பரிமாறிக் கொண்டிருக்கும் நளினியின் அழகிய வளையணிந்த கரத்தையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தன.. "சாப்பிடுங்கள்" என்ற பரிவான குரல் கேட்டுச் சட்டென்று நிமிர்ந்து அவளை ஒரு கணம் ஊடுருவிப் பார்த்துவிட்டுப் பின் சாவதானமாகச் சாப்பிடலானான். தலைகுனிந்து கொண்டே, "ஏன், உனக்குப் பசிக்கவில்லையா? நீயும் உட்கார்ந்து சாப்பிடலாமே!" என்றான்.

"அதற்கென்ன, சாப்பிட்டால் போகிறது. முதலில் நீங்கள் சாப்பிடுங்கள்."

"ஓ!... என் மனைவி கௌரி இப்படிச் சொல்லமாட்டாள். எனக்குப் பரிமாறிக் கொண்டே அவளும் உட்கார்ந்துவிடுவாள். இருவரும் ஏதாவது பேசிக் கொண்டே சாப்பிடுவோம். அடேயப்பா! அப்போதெல்லாம் நான் எவ்வளவு சாப்பிடுவேன் தெரியுமா? அவளுக்கே கூடப் போதும் போதாதபடி நானே எல்லாவற்றையும் தீர்த்துக் கட்டி விடுவேன்."

அவன் கலகலவென்று சிரித்தான். அவனுடைய சிரிப்பில் நளினியின் சிரிப்பும் சேர்ந்து ஒலித்தது.

பக்கத்து அறையிலிருந்த வேலைக்காரப் பையன் மெல்லத் தலைநீட்டி எட்டிப் பார்த்துவிட்டுப் போனான்.

சேதுராமன் ரசித்துச் சுவைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவனுக்குத் தேவையானதைக் குறிப்பறிந்து அவ்வப்போது பரிமாறிக் கொண்டிருந்த நளினி ஏதோ நினைத்துக் கொண்டவள் போல் நிமிர்ந்து, "ஒரு விஷயம் சொல்ல மறந்து விட்டேனே!" என்றாள்.

அவன் சாப்பிட்டுக் கொண்டே, 'சொல்' என்பதுபோல் தலையாட்டினான்.

"உங்கள் வீட்டுக்கு நான் வந்து கொண்டிருக்கும்போது நடுவழியில் ஒரு சிநேகிதியைப் பார்த்தேன் என்று முன்பு சொன்னேன் அல்லவா?"

அவன் தலைநிமிராமலே "ஆமாம்" என்றான்.

"அவளை உங்களுக்குக் கூடத் தெரியும். நமது காஷியர் சுந்தரேசனின் அக்கா பெண். மகா பெரிய வாயாடி. என்னைப் பார்த்ததும் முதல் கேள்வியாக 'எங்கே போகிறாய்?' என்று கேட்டாள். அவள் எப்பேர்ப்பட்டவள் என்பது எனக்குத் தெரியும் என்பதால் அவளிடம் உண்மையைச் சொல்லத் தயங்கினேன். அவள் விடவில்லை. இல்லாத பொல்லாத கேள்விகளெல்லாம் கேட்டுத் துளைக்க ஆரம்பித்தாள். அதற்கு மேலும் நான் சொல்ல மறுத்தால் அவளுடைய விஷமத்தனமான ஊகங்களை நிஜம் என்று நினைத்துக் கொண்டு போய்விடுவாள் என அஞ்சி, நிஜத்தைச் சொல்லி விட்டேன். அதைக் கேட்ட அவள் என்ன சொன்னாள் தெரியுமா? 'யாரு?... ஓ....அந்தச் சேதுராமன் வீட்டுக்கா போகிறாய்? இதைச்சொல்ல ஏனடி இத்தனை தயக்கம்? அந்த மனிதரின் வீட்டுக்கு நீ இரவு பன்னிரண்டு மணிக்குப் போவதைப் பார்த்தால்கூட, நான் மட்டுமல்ல, வேறு யாருமே எதுவும் நினைக்க முடியாதேடி! அவரைப் போன்ற ஓர் உத்தம மனிதர் ஊருக்கு ஒருவர் என்று இருந்தாலும் போதும்; பெண்களாகிய நமக்கு எவ்வளவோ பாதுகாப்பாக இருக்கும். சரி, சரி, போ. நேரமாகிறது. எனக்கும் வேலை இருக்கிறது' என்று தன்னை மீறிய ஒரு பயபக்தியுடன் சொல்லி விட்டு உடனே புறப்பட்டுப் போய் விட்டாள்."

ஏதோ விக்கல் சத்தம் கேட்டாற் போல் இருக்கவே, சட்டென்று தன் பேச்சை நிறுத்தினாள் நளினி. சோற்றுக்

கவளம் தொண்டையில் அடைத்துக் கொள்ள, விக்கலும், பொருமலுமாக விழி பிதுங்கிக் கொண்டிருந்தான் சேதுராமன்.

''ஐயையோ! என்ன இது? தண்ணீர் குடியுங்கள்! உச்சந்தலையில் தட்டிக் கொள்ளுங்கள்!'' என்று அங்கலாய்த்தாள் நளினி.

சில நிமிஷப் போராட்டத்துக்குப் பின் விக்கல் நின்றது. சேதுராமன் கையை உதறிக் கொண்டு எழுந்தான். அவன் முகம் சவமாக வெளுத்திருந்தது. கண்களிரண்டும் கலங்கிச் சிவந்திருந்தன.

''ஏன் பாதியிலேயே எழுந்துவிட்டீர்கள்? இன்னும் மோர் விட்டுக் கொள்ளவில்லையே!''

''போதும் நளினி! இதற்கு மேல் சாப்பிட முடியாது. இதுவே அதிகம். நீ செய்த உதவிக்கு ரொம்ப நன்றி. இதை எந்நாளும் மறக்க மாட்டேன். சென்று வா!'' என்று போலியாகச் சிரித்துக் கூறிக் கொண்டே, அவளுடைய பதிலுக்கும் காத்திராமல் அங்கிருந்து சரேலெனப் பின்கட்டுக்குப் போய்விட்டான் சேதுராமன்.

வெலவெலத்து நின்றிருந்த நளினி, 'பாவம், மனிதர்! தன் மனைவியின் ஞாபகம் வந்துவிட்டாற்போலிருக்கிறது. அதனால்தான் இப்படி இங்கிதம் தெரியாமல் பேசிவிட்டுப் போகிறார்' என்று தனக்குள் சமாதானம் சொல்லிக் கொண்டு அந்த இடத்தை விட்டு அகன்றாள்.

இரவு வெகு நேரமாகியும் படுக்கைக்குப் போகாமல் அந்த அறையிலேயே உட்கார்ந்திருந்தான் சேதுராமன்.

தன்னுடைய மனோ விகாரங்களையும் அவற்றின் அகோரத்தனமான உந்தலால் தான் செய்யத் துணிந்த அற்பத்தனமான காரியங்களையும் நினைக்க நினைக்க அவமானம் அவனைப் பிடுங்கித் தின்றது. தன்னையே விசாரணை செய்துகொள்ளும் போக்கில் தனது அன்றைய நினைப்புகளையும் செயல்களையும் ஆய்ந்து சிந்தித்துப் பார்க்கலானான்.

'என் அன்பு மனைவி கௌரியை இழந்த பின் அவள் வகித்த ஸ்தானத்தை இட்டு நிரப்ப இன்னொரு பெண்ணும் ஆகாது என்பதாலும், அதற்குரிய தகுதியை வேறு எந்தப் பெண்ணும் பெற்றிருக்க மாட்டாள் என்பதாலும் மட்டுமா நான் பிரமசரிய விரதத்தை மேற்கொண்டேன்? இல்லை. ஒருவனுக்கு ஒருத்தி என்னும் சமூக தர்மத்தைப் பெண் குலம் அவ்வொருவனை இழந்த பின்னும் கடைப்பிடிக்க வேண்டுமென எதிர்பார்க்கும் உலகம், ஒருத்திக்கு ஒருவன் என்ற தர்மத்தை ஆண் இனம் அவ்வொருத்தியை இழந்தபின் கை விட்டு விடலாம் என்று அனுமதிப்பது அநீதி என்பதாலும் அவ்வநீதிக்கு நான் ஆதரவு தராமல் ஒருத்திக்கு ஒருவன் என்ற தர்மத்தை வாழ்நாள் முழுதும் கடைப்பிடித்துக் காட்ட வேண்டும் என்பதாலுமே அத்தகைய விரதத்தை மேற்கொண்டேன்.



# மின்மினிப் பூச்சிகள்?

காரினியின் பேரழகைக்
கண்மறைவில் பார்ப்பதெனும்
ஆசையினில் ஈங்குறுவான்
அந்தரத்துத் தாரைகளோ?

பாரிருட்டு வேளையிலே
பார்ப்பதில்லே யாருமென
மாறியுமகை யாடவரும்
மாலைப்பெண்க ளுங்குகளோ?

பூச்சொரிந்தும் பொன்சொரிந்தும்
போந்துவிளே யாடுமந்த
ஆச்சரிய மானவல்லி
ஆயிரம்கண் ணாடைகளோ?

காலமொடு மாவிருள்தாம்
கண்டுவன முற்றுமெலாம்
கோலமிட மாவெடுத்தும்
கொண்டிழைத்த புள்ளிகளோ?

கும்மிருட்டாய் நெஞ்சமெலாம்
கூம்பியுமே மாய்கையில்முன்
அம்மிரட்டல் நீரன்றே
ஆங்குதிக்கும் எண்ணங்களோ?

கங்குல்வழிச் செல்பவர்க்குக்
கண்துலங்கப் பாதையெலாம்
மங்கல்ஒளி ஏற்றிவைக்கும்
மாயவழி காட்டிகளோ?

முகிலிரவுக் கன்னிகைக்கே
முத்துமணிப் பட்டணியத்
துகிலிருளில் பொன்னிழைக்கும்
தும்பவேலைப் பாடுகளோ?

வான்கரங்கம் தான்குடைந்து
வண்ணநிலாப் பெண்ணழகி
கான்கரங்கம் வைத்திருக்கும்
கள்ளமுற்ற செல்வங்களோ?

பலர்உழைப்பால் சேர்த்தபணம்
பார்க்கவின்மின் ஆவதன்றிச்
சிலர்கரும்பால் சேர்த்தபணம்
சென்றொதுங்கும் விந்தைகளோ?

கோத்தமின்னல் நாரறவும்
கோப்பதற்கே யாருமின்றிப்
பூத்துவின்மின் ஆனைவபோய்ப்
போந்த மற்றை வைரங்களோ?

மேகமென்னும் பொய்த்திரைப்பால்
மிக்கிருளில் ஆண்மயில்கள்
தோகைமின்னி ஆட,அதில்
துள்ளுமணிக் காசுகளோ?

இருள்வனத்தில் அங்குமிங்கும்
ஏய்த்தபடி மேயவரும்
மருள்வனத்து மான்கலையின்
மாயவுடற் பொட்டுகளோ?

அண்டமெனும் கூரையின்மேல்
அந்தியழல் மூட்டவுமே
வண்டுகள்தாம் சூடிகொண்டு
வான்பறக்கும் மாய்ச்சல்களோ?

கங்குலெனப் பொங்கிவரும்
காவிரியைக் கண்டதிலே
மங்கலநல் மங்கையர்கள்
மகிழ்விடும் தீபங்களோ?

தீபஒளி நாளிதென்று
தேர்ந்துணரும் கந்தருவர்
சோலைஒளி கூட்டிவரும்
சொர்க்கமயக் கின்னரிகளோ?

கார்த்திகையும் வந்ததென்று
கார்நிலைய வான்மகளிர்
நேர்த்தியுமகை ஏந்திவரும்
நெய்விளக்குக் காட்சிகளோ?

வசந்தமுமே வந்ததென்று
வாழ்த்தொலிக்கத் தேவதையர்

அப்படி யிருக்க எவருடைய வேண்டு தலுக்கோ, வற்புறுத்தலுக்கோ, தூண்டு தலுக்கோ அல்லாமல், எனக்கு நானே ஏற்றுக் கொண்ட அம்முடிவிலிருந்து இத்தனை குறுகிய காலத்துக்குள் சலன மடைந்து நழுவிக் கொள்ள முற்படுவது வெட்கக் கேடான விஷயம் அல்லவா?'

'சரி; ஏதோ அந்த அற்ப ஆசையின் பேரிலேயே இன்று அப்பெண்ணை நான் அழைத்தது இப்போதைக்கு நியாய மிருக்கலாம்; ஆனால் இதோடு அந்த ஆசை தீர்ந்து போகுமா? இன்னும் வெவ் வேறு வகையில், வெவ்வேறு ரூபத்தில் அது கிளைத்துத் தழைக்க ஆரம்பித்தால் அதற்கெல்லாம் அடித்தளமாகத்தான் இன்று அத்தகைய காரியத்தை என் உள் மனம் எனக்கே தெரியாமல் செய்யத் துணிந்ததோ?'

சேதுராமனின் மனம் தாள முடி யாத அவமானத்தால் குன்றிக் குறு கியது. நேரம் போவதே தெரியாமல் அந்தக் கூடத்து அறையின் இடது பக்க வெறும் சுவரையே வெறித்துப் பார்த் துக் கொண்டிருந்த அவன், தன்னை மீறிய ஒரு வெட்கக் குமைவுடன் வலது புறச் சுவர் பக்கம் திரும்பினான். அங்கே மாட்டப் பெற்றிருந்த போட்டோ படத் தின் மீது அவனுடைய பார்வை சென்று நிலைத்தது.

அது காலஞ்சென்ற கௌரியின் படம்.

சேதுராமனின் கண்கள் கலங்கின! சோர்வும் களைப்புமாக மேசை மீது அப் படியே குப்புறச் சாய்ந்து கொண்டு விட்டான் அவன்.

இந்தச் சம்பவம் நடந்து ஒரு மாத காலம் வரை சேதுராமன் பழைய சலன மற்ற மனிதனாகவே இருந்து வந்தான். ஆனால் கடந்த ஒரு வார காலமாக அவ னுடைய நடவடிக்கையில் முன்போல் சில மாறுதல்கள் தென்படலாயின.

தனிமையில் விரக்தி, தூக்கமின்மை, உணவில் சலிப்பு, உத்தியோகத்தில் வெறுப்பு, ஊர் சுற்றுவதில் விருப்பு, உல்லாசப் பொழுதுபோக்கில் நாட்டம்!

அவன் உடலில் எந்நேரமும் ஓர் அனல் வீச்சு; மனத்தில் ஓயாத உணர்ச்சிப் புயல்!

அன்று மாலை காரியாலயத்திலிருந்து வந்ததுமே திடீரென்று அவன் ஒரு முடி வுக்கு வந்தான்.

'என்னுடைய மன உளைச்சலுக்கு எல் லாம் காரணம் என்ன என்பது எனக்கே இப்போது நன்றாகத் தெரிந்து விட்டது. அதை என்னால் வெல்ல முடியாது என்ப தும் தெளிவாகி விட்டது. இந்த இரண் டுங்கெட்ட நிலையில் அந்த வீம்பான வாழ்க்கை ஏன்? அதற்கு இனியும் ஆசைப்பட்டால் இது வரை வாழ்ந்த நல் வாழ்க்கையும் பயனற்றுப் போகும். அந்த ஒன்றரை ஆண்டுக் கால ஞான வாழ்க்கை என்னளவிலாவது ஒரு புனித நினைவாக இருக்க வேண்டுமானால், நான் மேற்கொண்ட ''ஒருத்திக்கு ஒருவன்'' என்ற தர்ம விரதத்தை உடனடியாகக்



அசைந்தசைந்தும் மண்ணில்வர
ஆங்கவர்தும் சாயல்களோ ?

காம்புமின்றிக் கொம்புமின்றிக்
காரிருளின் பந்தரெலாம்
தாம்படர்ந்தும் பூங்கொடிகள்
தாநிறைக்கும் வண்ணங்களோ?

நீருமின்றிப் பேருமின்றி
நெய்தறிருள் ஆழ்கடலில்
பாருமென்றும் கண்சிமிட்டப்
பகட்டுகின்ற முத்துக்களோ ?

கொல்லனின்றிக் கூடமின்றிக்
கொண்டெழுப்பக் காற்றுமின்றி
மெல்லநின்றும் தாம்பொரியாம்
மீதெழும்பும் நீத்துகளோ ?

காலமின்றிக் கூதலின்றிக்
காண்பதற்கும் மூலமின்றி
மாலைமுன்றில் மேலுதிரும்
மாபனிநீர்ச் சொட்டுகளோ ?

தாயகத்தில் அன்னியரின்
தாக்குதலை வீழ்த்தவென்றே
போயவரை ஒற்றறியும்
புண்ணியர்கண் வீச்சுக்களோ ?

உருவிலியாம் ஈசனுமே
உற்றுநமைக் காக்கஎண்ணி
இரவிலுமாய்க் கொண்டிருக்கும்
எண்ணில்விழிக் கூட்டங்களோ?

காவியம்செய் மாகவிஞர்
கற்பனையின் ஆற்றலெலாம்
தாவியிங்கே கொண்டுவந்தும்
தான்பொருந்தாச் சேதிகளோ ?

ஆழ்ந்தபொறிச் சிந்தனையில்
ஆம்,பலவாம் எண்ணியுமென் ?
சூழ்ந்தபொலிப் பூச்சிகளும்
சொன்னஇவை ஏற்பனவோ?

'தமிழழகன்'





கைவிட்டு விட வேண்டும். இதைத் தவிர வேறு வழி இல்லை.'

தனக்கு ஒரு பெண்ணைப் பார்த்து மறுமணம் முடிக்க ஏற்பாடு செய்யுமாறு தன் தந்தைக்கு இன்றே கடிதம் எழுதி விட வேண்டுமென்ற தீர்மானத்துடன் பேனாவும் காகிதமும் எடுக்க மேசை டிராயரைப் படீரென்று திறந்தான் சேதுராமன். அப்படித் திறந்ததும், ஒரு மாதத்துக்கு முன் அவனுடைய தந்தை எழுதிய அந்தக் கடிதம் அவன் கண்ணில் பட்டது. அதை வெடுக்கென்று எடுத்து நடுநடுவே சில வரிகளைப் படித்தான் :

'வருஷம் ஒன்றுக்கு மேல் ஆனபின்னும் உன் வைராக்கிய விரதம் இம்மியளவு கூடத் தளராமல் இருப்பதை அறிந்து என் முந்தைய அபிப்பிராயத்தை மாற்றிக் கொண்டதோடு அல்லாமல், உன் திருமண விஷயமாக எனது முயற்சிகளையும் அடியோடு கைவிட்டு விட்டேன்! உன் மனத் திடத்தையும் மாசற்ற பிரேம விரதத்தையும் நினைக்கும் போது என் உள்ளம் சிலிர்க்கிறது, மகனே!....'

ஏதோ ஓர் ஆவேச உணர்ச்சியால் கனன்று கொண்டிருந்த சேதுராமன் இந்த வரிகளைப் படித்ததும் பனிக் கட்டிக் குவியலின் மேல் தூக்கி எறியப்பட்டவன் போல் அப்படியே சில்லிட்டு விறைத்து விட்டான்.

'சே! என்ன மோசமான முடிவை நான் மேற்கொள்ளப் பார்த்தேன்! என் தந்தை மட்டுமல்லாது, உற்றார் உறவினர்கள், அறிந்தவர் தெரிந்தவர்கள்—உலகம்கூட—என்னை ஒரு மகா உத்தமன், ஒருத்திக்கு ஒருவன் என்ற தர்மநெறியை உலகோர்க்கு உணர்த்தவே அவதாரம் எடுத்திருப்பவன் என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருக்கும் போது – அவர்கள் அப்படி நினைக்கும் இந்நாள்வரை நானும் நடந்து கொண்டு விட்டு – இப்போது அந்த நினைப்பில் திடீரென்று சேற்றை வாரி அடிக்கப் பார்த்தேனே! என் மறுமண விருப்பத்தைக் கேள்விப்பட்டால் தந்தை உள்பட எல்லாரும் என்ன நினைப்பார்கள் ? இத்தனை காலம் அவர்கள் என் மீது வைத்திருந்த நல்லெண்ணம் எல்லாம் என்ன ஆகும்? யாரோ ஒரு பெண் யாரோ ஒரு பெண்ணிடம் என்னைப் பற்றி அத்தனை உயர்வாகவும் நம்பிக்கையுடனும் பேசும் அளவுக்கு நான் தேடிக் கொண்ட பெருமையெல்லாம் என்ன கதியாகும்?'

சோர்வுடன் நாற்காலியில் சாய்ந்த சேதுராமன் தனக்குள் மெல்லச் சிரித்துக் கொண்டான்.

'இவர்களுக்காகவும் இவற்றுக்காகவுமாவது நான் மேற்கொண்ட விரதத்தை இனி கைவிடக் கூடாது போலிருக்கிறதே!.... கைவிடவும் முடியாது போலிருக்கிறதே!.... உத்தமர்கள், சத்தியர்கள் என்று உலகோரால் போற்றப்படுகிறவர்களின் உண்மை நிலையெல்லாம் இப்படித்தான் இருக்குமோ? தம்மை உத்தமர்கள் என்று உலகம் போற்றுவதாலேயே உத்தமர்களாக வாழ வேண்டிய கெடுபிடிக்கு அவர்கள் உள்ளாகி விடுகிறார்களோ ? அல்லது அறிவுச் சக்தி மிக்கவர்களை இனம் கண்டு கொண்டு அவர்களுக்குப் பொருந்தி வராத எதிர்மறையான வார்த்தைகளால் அவர்களை உத்தமர்கள், சத்திய சீலர்கள் என்றெல்லாம் போற்றிப் போற்றியே அவர்களிடமுள்ள அறிவுச் சக்தியை அழிப்பதற்காக அப்படி ஓர் உபாயத்தை உலகம் கைக்கொள்கிறதோ ?'

அவன் வாய் விட்டுக் கலகல வெனச் சிரித்தான்.

"நல்ல சகுனம்! நல்ல தருணம்! என் மதிப்புக்குரிய நண்பன் சிரிக்கும் காட்சியைப் பார்க்கக் கொடுத்துவைத்தேனே!"

இந்தப் பேச்சுக் குரல் கேட்டுச் சட்டென்று திரும்பினான் சேதுராமன். அங்கே ஒல்லியும் உயரமுமான வாலிபனொருவன் சுருட்டிக் கட்டிய படுக்கையைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு வெகு உல்லாசமாகச் சீழ்க்கையடித்தவாறு உள்ளே வந்து கொண்டிருந்தான்.

அவனைப் பார்த்ததும் சேதுராமனுக்கு ஒரே வியப்பும் திகைப்புமாகி விட்டது. உள்ளூற ஒருவித அச்சமும் தோன்றிக் குறுகுறுத்தது. ஒரு கணம் பேசாதிருந்த அவன், "வாடா, முத்து! என்ன இப்படித் திடீர் விஜயம்?" என்று வறண்ட சிரிப்புடன் வரவேற்றான்.

முத்து முத்தாகப் பருக்கள் விரவிக் கிடந்த தன் நீண்ட முகத்தை ஒரு கையால் துடைத்தவாறு சாவதானமாக நடந்து வந்த முத்து, படுக்கையை ஒரு மூலையில் போட்டு விட்டுச் சோபாவில் 'அப்பாடா' என்று சாய்ந்தான்.

சேதுராமனுக்கு ஏற்பட்ட திகைப்பு இன்னமும் நீங்க வில்லை. அவனையே திருதிரு வெனப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் அவன்.

முத்து என்ற அந்த வாலிபனுக்கு வயது முப்பத்திரண்டு இருக்கும். ஆஸ்தி பாஸ்தியுள்ள பெரிய குடும்பத்தில் பிறந்தவன். கல்யாணமானவன். எங்கோ ஏதோ உத்தியோகம் பார்ப்பதாகவும் கேள்வி. சேதுராமனின் நெடு நாளைய நண்பன். ஆனால் நெருங்கிய நண்பன் என்று சொல்ல முடியாது.

'சேது என் நண்பன்' என்று முத்து தான் சொல்லிக் கொள்வானே தவிர, முத்துவைத் தன் நண்பன் என்று சேதுராமன் யாரிடமும் சொல்ல மாட்டான். காரணம், அவன் அப்பேர்ப்பட்டவன்!

சேதுராமனுக்குப் பல ஆத்ம நண்பர்கள் இருக்கிறார்கள். அவ்வளவு பேர்களும் அவனைப் போலவே குணத்திலும் சீலத்திலும் உயர்ந்தவர்கள். இவ்விஷயத்தில் சேதுவுக்குப் பெருமையுங் கூட. ஆனால், இந்த முத்து அவர்களில் ஒருவன் அல்ல!

ஏனென்றால், ஒரு சராசரி மனிதனிடமும் இருக்கக் கூடாத பழக்க வழக்கங்களெல்லாம் அவனிடம் ஆழ்ந்து உறைந்து கிடந்தன. ஆமாம்; ஊரிலுள்ள 'மந்தாப்பூச் சிகாமணிகள்' அவ்வளவு பேருக்கும் அவன் பரிச்சயமானவன்; நாட்டுச் சரக்கு, சீமைச் சரக்குகளின் இரகசிய விற்பனையாளர்கள் அத்தனை பேரிடமும் அவனுக்கு வாடிக்கை; சூதாட்டத்தில் எத்தனை ரகங்கள் உண்டோ அத்தனையிலும் அவன் நிபுணன். இதற்கு மேல் எந்தக் கெட்ட பழக்கமும் அவனிடம் கிடையாது!

அவனுக்கென்று வாய்த்தாளே ஒரு மனைவி, அவள் கோவிலில் தெய்வமாக வைத்துக் கும்பிடப்பட வேண்டியவள். என்ன செய்வது? திருமணம் சொர்க்கத்தில் அல்லவா நிச்சயிக்கப்படுகிறதாம்!

இத்தகைய 'கல்யாண குணங்கள்' கொண்ட அவன், சேதுராமனுக்கு நண்பனாக வாய்த்தது ஓர் அதிசயம்தான். அவனைக் கண்டாலே சேதுராமன் குலை நடுங்குவான். அதனால் அவனுடைய கண்ணில் படாத நாளெல்லாம் சுபயோக நாள் என்று கருதுவான். ஆனால், முத்துவோ சேதுராமன் மீது ஓர் அதிகமான அன்பும் பாசமும் வைத்திருந்தான். அவை நாலு பேர்கள் மத்தியில் வெளிப்படாது; அவனும் காட்டிக் கொள்ள மாட்டான். எங்காவது தனிமையில் சந்தித்து விட்டாலோ தன் அன்பையெல்லாம் மழை போல் பொழிந்து விடுவான். அதனாலேயே சேதுராமன் அவனை முழுவதும் உதறித் தள்ளவோ விரோதித்துக் கொள்ளவோ முடியாமல் இருந்து வந்தான். எனவே தான் இப்போதைய அவனது திடீர் வரவைக் கண்டு நிலைகுலைந்து உட்கார்ந்து விட்டான் அவன்.

"என்ன, சேது! என்றைக்கும் வராத விருந்தாளியாக வந்திருக்கிறேன்; 'இருக்கிறாயா, செத்தாயா' என்றுகூட ஒரு வார்த்தை கேட்காமல் உம்மென்று உட்கார்ந்திருக்கிறாயே?" என்று அமர்த்தலாகச் சிரித்துக் கேட்டுக் கொண்டே நிமிர்ந்து உட்கார்ந்து சிகரெட்டொன்றைப் பற்ற வைத்தான் முத்து.

சேதுராமனும் இப்போதுதான் தன்னைச் சுதாரித்துக் கொள்ள முடிந்தது. "நீதான் என்னைக் கேட்க வேண்டுமப்பா ! நான் கேட்க என்ன இருக்கிறது ?" என்றான் விரக்தியுடன்.

"உண்மைதான், சேது! நான்தான் கேட்க வேண்டும். உன்னைப் பார்த்தே ஒரு வருஷத்துக்கு மேல் இருக்கும் இல்லையா ? உன் மனைவி தவறிப் போன மூன்றும் மாதமோ நான்காம் மாதமோ ஒரு நாள் வழியில் சந்தித்துத் துக்கம்

விசாரித்து விட்டுப் போனேன்; அவ்வளவுதான். அப்புறம் பார்க்கவே முடியவில்லை. உம்.... அதனாலென்ன, எல்லாம் நான் கேள்விப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறேன்.''

இன்று அவன் பேசும் தோரணை சேதுராமனுக்குப் புதுமையாயிருந்தது. இதற்கு முன் இப்படி அவன் நிதானமாகவும் பொறுப்பாகவும் சலிப்பாகவும் பேசிக் கேட்டதே இல்லை.

''நீ எல்லாவற்றையும் தெரிந்துகொள்கிறாய். ஆனால் உன்னைப் பற்றி என்னால் ஒன்றுமே தெரிந்து கொள்ள முடியவில்லையே!'' என்று கூறிச் சிரித்தான் சேது.

''ஓ..... அது என் அதிர்ஷ்டம்! அதற்காகக் கடவுளுக்கு நன்றி!''

இந்தச் சமயம் சேதுராமனின் மனத்தில் பளிச்சென்று ஓர் எண்ணம் தோன்றியது. 'கடந்த சில தினங்களாக என்னுள் ஏற்பட்டிருக்கும் புயலை இவனிடம் அப்படியே விவரித்துச் சொன்னாலென்ன? அந்த விஷயத்தை வாய் விட்டுச் சொல்ல இவனைத் தவிர எனக்கு வேறு ஆள் யாரும் கிடைக்க முடியாதல்லவா?'— முத்துவைக் கூர்ந்து நோக்கியவாறு தன் நாற்காலியைச் சற்றே முன்னால் இழுத்தான் சேது.

ஆனால் முத்துவோ ஆனந்தமாகச் சிகரெட் பிடித்தவாறு அரைக் கண் மூடிய நிலையில் ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் லயித்திருந்தவன் சாவதானமாக நிமிர்ந்து ''ஆமாம், சேது!.... உனக்கு ஒரு விஷயம் தெரியுமா?'' என்று புன்னகையுடன் கேட்டான்.

''என்ன?'' என்று இதுவரை காட்டாத கனிவோடு விசாரித்தான் சேதுராமன்.

''என் மனைவி செத்து விட்டாள்!''

இதைக் கேட்டுப் பலத்த அதிர்ச்சியுற்றான் சேது. ''யார், லட்சுமியா?''

'ஆம்' என்று தலையசைத்தான் முத்து.

''எப்போது?''

''கிட்டத்தட்ட ஆறு மாதமாகப் போகிறது.''

''அட, பாவி! எனக்கு ஒரு தகவலும் சொல்லியனுப்ப வில்லையே!''

''தவறுதான். ஏனோ அப்படி இருந்து விட்டேன்.''

''அவளுக்கு என்னவாம்?''

''யாருக்குத் தெரியும்? அவள் உயிர் விடும் போது நான் பாண்டியில் இருந்தேன். என்னமோ இரண்டு நாட்கள் படுத்தாளாம். கண்ணை மூடி விட்டாள்'' என்று கூறிப் பெரிதாக நகைத்தான் முத்து.

சேதுராமனுக்கு வாயடைத்துப் போய் விட்டது. அவன் வெகுநேரம் மௌனமாக இருந்தான்.

''என்ன சேது, வருத்தப்படுகிறாயா?''

சேதுராமன் வாய் திறக்க வில்லை.

''வருத்தப்படு! ஆனால் அப்படி வருந்துவதால் இனி எவ்விதப் பலனுமில்லை என்று நினைத்துக் கொண்டே வருத்தப்படு!'' — இவ்வாறு சொல்லி விட்டு மீண்டும் சிரித்தான் முத்து.

ஒரு நீண்ட மௌனத்துக்குப் பின், சேதுராமனின் மனத்தில் சற்று முன் தோன்றிய அந்த எண்ணம் மறுபடியும் முட்டித் தலைதூக்கியது. 'இவனும் இப்போது என்னைப் போன்ற நிலையில்தானே இருப்பான்? அதனால் நான் சொல்வதை இவனால் புரிந்து கொள்ளவும் முடியும்.



மற்றவர்களைப் போல் இவன் எனக்கு உபதேசம் செய்யவோ, மனித நிலைக்கு அப்பாற்பட்ட தேவனுக்குப் பேசவோ மாட்டான். ஏனென்றால் மனித மனத்தின் பலவீனத்தை நன்கு உணர்ந்தவன். அதற்கு ஓர் எடுத்துக் காட்டாகவே வாழ்பவன். எனவே, என் மன அரிப்பை இவனிடம் துணிந்து சொல்லலாம். அதைக் கேட்டு அதற்குச் சரியான மாற்று மருந்தை உடனே தேடிக் கொடுத்தும் விடுவான்.'

தொண்டையை மெல்லக் கனைத்துக் கொண்டு தன் நாற்காலியை இன்னும் சற்று முன்னால் தள்ளினான் சேதுராமன்.

இந்நேரம் வரை ஏதோ யோசனையிலிருந்த முத்து சட்டென்று திரும்பி, ''மணி என்ன?'' என்றவாறு சுற்று முற்றும் பார்த்தான்.

அந்த அறைச் சுவரில் தொங்கிய கடிகாரத்தில் மணி ஒன்பது ஆகியிருந்தது.

''ஓ.... நேரமாகி விட்டது. தூங்க வேண்டியதுதான்'' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட முத்து, ''நீ சாப்பிட்டு விட்டாயா, சேது?'' என்று விசாரித்தான்.

''அதெல்லாம் முடிந்தது. ஏன்?''

''ஒன்றுமில்லை..... ஒரு விஷயம்....''

''சும்மா சொல்!''

''உனக்கு ஆட்சேபணை இல்லையென்றால் இன்றைக்கு ஒரு நாள் மட்டும் உன் வீட்டில் படுத்துத் தூங்கலாம் என்று வந்தேன்.....''

''ஏண்டா, பைத்தியம்! என்ன உளறுகிறாய் ?''

''உண்மைதான், சேது.''

''அரண்மனை போல் வீட்டை வைத்துக் கொண்டு இங்கே என்னடா, படுக்கை?''

''அப்படியானால் எனக்கு இவ்வீட்டில் இடமில்லை, என்கிறாயா?''

''முதலில் விஷயத்தைச் சொல்!''

முத்து தயங்கினான். பிறகு ஓர் அசட்டுச் சிரிப்புடன் ''நீ சொல்வதும் சரிதான் சேது! இந்தப் புனிதமான வீட்டில்.....'' என்று ஏதோ சொல்ல வாயெடுத்தவன் தலையாட்டிக் கொண்டு மௌனமானான்.

சேதுராமனுக்கு நிஜமாகவே ஒன்றும் புரியவில்லை. ''முத்து! நீ என்ன சொல்கிறாய்?'' என்று சற்று அதட்டியே கேட்டான்.

முத்து மெல்லத் தலை நிமிர்ந்தான். ''நான் அதைச் சொன்னால் என்னைக் கேலி செய்ய மாட்டாயே?''

பதிலேதும் கூறாமல் அவனை வெறித்து நோக்கினான் சேதுராமன்.

''ஒன்றுமில்லை, சேது!...... அவள்—என் மனைவி லட்சுமி — இறந்து இன்றோடு ஆறு மாதமாகிறது. அவள் உயிருடன் இருந்த போது அவளுக்காக நான் ஒன்றுமே செய்ததில்லை. அப்படிச் செய்ய வேண்டுமென்று அப்போது எனக்குத் தோன்றவும் இல்லை. அவள் இறந்தபின்—அவளுடைய நொந்த உடலுக்கு நான் தீ மூட்டிய போது,—அவளுக்காக ஏதாவது செய்ய வேண்டும் போல் ஓர் எண்ணம் பிறந்தது. என்னால் என்ன செய்ய முடியும்? யோசித்து யோசித்துக் கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தேன். அதாவது, அவளுக்காகக் குறைந்தபட்சம் ஆறுமாத காலத்துக்காவது, என் அன்றாடத் 'திருவிளையாடல்'களில் ஈடுபடாமல் இருப்பது என்ற முடிவுதான் அது. எவ்வளவு கடினமான முடிவு! தெரியாத்தனமாகச் செய்த அம்முடிவை ஏற்று, எப்படியோ பல்லைக் கடித்துக் கொண்டு, கடந்த ஐந்து மாதம்—இருபத்தொன்பது நாட்களைச் 'சுத்தமாகவே' கடத்தி விட்டேன். இன்று இரவு ஒரு பொழுது கழிந்து விட்டால் சரியாக ஆறு மாதம் நிறைவாகி விடும். ஆனால்... ஆனால்.... அதைச் சொல்லவே எனக்கு வெட்கமாயிருக்கிறது சேது! இன்றைய கடைசி இரவுப் பொழுதை என்னால் 'சுத்தமாக'க் கழிக்க முடியுமா என்று எனக்கே சந்தேகம் தோன்றியது. அப்படி ஒரு சோதனை; சூழ்நிலை; பலவீனம். இந்த இக்கட்டிலிருந்து தப்பத்தான் உன்னைத் தேடி உன் வீட்டுக்கு ஓடி வந்திருக்கிறேன். இந்நிலையில் எனக்குச் சரியான பாதுகாப்புத் தர உன்னைத் தவிர வேறு யாரால் முடியும்? உன் வீட்டைத் தவிர வேறு எங்கு போய் நான் படுத்தாலும் எனது அந்த அற்பமான சிறு விரதத்தை அழித்து முறித்து விடுவேன். அதனால்தான், சேது! தயைசெய்து இன்று ஒரு நாள் மட்டும் உன் வீட்டில் படுக்க எனக்கு அனுமதி கொடு என்று வேண்டுகிறேன்.''

குரல் கம்மிக் கரைய இவ்வாறு கூறி விட்டுச் சற்று நேரம் தலை குனிந்து கொண்டிருந்த முத்து ஒரு நீண்ட பெருமூச்சுடன் எழுந்து, அவ்வறையின் வலது பக்கச் சுவரில் மாட்டித் தொங்கிய சௌரியின் புகைப்படத்துக்கு எதிரே போய் நின்று அதைச் சில விநாடிகள் இமைக்காமல் பார்த்தான்.

''ஹூம்!.... என் மனைவி லட்சுமியின் முகச் சாயல்கூட இப்படித்தான் இருந்தது. இம்மாதிரி பெண்களின் முகத் தோற்றம் எல்லாமே ஒரே மாதிரிதான் இருக்கும் போலும்!'' என்று தனக்குள் மெல்ல முனகிக் கொண்ட அவன், தன் ஜேபியில் பொட்டலமாகச் சுற்றி வைத்திருந்த இரண்டு முழம் மல்லிகைப் பூச்சரத்தை எடுத்துச் சௌரியின் படத்துக்குப் போட்டு விட்டு, அமைதியாக நடந்து போய், மூலையில் கிடந்த தன் படுக்கையைத் தட்டி அங்கேயே விரித்துப் போடலானான்.

பனிச் சாரலில் நனைந்த நோயாளி போல் வெட வெடத்து நின்றிருந்த சேதுராமன் வெகுநேரத்துக்குப் பின், —மாடியிலிருந்த தன் படுக்கை அறையை நோக்கிப் படிக்கட்டின் ஒவ்வொரு படியிலும் உறுதியாகக் கால்களை ஊன்றி வைத்து மேலே ஏறிச் சென்றான்.

தேவென் பிரபல கிரிமினல் வழக்கறிஞர். ஓயாமல், ஒழியாமல் வழக்குகள் வந்து குவிந்த வண்ணமாயிருக்கும். வழக்குகளுக்கு அடுத்தபடியாக அவரை இவ்வுலக நினைவுக்குக் கொண்டு வந்தது வைதேகிதான். இளம் வயதிலேயே மனைவியை இழந்த அவர் அருமை மகள் வைதேகி மட்டும் இல்லை என்றால், எப்போதோ தம் தொழிலுக்கு ஒரு முழுக்குப் போட்டிருப்பார். ஆனால் அவர் பட்ட சிரமம் கொஞ்சமல்ல. தேவெனுடைய தமக்கை, இளம் பிராயத்திலேயே கணவனை இழந்தவள். அந்த அம்மாள் தான் வைதேகியைக் கண்ணும் கருத்துமாக வளர்த்தவள். குழந்தை வைதேகிக்கு அத்தை இருந்தால் போதும். போதாக் குறைக்கு அத்தை பிள்ளை விஜயராகவன் அவளுக்கு விளையாட்டுத் தோழனாயிருந்தான்.

வைதேகி ஒன்றை விரும்பி அது கிடைக்க வில்லை என்பதே கிடையாது. நாளுக்கோர் உடையும், நாழிகைக்கோர் அலங்காரமுமாகத் தோன்றுவாள். ஒரு நாள் சங்குக் கழுத்தில் முத்து மாலை ஒளிர, முத்துப் பல் முறுவலும், தந்தக் கரங்களின் அழகை மிகைப்படுத்தும் அரைக்கை ஜாக்கெட்டுமாக அழகு நடை போடுவாள். மறு நாளே இரட்டைப் பின்னலும் பைஜாமாவுமாகச் சைக்கிளில் ஒயிலாகப் போவாள். அதற்கு அடுத்த நாள் மஞ்சள் நிற நைலான் ஸாரியும் அதற்கேற்ற கறுப்பு வெல்வெட் சோளியும் அணிந்து பஸ்ஸில் மோதி யடித்துக் கொண்டு ஏறி உற்சாகமாகப் போவாள். இத்தனைக்கும் அவளுக்காக ஒரு ஹெரால்டு ஸ்டாண்டர்டு எப்பொழுதும் காத்துக் கிடக்கும். பல நாட்கள் தானே காரை ஓட்டிக்கொண்டு செல்லும் வைதேகிக்குச் சில நாட்கள் பெரிய பிளிமத் காரில், ஓரத்தில் தான் அமர்ந்துகொள்ள டிரைவர் ஓட்ட வேண்டும் என்று ஆசை உண்டாகி விடும்.



கடல் அலைகளைப்போல் இப்படி ஆசைகள் மாறி மாறி வைதேகியின் உள்ளத்தில் எழுந்து கொண்டிருந்ததற்குக் காரணம் கணத்துக்குக் கணம் மாறும் அவளது ருசிதான்.

ஆடை ஆபரண அலங்கார சுந்தரியாக மட்டும் வைதேகி இருந்துவிடவில்லை. படிப்பிலும் அவள்தான் முதல்.

ஆனால் இவ்வளவு நவநாகரிக மோகத்தில் மூழ்கியிருந்த வைதேகிக்கு அத்தான் விஜயராகவனிடம் ஓரளவு அலட்சியம் இருந்ததில் அதிசயம் இல்லை. முக்கிய காரணம் அவன் ஏழை என்பதுதான்.

இனந் தெரியாத பருவத்தில் தந்தையை இழந்து விட்ட விஜயராகவன் அழகன். கல்வியறிவிலும், கலாசாலை விளையாட்டுப் பந்தயங்களிலும் இணையற்றவன். பண்பு, பரிவு, பாசம், அடக்கம் இவற்றில் உயர்ந்தவன்.

விஜயராகவனின் கம்பீரமான தோற்றமும், கண்ணியமாகப் பழகும் சுபாவமும் வைதேகிக்குப் பிடித்துத்தான் இருந்தன. ஆனாலும், அவன் எது சொன்னாலும் கேட்கக் கூடாது என்ற அலட்சிய மனப்பான்மை ஏனோ அவளிடமிருந்தது.

விஜயராகவன் பி. எஸ்ஸி. தேறியதும் வைத்தியக் கல்லூரியில் சேர விரும்பினான். ஆனால் அவனுக்குக் கோயமுத்தூர் வைத்தியக் கல்லூரியில்தான் இடம் கிடைத்தது. தேவெனுக்கு அவனை விட்டுப் பிரிய மனமில்லைதான். அரை மனதோடுதான் இசைந்தார்.

விஜயராகவன் கோயமுத்தூருக்குப் புறப்படுவதற்கு முன்னால் இது நிகழ்ந்தது. வைதேகி ஜுரத்துடன் படுத்துக் கொண்டிருந்தாள். வெளியே போய் விட்டு வந்த விஜயராகவன் செய்தி யறிந்ததும் பதைபதைத்துப்போனான். "வைதேகி! ஜுரம் ரொம்ப அதிகமாயிருக்கிறதா? மருந்து சாப்பிட்டாயா? டாக்டர் என்ன சொன்னார்?" என்று பரிவோடு கேட்டுக் கொண்டே கட்டிலுக்கு அருகில் வந்து அவளைக் குனிந்து பார்த்தான். பிறகு மெதுவாக அவளது தளிர்க் கரத்தைப் பிடித்துப் பார்த்து, "வைதேகி, காப்பி சாப்பிட்டாயா?" என்று கேட்டான்.

"என்ன இது? கையை விடுங்கள். இப்பொழுதே டாக்டர் என்ற எண்ணமோ....?" என்று கேட்டு அவன் கையை உதறித் தள்ளினாள் வைதேகி.

விஜயராகவன் அவளது கோபத்தைக் கண்டு அதிர்ந்து போனான்.

"என்ன வைதேகி, இவ்வளவு கோபம்? நான் உன்னைத் தொடக் கூடாதா? எப்படியும் நீ என்னுடையவள் என்ற தைரியத்தில் தான் உன் கையைப் பிடித்தேன்...." என்றான்.

"நீங்களாகவே அந்த முடிவுக்கு வந்து விடுவதா? உறவுமுறை ஒட்டி விட்டால் போதுமா? உள்ளம் ஒட்ட வேண்டாமா....?" வைதேகியின் வார்த்தைகள் தணலாகத்தான் வெளி வந்தன.

உடனே விஜயராகவன் சட்டென்று கட்டிலிலிருந்து எழுந்தான்.

"என்னை...மன்னித்து விடு, வைதேகி! உன் உள்ளத்தைப் புரிந்து கொள்ளாமல் உறவு முறையைக் கொண்டு உன்னிடம் அதிகமாக உரிமை எடுத்துக் கொண்டு விட்டேன்.... நான் வருகிறேன்!" என்று கூறி விட்டுக் குனிந்த தலை நிமிராமல் விர்ரென்று வெளியேறினான்.

வைதேகி வழக்கம்போல் புதுப் புது ஆடை ஆபரணங்களைப் புதுப் புது விதமாகப் புனைந்து புவனமோகினியாகத் தோன்றினாள். எம். ஏ. பரீட்சை எழுதின பிறகும் அவளது துள்ளித் திரியும் கால்கள் ஓயவில்லை. முன்பு கல்லூரிக்குப் போய் வந்தவள் இப்பொழுது காலனி காலனியாகப் போய்த் தோழிகளையெல்லாம் சந்தித்தாள்.

மனம் கசந்து கொண்டு வெளியேறிய அத்தான் விஜயராகவனைப் பற்றி

# அசட்டுப் பெண்

ஸோமாஸ்

ரினைத்துப் பார்ப்பதற்குக்கூட அவளுக்கு அவகாசம் இல்லை.

ஒரு நாள் தேசிகன் வைதேகியிடம் அவள் திருமணத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்து, "....எனக்கு வரவர ரொம்பவும் பல ஹீனமாயிருக்கிறது. உனக்கும் அத்தானுக்கும் கல்யாணத்தை நடத்தி விட்டால் சௌகரியமாயிருக்கும்....." என்று அவர் சொல்லி முடித்தாரோ இல்லையோ, வைதேகி கலகலவென்று சிரித்து விட்டு, "என்ன அப்பா இது? திடீர் யோசனை? நான் சுதந்திரமா யிருப்பது உங்களுக்குப் பிடிக்கவில்லையா? அப்படியென்றால் சொல்லுங்கள். வீட்டிலேயே இருந்து விடுகிறேன். அதற்காகக் கல்யாணம் என்ற விலங்கை மாட்டி ஆயுள் தண்டனை விதித்து விடாதீர்கள். என்னோடு படித்த பிரமீளா, காமினி, யமுனா, நர்மதா, விமலா ஆகியவர்களுடன் நானும் சேர்ந்து கொண்டு விவாக பந்தத்தில் சிக்கிக் கொள்வதில்லை என்று சபதம் பூண்டிருக்கிறேன். கன்னி வாழ்வு கஷ்டமானதா அப்பா?" என்று குழந்தைத் தனமாகக் கேட்டாள்.

தேசிகன் பதில் பேசாமல் மௌனமாகச் சிந்தனையில் ஆழ்ந்து விட்டார்.

அன்று காலை பத்து மணிக்குச் சாப்பாடு ஆனதும் வைதேகிக்குப் பொழுதே போகவில்லை. என்னென்னவோ குருட்டுச் சிந்தனைகளில் மூழ்கி விட்டாள்.

"வைதேகி, என்ன சிந்தனை ரொம்ப பலமாயிருக்கிறதே! நான் வந்து கூப்பிடுவது கூடக் கேட்காமல் அப்படி என்னடி சிந்தனை?" என்று அவள் கல்லூரித் தோழி பிரமீளா கேட்டவண்ணம் சோபாவில் அமர்ந்தாள்.

"வா, பிரமீளா, வா! என்னவோ யோசனை போயேன்! அது இருக்கட்டும். என்ன விசேஷம்?"

"விசேஷம் இல்லாமலா? எனக்கு விவாகம் நிச்சயமாகி யிருக்கிறது. என் அன்னுபத்திரிகையோடு உன் அப்பாவை அழைக்கப் போயிருக்கிறான். நான் உன்னிடம் நேரில் சொல்லி அழைக்கலாம் என்று வந்தேன். இம்மாதம் ஏழாம் தேதி முகூர்த்தம். திருப்பதியில் நடக்கிறது. நீ அவசியம் எங்களுடனேயே புறப்பட்டு வந்துவிட வேண்டும்!"

"....என்ன பிரமீளா, புதிர் போடுகிறாய்?"

"அதெல்லாம் ஒன்றும் இல்லையடி, வைதேகி! இது என் அப்பா நிச்சயித்த கல்யாணம். எப்படியும் கல்யாணம் செய்துகொண்டுதானே ஆகவேண்டும்?"

"என்னால் நம்பவே முடியவில்லையே! விவாக பந்தத்திலே அகப்பட்டுக் கொள்ளுவதில்லையென்ற நம் சபதம்....?"

"அதை நீ நிஜமென்று நம்பிக் கொண்டிருக்கிறாயா? அசட்டுப் பெண்ணே?..." என்று விஷமமாகச் சிரித்தாள் பிரமீளா.

பாவம், பேதைப் பெண் வைதேகி இதைக் கேட்டு அதிர்ந்து போனாள். பிரமீளா தொடர்ந்து பேசினாள்:

"....கல்யாணம் செய்து கொள்ளாமலே இருந்துவிட முடியுமா, சொல்லு? நம் காமினிக்குக் கூடக் கலியாணம் நிச்சயமாகி விட்டது. இன்னும் முகூர்த்தத் தேதிதான் நிச்சயிக்கவில்லை."

"என்ன, காமினிக்குக் கல்யாணமா? போன வாரம் கூட என்னிடம் சொன்னாளே.....!"

"என்ன சொன்னாள்?"

" 'யார் என்ன சொன்னாலும் நான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை. நீயும் நானும் சேர்ந்து சமூக சேவை செய்வோம்' என்று உறுதியாகச் சொன்னாள்...."

பிரமீளா கலகல வென்று சிரித்தாள். "பைத்தியம் மாதிரி அதை நீ அப்படியே நம்பி விட்டாயாக்கும்...."

வைதேகிக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவள் முகம் தொங்கிப் போய் விட்டது. யோசனையில் ஆழ்ந்து விட்டாள். பிரமீளா கொஞ்ச நேரம் ஏதேதோ பேசிக் கொண்டிருந்து விட்டு வீட்டுக்குப் போய் விட்டாள்.

இரண்டு மாதங்களுக்குள் அவள் தோழிகளில் இன்னும் இருவருக்குக் கல்யாணம் நிச்சயமாகி மின்னல் வேகத்தில் நடந்தேறி விட்டன.

ஏனோ இந்தத் திருமண வைபவங்களில் உற்சாகமாகப் பங்கெடுத்துக் கொள்ள முடியவில்லை. எதைப் பற்றியுமே சிந்தித்துத் தன்னைத் துயரத்தில் ஆழ்த்திக் கொள்ளாதிருந்த வைதேகி இப்பொழுது சதா சிந்தனை வயப்பட்டிருந்தாள். அந்தச் சிந்தனையில் அதிகமாக இடம் பெற்றவன் அவள் அத்தான் விஜயராகவன்தான்.

இதுவரையில் அவள் அநுபவித்தறியாத நாணமொன்று அவள் உள்ளத்தில் பிறந்தது. குழந்தைப் பிராயம் முதல் ஓடிப் பிடித்து விளையாடிப் பழகிய அத்தான் விஜயராகவன் அவள் இதயத்தில் புதிய வடிவுடன் தோன்றினான்.

முன்பு ஒரு சமயம் அவள் ஜுரமாய்ப் படுத்திருந்த போது அத்தான் கையைப் பிடித்து 'ஜுரம் இருக்கிறதா' என்று ஆதுரம் பொங்கக் கேட்டதற்கு அவள் அவனிடம் சீறி விழுந்ததும், அவதூறாகப் பேசியதும் அவள் நினைவுக்கு வந்தன. அப்பொழுது விஜயராகவன் மிகவும் சாந்தமாக அவளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வெளியேறியதும் அவள் மனத் திரையில் விரிந்தன.

வைதேகியினால் மனப் பளுவைத் தாங்கிக் கொண்டிருக்க முடியவில்லை. அத்தானுக்கு ஒரு கடிதம் எழுதினாள் :

"அன்புள்ள அத்தானுக்கு,

அநேக நமஸ்காரம். என் கடிதம் உங்களுக்கு விசித்திரமாயிருக்கும். ஆத்திரத்தையும் உண்டாக்கும். நான் பழைய வைதேகியில்லை. முன்பு ஒரு சமயம் உங்கள் மனசைப் புண்படுத்தி வெளியேற்றிய குற்றத்துக்காகத் தாங்கள் அளிக்கும் தண்டனையை ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருக்கும் தங்கள் உரிமைப் பெண் வைதேகி. என்னை மன்னிக்க மனமில்லை என்றாலும் ஒரு முறை உங்களைக் கண்ணால் பார்க்கவாவது சந்தர்ப்பம் தரமாட்டீர்களா? இதற்கு மேல்...... என்ன எழுதுவேன் ?

உங்கள்,

**வைதேகி"**

ஒரு வாரம் ஓடி விட்டது. தன் கடிதத்துக்கு அத்தான் பதில் எழுதுவார் என்று அவளால் எதிர்பார்க்க முடியவில்லை. அவளை அன்று அவள் கொஞ்சமாகவா அவமதித்திருக்கிறாள்! வழக்கம் போல் உடை மாற்றிக்கொண்டு அலங்கரித்துக் கொள்வதைக் கூட மறந்து விட்டாள். தினசரி பல தடவை அவளது எழிலுருவத்தைப் பிரதிபலித்துப் பூரித்துக் கொண்டிருந்த நிலைக் கண்ணாடி இப்பொழுது அழுது வடிந்தது. வைதேகி தான் அதன் பக்கமே செல்லுவதில்லையே!

வைதேகி படும் வேதனை தேசிகனுக்குத் தெரிந்துதான் இருந்தது. அவர் தான் அவளைக் கவனித்துக் கொண்டே இருக்கிறாரே !

தன் கட்டிலுக்கு அருகில் அப்பாவைக் கண்டதும் வைதேகி எழுந்து, "அப்பா!" என்று கத்திக் கொண்டே ஓடி வந்து அவர் கையைப் பிடித்துக் கொண்டு 'ஓ'வென்று அழுது விட்டாள்.

"அத்தானை உடனே வரவழையுங்கள், அப்பா. என்னிடம் கொண்டுள்ள கோபத்தினால்தான் அவர் வராமல் இருக்கிறார்...... அவரை நான் அவமதித்துப் பேசி விட்டேன். அவரிடம் நான் மன்னிப்புக் கேட்க வேண்டும்..."

"அதற்கெல்லாம் அவசியமில்லை, வைதேகி. உனக்குப் பதில் எழுதாத தப்புக்கு உன்னிடம் மன்னிப்புக் கேட்க உன் அத்தானே வந்திருக்கிறான்.....!" என்றார் தேசிகன் மிகவும் நிதானமாக.

வைதேகி தன் செவிகளை நம்பவில்லை. அதற்குள் விஜயராகவன் அங்கே வந்து விட்டான். "வந்து விட்டீர்களா அத்தான்.....!" என்று கேட்டுக் கொண்டே அவனிடம் ஓடினாள். தேசிகன் இனி, தாம் அங்கிருப்பது சரியல்ல என்பதை உணர்ந்து மெதுவாக நழுவினார்.

"ஏன் அத்தான், மாதக் கணக்காக வராமலே இருந்து விட்டீர்கள் ?" என்று குழந்தை போல் கொஞ்சினாள் வைதேகி.

" உன் தோழிகளுக்கெல்லாம் கல்யாணம் செய்து வைப்பதென்றால் சும்மா இருக்கிறதா? அவர்களுக்கு நானே வரன் தேடி எவ்வளவு சிரமப்பட்டேன் தெரியுமா? ஸ்ரீ ராகவன் வைதேகியை மணப்பதற்கு வில்லை முறித்தார் என்றால் இந்த விஜயராகவன் இந்த வைதேகிக்காக அதைவிடப் பாடுபட்டிருக்கிறான்! ஆனால் உன் தோழிகளுக்கு மட்டும் கல்யாணமாகவில்லை என்றால் நீ என்னை அடியோடு மறந்திருப்பாய்.... உன் லட்சியம் அது தானே?" என்று கேட்டு விஜயராகவன் குறும்பாகக் கண்களைச் சிமிட்டினான்.

"அதை யெல்லாம் மறந்து என்னை மன்னித்து ஏற்றுக் கொள்ளுங்கள், அத்தான்!" என்றாள் வைதேகி.

"என்ன வைதேகி, உன் உள்ளம் ஒட்டிக்கொள்ளத் தயாராகி விட்டதா? இல்லை, உன் லட்சியம் இன்னும் குறுக்கே நிற்கிறதா?....." என்று விஜயராகவன் அழுத்தலாகக் கேட்டான்.

"அத்தான்! என் அசட்டுத்தனம் எனக்குப் புரிந்து விட்டது. நீங்களும் அதைக் குத்திக் காட்ட வேண்டாம். ஒரு சமயம் எட்டி நின்ற நாம் ஒட்டி நிற்கிறோமே இப்பொழுது......?" என்று கேட்டுக் கரிய பெரிய விழிகளால் அவனை விழுங்கி விடுவது போல் பார்த்தாள்.

கூடத்தில் அத்தை தேசிகனிடம் பேசிக் கொண்டிருந்தாள். "இந்த அசட்டுப் பெண் இத்தனை ஆசையை எப்படித்தான் அடக்கி வைத்துக்கொண்டிருந்தாளோ?" என்று கூறிச் சிரித்தாள். பதிலுக்குத் தேசிகனும் சிரித்தார்.

விஜய ராகவனும் வைதேகியும் தங்கள் பேச்சுக்கு இடையில் இவ்வுலகை மறந்து கல கலவென்று சிரித்தார்கள்.




"என்ன முதலியார்வாள்! நீங்கள் கவலையே படாதீர்கள்! உங்கள் பையன் பி. ஈ. இன்ஜினீயரிங் கல்வியில் கடைசி வருஷப் படிப்புப் படித்துக் கொண்டிருக்கிறான் என்று சொல்லி னீர்கள். இந்த வருஷம் பரீட்சை எழுதி பாஸ் பண்ணி வெளியே வரட்டும். நானாச்சு, அவனுக்கு வேலை பண்ணி வைக்க! எடுத்த எடுப்பிலேயே பிரபல கண்டிராக்டிங் என்ஜினீயர்களான மோகன்ராம் கம்பெனியில் மாதம் ஆயிரம் ரூபாய் சம்பளத்துக்கு வேலை போட்டுத் தரச் சொல்கிறேன்! நாம் இத்தனை வருஷமா நெருங்கிப் பழகியதற்கு நான் இதைக்கூடச் செய்ய மாட்டேனா?..." என்றார் ஸ்ரீமான் நரசிம்மய்யங்கார்.

இந்த நம்பிக்கையூட்டும் செய்தியைக் கேட்டு மகிழ்ச்சியடைய வேண்டிய இருக்க, ஸ்ரீமான் சிவசங்கர முதலியார் முகத்தில் கருமை படர்ந்தது.

"அய்யங்கார் ஸார்! நம்ம பிள்ளையாண்டான் இந்த வருஷம் பாஸ் பண்ணுவான் என்று தோன்றவில்லையே, ஸார்!"

"ஏன்?"

"அவன் எங்கே ஸார், புத்தகம் படிக்கிறான். சினிமாவுக்குப் போவதற்கும், நண்பர்களுடன் மாட்சுக்குப் போவதற்கும் தான் நேரம் சரியாகப் போகுது! இந்த லட்சணத்தில் எப்படி பாஸ் செய்யப் போகிறான்!" என்றார் முதலியார் மிகுந்த கவலையுடன்.

"ஐயோ, மோகன்ராம் கம்பெனியில் விதின்னு விதிதான்! நான் சொல்றதுக்காக மற்றவங்களைத் தள்ளி விட்டு உங்கள் பையனுக்கு வேலை தரலாமே தவிர, பரீட்சை பாஸ் செய்திருக்க வேண்டும் என்ற விதியிலே இம்மியும் விட்டுக் கொடுக்க மாட்டாங்களே! ஆயிரம் ரூபாய் உத்தியோகமில்லே?....பையனிடம் ஒன்றுக்கு நாலு தடவை சொல்லிப் பாருங்க!" என்று சமாதானம் சொல்லி அனுப்பினார் நரசிம்மய்யங்கார்.

"பார்க்கிறேன்!" என்று உணர்ச்சியின்றி சொல்லி விட்டு நகர்ந்தார்.

ஹாஸ்டலில் நாலைந்து மாணவர்கள் ஓர் அறையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களில் ஒருவன்தான் நம் சிவசங்கர முதலியாரின் புதல்வன் சம்பந்தம்.

"டேய், சம்பந்தம்! ஏன்டா இப்படி இடிந்து போய் உட்கார்ந்திருக்கிறாய்! தோல்வி ஏற்படுவது சகஜம்! எழுமின் விழிமின்!" என்றான் நண்பன் நாகராஜன்.

"நான் பரீட்சையில் தோல்வியுற்றதைப் பற்றிக்கூடக் கவலைப்படவில்லைடா! என் அப்பா அப்படியே இடிந்து போய் உட்கார்ந்திருப்பாரேடா. அவருக்கு எப்படிடா ஆறுதல் சொல்லுவது! அவர் என் எதிர்காலத்தைப் பற்றி என்னவெல்லாமோ திட்டமிட்டிருந்தாரேடா! அவரை எப்படிடா பார்ப்பது? அதை நினைத்தால்தான் கஷ்டமாக இருக்கிறது!" என்றான் சம்பந்தம்.

"எனக்கு ஒரு யோசனை தோணுது டா!" என்றான் குயுக்தி குமார்.

"தோல்வியுற்ற நாம் நாலைந்து பேர் வைஸ் சான்ஸலர் வீட்டு வாசலில் 'பாஸ் போடும் வரை உண்ணாவிரதம்' அனுஷ்டித்தால் என்ன? உண்ணாவிரதம் சாதிக்காததுதான் இந்த நாளில் ஒன்று மில்லையே!"

"பேஷான யோசனை! முயற்சி பண்ணிப் பார்க்கலாம்!" என்றான் சம்பந்தம்.

இங்கே திருச்சியில் சிவசங்கர முதலியாருக்கும் அவர் மனைவிக்கும் பலத்த வாய்ச்சண்டை நடந்துகொண்டிருந்தது.

"நம்ம கஷ்டம், நம்ம போதாத காலம், நம் குழந்தைகளையும் பாதிக்குது! இல்லேன்னு நம் பிள்ளையாண்டான் சம்பந்தம் இந்த வருஷம் பெயில் ஆவானா?" என்று கூறினாள் ஸ்ரீமதி சிவசங்கர முதலியார்.

"நம்ம கஷ்டமாவது..... தடி ராஸ்கல்! பாடத்தையே படிக்காமல் சினிமா பாட்டு பாடிக் கொண்டு தெருத் தெருவாய் அலைந்தால் எப்படிப் பாஸ் பண்ணுவான்? ஊரை விட்டு வெளியூருக்கு அனுப்பி ஹாஸ்டல் செலவு கட்டிப் படிக்க வைச்சா கஷ்டத்தைக் கொஞ்சம் கூட உணராமல் இப்படியா 'கோட்' அடிக்கிறது! வரட்டும் ராஸ்கல்! கல்தா கொடுத்து அனுப்புகிறேன்!" என்று பொரிந்து தள்ளிக் கொண்டிருந்தார்.

அந்தச் சமயம் பார்த்து அவருடைய மகள் சிவகாமி, "ஏன் அப்பா, அண்ணனை இப்படிப் பொரிந்து தள்ளுறீங்க? இதோ பாருங்க தந்தி – அவன் பாஸ் பண்ணி விட்டானாம்!" என்ற மகிழ்ச்சிகரமான தகவலைத் தெரிவித்தாள்.

சிவசங்கர முதலியார் அப்படியே ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனார்!

ஒரு வாரம் கழித்துச் சம்பந்தம் ஊருக்கு வெற்றி வாகை சூடிய வீரனாகத் திரும்பி வந்தான். சிவசங்கர முதலியார் முகமலர்ச்சியோடு அவனை வரவேற்றார். தாயாரோ, ஆரத்தி சுற்றி, திருஷ்டி கழித்து வரவேற்றாள். மூன்று நாட்கள் இந்த மகிழ்ச்சி ஆரவாரத்தில் கழிந்தன. நான்காவது நாள், "என்ன சம்பந்தம்! நம்ம நரசிம்மய்யங்காரைப் பார்த்து விட்டு வரலாம், வா!" என்றார்.

இருவரும் சென்றனர். நரசிம்மய்யங்கார் குசலம் விசாரித்து விட்டு, வந்த காரியத்தை உணர்ந்து கொண்டு, "முதலியார்வாள், நாளை பத்திரிகையில் மோகன்ராம் விளம்பரம் வருகிறதாம். அதைப் பார்த்து விட்டுப் பிள்ளையாண்டானை ஒரு மனுப் போடச் செய்யுங்கள்! பிறகு பார்த்துக்கொள்வோம்!" என்று சொல்லி அனுப்பி வைத்தார்.

சிவசங்கர முதலியாருக்குத் தம் மகனுக்கு வேலையாகி விட்டாற் போன்ற தொரு குதூகலமே ஏற்பட்டு விட்டது. துள்ளு நடை போட்டுக் கொண்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தார்.

மறுநாள் காலைப் பத்திரிகையில் பின் வரும் விளம்பரம் வெளியாகியிருந்தது:

> **தேவை**
>
> **மோகன்ராம் கம்பெனியாருக்கு என்ஜினீயர்கள் தேவை**
>
> குறிப்பு: பாஸானவர்கள் தேர்ந்தெடுக்கப்படமாட்டார்கள். பெயிலானவர்கள், அதிலும் இரண்டு, மூன்றுமுறை பெயிலானவர்களுக்கு விசேஷச் சலுகை காட்டப்படும்.

இதைப் படித்த சம்பந்தமும், சிவசங்கர முதலியாரும் ஒருவரை யொருவர் பார்த்துத் திருதிரு என்று விழித்தனர். அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை! விளக்கம் கேட்டுப் புரிந்துகொள்ள நேரே நரசிம்மய்யங்கார் வீட்டுக்கு விரைந்தனர்.

அவர்களைப் பார்த்ததுமே நரசிம்மய்யங்கார் பின்வருமாறு கூறினார்: "என்ன முதலியார்வாள்! மோகன்ராம் கம்பெனியாருக்குத் தங்கள் இன்ஜினீயர்கள் கட்டப்போகும் பாலங்கள், கட்டடங்கள் – இவற்றை உபயோகிக்கும் லட்சோப லட்சம் மக்களின் உயிரின் மேல் அக்கறை. அதனால் இந்த வருஷம் தங்கள் விதியை மாற்றி விட்டார்கள்!

"பரீட்சையில் தேறாதவர்கள்–மூன்று தடவை பரீட்சை எழுதுவதற்காகப் புத்தகத்தைப் படித்துப் படித்துக் கொஞ்சமாவது பொறியியல் ஞானத்தை அடைந்திருப்பார்கள் என்று நினைக்கிறார்கள்... ஆனால் உங்கள் பிள்ளையாண்டான் பொறியியல் பரீட்சையில் தேறியவன் என்றாலும் உண்மையில் அவன் தேறியது உண்ணாவிரதக் கலையில் அல்லவா?"



# சிரித்தால் முத்துதிரும் சித்திரப் பூம்பாவை!

**K·T·R**

கோபுர மார்க் பன்னீர்
பொன்னாங்கண்ணித் தைலம்
ஊதுபத்திகள் · ஓமவாட்டர்

K·T·R· வாசனாதி திரவியசாலை
விஜயபுரம் · திருவாரூர் · தமிழ்நாடு

Sai Studio

சென்னை நகர விநியோகஸ்தர்கள்: ஸ்ரீ ரகுநாத் ஏஜென்ஸீஸ், 35, மங்கபதி நாயக் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2

---

## ஒவ்வொரு இரவும் இங்கே தீபாவளிதான்!

எங்கும் இன்ப மயம்!
வண்ணக் கோலங்கள்
அழகூட்ட, வரிசை
வரிசையாய் சுடர்விட்டுப்
பிரகாசிக்கும் தீபங்கள்
வரவேற்க, தீபாவளி
மீண்டும் வந்துவிட்டது.
விரைவிலேயே இந்த
தீபங்களின் ஒளியும்,
பண்டிகையின் மகிழ்ச்சியும்
குறைந்து அடுத்த
தீபாவளிக்காக ஏங்கிக்
காத்திருப்போம். ஆனால்,
தீபங்களின் ஒளி மங்காமல்
என்றும் பிரகாசிக்கும்
இடமும் ஒன்று உண்டு.
இரவில் ஒளிரும்
தாரகைகள், தீபங்களைப்
போல் பிரகாசித்து,
வானமண்டலத்தையே
இன்பலோகமாக
மாற்றுகின்றன...
வான வீதியில் காற்றைக்
கிழித்துச் செல்லும்
வெள்ளிநிற போயிங்
விமானத்திற்கு
ஒவ்வொரு இரவும்
தீபாவளித் திருநாள்தான்!

**ஏயர்-இந்தியா**





# மனம் எனும் ரசாயனம்



அநுத்தமா

என் மனைவியும் நானும் நாடகம் பார்த்துவிட்டு வீட்டுக்குத் திரும்பினோம். நம் ஊர்ப் பிள்ளைகளே சேர்ந்து ஆடிய ஆட்டம். கதையும் அவர்களே எழுதிக் கொண்டார்கள். மிகவும் ரசமாகத்தான் இருந்தது. 'சின்ன ஊர், இங்கே என்ன இருக்கப் போகிறது?' என்ற அலட்சியத்துடன்தான் நாங்கள் சென்றோம். பதினைந்து வருடங்கள் கல்கத்தாவில் இருந்து வங்காள நாடகங்களைப் பார்த்து, மேனாட்டு நாடகக் குழுவினரைக் கண்டு களித்து, ஏன், நாங்களே கூடத்தான் நாடக மண்டலியை நடத்திப் பார்த்து அநுபவித்த எங்கள் இருவருக்கும் ஊர்க்காரப் பிள்ளைகளின் ஆட்டத்தைக் காண வேடிக்கையாகத்தான் இருந்தது. ஆனால் போய்ப் பார்த்துவிட்டு வந்த பிறகு நான் யோசிக்கிறேன். நடிப்பு, உத்தி எல்லாமுமே நன்றாக அமைந்திருந்தன.

திருப்தியுடன் நான் என் மனைவியிடம் "என்ன நாடகம் பிரமாதமாக அமைந்து விட்டது இல்லையா?" என்று கேட்டேன்.

சப்புக் கொட்டி விட்டாள் அவள். "என்ன ஜோடனை, என்ன ஜோடனை! அதை மெச்சுவதா, உங்கள் ரசனையை மெச்சுவதா?" என்று அடியோடு ஒரு போடு போட்டு என்னையும் என் அபிப்பிராயத்தையும் தள்ளி விட்டாள்.

நான் அதைச் சுவைத்து ரசித்துக் கொண்டேன். நாங்கள் இருவரும் ஏகமனதாக ஒப்புக்கொண்ட விஷயங்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். எங்கள் திருஷ்டிக் கோணங்களிலேயே வேறுபாடு. பேதங்கள், நிற பேதங்கள், கொள்கை வேறுபாடுகள், அபிப்பிராய மாறுதல்கள், இன வித்தியாசங்கள், — இவைகளின் கலவைதானே உலகம்?

"என்ன சிரிக்கிறீர்கள்? நான் அழுகிறேன். 'நாடக விமர்சகர்' என்று பெயர் வாங்கியவரின் ருசி இப்படித் தரைக்கு இறங்கி விட்டதே என்று நான் உள்ளூற வருத்தப்படுகிறேன்."

"சீர்தூக்கும் மனப்பான்மையும், இடம் பொருள் கண்டு மதிப்பிடும் புத்தியும் இல்லையே உனக்கு? எனக்கு அது வேதனையாக இருக்கிறது" என்று மறுமொழி தந்து விட்டு மீண்டும் உரக்கச் சிரித்தேன் நான்.

எங்கள் வாக்குவாதம் நீண்டு, சாப்பாடு, உறக்கம் காலும் முடிந்து, விழிப்புக்கும் காப்பிக்கும் பிறகும் கூட நடப்பது உண்டு. ஆயினும் இன்று வீட்டுக் குறட்டை மிதிக்கும் முன்பே எங்கள் கவனம் வேறு பக்கம் சென்றுவிட நேர்ந்தது. வீட்டு வாசலில் ஒரு புதுக் கார் நின்றிருந்தது. அதன் மீது சாய்ந்து கொண்டு எங்கோ பார்த்தவண்ணம் காக்கி உடை அணிந்த டிரைவர் இருந்தான். வண்டியின் பின்புறம் சாமான்கள் வைக்கும் இடம் திறந்து கிடந்தது. குழந்தைகளை வைத்துத் தள்ளும் வண்டி காரின் மேலே சாய்த்து வைக்கப்பட்டிருந்தது. துல்லிய வெள்ளை உடுத்திய ஆயா ஒருத்தி சாமான்களை இறக்கிக் கொண்டிருந்தாள். செல்வச் சின்னங்களாகிய பற்பல சாமான்கள் வண்டியினின்று இறங்கிக் கொண்டிருந்தன.

"மஞ்சுளா வந்திருக்கிறாளாக்கும்" என்று கேட்டாள் என் மனைவி.

"யாரு? செப்பியா?" என்று கேட்டேன் நான்.

"உஷ்! அப்படியெல்லாம் அசட்டுப் பிசட்டென்று பேசாதீர்கள். சின்ன வயசிலே ஏதோ பெயர் இருந்தால் அதையே இப்பொழுதும் சொல்லக் கூடாது" என்று என்னை உடனே அடக்கி விட்டாள் என் சகதர்மிணி.

'செப்பி', 'கறுப்பி' என்றுதான் அந்த இரு குழந்தைகளையும் நாங்கள் அழைப்பது. தெருவிலே பாண்டி கிழித்து விளையாடிய குழந்தைகள். நானே அவர்கள் கண்ணாமூச்சிக்குத் 'தாச்சி'யாக இருந்திருக்கிறேன். அப்பொழுதெல்லாம் பெரியவள் செப்பி, சின்னவள் கறுப்பி.

இருபது ஆண்டுகள் ஓடி விட்டன. செப்பி மஞ்சுளாவாக, முப்பது வயது



நிரம்பிய பெண்மணியாக, பணக்காரியாக இன்று வந்து இறங்கியிருக்கிறாள். அவள் கணவர் ஒரு பருத்தி ஆலையின் அதிபராம். டிரைவரின் உடையும் நடையுமே ராஜ கம்பீரமாக இருக்கும்போது எஜமானனின் உயர்நிலையைக் கேட்க வேண்டுமா?

என் மனைவி கதவைத் திறக்கும் வரை நான் காரையும், அதிலிருந்து இறங்கும் சாமான்களையும் கண்ணுற்றவாறு இருந்தேன். குழந்தையின் பால் சீசாவை அடைப்போடும் பேபியின் முதல் விளையாட்டுப் பொம்மைகள் வரை அதனின்று இறங்கின. உடுப்புக் கலையாமல் அப்படியே மாட்டிய 'பிளாஸ்டிக் வார்ட்ரோப்' ஊம்... செல்வம் என்னதான் செய்யாது!

''உள்ளே வாருங்கள். ஏன் வைத்த கண் வாங்காமல் பட்டிக்காடு மாதிரி பார்க்கிறீர்கள்?'' என் மனைவி என்னை அவசரமாக உள்ளே அழைத்தாள்.

நான் உள்ளே வந்துவிட்டேன். அவர்கள் வீட்டை நோக்கினேன். நான் முன்பு இந்த ஊரில் கல்லூரி ஆசிரியனாக இருந்தபோது அந்த வீட்டைக் கட்டினேன். பிறகு இப்பொழுது நாங்கள் இருக்கும் சிறிய வீட்டைக் கட்டிக் கொண்டேன். அந்த நாட்களில் அந்த வீட்டிலேயே ஒரு பகுதியில் சிகப்பியின் குடும்பம் இருந்தது. மற்றொன்றில் நாங்கள் இருந்தோம்.

''சிகப்பி நல்ல பணக்காரியாக்கும்?'' என்று கேட்டேன் நான்.

''புதிதாகக் கேட்பீர்கள்! அவள் பெயரில்தானே 'மஞ்சுளா மில்ஸ்'! அவளுக்கென்ன, பிறவியிலேயே பணக்காரி. அழகுத் தெய்வம் அவள் அங்கங்களிலே குடிகொண்டதாலே, அதுவே லட்சுமி கடாட்சம்'' என்றாள் என் மனைவி.

சிகப்பி பிறவியிலேயே அழகிதான். அவர்கள் எங்கள் வீட்டுக்குக் குடி வந்தபோது சிகப்பிக்குப் பத்து வயசு, கறுப்பிக்கு எட்டு வயது. எங்கள் கல்லூரியில் கணக்கு ஆசிரியராக வந்தார் மஞ்சுளாவின் தகப்பனார் குப்புசாமி. அவருக்கு இந்த இரண்டே பெண்கள்தாம்.

சிகப்பி கடைந்தெடுத்த தந்தப் பொம்மைதான். அவள் பள்ளிக்கூடம் போக வீதியில் இறங்கினாலே போதும். எல்லோர் கண்களும் அவளையே தொடரும். கூடவேதான் அவள் தங்கை குந்தளா போவாள். அவள்தான் கறுப்பி. அவள் தன் தமக்கைக்கு நேர்மாறான நிறம், நடை, உடை, பாவனை யெல்லாம் தான். சிகப்பி, கறுப்பி என்று யார் பெயரிட்டார்களோ தெரியாது. எல்லோருக்கும் அதுவே பழக்கமாகிவிட்டது. சிகப்பி தன் மேனி அலுங்காமல் மெதுவாகத் தன் கண்களால் இரு புறமும் நோட்டம் விட்டுக் கொண்டே நடப்பாள். கறுப்பியும் அவளோடு கூடவேதான் கிளம்புவாள். ஆனால் பத்தடி கூட நேரே நடக்க மாட்டாள். வீதியின் ஓரத்தில் சாக்கடையில் தண்ணீர் ஓடினால் அதில் ஒரு காகிதக் கப்பலைச் செய்து போட்டுவிட்டு, அதன் கூடவே கரையில் ஓடுவாள். புத்தகங்கள் நழுவி நழுவிக் கீழே விழுந்து கசங்கிப் போகும். பாவாடை அள்ளிப் பிடிக்கப்பட்டு, அலங்கோலமாகக் காட்சி தரும். தலைமயிர் இலேசாகப் பறக்கும். மூச்சு முட்ட முட்டப் பள்ளிக்கூட வாயிலை அடைவாள் பெண். அதே முன் வாயிலைத் தாண்டித்தான் நானும் கல்லூரிக்குப் போயாக வேண்டும். ஒரே ஸ்தாபனத்தாரின் கல்விக்கூடங்கள்தாம் அவர்கள் பள்ளியும் எங்கள் கல்லூரியும்.

''சிகப்பி எங்கே?'' என்று கேட்பேன்.

''அதோ!'' என்று சுட்டிக் காட்டிவிட்டுத் தமக்கைக்காகக் காத்து நிற்பாள் சிறுமி. அந்தச் சமயம் அவள் பார்ப்பதற்கு மிகவும் பரிதாபமாகக் காட்சியளிப்பாள். எதிரே ஒயில் நடை போட்டு வரும் தன் அக்காவின் அழகையும் தன் அலங்கோலத்தையும் ஒப்பிட்டுப் பார்ப்பாள் போலும்! இதுவரை காகிதக் கப்பலின் வேகத்தில் ஒன்றி ஓடிய உற்சாகம் இப்போது எங்கு போகுமோ? கவலை தோய்ந்து, சிறிதே அவமானம் தலைகாட்ட, கலைந்த புத்தகங்களுடனும் கசங்கிய உடையும், அலைந்த கேசமுமாக நிற்பாள் தங்கை.

''சிகப்பி, எனக்குத் தலையைச் சரியாகக் கோதிவிட்டுவிடேன். இல்லையென்றால் வாத்தியாரம்மா முட்டி போடச் சொல்லுவார்கள்!'' என்று மஞ்சுளாவைக் கெஞ்சுவாள் குந்தளா.

''நீ புத்தி கெட்டு ஓடு. உன்னை என்னால் தொட முடியாது. அழுக்கு வழிகிறாய்'' என்பாள் பெரியவள்.

நான் சில விநாடிகள் நின்று பார்ப்பேன். குந்தளாவின் கண்களில் நீர் தளும்பும். நான் அருகே சென்று கைக்குட்டையால் அவள் கன்னத்தில் இருக்கும் மண்ணைத் துடைத்து, தெரிந்த மட்டும் தலையைக் கோதிவிட்டு, முதுகில் தட்டி உள்ளே அனுப்புவேன். அவள் கவலையுடன் ''மாமா, தலை பறக்கிறதா? டீச்சரம்மா முட்டி போடச் சொல்லுவாங்களா?'' என்று வினவுவாள்.

''ரொம்பப் பறக்கவில்லை. இனிமேல் கவனமாக இரு'' என்று நான் அவளைச் சலுகையுடன் கண்டித்து அனுப்புவேன்.

மஞ்சுளா ஒரே நிதானமாக நடந்து சென்று கொண்டிருப்பாள். குந்தளா அவளைத் தாண்டி ஓடும்போது பாவாடை நுனியில் கால் வைத்து, விழும் தறுவாயில் சமாளித்து நின்று போவதைப் பார்ப்பேன். சிரிப்பு மேலிடும். போய் விடுவேன். மாலையில் நான் வீடு திரும்பினவுடன் இது விஷயமாக என் மனைவியிடம் பேசினால் அனுதாபம் கிடைக்காது. ''ஆமாம்! அதன் உருவத்துக்கு ஏற்றமாதிரிதான் புத்தியும் இருக்கிறது. அதே வயிற்றில் பிறந்து, அதே தாயார் வளர்த்த பெண்தானே சிகப்பி! எவ்வளவு நறுவிசாய், எழில் உருவாய், நாசூக்காக இருக்கிறாள்!'' என்பாள் அவள்.

என் மனைவி என்ன, அந்தக் குழந்தையின் பெற்றோர்கூடத்தான் பாரபட்சம் காட்டினார்கள். அழகான புதுப் புது உடைகள் தைத்துப் பெரியவளுக்குப் போட்டார்கள். அவளுக்கு அளவு குறைந்து விட்டதும் அவைகளைச் சின்னவளுக்குத் தந்தார்கள். சில சமயம் குந்தளா அழுது ஆர்ப்பாட்டம் செய்வாள். அதே போல் தைத்துப் போட்டாலும் அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் பார்த்துப் பேசாமல் இருந்தார்களா? அதே உடை மஞ்சுளாவுக்கு அழகுக்கு அழகு செய்கிறது. குந்தளாவுக்கு நன்றாகவே இல்லை என்பார்கள். குழந்தை முகம் கன்றி விடும். யார் வீட்டு விவகாரத்துக்கு யார் பதில் சொல்ல முடியும்? அல்லது உலகத்தின் நாவைத்தான் அடக்க முடியுமா?

இத்தனை வருடங்களுக்குப் பிறகு அவ்விரு பெண்களின் நினைவு என் மனத்தில் இன்னும் பச்சென்று இருந்தது. அவர்கள் இப்பொழுது எப்படியெல்லாம் மாறி விட்டிருப்பார்களோ? மனம், குணம், நடை, பேச்சு எல்லாமே மாறி விட்டிருக்குமோ?

நான் என் வீட்டு ஜன்னல் வழியாக அவர்கள் இல்லத்தை நோக்கினேன். வெயிலில் கட்டப்பட்டிருந்த கம்பிக் கொடி நிறையக் குழந்தைச் சட்டைகளை உலர்த்திக் கொண்டிருந்தாள் ஆயா.

''சிகப்பிக்கு ஒரு குழந்தைதானே?'' என்று நான் என்னுடைய மனைவியைக் கேட்டேன்.

''ஆமாம். அதற்கு மேல் இருக்குமோ அவளுக்கு? நிறையச் செல்வம் இருக்கிறது. குழந்தைகள் இல்லை. கறுப்பிக்குப் பிறந்திருக்கிறதாம் மூன்றோ நான்கோ?''

இவளுக்கு ஏனோ வேதனை? சிகப்பிக்கு ஒரே குழந்தை. அதற்காக, பத்துக் குழந்தை துணிமணியையும் அதற்கே போட்டு விட வேண்டுமா?

''சின்னவள் இங்கே வருவதில்லையா?''

''இப்பொழுதெல்லாம் வருகிறாளாம். முன்புதான் இரண்டு வருடங்கள் வராமலே இருந்தாளாம்.''

நான் சற்றைக்கெல்லாம் கிளம்பி, என் நண்பரைக் காணச் சென்றேன். 'சிகப்பி சிறு வயதிலிருந்த அதீதமான அழகுடனே இன்னும் விளங்குகிறாளா? வயதும் வாழ்க்கையும் அவளை மாற்றி விட்டனவா? அவள் செல்வத்தில் இருப்பவள். இயற்கை அழகைச் செயற்கையால் அதிகரிக்க வசதியுள்ளவள். சின்னவளுக்கு இயற்கை சதி செய்து விட்டது. செயற்கைக்கும் செயல் போதாது' என்றெல்லாம் சிந்தித்தது என் மனம்.

என்னைக் கண்டதும் நண்பர் ஓடோடியும் வந்து வரவேற்றார். பணக்காரியான பெண், காக்கி உடுப்பு அணிந்த கார் டிரைவரும், குழந்தை எடுக்க ஆயாவும், பெரிய காரும், வீடு கொண்ட சாமானுமாக வந்து இறங்கியிருப்பதைக் கண்டு ஒரு தந்தையின் உள்ளம் களிப்படைவதில் வியப்பென்ன இருக்கிறது? எனக்கே பெருமையாக இருக்கிறதே?

''சிகப்பி வந்திருக்கிறாளாமே? இப்பலாம் சிகப்பி என்று சொல்லக் கூடாதோ? மஞ்சுளா என்றுதான் அழைக்க வேண்டுமாக்கும்! என் மனைவி என்னை எச்சரித்துத்தான் அனுப்பியிருக்கிறாள்'' என்று கூறிக் கொண்டே நான் அவர் எதிரே அமர்ந்தேன்.

''சிகப்பிதான் மஞ்சுளாவாக ஆகிவிட்டாள். கறுப்பி இன்னும் முக்கால்வாசிப்பேர்களுக்குக் கறுப்பிதான். அவள் கணவனும் அப்படித்தான் அவளை அழைக்கிறான்.''

''குந்தளா சௌக்கியமாக இருக்கிறாளா?''

''இப்பொழுது சுகமாகத்தான் இருக்கிறாள். இரண்டு குழந்தைகள். மூன்றாவது பிறக்கப் போகிறது.''

''ஏன் 'இப்பொழுது சுகம்' என்று பொடி வைத்துச் சொல்கிறீர்கள்?'' என்று நான் கேட்டேன். என் மனைவி




எல்லாவிதமான பாங்க் அலுவல்களுக்கும் வசதி உண்டு.

## இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

எம். சிடி. முத்தையா
சேர்மன்

தலைமைக் காரியாலயம்: 151, மவுண்ட் ரோடு, சென்னை-2
இந்தியாவில் எல்லா முக்கிய இடங்களிலும், தென் கிழக்கு ஆசியாவிலும் கிளைகள்.

ஜெனரல் மானேஜர்.

---

தீபாவளி  வாழ்த்துக்கள்!

புகழ்பெற்ற உயர்தர நூல்
துணி தயாரிப்பாளர்கள்

மானேஜிங் டைரக்டர்கள்:

ஸ்ரீ பி. எஸ். எஸ். சோமசுந்தரம் செட்டியார்
ஸ்ரீ கே. ராமுண்ணி மேனன், C.I.E., I.C.S. (Retd)

## தி காளீஸ்வரர் மில்ஸ் லிமிடெட்

10/8, அனுப்பர்பாளயம் . கோயமுத்தூர்-1

தந்தி: காளீஸ்வரர் டெலிபோன்: 4056, 4057

யின் சொற்கள் என் நினைவில் இருந்தன. முன்பு இரண்டு வருடங்கள் பிறந்தகமே வராமல் இருந்ததாகச் சொன்னாளே?

''ஆமாம், சார். குழந்தை இரண்டு, மூன்று வருடங்கள் இங்கே வரவேயில்லை. மிகவும் கஷ்டப்பட்டதாக இப்பொழுது தெரிகிறது. பிறகு திடீரென்று ஒரு நாள் அவளும் அவள் கணவனுமாக வந்தார்கள். இன்று வரையில் அவர்கள் வீட்டில் என்ன நடந்தது என்பது எங்களுக்குத் தெரியவில்லை. கருப்பி அடித்துப் பேசுகிறாள் — ஒன்றுமே நடக்கவில்லை என்று. எப்படியோ கணவனோடு புக்ககம் போனாள். அவனோடேயே பிறந்தகம் வந்தாள். இடையில் இரண்டு, மூன்று வருட காலம் இருவரும் இங்கு வரவில்லை. நாங்கள் போனாலும் மாப்பிள்ளை பேச மாட்டான். குந்தளாவும் எங்களை வரவேண்டாம் என்று சொல்லி விட்டாள். அதை மீறி நாங்கள் போனால் என்ன கஷ்டம் நேருமோ என்று போகாமலே இருந்து விட்டோம்.''

இன்று அந்தப் பழைய நாட்களை நினைத்து ஒரு கணம் வருத்தப்பட்டார் தந்தை. அவர் கண்களில் நீர் துளித்தது. அந்தச் சமயத்தில் மேலும் குத்திக் குத்திப் பேச மனமில்லாமல் நான் மௌனம் சாதித்தேன். இதற்குள் மஞ்சுளா தன் குழந்தையை எடுத்துக் கொண்டு வந்தாள்.

''வா, அம்மா! கொண்டு வா இங்கே என் பேரப் பிள்ளையை !'' என்று சொல்லிக் கொண்டே கையை நீட்டினேன்.

குழந்தை தன் தாயைப் போலவே வெள்ளை வெளேரென்று அழகாக இருந்தது. மஞ்சுளா எதிரே ஒரு நாற்காலியில் அமர்ந்தாள். அப்பொழுதுதான் நான் அவளை நிமிர்ந்து நோக்கினேன். என் மனம் 'திக்'கென்றது. ஏதோ ஒரு குளிர் படர்ந்து என் அடி வயிற்றில் அமர்ந்த மாதிரி இருந்தது. மஞ்சுளாவா இவள்! தெய்வச் சிற்பியின் கைவண்ணமெல்லாம் அமைந்த அற்புத எழில் சிலையாக இருந்த பெண்ணா இவள்? வெப்புத் தோல் மட்டும்தான் இருந்தது. என் அற்புத வெண்கலச் சிலையை யாரோ தேய்த்து விட்ட மாதிரி இருந்தது. நீர்மை மழுங்கி விட்ட மெழுகுபொம்மையாக அவள் என் எதிரே நின்றாள். என் ஏமாற்றத்தை வெளியே காட்டாமல், அவள் குழந்தையையே கவனித்துப் பேசி விட்டு என் வீடு திரும்பினேன்.

''நாளைக்குச் சின்னவளும் அவள் கணவனும் வருகிறார்கள்'' என்றார் நண்பர் கிளம்பும் போது.

''பெரிய மாப்பிள்ளை ஏன் வரவில்லை?''

''இன்று மாலை வருகிறார்'' என்று மஞ்சுளா பதிலளித்தாள். நான் அவள் முகத்தைப் பார்த்தேன். ஒருவித உணர்ச்சியும் எடுத்துக் காட்டப்படவில்லை அங்கு. அந்தப் பெண்ணின் வதனத்தில் ஜீவ களையே காணோம்.

நான் ஆசையோடு வரைந்த சித்திரம் மழையில் நனைந்து விட்டால் ஓர் ஓவியன் வருத்தப்பட மாட்டானா? அது போல் பெரியதோர் ஏமாற்றத்துடன் நான் வீடு திரும்பினேன்.

வீட்டில் என் மனைவியுடன் பேச்சுக் கொடுத்தேன். என்னவோ ஒரு வேதனை என்னை வாட்டியது. ''என்ன ஏற்பாடு செய்திருக்கிறாய்? கடையிலிருந்து ஏதாவது சாமான் வேண்டுமா?'' என்று நான் கேட்டேன்.

சீறினாள் என் மனைவி. அவளுக்குப் பல குறைகள். தீபாவளிக்கு அழைத்ததற்குப் பெண்ணும் மாப்பிள்ளையும் வரவில்லை. மருமகள் பிரசவத்துக்காகப் போய் விட்டாள். பிள்ளை வெளியூர் போய் விட்டான் வேலை நிமித்தமாக. பேரனும் இங்கு நிற்க மாட்டேன் என்று தன் தாயிடம் ஓடி விட்டது.

''ஒரு சாமானும் வேண்டாம். இங்கே வீடு நிறைய மனிதர்கள் வரப் போகிறார்களாக்கும்? பட்டும் பீதாம்பரமும் சேகரிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமாக்கும்? கேள்வியைப் பார், கேள்வியை!'' என்று சரமாரியாக மொழிந்து கொண்டே, இயந்திரத்தின் அச்சின் மீது குண்டுக் கல்லால் அவள் நறுக்கென்று ஒன்று வைத்தாள்.



சாதாரணமாக நான் வாய் விட்டுச் சிரித்திருப்பேன். இன்று எனக்கும் ஏதோ மனம் படுத்து விட்டது. ஜுன் கொட்டி விட்டு நான் முன் பக்கம் போய் விசுப் பலகையில் படுத்து விட்டேன். மஞ்சுளாவின் முகம் அடிக்கடி என் மனத்தில் முன் வந்து வந்து துன்புறுத்தியது.

நான் வெடிப்பாகப் பேசியதை நினைத்து வருந்தினாள் போலும் என் மனைவி. கையில் ஒரு கோப்பை பழரசத்துடன் வந்து நின்றாள். ''களைப்பாக இருக்கிறதா, என்ன?'' என்று மிகுந்த பரிவுடன் கேட்டாள்.

''நீ போட்ட ராம பாணத்தினால் அடிபட்டு கிடக்கிறேன்'' என்றேன் நான் ஹாஸ்யமாக.

அவள் முகம் களித்துக் கொண்டது.

நான் அதைப் பார்த்து விட்டுப் பேச்சில் இறங்கினேன். ''சிவப்பியைப் பார்த்தாயா? எப்படி மாறி விட்டாள்?''

''நீங்கள் தலையில் கைவைத்துக் கவலைப்படுகிற மாதிரி என்ன மாறுதல் வந்து விட்டது? முன்பு குழந்தையாக இருந்தாள், இப்பொழுது வயதின் முதிர்ச்சி தெரிகிறது.''

அவள் சுலபமாக அடித்துப் பேசி விட்டாள். நானும் பேசாமல் இருந்து விட்டேன். ஆயினும், அவ்வளவுதானா தெரிகிறது? கலை நுட்பமெல்லாம் மிகுந்த தேர் ஒன்றை உப்புக் காகிதத்தால் யாரோ தேய்த்து விட்டால், வயதின் மூப்பு போன்று காட்சியளிக்குமா? மாலை பெரிய மாப்பிள்ளையை அழைத்துக் கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்தார் நண்பர். பணக்காரனாக இருந்தாலும் விநயத்தோடும் பண்போடும் பழகினான் அவன். கறுப்பானாலும் லட்சணம் இருந்தது. அவனைக் கண்டதும் தான் எனக்கு நினைவு வந்தது. அவர்கள் கல்யாணம் நாங்கள்

கல்கத்தா போனபிறகுதான் நடந்தது. பெரியவளுக்குக் கறுப்பான கணவனும், சின்னவளுக்குச் சிவப்பான புருஷனும் கிடைத்ததைப் பற்றி அப்பொழுது நிறையப் பேச்சுத்தான் எழுந்தது.

இப்படித்தான் வாழ்க்கையில் நடந்து விடுகிறது. நான் வியந்து கொண்டே அன்றைய நாளைக் கடத்தினேன்.

மறு நாள் காலை நான் தோட்டத்தில் பூச்செடிகளைக் கிளறிக் கொண்டிருந்தேன். திடீரென்று, "மாமா!" என்ற ஓர் உற்சாகமான குரல் என்னைத் தட்டி எழுப்பியது. குறுகுறுப்பும் மகிழ்ச்சியும் தெறித்த அந்தக் குரல் பழக்கப்பட்ட குரல்தான். நான் சட்டென்று எழுந்து பார்த்தேன். யார்? கறுப்பிதான்.

இடுப்பில் மூன்று வயதுப் பெண் குழந்தையுடன் நின்றாள் அவள். நான் வைத்த கண் வாங்காமல் அவளையே பிரமிப்புடன் நோக்கினேன். ஆம், பழைய குந்தளாவா இவள்? என்ன மாறுதல், என்ன வித்தியாசம்! எனக்கு வியப்பு மேலிட்டது. காண்போரைக் கவரும் ஒரு தனிக் களை, ஒரு சோபை மிளிர்ந்தது அவளிடம்.

"என்ன, மாமா, பழைய மனிதர்களை மறந்து விட்டதா உங்களுக்கு?" என்று கேட்டு விட்டுச் சிரித்தாள் அவள். லை வென்ற வெள்ளி மணிச் சிரிப்பு.

"தெரியாமல் என்ன, அம்மா? உங்களையெல்லாம் பார்த்து வெகு நாட்களாகி விடவே, நான் நேற்றுப் பார்த்த குழந்தைகளா இப்படி வளர்ந்து விட்டீர்கள் என்று ஆச்சரியப்படுகிறேன்" என்றேன் ஒருவாறு என்னைச் சமாளித்துக் கொண்டு.

"உங்கள் பெண் மட்டும் அப்படியே இருக்கிறாளோ? போங்கள், மாமா. எனக்குத் தெரியும், உங்கள் ஆச்சரியத்துக்குக் காரணம். 'பழைய கறுப்பியா இப்படி அழகாக இருக்கிறாள்' என்று வியக்கிறீர்கள். நீங்கள் மட்டும் என்ன, மாமா, உலகமே அந்தக் கேள்வியைத்தான் கேட்கிறது" என்று கூறினாள் அவள், அதரங்களில் குறும்புச் சிரிப்பு மிளிர.

"நீ சொல்வதும் உண்மைதான், அம்மா. நான் மறுக்கவில்லை" என்று நான் அசடு வழிய ஒப்புக் கொண்டேன்.

அவள் என் முன்னால் நடந்து எங்கள் வீட்டுக்குள் நுழைந்தாள். "மாமீ, மாமீ!" என்று அவள் கூவுவது சங்கீதம் போல் ஒலித்தது.

நான் என் விசுப் பலகையில் அமர்ந்தேன். குந்தளா குழந்தையையும் தூக்கிக் கொண்டு என் மனைவியுடன் வந்தாள். குழந்தை, என் நீட்டின கரங்களைப் பார்த்துத் தாவி வந்தது. அழகுப் பிம்பமாக இருந்தது மகவு.

"குந்தளா! சரி, இப்ப மாமாவுக்குச் சொல், பார்க்கலாம், நீ எப்படி அழகியாக மாறி விட்டாய் என்று?"

"அது பெரிய கதை, மாமா. அது கிடக்கட்டும். நீங்களும் இருக்கிறீர்கள். என் அப்பாவும் இருக்கிறார். நீங்கள் உங்களுக்காக ஒரு வீடு, வாடகைக்காக ஒரு வீடு கட்டி விட்டீர்கள். எங்கள் அப்பாவோ, தாம் இருப்பதற்குக்கூட ஒரு வீடு கட்டிக் கொள்ள வில்லை. வாடகையே தந்து கொண்டிருக்கிறார். இருவருக்கும் ஒரே மாதிரி குடும்பம், ஒரே சம்பளம்" என்று சம்பந்தம் இல்லாமல் பேச்சை மாற்றினாள் குந்தளா.

"உன் அப்பா எதற்கம்மா வீடு கட்ட வேண்டும்? அவருக்குச் சொத்து நிறைய இருக்கிறது. என்றும் வாடகை கொடுத்து எந்த வீட்டிலும் இருக்கலாம். நினைத்தால் ஒன்றுகூட வாங்கலாம். எனக்கு அப்படி இல்லையே? இந்த வீடு தானே எனக்குச் சொத்து? ஓய்வு பெற்று வந்து விட்டேன். இந்த வீட்டு வாடகை ஒரு பாதுகாப்பாக எனக்கு வேண்டாமா? இன்று இவ்வாறு நல்ல பதவியில் நான் இருப்பேன் என்று அப்பொழுது எப்படி எனக்குத் தெரியும்? இருக்கிறதற்குள் சௌகரியம் தேடிக் கொண்டேன்."

"அதேதான் மாமா, நானும் செய்தேன். நான் அழகற்றவளாகப் புக்ககம் போனேன்...." அவள் குரல் கம்மி விட்டது. பழைய நினைவுதான் என்றாலும், புண்பட்ட உள்ளம் சிறிது வலித்தது போலும்.

"மிகவும் கஷ்டப்பட்டாயா அம்மா?" என்று நான் பரிவுடன் கேட்டேன்.

சிறு குழந்தையாக இருந்த போது அவள் ஒரு நாள் ஓடி வந்து என் மடியில் அழுதது எனக்கு நினைவு வந்தது. பள்ளிக்கூட நாடகத்தில் அவளை அழகில்லையென்று எடுக்காமல், அதே பாத்திரத்தைச் சிவப்பிக்குத் தந்து விட்டார்கள். "அவளை விட எனக்குத்தான் மாமா, சம்பாஷணை நன்றாக வரும், சங்கீதம் வரும். என்னை எடுக்க மாட்டேன் என்று சொல்லி விட்டார்களே!" என்று குழந்தை விம்மி விம்மி, உள்ளம் வெடிக்க அழுதது இன்று போல் பளிச்சென்றிருந்தது.

குந்தளா நிமிர்ந்தாள். அவள் முகம் மீண்டும் தெளிந்து விட்டது. "மாமா! நான் கஷ்டப்பட்டேன். ஆனால், என்னை யாரும் துன்புறுத்தவில்லை. என் கணவருக்கு மட்டும் மனக் குறை. தம் பெற்றோருக்காக என்னை மணந்து கொண்டு விட்டார். ஆனால் அவருக்கு என்னைப் பார்க்கக் கூடக் கூச்சம். ஊரிலும் பலர் அவரைப் பார்த்து அநுதாபமாகப் பேச ஆரம்பித்து விட்டனர். 'இவ்வளவு அழகாக இருக்கிறவனுக்கு அவலட்சணமான ஒரு பெண்ணா?' — என்ற அவர்கள் சொல்லும், பார்க்கும் பார்வையும் அவரை மேலாகக் குத்தின. எனக்கும் கூட அவரைக் கண்டால் பரிதாபமாக இருந்தது.

"என்னிடம் பராமுகமாக அவர் இருப்பதைக் கண்டு என் மாமியார் அடிக்கடி என்னிடம், 'பிறந்த வீட்டுக்காவது போய் இரண்டு மாதங்கள் இருந்து விட்டு வா' என்று சொல்லுவார். இங்கே வந்து மட்டும் என்ன செய்வது மாமா? மறுபடியும் பழைய பல்லவி. அதே இழிசொற்கள்தானே? 'நன்றாக இல்லாத பெண்ணுடன் யார் வாழ்வார்கள்' என்று ஊர் கூடும். வாழாவெட்டி என்று ஊரார் என்னைப்பற்றிப் புறம் பேசுவார்கள். அது என் பெற்றோர்களுக்கு வேதனையாக இருக்கும். அதைவிட அங்கேயே இருப்பது கௌரவம் என்று போகாமல் இருந்து விட்டேன்."

"பாவம், உனக்கு இவ்வளவு பொறுமை எப்படி வந்தது?"

"அவசியம் வந்தால் எதுவும் வருகிறது. என் கணவர் நிலையைப் பார்த்து எனக்கு வேதனையாக இருந்தது. என் அக்கா அப்படித்தானே? தன் அழகுக்கு ஏற்ற அழகு மாப்பிள்ளை கிடைக்கவில்லையே என்று அப்படியே மழுங்கி, ஒளி மங்கிப் போய் விட்டாளே? அதே நிலையில்தான் என் கணவரும் நான் அவருக்கு ஏற்ற அழகியாக இல்லையே என்று வேதனையில் நொந்துகொண்டிருந்தார். அவர் மனக்குறையைப் போக்குவது என் கடமையல்லவா!"

"அது கிடக்கட்டும். நீ எப்படிக் கடைசியில் அழகாகும் ரகசியம் கண்டு பிடித்தாய்?"

"அவர் வீட்டில் தங்குவதே அரிதாகி விட்டது. இருந்த நேரத்திலும் என் திக்கே பார்க்கவில்லை. அதனால் நான் ஒரு வேலையில் அமர்ந்து கொண்டேன். என் நாத்தனாரும் நானும் ஒரே அலுவலகத்தில் வேலை செய்தோம். அப்பொழுது எனக்குப் பல பெண்களின் தொடர்பு கிடைத்தது. என் கவலையை மறக்க அவர்களிடம் ஒன்றிப் பழகினேன். அவசியத்தினால் அவர்களைப் போலவே அழகாக ஆடைகள் அணியக் கற்றுக் கொண்டேன். இயற்கையிலே அழகில்லாதவர்கள் எளிய செயற்கை முறைகளால் எப்படிப் பிறர் கவனத்தைக்



★

காவிரியின் பல கிளைகளால் அணைத்துக் கொள்ளப்பட்ட சோழ வள நாட்டில் திகழும் பல திவ்விய க்ஷேத்திரங்களுள் ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் எழுந்தருளியிருக்கும் திருக்கண்ணபுரம் ஆழ்வாராதிகளால் மங்களாசாசனம் செய்யப்பட்ட திருப்பதிகளுள் சிறந்ததாக விளங்குகிறது. அந்தத் திருப்பதியின் மூர்த்தியாகிய ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் கண்ணபுரத் தாயாருடன் சேர்த்தியிலிருக்கும் திவ்விய காட்சியையே இங்கு காண்கிறீர்கள்.

★



கவருவது என்ற கலையைக் கற்றுக் கொண்டேன். என் எண்ணமெல்லாம் என் கணவரின் மனக்குறையைப் போக்கி அவர் உள்ளத்தில் எப்படி இடம் பெறுவது என்ற ஒன்றிலேயே லயித்திருந்தது. அழகுக்கு அங்க அமைப்பு மட்டுமே தேவையில்லை, அகத்தின் அமைப்பும் வேண்டும் என்று புரிந்து கொண்டேன். அதனால், கண்ணீர்ச் சிந்துவதை நிறுத்தினேன். ஆரோக்கியமாக இருக்கப் பயின்றேன். மனசை எப்பொழுதும் வேலையில் ஈடுபடுத்தினேன். இரவு படுக்கையில் விழுந்ததும் கேவலம் அரை மினிட்டில் உறங்கி விடுவேன். இப்படி ஒரு நிர்ப்பந்தம் வைத்துக் கொண்டேன்."

"தபசு செய்தாய்?"

"அப்படித்தான் இருக்கட்டுமே?" என்று கூறி விட்டுச் சிரித்தாள் குந்தளா. "தவம் பலித்து விட்டதே, மாமா!"

"எப்படிப் பலித்தது? அதுதானே சுவாரசியமான கட்டம்?" என்று கேட்டேன் நான், ஆவல் மேலீட்டுடன்.

"கொஞ்சம் கொஞ்சமாக அவர் என்னைக் கவனிக்க ஆரம்பித்தது எனக்குத் தெரிய வில்லை. ஏகாக்ர சித்தத்துடன் நான் நடத்திய சோதனைகள், என் எளிய அலங்கார முறைகள் அவர் கவனத்தை எப்படியோ கவர்ந்திருக்கின்றன. எங்கள் வீட்டில் என் அத்தை பெண்ணுக்குக் கலியாணம். நான் வருவதாக இல்லை. அன்று மாலை அவர், வீட்டுக்கு வந்து, வழக்கத்துக்கு மாறாக வீட்டிலேயே சுற்றிச் சுற்றி வந்தார். பிறகு தன் தாயாரைப் பார்த்து, சாவதானமாக, 'அம்மா, கல்யாணத்துக்குப் போகவில்லையா உன் மாட்டுப் பெண்?" என்று கேட்டார்.

"நானும் தைரியம் கொண்டு, மாமியார் பதில் சொல்வதற்கு முன் 'எதற்கு?' என்று கேட்டேன். உடனே அவர், 'நானும் வருகிறேன், இருவருமே போகலாமே?' என்றார்."

"ஒன்றுமே சலனமில்லாமல் சகஜமாகப் பேசி விட்டாராக்கும்?"

"ஆமாம், மாமா! என்னுடன் வந்தார். பிறகு, அவரைப் போல் அன்பான மனிதரே உலகில் இல்லை என்றபடி இருக்கிறார்."

அதைக் கேட்கும் போது தேன் பாய்ந்தது என் செவிகளில். "என் மனமார்ந்த ஆசியும், பாராட்டும் உனக்கு. எவ்வளவு அதிருஷ்டசாலி உன் கணவன்!"

"அப்படித்தான் அவர் நண்பர்கள் சொல்லுகிறார்களாம். அவருக்கேற்ற அழகியாம் நான்! உலகம் குருடா, மாமா?" அவள் விழுந்து விழுந்து சிரித்தாள். என் மடியில் இருந்த அவள் குழந்தையும் அவளுடன் சேர்ந்து சிரித்தது.

"கட்டாயம் நீ அழகியாகி விட்டாய். ஆனால் என் வரை நீ கறுப்பிதான். சிகப்பியைப் பார், எப்படி ஆகி விட்டாள்!"

"அவள் அழகினால் உலகமே அவள் காலடியில் விழுந்து பழக்கமாகி விட்டது அவளுக்கு. தானாக இன்பத்தைத் தேடிப் போய், அதைச் சேகரித்துக் கொள்ளத் தெரியவில்லை. கொஞ்சம் மனம் சோர்ந்ததும் களையிழந்து விட்டாள். நானோ ஒவ்வொரு நிமிஷமும், ஏழைச் சிறுமிகள் தெருவில் சுள்ளி சேர்ப்பது போல, அவர் மதிப்பைச் சேர்த்து வைக்கும்படி ஆகி விட்டது என் நிலைமை. என்னிடம் நிறையச் சேர்ந்தும் விட்டது."

"அவள் கணவனும் மிகவும் நல்ல மாதிரியாக இருக்கிறானே? இவள் இப்படிக் குறைப்பட்டுக் கொள்வது எனக்குச் சரியாகப்படவில்லை."

"அதெல்லாம் பிறவிக் குணம் மாமா. சூழ்நிலை நெருக்கடி. அவள் எங்கள் அப்பாவைப் போல் சொத்தின் மதிப்பில் அலட்சியமாக இருந்து, இன்று ஒருவர் பார்த்து இரக்கப்படும் நிலைக்கு வந்து விட்டாள். நானோ உங்களைப் போல்..."

வெகு சாதாரணமாகப் பேசினாள் குந்தளா. ஆனால் என் மனசில் அவள் பெரிய உருவம் எடுத்து வியாபித்து விட்டாள். இன்பத்துக்கும் துன்பத்துக்குமிடையே மயிரிழைதான் இருக்கிறது. இன்பத்தைத் துன்பமாக்குவதும், துன்பத்தை இன்பமாக்குவதுமான ரசாயனம் நம் மனம்தான் என்று அழகாக எடுத்துக் காட்டி விட்டாள் அவள்.

"மாமா! உங்களுக்குத் தீபாவளிக்கு ஒரு பரிசு தரப் போகிறேன். எத்தனை வருஷம் கழித்து வந்திருக்கிறீர்கள்! உங்களுக்கு என்ன பிடிக்கும், சொல்லுங்கள்" என்று கேட்டாள் அவள்.

நான் பதில் சொல்வதற்குள் என் மனைவி குறுக்கிட்டாள். "கறுப்பி! நீ ஒன்றும் தர வேண்டாம். நிறைவு உள்ளத்தில்தான் இருக்கிறது என்னும் படிப்பினையைக் கற்றுக் கொண்டோமே, — அதுவே போதும்" என்றாள்.

அவள் முகத் தெளிவைக் கண்டேன். எங்கள் தீபாவளியும் நிறைவு பெற்றது.

**பள்ளியில் சுறுசுறுப்பு என்றும் முக்கியம்**

# வெள்ளை உடைகளுக்கு டினோபால் தருவது

**துல்லிய வெண்மை துலங்கும் மேன்மை**



அள்ளி அணைத்திட ஆடிவரும் பிள்ளைக் கனியமுதைக் கண்டு அகமகிழ்கிறாள் அன்னை. பள்ளிப் படிப்பில் துடியான இந்த வண்ணச் சிறுவன் என்றும் அணிவது மிகமிக வெண்மையான உடைகளே—எல்லாம் டினோபால் சலவை !






துணிகளைக் கடைசியாக நீரில் அலசுவதற்கு முன் சிறிதளவு டினோபால் சேர்த்தால் போதும்—வெள்ளை ஆடைகள், ஷர்ட்டுகள், சிராய்கள், புடவைகள், ஃப்ராக்குகள், படுக்கை விரிப்புகள் முதலியன எல்லாம் மிக மிக வெண்மையாக விளங்கும். இத்தனைக்கும் செலவும் மிக மிக சொற்பமே — ஒரு துணிக்கு ஒரு பைசாவுக்கும் குறைவே

உங்கள் உடைகள் இடையறா வெண்மையுடன் விளங்க, இன்றே டினோபால் வாங்குங்கள்—கவர்ச்சியாக இருக்க விரும்புவர்கள் எப்போதும் வாங்குவது டினோபால். டினோபால் ஒரு நவீன சலவை சாதனம்—எவ்விதமான துணிகளுக்கும் அபாயமின்றி உபயோகிக்கலாம்.




டினோபால் என்ற பெயர் ஜே. ஆர். கெய்கி, எஸ். ஏ. பால், ஸ்விட்ஜர்லாந்து ஸ்தாபனத்தாரின் ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க் ஆகும்

சுஹ்ரித் கெய்கி லிமிடெட், தபால் பெட்டி 965
பம்பாய்-1 பி. ஆர்.

Shilpi SGT. 49A TAM



# தீபாவளி சமயம்

எல்லோருடைய
விருப்பத்திற்கும் ஏற்ற
பரிசளிக்க இந்தத்
தீபாவளியை விடச்
சிறந்த சமயம்
வேறில்லை







வேக்குவம் பிளாஸ்க்

MODEL 'NISHAN'
CAPACITY 450 CC

துருப்பிடிக்காத
அலுமினியத்தால்
செய்யப்பட்டது ]

விக்டரி பிளாஸ்க் கம்பெனி பிரைவேட் லிமிடெட், பம்பாய் - கல்கத்தா - டில்லி - சென்னை

vapi

புனித நீராடி..........
புத்தாடையணிந்து.....
மக்கட் பேறுடன்........
மகிழ்ச்சிகொள்ள.....
உற்ற துணையளிப்பது



ஒன்றே!

Purkart

# M.S
## பட்டணம்பொடி

தயாரிப்பவர்
**மோகன் கம்பெனி**
தபால் பெட்டி நெ.1161 சென்னை.21.

*Smart,*
**STURDY**
*Smooth writing*




MANUFACTURED By
**RITESHARP PEN MFG. CO.**
PRABHAT UDYOG NAGAR, JOGESHWARI
BOMBAY-60.

DISTRIBUTORS:
**RAJENDRA KUMAR & CO.**
236, ABDUL REHMAN STREET,
BOMBAY-3

RPC-711

# சக்தி பைப்ஸ் லிட்.

## செங்கற்பட்டு மாவட்டத்தில்
## வாய்ப்பான எதிர்காலமுள்ள தொழிற்சாலை

உள்நாட்டுக்கானாலும், வெளி நாட்டுக்கானாலும், குடிதண்ணீர் வழங்கும் திட்டங்களின் பிரச்சினைகள் எல்லாவற்றிற்கும் திறவுகோல் போலிருப்பது குழாய் தயாரிப்பதில் மேற்கொள்ளும் புதுப்புது அபிவிருத்திகள்தான்

ஆண்டொன்றுக்கு 50,000 டன் அளவுக்கு வார்ப்பு இரும்பு - ஸ்பன் குழாய்கள் தயாரிக்க ஒரு புதுத் தொழிற்சாலை வேகமாக உருவாகிக் கொண்டு வருகிறது. 1965-ம் ஆண்டு ஆரம்பத்தில் இத்தொழிற்சாலை உற்பத்தியைத் துவங்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்தத் திட்டத்தினால் நாட்டுக்கு ஆண்டு ஒன்றுக்கு சுமார் 3 கோடி ரூபாய் அந்நியச் செலாவணி மிச்சமாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது

பதிவு பெற்ற அலுவலகம்
"சக்தி நிலையம்"
நாச்சிமுத்து கவுண்டர் தெரு
பொள்ளாச்சி

நிர்வாகக் காரியாலயம்
4, ஸ்மித் ரோடு
மவுண்ட் ரோடு, சென்னை - 2

தொழிற்சாலை நிறுவுமிடம்
ஏலாவூர் (கும்மிடிபூண்டிக்கு அருகில்)
செங்கற்பட்டு ஜில்லா

TOM & BAV/KOELIE · 3/64

# For high load carrying capacity




THIN-WALLED

# BEARINGS & BUSHES



Thin Walled Bi-metal Bearings represent a major step in ensuring smooth and trouble-free running of the engine.

Kirloskars in collaboration with Glacier Metal Co. Ltd. of England manufacture quality Thin Walled Bearings that guarantee perfect engine performance.

Quality plus features;– High load carrying capacity, Extremely long life, Compatibility with conventional crankshaft materials, High resistance to corrosion.



**KIRLOSKAR OIL ENGINES, LIMITED**

**ELPHINSTONE ROAD, POONA-3 (INDIA)**




# கோட்டாகைட் எங்கும் ஒரு நம்பகமான பெயர்

உயர்தர கேபிளின் பெயரைக் குறிப்பதுதான் "கோட்டாகைட்" என்பது. வீடு, தொழிற்சாலை ரயில், கப்பல், ஆகாய விமானம், சுரங்கம், போக்குவரத்து மற்றும் பல முக்கியமான வேலைகளுக்கும் தொழில் நுணுக்க உயர்வால் அவைகள் எப்போதுமே விரும்பப்படுகின்றன.

**பெல்ப்ஸ் டாட்ஜ் என்பீல்ட் இன்டர்நேஷனல் என்ற அமெரிக்க ஸ்தாபனத்தின் ஒத்துழைப்புடன் தயாரிக்கப்படுகிறது**




**IN RUBBER, P.V.C. & PAPER**




F.I.A. APPROVED
ON D.G.S. & D'S
RATE CONTRACT

தயாரிப்பவர்கள்

**ஏஷியன் கேபிள்ஸ் கார்ப்பொரேஷன் லிட்.**
பம்பாய்-1

பூரண விநியோகஸ்தர்கள்: **ஏஷியன் மெஷினரி & எக்விப்மெண்ட் பிரைவேட் லிட்.**
கஸ்தூரி பில்டிங், 240, டாக்டர் தாதாபாய் நௌரோஜி ரோடு, பம்பாய்-1

**MARK OF QUALITY**

AC-20 சென்னை, ஆந்திரா, மைசூர் மற்றும் கேரள ராஜ்யங்களுக்கு விநியோகஸ்தர்கள்

மெஸர்ஸ் **புபேந்திரகுமார் & கம்பெனி, 222, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை-1**

---

வாடிக்கைக்காரர்களுக்கும் வர்த்தக அன்பர்களுக்கும் எமது தீபாவளி நல் வாழ்த்துக்கள்!

போடும் போதெல்லாம் புத்துணர்ச்சி தருவது

# அப்பாதுரை பட்டணம் பொடி




காரம், மணம், குணம், நிறம் நிறைந்தது....



தயாரிப்பாளர்:

**ஆ. அப்பாதுரை முதலியார் & சன்**
55, ஆச்சாரப்பன் தெரு, P.B.No:189. சென்னை-1.



இந்த மங்களத் திருவிளக்கை
நம் பாரதத்தின் முன்னேற்றம்,
நாட்டு மக்களின் சுபிக்ஷம்,
சுகவாழ்க்கை என்றும்
மங்காத ஒளியுடன் பிரகாசிக்க
வேண்டுமென்ற பிரார்த்தனை
யுடன் ஏற்றிவைப்போம்.

# இந்தியன் பாங்க் லிட்.

பதிவு அலுவலகம்

இந்தியன் சேம்பர் பில்டிங், எஸ்பிளனேட், சென்னை-1.

| | | |
|---|---|---|
| அதிகாரம் பெற்ற மூலதனம் | ரூ. | 1,00,00,000 |
| வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. | 88,60,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. | 88,46,585 |
| ஷேர் பிரீமியம் | ரூ. | 14,57,300 |
| ரிசர்வ் நிதி | ரூ. | 80,04,583 |
| டிபாசிட்டுகள் (30-6-64) | ரூ. | 54,01,49,814 |

சேர்மன்

டாக்டர் ராஜா ஸர். M. A. முத்தைய செட்டியார், செட்டிநாடு, B.A., D. Litt. M.L.C.

இதர டைரக்டர்கள்

டாக்டர் பி. வி. ராஜமன்னார், D. Litt., LL.D.,
திரு. T. செங்கல்வராயன், B.A., B.L., M.P.
ராவ்பஹதூர் T. S. கச்சாபிகேச முதலியார், B.A.
குமார ராஜா M. A. M. முத்தைய செட்டியார், செட்டிநாடு, B.A.
திரு. O.M. SP. L.M. மெய்யப்ப செட்டியார்
திரு. ராம்தாஸ் புருஷோத்தம்தாஸ்
திரு. D. C. கோத்தாரி
திரு. K. பாலசுப்ரமணிய அய்யர், B.A., B.L., M.L.C.
திரு. L. அழகுசுந்தரம் செட்டியார்
திரு. P. V. RM. குழந்தையன் செட்டியார்
திரு. A. நாகப்ப செட்டியார்

செக்ரடரி O. R. ஸ்ரீநிவாசன்

ELEGANT

# இன்றைய ஆனந்தம் என்றும் நிலவட்டும்!

**தீபாவளி**—ஒளித் திருநாள். உங்கள் இல்லங்களில் மகிழ்ச்சி ததும்பும் நாள். உங்கள் குழந்தைகளுக்கு குதூகலம் அளிக்கும் திருநாள் இது.
இன்று அவர்களுக்கு வாழ்வு ஆனந்தமயமாகவும், மத்தாப்பு, வெடி வேடிக்கைகள் நிறைந்ததாகவும் காட்சி அளிக்கிறது.

நாளைய நிலைமை என்ன? அவர்களது எதிர்காலத்தை நிர்ணயிக்கும் பொறுப்பு உங்களிடம்தான் உள்ளது. ஆயுள் இன்சூரன்சு மூலம் அவர்களுக்கு பாதுகாப்பு அளியுங்கள். அவர்களது ஆனந்தம் என்றும் நிலைக்கச் செய்யுங்கள்.

EP. LIC-32-46



லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா.



உங்கள் அழகிய கூந்தலுக்குச் சிறந்த
பாதுகாப்பும் போஷாக்கும் அவசியம்

## பெங்கால் கெமிகல்ஸ்

## காந்தாரிடின்

**கூந்தல் தைலம்**



கூந்தலைப் பட்டுப்போன்று மிருது
வாகவும் பளபளப்புடையதாகவும்
கருகருவென நீண்டு அடர்த்தியாக
வளர உதவுகிறது. அதில் காந்தாரிடின்
சத்துக்கள் சேர்க்கப்பட்டுள்ளதால்
கூந்தல் உதிர்வதைத் தடுக்கிறது.

**பெங்கால் கெமிகல்**

கல்கத்தா - பம்பாய் - கான்பூர்

---

# Quality Cotton Spinners

COUNTS SPUN COTTON YARN
NF 26s, NF 34s, NF 50s, NF 68s
& NF 84s
(Egyptian Combed)
NF 2/34s, NF 2/50s, NF 2/68s
NF 2/84s
Carded & Combed Hanks & Cones

STAPLE FIBRE YARN
NF 17s, NF 26s, NF 34s, NF 2/34s
& NF 2/50s
HANK & CONES



PHONE: 5496

GRAMS: "KADRIMILLS" COIMBATORE

# The KADRI Mills (CBE) Ltd.,

ODDARPALAYAM: ONDIPUDUR P. O. COIMBATORE-5

Managing Partner: V. RAMASWAMY NAIDU

Sales Depots at: MADRAS & COIMBATORE

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10 Managing Editor T. Sadasivam.



தெளிவு குருவின் திருமேனி காண்டல் :
தெளிவு குருவின் திருநாமம் செப்பல் :
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல் :
தெளிவு குருஉரு சிந்தித்தல் தானே !

—திருமூலர் திருமந்திரம்

புகைப்படம் உதவியவர்கள் :
எஸ்லெஸ் ஸ்டூடியோ, மதுரை



# ஹரி–ஹரன்

ருதம் ஸத்யம் பரம் ப்ரஹ்ம புருஷம் க்ருஷ்ண பிங்களம்
ஊர்த்வரேதம் விரூபாக்ஷம் விச்வரூபாய வை நம:

— நாராயணஸூக்தம்

(தர்மம் ஒருபுறம்; சத்தியம் ஒருபுறம். ஒருபுறம் இருள் வடிவம்; மறுபுறம் ஒளி வடிவம் — இவ்வாறு விச்வமெல்லாம் தன் வடிவாகக் கொண்டு, உயர்ந்தோங்கும் வீரியத்துடன் விளங்கும் முக்கண்ணனைப் பணிகிறேன்.)

பொன் திகழும் மேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும் — என்றும்
இருவரங்கத்தால் திரிவரேனும் ஒருவன்
ஒருவனங்கத்துள்ளன்

—பொய்கையாழ்வார்

இடது கண்கள் சந்திரன் வலது கண்கள் சூரியன்
இடக்கை சங்கு சக்கரம் வலக்கை சூலம் மான் மழு
எடுத்த பாதம் நீண்முடி வெண்டிசைக்குமப்புறம்
உடல் கடந்து நின்ற மாயம் யாவர் காண வல்லரே

—சிவவாக்கியர்

'மெய்ப்பொருள் ஒன்றுதான்; ஞானியர் அதனைப் பலவாகப் பேசுகின்றனர்' என்கிறது வேதம். பலவாகப் பிரிந்து நிற்பவற்றையெல்லாம் ஒன்றாக்கி இன்பம் புகட்டும் ஞானியர், ஒன்றான பொருளை ஏன் பலவாறாகப் பேசுகின்றனர்? உருவமும் பெயரும் இயல்புகளும் இல்லாத அந்த ஒரு பரம் பொருள் அழகழகாகப் பலவேறு ரூபங்களுடனும், நாமங்களுடனும், கல்யாண குணங்களுடனும் அவர்களுக்குக் காட்சி தந்ததால்தான் பலவாறாகப் பேசுகின்றனர். 'ஒன்றாயரும்பிப் பலவாய் விரிந்திவ் வுலகெங்குமாய் நின்ற' பெருமையைப் பேசுகின்றனர். 'பல பல வேடமாகும் பரன்' என்று பேசுகின்றனர். அழகுகளின் மூலம் அமரத்துவம் அளிக்க வேண்டுமென்றே அருட்பொருள் ஆயிரம் உருவுகளாக வருகிறது. எந்த அழகு யார் உள்ளத்தை ஆகர்ஷித்தாலும் அந்த அழகின் மூலமே ஆத்மாநுபவம் பெற உதவுகிறது.

இந்தப் பல தெய்வங்களில் ஒன்றை, அல்லது சிலவற்றை அல்லது பலவற்றை மக்கள் தத்தம் மனச் சார்புகளுக்கேற்பப் பணிந்து பக்தி புரிகிறார்கள். 'எவனெவன் எந்தெந்த மூர்த்தியை சிரத்தையுடன் வழிபட விரும்பினாலும், அவனவனுக்கு அந்த சிரத்தையை நானே நிலைப்படுத்துகிறேன்' என்பது கீதா தேவனின் வாக்கு. எந்தத் தெய்வத்தைப் பற்றிக் கொண்டாலும் முடிவில் அடைவது ஒரே சச்சிதானந்தத்தைத்தான். 'அவரவர் தமதம தறிவறி வகைவகை அவரவரிறையவரென வடியடைவர்கள்' என்று ஆழ்வார் கூறுகிறார்.

ஒரு பேரும் ஒருருவமும் இல்லாத தூய வஸ்து பூண்ட பேராயிரங்களில் மும்மணிகளாக — ரத்தினத் திரயமாக — சிவ பெருமானையும், நாராயணனையும், பராசக்தியையும் கருதுகிறோம். சிவனுக்கு தர்மபத்தினியாகவும், நாராயணனுக்கு சோதரியாகவும் இருவரையும் இணைக்கும் பராசக்தி சிவத்தின் சக்தி என்ற முறையில் சிவத்துடனேயே ஒன்றியவளாயும், மகாமாயை என்ற முறையில் மாயவனாகிய மாதவனுடன் ஒன்றியவளாயும் விளங்குகிறாள். ஹரியும் ஹரனுமே இந் நாட்டின் தனிப்பெரும் தெய்வங்களாகத் திகழ்கின்றனர். இந்த இரண்டுமே ஒன்றுதான், ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்ததுதான் என்பதை ஹரி, ஹரன் என்ற இரு நாமங்களே குறிப்பிடுகின்றன. விஷ்ணு என்ற பெயரில் ஒருவன் பரிபாலனமும், ருத்திரன் என்ற பெயரில் மற்றவன் சம்ஹாரமும் செய்வதாகப் பொது வழக்கு. ஆனால் விஷய மறிந்தவர்கள் நாராயணன் என்றும் ஈசுவரன் என்றும் மொழியப்படும் ஒரே பரப்பிரம்மம்தான் முத்தொழிலையும் முவ்வேறு கோலங்களில் புரிகிறது என்பார்கள். ஹரி–ஹர அத்வைதத்தைக் கூறுவார்கள். உலக மக்கள் தமோ மூர்த்தியாக நினைக்கும் ருத்திரன் சத்துவத்தின் சாரமான தூய, வெண் திருக்கோலம் பூண்டு வெண்ணீறும், வெண்மதியும் தரித்து, வெள்ளிப் பனிமலையில், வெள்விடை ஏறி அமர்ந்து பரிபாலனம் புரிவதையும், சத்துவமூர்த்தியாகப் பேசப்படும் விஷ்ணு தமஸின் அடையாளமான நீலத் திருமேனி தாங்கி, உலகையெல்லாம் உண்டு உறக்கம் புரிவதையும் ஒப்பிட்டு இருவரும் இணைந்திருப்பதை எடுத்துச் சொல்வார்கள். தத்துவத்தில் ஒன்றிய வஸ்துவைத் திருவுருவிலும் ஒன்றிய சங்கர–நாராயணனாக, ஹரி–ஹரனாக நமக்குக் காட்டிக் கொடுப்பார்கள். சபாபதி — ரங்கராஜன், பசுபதி — கோபாலன் ஆகிய பெயர்கள் ஒரே பொருளைச் சுட்டுவதைச் சொல்வார்கள்.

ஒரே பொருளாகவும் ஒன்றோடொன்று ஒட்டிப் பிணைந்த இரு கூறுகளாகவும் ஹரி ஹரன் என்ற மூர்த்திகளைப் பேசுவதோடு, அவர்கள் இரு வேறு பொருள்கள் போலவே தோன்றி ஒருவரோடொருவர் பலவிதங்களில் பல மதுரச் சாயல்களில் தொடர்பு கொண்டதாகவும் மகான்கள் கண்டார்கள். திரிபுர சம்ஹாரத்தின்போது ஹரனுக்கு ஹரியே பாணம்; ஈசனைத் தாங்கும் தர்மஸ்வரூபமான ரிஷபமும் திருமாலே; மோஹினியாகவும் சக்தியாகவும் இருந்து சிவனுக்குச் சதியாகிறான் நாராயணன். கைலாசநாதனின் கழலினை தேடிய வராஹமும் வைகுண்ட நாதனே; நடராஜனுக்கு மிருதங்கம் வாசிக்கும் ரங்கராஜனும் அவனே; ஈசனின் உற்ற நண்பனும் ஹரிதான்; ஹரனை ஹரி கண்மலரால் அர்ச்சிக்கவும் செய்தான் என்று ஆதிசங்கரர் பாடுகிறார். பஸ்மாசுரனிடமிருந்து காப்புப் பெறுவதற்காக சிவபெருமான் விஷ்ணுவின் உதவியை நாடியதாகவும், ஆலகால விஷத்தை உண்டருள்வதற்கு விஷ்ணு மூர்த்தி பரமேசுவரனின் துணையைத் தேடியதாகவும் கதைகள் உண்டு. ஈசனையும் தேவியையும் தரிசிக்கப் பக்தர் ஒருவர் திருக் கைலாயம் வந்ததாகவும், அப்போது தேவி விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்து கொண்டிருந்ததாகவும், பக்தரைப் பரிதவிக்க வைக்கலாகாது என்பதால் பரமன் தேவியிடம் மும்முறை ராமநாமத்தை ஜபிப்பது ஸஹஸ்ர நாமத்துக்குச் சமமாகும் என்று கூறியதாகவும் சிவ மகிமையைச் சொல்ல வந்த சிவ புராணமே கூறுகிறது. இதே ராம பிரான், தான் ராவணனை ஜயித்தது பரமேசுவரனின் அருளால் தான் எனக் கருதி ராமேசுவரத்தில் சிவனைப் பூஜித்ததையும் நாம் அறிவோம். கிருஷ்ண பரமாத்மாவாக அவதரித்தபோது பெருமான் உபமன்யுவிடம் சிவதீக்ஷை பெற்றதையும் புராணங்கள் கூறுகின்றன. மானுட உத்திகளின் மூலம் வெள்ளித் திரைப் படத்தில் ஒரே நடிகர் பல வேடம் தரித்து ஒரே போதில் ஒருங்கே தோன்றுமாறு செய்ய முடியுமானால், பரம் பொருளால் ஒரே சமயத்தில் பல கோலங்களில் தோன்றி ஒன்றோடொன்று தொடர்பு கொண்டதாகத் தரிசனம் தர முடியாதா என்ன? எத்தனை விதத்தில் கண்டாலும் ஒன்று மற்றதற்கு விரோதம் என பக்தர்கள் ஒருகாலும் நினைக்கவில்லை. நாராயணன் இதயத்தில் ஈசன் அந்தர்யாமியாக இருப்பதாகக் கருதுவது சைவம்; ஈசன் இதயத்தில் நாராயணன் அந்தர்யாமியாக இருப்பதாகக் கூறுவது வைஷ்ணவம்; ஒருவருக்கொருவர் பகைவர் என்று இரு சித்தாந்தமும் கூறவில்லை. விஷ்ணுவின் பரம பக்தன் சிவன் என்று வைஷ்ணவமும், சிவனின் பரம பக்தன் விஷ்ணு என்று சைவமும் கூறுமேயன்றி விரோதிகளாகக் கூறவில்லை. எனவே விஷ்ணு பக்தர்களையெல்லாம் வழிபடும் வைஷ்ணவர்களும், சிவனடியார்களையெல்லாம் வணங்கும் சைவர்களும் இரு மூர்த்திகளையும் வணங்குவதுதான் பொருந்தும். இதை நமது சமய கிரந்தங்கள் பலவிதங்களில் வலியுறுத்தியுள்ளன. 'எவ்விதம் துர்க்கையோ அவ்விதமே விஷ்ணு; எவ்விதம் விஷ்ணுவோ அவ்விதமே சிவன்; இம்மூவரும் ஒன்றேயாவர்; அறிவுள்ளவன் வேறாக பாவிக்கமாட்டான். வேறாக பாவிப்பவன் அறிவற்றவன், பாபி, நரகத்துக்குச் செல்பவன்' என்று வராக புராணம் அழுத்தமாகச் சொல்கிறது. 'கோவிந்தனை வணங்குபவர்கள் சங்கரனை வணங்குகிறார்கள். ஹரியை அர்ச்சிப்பவர்கள் பசுபதியை அர்ச்சிக்கிறார்கள்; முக்கண்ணனைப் பழிப்பவர்கள் ஜனார்த்தனனைப் பழிக்கிறார்கள்; ருத்திரனை அறியாதவர் கேசவனை அறியாதவரே' என்று ருத்ர ஹ்ருதயோபநிஷதம் கூறுகிறது. இத்தகைய சமய சமரச மனப்பான்மை தற்காலத்தில் பெருவாரி மக்களிடம் நிலவுவது, எவ்வளவோ குறைகளும், பாபங்களும், அநாசாரங்களும் மலிந்துள்ள நிகழ்காலத்தில் காணப்படும் ஓர் உத்தமமான அம்சமாகும். இந்தச் சமய உணர்வு மேலும் செழிக்க, ஹரியாகவும் ஹரனாகவும் பரம்பொருளைத்



தோற்றுவிக்கும் பராசக்தியைப் பிரார்த்தித்து, 'ஹரி-ஹரன்' என்ற மனோஹரமான சித்திர மடலை ஓவியக் கலைஞர் விஜுவின் தூரிகை வாயிலாக அளிக்கிறோம்.

**முதல் சித்திரம் :** இம்மலரின் அட்டைச் சித்திரத்தில் ஹரியின் சகியாகிய செந்திரு ஆண்டாளாகப் பிறந்து திருமணத்துக்குப் புறப்படும் காட்சியைக் காண்கிறோம் அல்லவா? அதற்கு ஈடாக இங்கு ஹரனின் சகியாகிய உமையம்மை ஆலவாயில் அங்கயற்கண்ணி என்ற அரச குமாரியாகப் பிறந்து சொக்கநாதனை மணந்த திருக் கல்யாணக் காட்சியைக் காண்கிறோம். மீனாட்சியின் தந்தை மலயத்வஜ பாண்டியன் காலகதி அடைந்துவிட்டதால் தமையனாகிய மகா விஷ்ணுவே அவளைத் தாரை வார்த்துக் கொடுத்தது திருவிளையாடற் புராணம், ஹாலாஸ்ய புராணம் இவற்றிலும், சிற்ப, சித்திரங்களாலும் பிரசித்தி பெற்ற விஷயம். பிரசித்தி பெறாத ஒரு விஷயத்தை இங்கு ஓவியர் சித்திரித்திருக்கிறார். மணமகள் தன் சோதரன் கையிலிருந்து பொரியை வாங்கிக்கொண்டு ஆஹுதி செய்யும் 'லாஜஹோமம்' என்ற சடங்கு வேத காலத்திலிருந்தே வழக்கிலிருந்திருக்கிறது. இதற்கேற்பக் கல்யாணக் கோலத்திலுள்ள பரம கல்யாணி தன் சோதரனாகிய திருமாலின் திருக்கரத்திலிருந்து பொரி பெற்று ஹோமம் செய்வதை ஓவியத்தில் காண்கிறோம். புரோஹிதராக பிரம்ம தேவனே இங்கு வந்திருப்பதால் மும்மூர்த்திகளையும் அன்னைத் தெய்வத்துடன் தரிசிக்கிறோம்.

**இரண்டாம் சித்திரம் :** தாரகன் முதலான அசுரர்களை வதைப்பதற்காகத் தேவர்களுக்கு சேனாதிபத்தியம் தாங்கும் குமரக் கடவுளுக்குத் தேவர்கள் படைத் தலைவனாக அபிஷேகம் செய்கிறார்கள். மாமனாகிய திருமால் – வள்ளியைப் பிறகு அளித்து மாமனாராகவும் ஆகவிருக்கும் திருமால் – முருகனுக்கு அபிஷேகம் செய்கிறார். தந்தையான ஈசன் இதைக் கண்டு களிக்கிறான். மகன் வீர சூரனாயினும் அவனைக் குழந்தையாகவே காணும் பார்வதி தேவி மதலையை வாரி எடுத்துத் துடைத்துச் சிங்காரிக்கக் காத்துக் கொண்டிருக்கிறாள்.

**மூன்றாம் சித்திரம் :** தனக்கும் தனக்குள்ளேயே ஞான சக்தியாகத் திகழ்ந்த தேவிக்கும் பிறந்த ஆறுமுகப் பெருமானின் பட்டாபிஷேகக் காட்சியை அங்கு கண்டு மகிழ்ந்த ஈசுவரன் இங்கு ஹரிக்கும் தனக்கும் பிறந்த செல்வனைக் கொஞ்சி மகிழ்கிறான். ஆம், ஹரனுக்குத் தன் தங்கையைத் தாரமாகத் தந்துதவிய ஹரி, தானே அவனுக்குத் தாரமானதும் உண்டு. 'அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே' என்பார் நாவுக்கரசர். தேவர் – அசுரர் இரு கணங்களும் சேர்ந்து பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்த பின் அமுதத்தைத் தேவர்களுக்கு மட்டும் படைத்து அசுரர்களுக்குப் படையாமல் மாயம் செய்வதற்காக மோகினியாக உருவெடுத்தான் ஜகன்மோகன நாராயணன். ஜகத்தை மட்டும் மோகிக்கச் செய்யாமல் ஜகத்தைக் கடந்த மகாதேவனையும் தன் அழகில் மோகிக்கச் செய்தான். ஹரியும் ஹரனும் சதியும் பதியுமாயினர். அவர்களுக்குப் புதல்வனாக உதித்தான் ஹரிஹர புத்திரன் என்றும், ஐயப்பன் என்றும் நாம் வழிபடும் சாஸ்தா.

சாஸ்தாவுக்கு ஒரு சங்கடமுண்டு. சாஸ்தாவுக்கு லட்சுமி தேவி என்ன உறவு? சாஸ்தாவின் தாய் திருமால். இலக்குமி தாயின் மனைவி. இப்படி ஓர் உறவு கேள்விப்பட்டதுண்டோ? இவளை சாஸ்தா என்ன உறவிட்டு அழைப்பார்? அப்பய தீக்ஷிதரின் சுலோகமாகவும் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் செய்யுளாகவும் உருவான இந்த ஹாஸ்யக் கருத்து இங்கு சித்திரமாகி யிருக்கிறது. பரமேசுவரன் தன் 'இனியாள்' மகனை அருமைக்கிட்டுக் கொண்டிருக்கிறார். கிளிமொழியான பார்வதி தேவி அருகளை ஏதுமின்றிக் கிளியைப் பறக்கவிட்டுக் குழந்தை ஐயப்பனுக்கு விளையாட்டுக் காட்டுகிறாள். க்ஷீராப்தி நாதனும், க்ஷீராப்தி தந்த செல்வியும் கவலை வருகிறார்கள். சாஸ்தா உமையைக் காட்டித் தனக்கு அவள் என்ன உறவென்று கேட்கிறான். ஈசுவரன் சிந்திக்கிறான்.

ஹரிக்கும் ஹரனுக்கும் அன்னையாகி அருள் சுரக்கும் திருக் கோலத்தில் தேவியை அன்னபூரணித் தாயாக **நாலாம் சித்திரத்தில்** கண்டு நாமும் கடவுளரின் உறவுகளைச் சிந்திக்கிறோம்.

மக்களின் அன்னப் பிட்சை கேட்கும் பிட்சாடனனுக்கு அவள் காசிக்ஷேத்திரத்தில் உணவு படைப்பது அனைவரும் அறிந்த விஷயம். இவளிடம் ஹரியும் 'பவதி பிக்ஷாம் தேஹி' கேட்ட விஷயம் ஸ்ரீமத் பாகவதத்தில் கூறப்பட்டிருக்கிறது. பரமபதநாதன் காசியபருக்கும் அதிதிக்கும் மகனாகப் பிறந்து உபநயனம் செய்விக்கப்பட்டு வாமன பிரம்மசாரியாகத் திகழ்கிறான். அப்போது பிரம்மா கமண்டலுவையும், ஸப்தரிஷிகள் தர்ப்பையையும், சரஸ்வதி தேவி ஜபமாலையையும், குபேரன் பிக்ஷாபாத்திரத்தையும் அவனுக்கு 'ஓதி'யிடுகிறார்கள். பிக்ஷாபாத்திரத்தைக் கையிலேந்திய வாமனனுக்கு சாக்ஷாத் உமா தேவி பிக்ஷை அளிக்கிறாள்.

ஈசனின் பரத்துவம் பற்றியும், விஷ்ணுவின் பரத்துவம் பற்றியும் வாதங்கள் நமக்கு வேண்டாம். தத்துவங்களை மீறிய தாயின் தலையில் இருவரையும் தேவி பிணைத்து வைக்கும் அழகை நாம் தியானிப்போம்.

ஈசுவரனையும் நாராயணனையும் யாருமே விரோதிகளாகச் சொல்லவில்லை என்று முன்பு சொன்னோம். ஆனால் விரோதமில்லாமலே இவர்கள் போரும் செய்ததுண்டு. ஒரே நாராயணனின் அவதாரங்களான பரசுராமன், ராமன் இருவரும் பலப் பரீட்சை நடத்தியதுபோல், ஒரே பரம்பொருளின் இரு உருவுகளான ஹரியும் ஹரனும் பலப் பரீட்சை செய்து பார்த்துக் கொண்டதுண்டு. தேவர்கள்தான் இந்தப் பரீட்சையை நடத்தி வைத்தார்கள். ஹரியும் ஹரனும் விற்போர் நடத்த முற்படுகிறார்கள். ஹரியின் சக்தி வெல்கிறது–இதை ஆதி காவியமாகிய வால்மீகி ராமாயணம் கூறுகிறது. இக் காட்சியைத்தான் **ஐந்தாவது சித்திரத்தில்** காண்கிறோம்.

(ஈசனின் வில் ஜனகரிடம் வந்து சேர்ந்து இதனை ராம பிரான் மிதிலாபுரியில் பங்கம் செய்தான். நாராயணனின் வில் பரசுராமன் மூலமாக ராமனிடம் வந்து சேர்ந்தது.)

சிவனை வென்ற ஹரி சிவனைப் பூஜித்துமிருக்கிறான். புஷ்பதந்தரின் சிவமஹிம்ன ஸ்தோத்திரம் வருணிக்கும் இந்தச் சம்பவத்தைத் தேவாரமும் திருவாசகமும் நினைந்து நினைந்து போற்றுகின்றன. இந் நிகழ்ச்சியே சித்திரமடலின் **ஆறாவது ஓவியமாகிறது.** ஆயிரம் தாமரை மலர்களை வைத்துக் கொண்டு சிவ ஸஹஸ்ரநாம அர்ச்சனை புரிகிறான் மகாவிஷ்ணு. அவனது பக்தியைச் சோதிக்க வேண்டி, சோதிமயனான சிவ பெருமான் ஒரு மலரை மறைத்துவிடுகிறான். மலருக்காக மாயன் மயங்கவில்லை. சற்றும் தயங்காமல் தனது கமலக் கண்ணையே பறித்து ஆயிரமாவது தாமரையாகப் பரமேசுவரனின் பாதத்தில் அர்ச்சிக்கிறான் செந்தாமரைக் கண்ணன். இறைவன் அருவுருவான இலிங்கத்தினின்று ஆவிர்ப்பவித்து, திருமாலுக்குச் சக்கராயுதத்தைத் தந்தருள்கிறான்.

சிவபெருமான் விஷ்ணு மூர்த்தியை வழிபட்ட காட்சியை நிகமாந்த மகாதேசிகர் தமது பாதுகா ஸஹஸ்ரத்தில் பல விடங்களில் பாடி மகிழ்கிறார். அந்தத் திவ்வியக் காட்சியை **அடுத்த ஓவியத்தில்** காண்கிறோம்.

ரமேசனைப் பரமேசன் வணங்கும்போது, நாரணனின் பாதுகை மணிகளிலிருந்து எழும்பும் ஒளிக் கதிர்கள் கங்காதரனின் சடாமுடியிலுள்ள தீர்த்தத்தில் பிரதிபலித்து ஏழு வண்ணமாகச் சிதறி அவனைச் சூழ்ந்துகொள்கிறது – மயில் தோகை விரித்து ஆடுவதுபோல். உடனே மயிலேறி விளையாடும் தன் மைந்தனைச் சிவபெருமான் நினைவுகொள்கிறான்.

தனது பாதம் பணிந்த பரமனின் பாதத்தைத் தேடித் திருமால் சென்றதைக் **கடைசிச் சித்திரத்தில்** காண்கிறோம். தேவராலும் இரிக்கவொண்ணாத யக்ஷ வடிவாகப் பரம் பொருள் நின்றதைக் கேனோபநிஷதம் கூறுகிறது – இதனையே புராணங்கள் பேசும்போது சிவபெருமான் அக்கினிஸ்தம்பமாக நின்றதாகவும் அதன் அடியையும் முடியையும் தேடி அயனும் மாலும் அயர்ந்ததாகவும் கூறும். ஹரி வராக உருக் கொண்டு ஹரனின் பாதம் தேடிச் சென்றான் என்பதன் மூலம் அவனது எல்லையற்ற எளிமையை உணர்கிறோம். அன்ன வடிவு கொண்டு சிரம் தேடிய பிரமன், ஜோதி லிங்கத்தின் முடியினின்று விழுந்த தாழம்பூவைத் தனக்குச் சாதகமாகச் சாட்சி சொல்லச் செய்து, தான் முடியைக் கண்டதாகப்பொய் சொன்னதாகவும், திருமாலோ தன்னால் ஐயனின் பாதத்தைக் காண முடியவில்லை என்பதைத் தயக்கமின்றிச் சொன்னதாகவும் காணும்போது பக்தியின் பணிவு பரந்தாமனிடம் எப்படிப் பூரித்து நின்றது என்பதை உணர்கிறோம். எல்லாவற்றிலும் ஆண்டவன் பெரியவன், பக்தி செய்வதிலும் அதேபோல் பெரியவன் என்பதை நமக்கு உணர்த்தவே ஹரியாகவும் ஹரனாகவும் தோன்றி, ஹரியாக இருந்து ஹரனையும், ஹரனாக இருந்து ஹரியையும் வழிபட்டு நமக்கு வழி காட்டுகிறானோ?





# ஷேக்ஸ்பியர் செல்வம்



‘உண்மைக் கவி எல்லாக் காலத்துக்கும் பொதுவானவன்; எல்லாத் தேசத்துக்கும் பொதுவானவன்’ என்று சொல்வதுண்டு. இவ்வாண்டு ஏப்ரில் இருபத்து மூன்றும் தேதியன்று உலகமெங்கும் ஷேக்ஸ்பியரின் நானூறாவது பிறந்த தின விழா கொண்டாடப்பட்டபோது இந்த உண்மை நன்கு நிரூபணமாயிற்று.

ஷேக்ஸ்பியரின் பெருமைகளைச் சொல்லதற்கும் இன்னொரு ஷேக்ஸ்பியரால்தான் முடியும் எனலாம். ‘தீ, காற்று, மண், நீர், ஆகாயம் ஆகிய பூதங்கள் பௌதிக உலகைப் படைப்பது போல் மனிதப் பான்மையைப் படைக்கும் உணர்ச்சிகள் பல உண்டு – அன்பு, பகை, கோபம், நன்றியின்மை, புத்திர வாத்ஸல்யம், ஆர்வம், தேச பக்தி, பேராசை, வீரம், செருக்கு என்று. இந்த எல்லா உணர்ச்சிகளையும் எல்லா மக்களுக்கும் எல்லாக் காலத்துக்கும் பொருந்துமாறு சரளமாகவும் இயற்கையாகவும், ஈடு இணையற்ற முறையில் நாடகமாக்கித் தந்த ஒரே மகா கவி ஷேக்ஸ்பியர் ஆவார்’ என்று பரம ரஸிகரான ராஜாஜி கூறியதற்கு மேல் நாம் சொல்வதற்கு எதுவுமில்லை. மன்பதையின் அத்தனை உணர்ச்சிகளிலும் தான் கரைந்து, ‘எனது’ என்ற சிறிய பான்மையை அவற்றில் கரைக்காமல் பிரிந்து நின்று இலக்கியம் படைத்தவர் ஷேக்ஸ்பியர். இதனால் தான் அவரது தனி வாழ்க்கை பற்றி நாம் ஏதும் நிச்சயமாக அறிய இயலவில்லை. ஷேக்ஸ்பியர் நாடகங்கள் என இன்று புகழ் பெற்றுள்ள படைப்புக்களை இயற்றியவர் உண்மையிலேயே ஷேக்ஸ்பியர் என்பவர்தானா என்று கூட வியர்த்தமான வாதங்கள் நடக்கின்றன. ‘ரோஜாவை எந்தப் பெயரிட்டு அழைத்தால்தான் என்ன?’ என்று கேட்ட ஷேக்ஸ்பியரை எந்தப் பெயரிட்டழைத்தாலும் அவரது நாடகங்கள் அவற்றுக்கே உரிய தனிப் பெருமையுடன் என்றென்றும் உயிர் வாழும்.

சாகஸ உணர்வு ஓங்கி நின்ற முதலாம் எலிஸபெத்தின் ஆட்சிக் காலத்தில் தோன்றிய ஷேக்ஸ்பியர் ஆரம்ப நாட்களில் சிந்தனை ஜாலமும் வார்த்தை ஜாலமும் நிறைந்த விநோத நாடகங்களைப் படைத்தார். அதன் பின் இந்த விநோத உலகிலிருந்து விவகார உலகுக்கு வந்து, இங்கிலாந்தின் வரலாற்றையும், ரோமாபுரியின் வரலாற்றையும் நாடகங்களாக்கினர். இதையடுத்து, கற்பனையா – உண்மையா என்ற வினாவையே நாம் எழுப்ப முடியாத வண்ணம், என்றும் நம் உள்ளத்தை உணர்ச்சி எழுச்சியின் உண்மையால் உலுக்கும் சோக நாடகங்களைச் சிருஷ்டித்தார். முதிர்ந்த நிலையில் பழைய பாரதக் கவிகளின் பான்மை ஷேக்ஸ்பியரை ஆட்கொண்டது. எவ்வளவு சோகங்களைச் சொன்னாலும் மங்களமாகவே முடிக்கும் சாந்தப் பான்மையே இது. இந்த மன நிலையில் தமது கடைசி நாடகங்களைத் தந்த ஷேக்ஸ்பியர் இறுதி நாடகமாகிய ‘சூறாவளி’ (Tempest)யில் ஒரு மந்திரவாதியைப் படைக்கிறார். ஷேக்ஸ்பியரேதான் அந்த மந்திரவாதி. அவரது எழுதுகோல்தான் மந்திரக் கோல். மந்திரவாதி எத்தனையோ அற்புதங்கள் செய்துவிட்டுப் பிறகு மந்திரக் கோலை முறித்துப் போடுவதாக எழுதித் தாமும் இலக்கியப் பணியிலிருந்து துறவு பூண்டார். ஆனால் இலக்கிய உலகு அவரது துறவை ஒப்புக் கொள்ளாமல் அன்றும் இன்றும் என்றும் அவருக்கே தனது சிம்மாசனத்தைச் சித்தமாக வைத்துக் கொண்டிருக்கிறது.

நாடக மேடைக்கும் அவரே சக்கரவர்த்தியாக விளங்குகிறார். ஓவிய மேடையும் அவருக்கே ராஜபீடம் அமைக்கிறது. ‘நியாவிக்க வேண்டிய அவரது பாத்திரங்களை நடித்துக் காட்டவோ, ஓவியத்தில் வடித்துக் காட்டவோ முடியாது’ என்று சார்லஸ் லாம்(ப்) எழுதினர். எனினும் ஷேக்ஸ்பியர் நாடகங்களும் ஓவியங்களும் உலகில் நித்தமும் தோன்றிக் கொண்டேதான் இருக்கின்றன. ஷேக்ஸ்பியர் தத்துவத்தைத் தூரிகையில் கொண்டு வரும் இந்தச் சாகஸச் செயலில் ஓவியர் மணியம் ஈடுபட்டு, அடுத்து வரும் அற்புத மடலை நமக்கு அளிக்

கிறோர். நாடகச் சக்கரவர்த்தியின் நானூறாவது ஆண்டு விழாவுக்குக் 'கல்கி' செலுத்தும் அஞ்சலியாக ஷேக்ஸ்பியர் என்ற எல்லையற்ற செல்வக் குவியலிலிருந்து நான்கு பொறுக்கு மணிகளை இங்கு வழங்குகிறோம்.

**முதல் சித்திரம்** ஷேக்ஸ்பியர் தமது ஆரம்ப தசையில் இயற்றிய 'இளவேனில் இரவுக் கனவு' (A Midsummer-night's dream) வுக்கு நம்மை அழைத்துச் செல்கிறது. தேவதை அரசன் ஒபிரானுக்கும், தேவ ராணி டைடானியாவுக்கும் ஒரு பிணக்கு. டைடானியாவை இழிவுபடுத்திப் பழி வாங்கித் திருத்தவேண்டுமெனத் திட்டமிடுகிறான் ஒபிரான். பக் என்ற குட்டி தேவதையைக் கொண்டு உறங்கும் டைடானியாவின் கண்களில் ஒரு விநோதப் பூவின் சாற்றைப் பிழியச் செய்கிறான். விழித்தெழுந்த டைடானியா அந்தச் சாற்றின் அதிசய சக்தியால் தான் முதலில் கண்ட கழுதைத் தலை படைத்த பாட்டம் என்பவனிடம் காதல் கொள்கிறாள்.

இதே சாற்றை டெமிட்ரியஸ் என்ற வாலிபனின் கண்ணில் பிழிந்து அவன் வெறுக்கும்—ஆனால் அவனை விரும்பும் — ஹெலினாவின்பால் அவனது நேசத்தைத் திருப்புமாறு பக்கிடம் பணிக்கிறான் ஒபிரான். ஆனால் பக்கோ ஆள் மாறாட்டத்தினால் லைஸாண்டர் என்பவனின் கண்ணில் புஷ்ப ரஸத்தைப் பிழிந்து நாடகத்தின் சுவைக்கு மேலும் ரஸமூட்டுகிறான்.

இறுதியில் எல்லாம் இனிமையாகவே முடிந்து விடுகின்றன.

**இரண்டாவது ஓவியம்** நம் மனத்தைப் புரட்டி எடுக்கும் சோக நாடகங்களில் ஒன்றான 'ஒதெல்லோ'வில் சில காட்சிகளைச் சித்திரிக்கிறது. வெனிஸ் நகர அழகியும், உயர் அதிகாரி ப்ரபான்ஷியோவின் மகளுமாகிய டெஸ்டெமோனா, தன் தந்தையை அடிக்கடி காண வரும் மூர் இன வீரன் ஒதெல்லோவிடம் உள்ளத்தைப் பறி கொடுக்கிறாள். நீக்ரோ இனத்தைச் சேர்ந்த அந்தக் கருங்காளையின் மீது இந்தப் பொற்கொடியின் மனம் ஈடுபட்டதிலிருந்து இது வெறும் கவர்ச்சி உணர்ச்சியில் பிறந்த பிரேமையல்ல என்று புரிந்து கொள்ளலாம். ஒதெல்லோவின் புறத் தோற்றத்துக்காக அன்றி அவனது அகச் சிறப்புக்களாலேயே டெஸ்டெமோனா ஆகர்ஷிக்கப்பட்டாள். அவன் செய்த சாகசச் செயல்களைப் பற்றியெல்லாம் கேட்டுக் கேட்டுத்தான் அவள் அவனிடம் பிரமிப்பும், அநுதாபமும் கொண்டு பிரேமையில் மூழ்கினாள். அவன் வெள்ளங்களுக்கு ஈடு கொடுத்ததையும், வெளிநாடுகள் பலவற்றுக்குச் சென்றதையும், கோட்டைகளை முற்றுகையிட்டதையும், நரமாமிச பட்சிணிகளிடையே சிக்கிப் பின்னர் தப்பியதையும், இன்னும் இது போன்ற பல சம்பவங்களையும் அவனே சொல்லக் கேட்டு அவனிடம் பரிவு கொண்டாள். நடுநடுவே வீட்டு வேலை அவளை அழைக்கும். அதனைக் கவனிப்பாள். மீண்டும் அவனது கதை கேட்கத் திரும்புவாள். இப்படிக் கதை கேட்டு வந்தவள் பிறகு அவனது கதையில் தானே கதாநாயகியானாள். அவனிடம் பரிவும், பரிதாபமும் கொண்டவள் அவனது பரிவையும் பரிதாபத்தையும் இழந்து அபவாதத்துக்கு ஆளாகிப் பின்னர் அவன் கையாலேயே கொலையுண்டு மறைந்தாள். அந்தக் கொலைக்குப் பின்னால் அவனும் தெளிந்து, சூழ்ச்சியும் சதியும் சந்தேகமுமில்லாத மறு உலகுக்கு அவளைத் தொடர்ந்து சென்றான்.

(டெஸ்டெமோனாவுக்கு நீக்ரோ கதாநாயகனிடம் ஏற்பட்ட காதலை வெள்ளைத் தோல் போர்த்தியவர்கள் அநுதாபத்துடன் ஏற்கவேண்டுமானால் ஒதெல்லோவை ராணுவ உடுப்பிலேனும் காட்டி அவனுக்கு ஒரு கவர்ச்சி உண்டாக்க வேண்டும் என்பது ராஜாஜியின் யோசனை. அதன்படியே இச்சித்திரம் தீட்டப்பட்டுள்ளது.)

**மூன்றாவது சித்திரம்** : உணர்ச்சிக் கொந்தளிப்பின் சிகரத்தை எங்கு காணலாம் என்று இலக்கிய அன்பர்களைக் கேட்டால் 'ஹாம்லெட்'டில் என்ற ஒரே விடையைத்தான் அவர்கள் ஏகோபித்துக் கூறுவார்கள். ஹாம்லெட் தன் தந்தையின் ஆவியைக் கண்டதிலிருந்து அவனது ஆவி கொந்தளிக்கத் தொடங்குகிறது. தன் தந்தை உறங்கிய போது அவன் காதில் நச்சை ஊற்றிச் சிற்றப்பன் கொன்றதை ஆவியின் வாயிலாகக் கேட்டறிந்த ஹாம்லெட், சிற்றப்பனோடு தனது அன்னை வெட்கமின்றி இணைந்து வாழும் அநியாயத்தை எண்ணிக் கொதிக்கிறான். ஆவியின் வாயிலாகக் கேட்டறிந்ததை ஊர்ஜிதப்படுத்திக் கொள்வதற்காக அதையே சிற்றப்பன் முன் ஒரு நாடகமாக நடித்துக் காட்டுகிறான். சிற்றப்பனது உணர்ச்சிப் பிரதிபலிப்பைக் கண்டு ஆவியின் வரலாறு உண்மையே என்று நிச்சயம் கொள்கிறான். அன்னையிடம் சென்று எரிமலைப் பிழம்பாக வார்த்தைகளைக் கொட்டுகிறான். தன் தந்தையின் குணநிசயங்களையும் சிற்றப்பனின் இழி குணங்களையும் ஒப்பிட்டு 'அந்தச் சித்திரத்தைப் பூஜித்தவளா, இந்தச் சித்திரத்தையும் பூஜிக்கிறாய் ?' என வெடிக்கிறான்.

அன்னையின் துரோகம் பெண் குலத்தின் மீதே ஹாம்லெட்டை அவநம்பிக்கை கொள்ளச் செய்கிறது. புஷ்பத்தை நிகர்த்த நளினம் பொருந்திய தன் காதலி ஒஃபீலியாவைக் கைவிடுகிறான். அவள் சித்தம் கலங்கிப் புஷ்பக் குவியலிடையே தானும் ஒரு தனிப் பெரும் மலராக நீரில் மூழ்கி மறைகிறாள்.

மனித வாழ்க்கையின் அநித்தியத்தை அதோ சித்திரத்தின் நடுவில் தெரியும் மண்டையோடு ஹாம்லெட்டுக்குத் தெரிவிக்கிறது. முடிசார்ந்த மன்னரும் பிடிசாம்பராவதை ஹாம்லெட் எண்ணி நகைக்கிறான். ஹாம்லெட் கதையின் பிரதான பாத்திரங்கள் எல்லோரும் இந்தக் கதியைத்தான் அடைகிறார்கள். ஆனால் இலக்கிய உலகத்தில் அவர்கள் என்றும் சிரஞ்சீவிகளாக வாழ்கிறார்களே !

ஷேக்ஸ்பியரின் சரித்திர நாடகங்களில் ஒன்றான எட்டாம் ஹென்ரியில் சில காட்சிகளை இச்சித்திர மடலின் **இறுதி ஓவியத்தில்** காண்கிறோம். மதகுருவான கார்டினல் வுல்ஸி மன்னனைத் தன் இஷ்டப்படி ஆட்டி வைக்கிறான். மாசு மறுவற்ற மகாராணி காதரைன் மீது அபாண்டம் சுமத்தி ஹென்ரி மன்னனுக்கு எதிரிலேயே அவையில் அவளை விசாரணை செய்யுமளவுக்கு அவனது அதிகாரம் ஓங்குகிறது. பழி சுமத்தப்பட்ட காதரைன் பெண் புலியாக மாறுகிறாள். தான் விசாரணைக்கு உட்பட முடியாது என்று கூறி நீதி ஸ்தலத்தை விட்டு வெளியேறி விடுகிறாள்.

பிறகு காதரைன் கணவனால் பகிஷ்கரிக்கப்படுகிறாள். லண்டன் அரண்மனையிலிருந்து வெளியேறிக் கிம்போல்டனில் வசிக்கிறாள். சோகம் நிறைந்த அவளது சரிதம் முடியும் தருவாயில் சாந்தி மணக்கிறது. மூடிய தனது விழித் திரைகளுக்குள்ளே தேவக் குழந்தைகள் தன்னைச் சூழ்ந்து அன்பு நடனம் ஆடித் தன் தலையில் புன்னை மலர் வளையத்தைச் சூட்டுவது போல் தரிசனம் காண்கிறாள். வானுலகை நோக்கித் தனது கையைத் தூக்குகிறாள்.

'சீதாதேவியின் விசாரணையையும் மறைவையும் கூறும் உத்தரராம சரிதையை எட்டாம் ஹென்ரி நாடகம் நினைவூட்டுகிறது' என்று ராஜாஜி ஒருசமயம் எழுதியதுண்டு. பாரதத்தின் பரம பாவன காவியமான ராமாயணத்தை நினைவூட்டுவதை விடச் சிறந்த முறையில் எந்த அந்நியக் கவியும் நம் உள்ளத்தை நிறைவு செய்ய முடியாது. இந்தத் தூய நினைவில் நம் மனத்தை நிறைவிக்கும் ஓவியத்துடன் 'ஷேக்ஸ்பியர் செல்வம்' பூர்த்தி பெறுகிறது.

# கொடுத்துவைத்த கிளி!

'ஆகா! அவள் பேச்சு — கொஞ்சிக் குலாவும் பேச்சு — அது கிளிப் பேச்சாக அல்லவா இருக்கும்!'

அதைக் கேட்கவென்று எவ்வளவு ஆவலுடன் வந்தான் சிங்கன்!

ஆனால் இந்தச் சிங்கிக்கு என்ன வந்து விட்டது? அவனை ஏறெடுத்துப் பார்க்க ஏன் மறுக்கிறாள்? முகம் கொடுத்துப் பேச ஏன் மறுக்கிறாள்?

இப்படி அவள் பிடிவாதம் செய்யச் செய்யச் சிங்கனின் தாபம்தான் அதிகரிக்கிறது!

எப்படியாகிலும் அவளுடைய இன்மொழியைப் பருக வேண்டும் என்று அவன் துடியாய்த் துடிக்கிறான்!

அந்தச் சமயம் பார்த்து அந்தக் குறத்தி எங்கிருந்தோ வருகிறாள்! சிங்கனிடம் எவ்வளவு கோபமாக இருந்தாள்! அதற்கு முற்றும் மாறுபட்ட நிலையில் கொஞ்சிக் குலவிப் பேசிக் கொண்டே அல்லவா வருகிறாள்! சிங்கியின் இவ்வளவு அன்புக்குப் பாத்திரமானவர்கள் யார்?

வேறொன்றுமில்லை — அவள் வளர்க்கும் கிளிதான்!

சிங்கன் இதைப் பார்த்தானோ இல்லையோ, அவனுடைய தாபம் அதிகமாகி விட்டது. தனது மானிடப் பிறவியின் மீதே கோபம் வந்துவிட்டது அவனுக்கு. அல்லாமல் வேறொரு பொறாமையும் வந்துவிட்டது.

**கள்ளுலவு கொன்றையந்தார்**
**கர்த்தர்திரி கூடவெற்பில்**
**பிள்ளைமதி நாணுதலாள்**
**பேசாத வீறடங்கத்**
**துள்ளிமடி மேலிருந்து**
**தோளின்மேல் ஏறியவள்**
**கிள்ளைமொழி கேட்கவொரு**
**கிள்ளையானேன் இல்லையே!**

— குற்றாலக் குறவஞ்சி

அவள் மடிமீதும், தோள் மீதும் கொஞ்சி விளையாடும் பாக்கியம் அந்தக் கிளிக்குக் கொடுத்து வைத்திருக்கிறது. அது மட்டுமா? கிளியின் மழலையைப் பழிக்கக் கூடிய அழகு மழலை மிழற்றும் சிங்கியின் பேச்சைக் கேட்டு அனுபவிக்கும் பேறு வேறு கிட்டியிருக்கிறது! "நான் இந்தக் கிளியாகப் பிறந்தேனில்லையே!" என்று சிங்கன் ஏங்குகிறான்.

எவ்வளவு அற்புதமான கற்பனைத் திறனும் கவிதைச் சுவையும் வாய்ந்த பாடல் இது! திருக்குற்றாலக் குறவஞ்சியில் திரிகூட ராசப்பக் கவிராயர் பெய்து வைத்திருக்கும் நல்முத்து என்றுதான் இதைக் கூறவேண்டும்.

அக்கவிக்கு ஏற்ற வண்ண ஓவியத்தை நமது ஓவியர் விஜயா அற்புதமாக இங்கே வழங்குகிறார்.

## இது வேறு?




கல்யாண வீட்டுக்காரர்: இதுவே ஏக சத்தம்; இன்னும் வண்டிச் சத்தம் வேறு?

# விடை தந்த பார்வை

தமிழிலக்கியத்தில் எத்தனையோ அழகான பாடல்கள் உள்ளன. கவிதைச் சுவை பொங்கித் ததும்பி நிற்கும் அத்தகைய பாடல்களைக் கவிகள் அவ்வப்போது பாடிவிட்டுப் போயிருக்கின்றனர். ஒருசிலரே அவற்றின் சுவையறிந்து சேகரித்து வைத்திருந்தனர். பேராசிரியர் ராகவய்யங்கார் அவர்கள் அவற்றை யெல்லாம் தொகுத்துப் 'பெருந்தொகை' என்ற ஒரு நூலாக்கி வெளியிட்டார். அதில் காணப்படும் ஓர் அழகிய பாடலுக்கு நமது சித்திரக்காரர் கல்பனு இங்கே வண்ண ஓவியம் வரைந்தளித்து நம்மை மகிழ்விக்கிறார்.

* * *

போர்க்களத்தே யிருக்கும் காதலனின் உள்ளம், ஓய்வு கிடைத்தபோது காதலியைச் சுற்றிச் சுற்றி வலம் வருகிறது. அதிலும் காதலியினிடம் பிரியாவிடை பெற்ற அந்த நாள் அவன் நினைவுக்கு வருகிறது.

அன்று விடியற்காலை. கிழக்கே அருணோதயமும் ஆகிவிட்டது. மங்கிய வெளிச்சம் பரவத் தொடங்கி யிருந்தது. போருக்குப் புறப்படும் நேரம் வந்துவிட்டதை உணர்ந்து வீரன் எழுந்திருந்தான்.

தூக்கக் கலக்கத்தோடேயே அவனுக்கு விடை கொடுத்து அனுப்ப அவளும் எழுந்திருந்தாள்.

நழுவிச் சென்றிருந்த ஆடையை இடுப்பில் சரியாகக் கட்டிக் கொண்டாள். அவசரத்தில் இடுப்பில் அணிய வேண்டிய மேகலையைத் தலையில் அணிந்து கொண்டாள்.

காதலன் புறப்பட்டுவிட்டதைக் கண்டு ஆண்டவன் அவன் முயற்சிக்கு வெற்றி நல்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டே திருநீற்றையும் தந்தாள்.

இப்படிப் பிரியாவிடை பெற்ற அன்று நிகழ்ந்த நிகழ்ச்சிகளை ஒவ்வொன்றாக அவன் இப்போது எண்ணிப் பார்த்தான். இந்தக் காட்சிகளை ஒருகால் மறக்க முடிந்தாலும், அந்த ஒரு காட்சியை மட்டும் மறக்க முடியாது போலிருக்கிறதே என்று ஏங்குகிறான் அவன்.

.... .... .... ....

"பொழில்புறஞ் சொரியும் முகிலினம் தழுவும்
புதுவை வாழ்சடை யனுதவு சேய்
பூதலம் பரவு சேதிபன் தனது
பொன்னி நாடனைய பூவை யாள்
விழித்த னந்தலொ டெழுந்திருந் ததுவும்
மேகலைத் தலைய ணைத்த தும்
வழுத்தி நின்றுதிரு நீறுதந்து விடை
தந்த பார்வை யைமறப்பி னும்
வாசலின் படிபி டித்துநின் றநிலை
மன மறப்பதில்லை காணு மே."

எவ்வளவு நேரம் அவள் வாசற்படியைப் பிடித்துக் கொண்டு தன்னையே பார்த்துக்கொண்டு நின்றாள்!

அவன் உள்ளத்திலே வாசலின் படி பிடித்து அவள் நின்ற நிலை எப்படி மறக்கவொண்ணாது நிலைத்து நின்றுவிட்டதோ, அப்படியே இந்தப் பாடலும் இந்தச் சித்திரமும் நம் மனத்தில் அழுத்தமான இடத்தைப் பிடித்துக் கொண்டு விடுகின்றன!

*கல்கி தீபாவளி மலர் ஸ்ரீ 1964*



# அன்னம் பாலிக்கும் அன்னை

அன்னபூர்ணே ஸதாபூர்ணே சங்கரப்ராண வல்லபே।
ஞானவைராக்ய ஸித்யர்த்தம் பிக்ஷாம் தேஹி ச பார்வதி॥

சங்கரனின் பிராண நாயகியும், எப்பொழுதும் பூரணப் பொருளாகப் பொலிபவளுமான காசி அன்னபூரணியிடம் ஞான பிட்சையும், வைராக்கிய பிட்சையும் வேண்டினார் ஆதிசங்கரர். உயர்கதி பெற உதவும் சாதனைகளின் நிலைக்களனாய் விளங்கும் உடலும் தகுந்த முறையில் பேணப்படல் வேண்டும். அப்படிப் பேணி உணவு படைக்கும் அன்னபூரணியிடம் நாட்டின் துர்ப்பிட்ச நிலைமை தீருவதற்காக இன்றைய சங்கரர் இம்மலரின் ஸ்ரீமுகத்தில் பிரார்த்திக்கிறார். தாய் நம்மை இனியும் தவிக்கவிட மாட்டாள் என்று நம்புகிறோம்.

ஞானத்துக்குரிய சாந்தமும் வைராக்கியத்துக்குரிய கம்பீரமும், உணவு படைத்துக் காக்கும் அன்னையுள்ளத்துக்குரிய அருளும் பொங்கும் காசி க்ஷேத்திரத்து அன்னபூரணியின் திருவுருவத்தை இங்கு தெய்வமாக் கலைஞர் 'சில்பி'யின் அமுதசித்திரமாகக் காண்கிறோம். பொன்னுள்ளம் படைத்த ஸ்வர்ண அன்னபூரணி ஏழைகளின் இறைவனை பிட்சாடனுக்கு அன்னம் படைக்கிறாள். தேவியின் வலப்புறத்தில் விசுவநாதனுக்கும் அவளுக்குமிடையே ஸ்ரீதேவியையும், அன்னைக்கு இடப்புறம் பூதேவியையும் தரிசிக்கிறோம். ஸ்ரீதேவி பூதேவி சமேதனான ஸ்ரீ வைகுண்ட நாதனேதான் அன்னபூரணியாக வந்திருக்கிறானோ என்று எண்ணி வியக்கிறோம்.

தீபாவளிக்கு விசேஷம் காசியில் கங்கா ஸ்நானம் செய்வது. அருள் பொழியும் அன்னை, பொருள் பொழியும் பொன்னி, பொறுமை அளிக்கும் புவித் தாய், எளிமை அருளும் இறைவன் ஆகியோரைத் தரிசித்து கங்கா ஸ்நான உணர்ச்சியைப் பெறுகிறோம்.

சித்திரம் உதவியவர்கள்: Bhavan's Journal



FOUNDER LATE SRI T.S. RAJAGOPALA IYENGAR

T. S. R. & CO.,

KUMBAKONAM · S. INDIA

## ஸ்நானம் ஆச்சு!



மாமியார்: மாப்பிள்ளைக்கு கங்கா ஸ்நானம் ஆச்சா?

பெண்: இல்லை! முதல்லே இட்டிலிக்கு எண்ணெய் ஸ்நானம் பண்ணி வைச்சுண்டிருக்கிறார்.

பையன்: சட்டுனு போய்ச் சீயக்காய்ப் பொடி கொண்டு வரட்டுமா, அத்திம்பேரே!

# நீராடும் நேரிழையாள்

அவள் நீந்தும் அழகைப் பார்த்து மருண்டுதானே என்னவோ அந்தப் புள்ளி மான்கள் இப்படித் திகைத்து நின்றுவிட்டன! பளிங்கு போலத் தெளிந்த நீரில் பொன் வண்ண மேனி மின் வண்ணக் கோலமிடத் தன் வண்ண வனப்பெல்லாம் விளங்க அவள் நீரிடை நீந்தும் அழகே அழகு.

இன்னுயிர் தந்தெமை யீன்று வளர்த்தரு
　　ளீந்ததும் இந்நாடே — எங்கள்
அன்னையர் தோன்றி மழலைகள் கூறி
　　அறிந்ததும் இந்நாடே — அவர்
கன்னியராகி நிலவினிலாடிக்
　　களித்ததும் இந்நாடே — தங்கள்
பொன்னுடல் இன்புற நீர்விளையாடி, இல்
　　போந்ததும் இந்நாடே.

என்று மகா கவி பாரதியார் வந்தே மாதரம் கூறி இந்தப் பாரத நாட்டை வணங்கினார். இந்தப் பொன்னுடலின் அழகையும் இங்கு பெருகும் பளிங்கு நீரின் வனப்பையும் தேசிய எழில் உடைமைகளாக நினைப்பதோடு மகாகவியின் கவிதை வரிகளையும் சேர்த்துச் சிந்திக்கும்போது நமக்குத்தான் எத்தனை பெருமிதமாயிருக்கிறது?

கல்கி தீபாவளி மலர் ஜீ 1964

# தேக்கடி

சங்க இலக்கியங்களிலும், சிலப்பதிகாரத்திலும் சேரநாட்டின் மிகச் சிறந்த நதியாகக் கூறப்பட்டிருக்கும் பேரியாறும் அதன் சுற்றுப்புறத்தே நிறைந்திருந்த மலைகளும் இன்று பெரியாறு எனவும் (சில சமயங்களில் பிழையாகப் 'பெரியார்' என்றும்) தேக்கடி எனவும் பலவாறு அழைக்கப்படுகின்றன. இந்தப் பெரியாற்றின் கரையில் சிலப்பதிகாரம் முதல் எத்தனையோ பல காப்பியங்களின் மகோந்நதமான இலக்கிய நிகழ்ச்சிகள் எல்லாம் பழங்காலத்தில் நடைபெற்றிருக்கின்றன. இந்த ஆற்றின் கரையிலுள்ள மலை சார்ந்த வனப் பகுதிகளில் யானைகள் கூட்டம் கூட்டமாகத் திரியும். புலிகள் பெருமித நடை நடக்கும். புள்ளி மான்கள் துள்ளி ஓடும். இயற்கை வனப்பு மிகுந்த இந்த இனிய சூழ்நிலையில் அன்று ஆவேசமாகப் பாய்ந்தோடிய பழைய பெரியாறு இன்றோ அணையினால் அடைக்கப்பட்டுச் சேர நாட்டிலிருந்து மின்சாரத்துக்காகவும், விவசாய நீர்ப்பாசனத்துக்காகவும் தமிழ் நாட்டுக்கு வந்து பயன்படுகிறது. அணையாக அடங்காத அந்தக் காலத்திலே பெரியாற்று நீரின் பிரவாகத்தை விதியின் ஓட்டத்துக்கு உவமை சொல்லி,

"மல்லல் பேரியாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல்
ஆருயிர் முறைவழிப் படூஉ மென்பது
திறவோர் காட்சியில் தெளிந்தனம் ஆகலின்
மாட்சியிற் பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே"

என்று கணியன் பூங்குன்றனார் என்னும் பழம்புலவர் அற்புதமாகப் புறநானூற்றில் பாடியிருக்கிறார். அணையாகத் தேங்கிவிட்ட இன்றைய தேக்கடி – பெரியாற்று நீர் அப்படி யெல்லாம் விரைந்து ஓடுவதாக உவமை கூறப் பயன்படாமல் போனாலும் நமது ஓவியர் வினுவுக்கு ஓர் அழகிய சித்திரமாகப் பயன்பட்டிருப்பதை நேயர்கள் இங்கு மனப்பூர்வமான இரசனையோடு கண்டு மகிழ முடியும்.

கல்கி தீபாவளி மலர் ஃ 1964

REGISTERED No. M. 4392
Supplement to the *Kalki* issue 1-11-1964

Registered as a Newspaper in Ceylon

